எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# பரிபாடல்

( அகமும் புறமும் ) மூலமும் உரையும்

உரை :

புலியூர்க் கேசிகன்





சாரதா பதிப்பகம்



எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# பரிபாடல்

(அகமும் புறமும் பற்றியது)

## மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சென்னை - 600 014.

☎ 9790706549 / 9790706548

நூல் கிடைக்குமிடம் :

**கௌரா ஏஜென்ஸீஸ்**

10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
☎ : 044-2844 3791 / 94440 82232

விலை : ரூ. **80.00**

* முதற் பதிப்பு : டிசம்பர் 2009


* பதிப்பாசிரியர் : **எஸ். கௌமாரீஸ்வரி** M.A., M.L.I.S.,

* நூலின் பெயர் : பரிபாடல் மூலமும் உரையும்

* பக்கங்கள் : 264

* ஒளி அச்சு : ஜெய் ஜீனா

* வெளியீடு : சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.

* அச்சிட்டோர் : கிளாசிக் பிரிண்டர்ஸ், செ - 2

CODE : **874**

நூலங்காடி / www.thebookstore.in

☎ 044 - 2811 4402 / 97907 06548 / 97907 06549

e-mail : gowra_09@yahoo.com

# பொருளடக்கம்

# பதிப்புரை

*"பரிபா டல்லே தொகைநிலை வகையின்*
*இதுபா வென்னும் இயல்நெறி இன்றிப்*
*பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப"*
*(தொல்.செய். 425)*

என்று தொல்காப்பியம், பரிபாடல் என்றால் என்ன என்று கூறுகிறது. பரிபாடலாவது தொகைநிலை வகையால் பா இஃது என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப் பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கும் உரியதென்றுசொல்லுவர் இலக்கணச் சான்றோர் என்று தொல்காப்பியம் கூறுகிறது.

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப் பாடல்களுக்கும்; பலவகை அடிகளுக்கும் பரிந்து இடம் கொடுத்துப் பரிந்து செல்லும் ஓசையை உடைய பரி பாட்டுகளின் தொகுப்பாக விளங்குவதனால் இது "பரிபாடல்" என்னும் பெயரினைப் பெற்றுள்ளது.

இது இருபது அடிகள் முதல் நானூறு அடிகள் வரை பெற்று விளங்கும்.

"பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்" என்று இளம்பூரணரும்;

"அறம், பொருள், இன்பம், வீடென்னும் உறுதிப்பொருள்கள் நான்கனுள் இன்பத்தையே பொருளாகக் கொண்டு, கடவுள் வாழ்த்து, மலை விளையாட்டு, புனல் விளையாட்டு முதலியவற்றில் இப் பாடல் வரும்" என்று பேராசிரியரும்;

"தெய்வ வாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியலே பற்றி வரும்" என்று நச்சினார்க்கினியரும் கூறியுள்ளனர்.

பரிபாடல் மொத்தம் எழுபது பாடல்களைக் கொண்டது. ஆனால், நமக்குக் கிடைத்துள்ளவை இருபத்திரண்டு பாடல்கள் மட்டுமே.

பரிபாடலில் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, பதின்மூன்றாவது, பதினைந்தாவது ஆகிய ஆறு பாடல்களும் திருமாலைப் பற்றியவை. அய்ந்து, எட்டு, ஒன்பது, பதினான்கு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது, இருபத்தொன்றாவது ஆகிய எட்டுப் பாடல்களும் செவ்வேளைப் பற்றிப் பாடப்பெற்றவை. ஆறு, ஏழு, பத்து, பதினொன்று, பன்னிரண்டு, பதினாறு, இருபது, இருபத்திரண்டு ஆகிய எட்டுப் பாடல்களும் வையையைப் பற்றிப் பாடப்பெற்றவை.

செவ்வேள், திருமால், வையை ஆகிய முப்பொருள்கள் பற்றியும் பதின் மூன்று புலவர் பாடியுள்ளனர்; ஏழு சான்றோர் பண் வகுத்துள்ளனர்.

**பாடிய புலவர்:** கீரந்தையார், கடுவன் இளவெயினனார். நல்லந்துவனார், மேயோடக் கோவனார், குன்றம் பூதனார், கரும்பிள்ளைப் பூதனார், நல்வழுதியார், நல்லெழுநியார், கேசவனார், இளம்பெருவழுதியார், நப்பண்ணனார், நல்லழிசியார், நல்லச்சுதனார் ஆகிய பதின்மூவர்.

**பண் வகுத்தோர் :** நன்னாகனார், பெட்டகனார், மருத்துவன் நல்லச்சுதனார், கண்ணகனார், பித்தாமத்தர், கேசவனார் ஆகிய அறுவர் பண் வகுத்துள்ளனர்.

முதல் பன்னிரண்டு பாடல்களும் பாலையாழ் என்னும் பண்ணிலும்; அடுத்து வந்த அய்ந்து பாடல்கள் நோதிரம் என்னும் பண்ணிலும்; அடுத்து இறுதியாக வரும் நான்கு பாடல்கள் காந்தாரப் பண்ணிலும் அமைக்கப்பெற்றுள்ளன; இறுதிப் பாடலுக்குப் பண் தெரியவில்லை.

பரிபாடலின் காலம் கி.பி. 634 என்று எல்.டி. சாமிக்கண்ணு கூறியுள்ளார். கி.பி. மூன்றாம் நூற்றாண்டு என்று டாக்டர் மா. இராசமாணிக்கனார் கூறுகிறார். பலர் பலவாறு கூறினும் இன்றைக்கு ஆயிரத்து எழுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது பரிபாடல் என்று கொள்ளலாம்.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய இந்த ஓங்கு பரிபாடல் அகத்துறையும் புறத்துறையும் ஆகிய இரு பொருள் பற்றிப் பாடப்பெற்ற நூலாகும்.

முதலில் இந்நூலைப் பதிப்பித்த பெருமை உ.வே. சாமி நாதய்யரையே சேரும். இவரை அடுத்துப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை பதிப்பித்துள்ளார். அவரை அடுத்து மீ. பொன். இராமநாதன் செட்டியார் உரையுடனும் தெளிவுரையுடனும் ஒரு பதிப்பினை வெளியிட்டுள்ளார்.

எத்தனை பதிப்பு வந்தாலும் அவை அத்தனையும் கடுமையான உரையுடனேயே வெளிவந்தன. இதனை உணர்ந்த புலியூர்க் கேசிகனார் எளிமையான உரையினை இயற்றினார். புலியூர்க் கேசிகனாரின் நூல்கள் நாட்டுடைமை ஆக்கிய பின் எங்களது பதிப்பகத்தில் அவரது நூல்களை வெளியிட்டு வருகிறோம். அந்த வரிசையில் இந்த நூலும் வெளிவருகிறது என்பது பெரு மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

பல்கலைக் கழக, கல்லூரி, பள்ளி மாணவர்க்கும் நூல் படிக்கும் ஆர்வம் உடைய அனைவர்க்கும் இஃது ஓர் அறிவுக் கண்ணாடி, மிகத் தெளிவாக எளிய முறையில் பொருளை விளங்கிக்கொள்ள இந்த நூல் பெரிதும் பயன்படும்; பயன்பெறுங்கள் என்று வேண்டுகின்றோம்.

**பதிப்பகத்தார்**

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# பரிபாடல்

(அகமும் புறமும் பற்றியது)

## மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்

# பரிபாடல் - சில செய்திகள்

'**பரி**பாடல்' என்னும் பாவினத்தால் ஆகிய பாக்களின் தொகுதி இந்நூல். அதனால், பரிபாடல் என்பது பெயராயிற்று. இப்பாக்கள் பண்ணமைதியோடு பொருந்தியவை; பத்தியோடு மனமுருகிப் பாடப்பட்டும் பயிலப்பட்டும் வந்தவை; 'ஓங்கு பரிபாடல்' என்னும் சீரிய பெரும் புகழை அந்நாளிலேயே பெற்றவை.

## பரிபாடலின் பழைமை

செந்தமிழ்ச் சிலம்புக்கு உரை வகுத்தவருள் ஒருவரான ஆசிரியர் அடியார்க்கு நல்லார், தம் உரைக்கண், முத்தமிழ்ச் சங்கமும் விளங்கிய வரலாற்றை உரைக்கின்றனர். அவற்றுள் அவர், "முதலூழி யிறுதிக்கண் தென்மதுரையகத்துத் தலைச் சங்கத்து அகத்தியனாரும், இறையனாரும், குமரவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என்றிவருள் ளிட்ட நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்பர் **எண்ணிறந்த பரிபாடலும்,** முதுநாரையும், முதுகுருகும், களறியாவிரையும் உள்ளிட்டவற்றைப் புனைந்து" என்று கூறுகின்றனர். இவ்வாறே, கடைச்சங்கத்துப் புலமைச் செங்கோல் நடாத்திய நக்கீரனாரும், தாம் வகுத்த இறையனார் களவிய லுரையுள் கூறுகின்றனர். இவற்றால், 'பரிபாடல்' என்னும் பாவமைப்பு முதற்சங்க காலத்தேயே எழுந்து சிறந்த தொன்மை யுடையது என்பது விளங்கும். 'எண்ணற்ற' என்னுஞ் சொல், ஏராளமான பரிபாடற் செய்யுட்கள் எழுந்திருந்த செழுமை யினையும் வலியுறுத்தும், இவற்றை எல்லாம் பெறக் கொடுத்து வைக்காதவராயினேம்; இவற்றின் அமைதியைப் பற்றியும் அறிந்து இன்புற இயலாதவராயினேம்.

இனி, இறையனார் களவியலுரையுள், முதற் சங்கப் புலவருள் ஒருவராகக் 'கீரந்தையார்' உரைக்கப்படுவதும், அவர் பாடியதாக இப் பரிபாடலுள் ஒரு செய்யுள் காணப் பெறுவதும் இதனை அக்காலத்தைச் சார்ந்ததோவென நினைக்கவும் தூண்டலாம். ஆனால், மதுரையும், பரங்குன்றமும், மாலிருங் குன்றமும், வையையும் கொண்ட மதுரை, கடைச் சங்கத்து மதுரையேயாதலின், அந்த நினைப்புப் பொருந்தா தென்பதும் விளங்கும்.

## அமைப்பு முறை

இனி, தொகுத்து அமைத்து நமக்குக் கிடைத்துள்ள பரிபாடலைக் காணுங்கால், இதன் அமைப்புமுறை நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. காலப்பழைமையை யொட்டியோ,

அல்லது பாடற்குரிய தெய்வங்களை யொட்டியோ இப் பரிபாடல் தொகுக்கப் பெற்றதாகக் கூறவியலாது. பண்களின் அமைதியை ஒட்டியே இதனை அமைத்துள்ளனர் என்பது மேற்போக்காக இத் தொகைநூலைப் பார்ப்பவருக்கும் விளங்கும். இதன் முதற் பன்னிருபாடல்களும் **பாலையாழ்;** அடுத்து வரும் ஐந்தும் **நோதிரம்;** அடுத்து இறுதியாக வரும் நான்கும் **காந்தாரம்;** இறுதிப்பாடலின் பண் தெரியவில்லை. ஆனால் இந்த வரிசையமைப்பின்படி அதனையும் பண் காந்தாரத்திற்கே உரியதாக்கலாம்.

## எழுபது பரிபாடல்

இனி, இப் பண்களை அமைத்த இசையாசிரியன்மருள் பத்துப் பாடல்களுக்கு நல்லச்சுதனார் அமைத்துள்ளதாக அறிவதனால், காலத்தால் மறைந்த பரிபாடல்கள் பலவற்றுள்ளும், இசையாசிரியர்களிடம் பரவலாகப் பயின்று வழங்கியவற்றை மட்டுமே அவர்கள் தொகுத்து வழங்கினர் என்று கருதலாம். ஆகவே இந்த இசைமரபினரின் அருளாலேயே நமக்குப் பரிபாடல்கள் கிடைத்தன. விழாக் காலங்களுள் வந்து கூடும் மக்களை இன்புறுத்த, இசையோடு இத்தகைய பாடல்களை அவர்கள் பாடினராதலும் பொருந்தும்.

இப் பரிபாடலின் தொகை, தொகுக்கப்பெற்ற காலத்தில் எழுபது ஆகும். இதனை,

**திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்**
**தொருபாட்டுக் காடுகிழாட் கொன்று - மருவினிய**
**வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப**
**செய்ய பரிபாடல் திறம்.**

என்னும் பழஞ் செய்யுளால் அறியலாம். இவற்றுள், இந்நாளிற் கிடைத்தன 22 பாடல்களே; இரண்டு பாடல்கள் தொல்காப்பிய உரையாசிரியர்களின் மேற்கோட் செய்யுட்களிலிருந்து கிடைத்தன; ஆக, 24 பாடல்களைக் காணுகின்றோம்; சில பாடற் பகுதிகளும் கிடைத்துள்ளன.

## மதுரை பற்றிய நூல்

இவற்றை ஒருங்கே நோக்கும்போது, இப் பரிபாடல்கள் மதுரையையும், மதுரைக்கு வளமும் அழகும் காப்பும் தந்த வையையையும், மதுரையைச் சார்ந்த திருப்பரங்குன்றத்துச் செவ்வேளையும், திருமாலிருங்குன்றத்து நெடுவேளாகிய மாயோனையும், கொற்றவையையும் பாடுவனவாக அமைந்தன என்பதனைக் காண்கிறோம். தமிழக மருங்கின் எப்புறத்தும் வழங்கிய செய்யுட்களைத் தொகுத்து அமைத்த பிற தொகை நூற்களைப்

போல் அல்லாமல், மதுரையையும் மதுரையைச் சார்ந்த வற்றையும் மற்றுமே பாடற்பொருளாகக்கொண்டு அமைந்த பாடல்களின் தொகை இத் தொகைநூல்.

பழஞ் செய்யுட்களுள் வரும் அகப்பொருள் பற்றிய நூற்கள் பலவும் ஐந்திணைப் பொருள்களைக் கொண்டவாய் வருவன; அவ்வாறே பரிபாடல் அமையவில்லை; தெய்வ வணக்கப் பாக்களாகவே அமைந்துள்ளன என்பர் ஒரு சாரார். குறிஞ்சிக் குரிய தெய்வம் முருகன்; முல்லைக்குரிய தெய்வம் திருமால்; பாலைக்குரிய தெய்வம் கொற்றவை என்னும் காடு கிழாள்; மருதத்திற்கு மதுரை மாதெய்வம்; நெய்தற்கு வையையாகிய நீர்த்தெய்வம் எனக்கொண்டே இந்நூலும் அமைந்துள்ளது. வையையைப் போற்றுஞ் செய்யுட்கள், அதனை ஆறாகக் கொண்டு, அதன் அழகை வியந்து போற்றாமல், அதனை ஒரு நீர்த் தெய்வமாகவே கொண்டு, அதனருளை வேண்டிப் பராவிப் போற்றுவதைத் தெளிவாகக் காணலாம்.

## பரிபாடல் இலக்கணம்

"இது தொகை நிலை வகையால் 'போ' என்று சொல்லப் படும் இலக்கணமின்றி, எல்லாப் பாவிற்கும் பொதுவாக நிற்றற்குரியதாய், இன்பப் பொருளைப்பற்றிக் கூறும். இது சிறுமை 25 அடியும், பெருமை 400 அடியும் எல்லையாகக் கொண்டு வரும்" என்பது தொல்காப்பியம்.

"பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும்" என்பர் இளம்பூரணர்.

"அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்கள் நான்கனுள், இன்பத்தையே பொருளாகக்கொண்டு கடவுள் வாழ்த்து, மலைவிளையாட்டு, புனல் விளையாட்டு முதலியவற்றில் இப்பாடல் வரும்" என்பர் பேராசிரியர்.

"தெய்வ வாழ்த்து உட்படக் காமப் பொருள் குறித்து உலகிலேயே பற்றி வரும்" என்பர் நச்சினார்க்கினியர்.

## அகச் செய்திகள்

இவ்வாறு, சான்றோர்கள் பரிபாடலுக்குரிய அமைதியை வரையறுத்து உரைப்பார்கள். அந்த வரையறைகளை யொட்டி விளங்குவனவே இப் பரிபாடற் பாக்கள் எனலாம்.

**நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட் டாயிரு பாவினும்**
**உரிய தாகும் என்மனார் புலவர்,** **(அகத், சூ, 51)**

என்னும் சூத்திரம் உரைக்குமாறுபோல, அகப்பொருட் செய்திகளை நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பொருத்தி அழகுறப் பாடற்கு உரியன கலிப்பாவும் பரிபாடலுமே என்பதன் உண்மை. இவ்விருவகைப் பாக்களையும் கற்றுணர்ந் தார்க்கு நன்கு விளங்கும்.

## பாடப் பெற்றவை

இத் தொகைநூலிலுள்ள இருபத்திரண்டு பாடல்களுள் ஆறு பாடல்கள் திருமாலைப் பற்றியவை. அவை 1, 2, 3, 4, 13, 15ஆம் பாடல்களாகும். இஃதன்றிப் பரிபாடற் பகுதியிலுள்ள பாடல்களுள் ஒன்றும் திருமாலைப்பற்றியதாகும். இவ்வகையில் திருமாலைப்பற்றிய எட்டுப் பாடல்களுள் ஏழு பாடல்களை நாம் பெற்றுள்ளோம். பொதுவாகத் திருமால் என்றாலும், இருங்குன்றத்துக் கோயில் கொண்டிருக்கும் திருமாலையே இச் செய்யுட்கள் போற்றுகின்றன. இவற்றை இளம்பெரு வழுதியார், கடுவன் இளவெயினனார், கீரந்தையார், நல் எழினியார் என்னுஞ் சான்றோர்கள் பாடியுள்ளனர். தொகுப்பின் முதல்நான்குமே திருமாலைப் பற்றியதாக அமைந்திருப்பது. திருமால் வணக்கச் சிறப்பைக் காட்டும்.

செவ்வேளைப்பற்றிக் கிடைத்துள்ள பாடல்கள் எட்டாகும். அவை 5, 8, 9, 14, 17, 18, 19, 21 ஆம் பாடல்களாகும். அவற்றைப் பாடியவர்கள் நல்லந்துவனார், கடுவன் இளவெயினனார், குன்றம்பூதனார், கேசவனார், நப்பண்ணனார், நல்லச்சுதனார், நல்லழுசியார் என்போர். இவர்களுள் குன்றம் பூதனார் மட்டுமே இரண்டு பாடல்களைப் பாடியுள்ளனர். செவ்வேட்கு உரிய முப்பத்தொரு பாடல்களுள் இவ்வெட்டுப் பாடல்களே கிடைத்தன; எஞ்சியவை மறைந்தன.

வையை பற்றிய இருபத்தாறு பாடல்களுட் கிடைத்தவை (8+1) ஒன்பது பாடல்கள். இவற்றைப் பாடியோர் நல்லந்துவனார், கரும்பிள்ளை பூதனார், நல்அழுசியார், நல்வழுதியார், மையோடக் கோவனார் ஆகியோராவர். மதுரையைப்பற்றிய நான்கும், காடுகிழாட்குரிய ஒன்றும் முற்றவும் கிடைத்தில.

## பரிபாடற் காலம்

இப் பரிபாடற் செய்யுட்கள் எழுந்த காலம் சங்க காலத்தை யொட்டியதாகும் எனவும், கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்டதாகும் எனவும் ஆய்வாளர் தம்முள் வேறுபடுவர். இக்கால எல்லையைப் பற்றிய சிக்கல்களை ஆராய்ச்சிப் பெரியார்களுக்கு விட்டுவிடுவோம். நாம் நூலின் நயத்தை மட்டும் கற்று இன்புறலாம் என்பதே எம் கருத்தாகும். ஆனால், சிறந்த வானிலை ஆராய்ச்சியாளரும், தெளிந்த தமிழ் ஆங்கிலப் புலமையுடை

*யோருமான, காலஞ்சென்ற* L. D. **சாமிக்கண்ணுப் பிள்ளை** *யவர்கள், பதினோராம் பாடலுட் காணப்படும் வானிலைக் குறிப்புகளை ஆராய்ந்து, கி.பி. 634 அது குறிக்கும் காலம் என்று காட்டியுள்ளார்கள். சிலர் இதற்கு முற்பட்ட காலமென்பார்கள்; அவர்கள் வகுத்துள்ள காலம் கி.மு. 161 ஆகும். இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட கி.பி. மூன்றாம் நூற்றாண்டை* **டாக்டர் மா. இராசமாணிக்கனார்** *போன்ற தமிழ் ஆராய்ச்சி வல்லார்கள் கொள்வார்கள். இக் கால ஆராய்ச்சி எவ்வாறாயினும், இன்றைக்கு ஏறக்குறைய 1700 ஆண்டுகட்கு முற்பட்டது இத்தொகைநூல் என்பது தெளிவு. அந்நாளிலேயே தமிழ் நன்மக்களது வாழ்வியல் எத்துணை விழுமிய நிலையிலே திகழ்ந்ததென்பதையும் இப் பாடல்களாற் காணலாம்.*

## வடமொழிக் கதைகள்

*பிற சங்க நூற்களைப்போல அல்லாமல், இப் பரிபாடல் வடமொழிப் புராணக் கதைகள், வடபுலத்து வழிபாட்டு மரபுகள் முதலியவற்றையும் மிகுதியாகக் கொண்டுள்ளன. தமிழர் வடமொழியாளர் தொடர்பு பலவாயிரம் ஆண்டுகட்கும் முற்பட்டது. இடைச்சங்க காலத்துக்கு முன்பாகவே அவர்கள் சிறுகச்சிறுகத் தமிழகத்தில் வந்து பரவத் தொடங்கினர். அவர்களின் வழிபாட்டு மரபுகளும் அவர்களோடு சிறுகச்சிறுகத் தமிழகத்தில் வந்து பரவின. திருமால், செவ்வேள் ஆகியோரைப் பாடுதற்கு முற்பட்ட சான்றோர்கள், அவர்கள் தொடர்பான வடமொழியாளர் வழிபாட்டு மரபுகளையும் ஏற்றுக் கொண்டே பாடுவாராயினர். இதனை நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை யிலும் காணலாம். இக்காலத் தமிழ் அறிஞருட் பலர், தமிழா ராய்ச்சி நூற்களுள், எங்கணும் ஆங்கிய நூலாசிரியர் கருத்துக் களையே மிகுதியாகப் பெய்து செல்லும் மனநிலையை இங்கே கருதினால், இவ்வாறு தாம் கற்ற பிறமொழி நுற்கருத் துக்களைத் தம்மொழி நூற்கண்புகுத்துதல் என்பது, படித்தாரிடைப் பரவலாக இருந்துவந்த, வரும், ஒரு மன நோய் என்றே கருதலாம்.*

## மலைநம்பி கோயில்

**அழல் புரை குழைகொழு நிழல்தரு பலசினை**
**ஆலமும் கடம்பும் நல்லாற்று நடுவும்**
**கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்**
**அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்**

*என வரும் தொடர்கள், பழந்தமிழர், தெய்வங்கள் உறை பதிகளாகக் கொண்ட பல்வேறு இடங்களைச் சுட்டிக் காட்டு கின்றன. இவற்றுள் 'கால்வழக் கறுநிலைக் குன்றமும்' என்றலால், திருமாலுக்குக் குன்றுகளின் மேலும் திருக்கோயில்கள் பண்டை*

நாளில் விளங்கின எனலாம். மகேந்திரமலைச் சாரலிலுள்ள நம்பிமலை நம்பியும், வேங்கடமலை வேங்கடவனும், சோலை மலை அழகனும், மற்றும் பலரும் இந்தப் பழைய வழி பாட்டு மரபுக்குச் சான்று பகர்கின்றனர்.

சிறந்த தத்துவச் செய்திகள், பொருள் நயப்பாடுகள், கனிந்து கனிந்து இனிமையூட்டும் காதற்காட்சிகள், உள்ளத்தைத் தொடுகின்ற ஊடற்பிணக்குகள், பக்திமையூட்டும் சொற்றொடர்கள் எல்லாம் பின்னிப் பிணைந்து, தமிழ் வையையின் தகைசால் நறுநீரைப்போலத் தெளிவும் ஆழமும் அகற்சியும் இனிமையும் கொண்டு, இந்நூற் பாடல்களுள் விளங்குகின்றன. இதனை யறிந்து, இதனைக் கற்றுப் பலரும் பயன் பெறல் வேண்டும்; அக்கால நாகரிக நயமறிந்து போற்றவும் வேண்டும்.

## முதற் பக்தி நூல்

தமிழகத்தில் பிற்காலத்தில் எழுந்த பக்திமை உணர்வுக்கும், அவ்வுணர்வின் பயனாகத் தோன்றிய உளம் பிணிக்கும் ஆழ்வார் நாயன்மார் ஆகியோரின் செழுந்தமிழ்ப் பாசுரங்கட்கும், அவரைப் பின்பற்றி அமைந்த எண்ணற்ற பக்திமை நூற்களுக்கும் முற்பட்டதாக, அவற்றுக்கு வழி காட்டும் ஊற்றாகத் திகழ்வன. இப் பரிபாடற் பாக்கள் எனவும் கூறலாம்.

## தெய்வக் காதல்

அகப்பொருள் அமைதியான காதலன் காதலியர் நிலையையே உயிருக்கும் இறைக்கும் படைத்துக் கொண்டு, இறைமைக் காதலை இனிதாகப் பாடிப் பாடிப் பரவிய திருக்கோவையார் போன்ற பாக்களின் எழுச்சிக்கும் இப் பரிபாடலே கால்கோளாக அமைந்தது எனலாம்.

'காதற்காமம் காமத்துச் சிறந்தது' என்னும் உண்மையின் விளக்கமாக அமைந்த பாடல், வடபுல தென்புல மரபுகள் இரண்டையும் சீர்தூக்கி ஆராய்ந்து, அவற்றுள் தென்புல மரபே சிறந்ததாதலைத் தெளிவாகவும் திட்பமாகவும் இனிமையாகவும் விளக்குவதனையும் பார்க்கின்றோம். பன்முறை கற்றுக் கற்றுப் பொருளுணர்ந்து மனங்கொள்ள வேண்டிய பாடல் ஒன்பதாம் பாடலாகிய அதுவாகும்.

தென்னவர் வழிபாட்டு மரபிலே பண்ணோடு பாடிப் பரவிப் பரவிப் பரம்பொருளை வழிபட்டுப் பயனடையும் 'நாத உபாசனை'யின் கால்கோளாகவும் இப் பாட்டுக்களைக் கொள்ளலாம். உள்ளம் கசிந்து கனிந்து கரைந்து பரமான்மாவோடு இணைந்து மணக்கும் ஆனந்தநிலை இந்த உபாசனை.

முதற் பாடல்

# திருமால் வாழ்த்து (1)

அனைவரும் தாந்தாம் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்தும் இனிதே நிறைவெய்துதல் வேண்டும் என்றே விரும்புவர். அதற்குத் தத்தம் ஆற்றலின் துணைமட்டும் போதாது, தோன்றாத் துணையாக நின்று அனைத்தையும் இயக்கி வரும் தெய்வத்தின் துணையும் வேண்டும் என்றும் கருதுவர். இதனால், தாம் செய்யப்புகும் நூற்களினுள்ளும் முதற்கண் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களைச் செய்து, தாம் வழிபடும் கடவுளை யேனும், தாம் செய்யும் நூற்கு இயைபுடைய கடவுளையேனும் போற்றி, அதன்பின்னரே நூலைச் செய்வர். இம்மரபு, வழி வழியாகத் தமிழ்ச் சான்றோரிடைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் ஒரு தமிழ் மரபு ஆகும்.

'பரிபாடல்' என்னும் இத்தொகைநூல் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களையே மிகுதியாகக் கொண்டது. எனினும், இதன் முதல் நான்கு செய்யுட்களும் கடவுள் வாழ்த்து என்னும் தலைப்பிடப்பட்டு வழங்கி வருகின்றன, அவற்றுள் முதலாவ தாகிய இச் செய்யுள், காத்தற் கடவுளான திருமாலைப் போற்றித் துதிப்பதாக அமைந்துள்ளது.

இப் பரிபாடலைப் பாடியவரின் பெயர் இன்னதென்பது தெளிவாகவில்லை. எனினும், இதன் அமைப்பு மிக்க பொருட் செறிவினைக் கொண்டதாகும். காத்தற் கடவுளான திருமால் தமக்குத் துணைநின்று, தம்மையும் இவ்வுலக உயிர்களையும் காத்துப் பேணுவான் என்று ஆசிரியர் உறுதியாக நம்புகின்றார். அந் நம்பிக்கையோடு, அவனருளை வேண்டியவராக, அவன் புகழையும் போற்றிப் பாடுகின்றார்.

### நாஞ்சிலோனே!

**ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை**
**தீயுமிழ் திறனொடு முடிமிசை அணவர**
**மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்**
**சேயுயர் பணைமிசை எழில்வேழம் ஏந்திய**
**வாய்விளங்கும் வளைநாஞ்சில் ஒருகுழை ஒருவனை;**

பாற்கடலின் நடுவே, பரந்தாமனாகிய நீ, அரவுப்பாயலிலே பள்ளி மேற்கொண்டவனாக, அறிதுயில் பூண்டிருக்கின் றனை! காண்பாரை அச்சமுறச் செய்யும் அரிய அமைப்பைக் கொண்டவனான, ஆயிரம் தலைகளை உடையவன் ஆதிசேடன்.

அவள், நஞ்சாகிய நெருப்பைக் கக்கும் அத்தலைகளை எல்லாம் பாடமாக விரித்து, ஆற்றல் பொருந்த, நின் திருமுடியின் மேலாக் குடைகளைப்போலக் கவித்து, அவற்றை மெல்ல அசைத்தபடியே நினக்கு நிழல் செய்துகொண்டிருக்கின்றான். திருமகளை எப்போதும் நீங்காதே கொண்டிருக்கும் பரந்த மார்பினை உடையாய்! குற்றமற்ற ஒளியினைப் பரப்பியபடி யிருக்கின்ற, வெண்சங்கைப்போன்ற திருமேனி வண்ணத்தினை உடையாய்! மிக உயர்ந்த மூங்கிற்கம்பத்தின் மேலாக எழில்மிக்க வேழக் கொடியினை உயர்த்திருப்பவனே! வளைந்த முகப்பினைக் கொண்ட கலப்பைப் படையினை ஏந்தியுள்ளவனே! ஒப்பற்ற காதணிகள் விளங்கத் திகழ்வோனே! ஒப்பற்ற பெருமானே!

**சொற்பொருள் :** அணங்கும் - காண்பாரை அச்சமுறச் செய்யும் தெய்வத் தகைமை. அருந்தலை - அரிதான அமைப்பைக் கொண்ட தலை; பிறரால் நெருங்குதற்கரிய தலையும் ஆம். தீ - கொடிய நஞ்சு. திறன் - ஆற்றல், அணவர - அசைந் தாட. மா - திருமகள். வால் வளை - வெண்சங்கு. சேயுயர் பணை - மிக உயரத்துக்கு உயர்ந்த மூங்கிற் கம்பம். வேழம் - வேழக் கொடி. நாஞ்சில் - கலப்பை. குழை - காதணி; ஒரு குழை ஒருவனை - ஒப்பற்ற காதணிகளைக் கொண்ட சிறந்தோனே; ஒற்றைக் குழையினான சிவபிரானே எனவும் இதற்குப் பொருள் கொள்வர்; திருமால் சிவசக்தியின் ஆண்கோலம் என்னும் தத்துவ உண்மை யைக் கருதினால், சிவசக்தியைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

**விளக்கம் :** திருமால் கண்ணனாகவும், பலராமனாகவும் ஒரே சமயத்தில் அவதாரம் செய்திருந்தனன். கண்ணன் முக்காற்பங்கும். பலராமன் காற்பங்கும் நாராயண அம்சத்துடன் பிறந்திருந்தனர் என்பர் சான்றோர். இதனால், பலராமனையே திருமாலாகக் கொண்டு தம் வாழ்த்தைத் தொடங்குகின்றார் ஆசிரியர். இதனைக் கவனிக்க வேண்டும். வெண்மைக்கு முதன்மை தருவது என்பதும் நினைக்க.

## மறைப் பொருளே!

**எரிமலர் சினைஇய கண்ணை; பூவை**
**விரிமலர் புரையும் மேனியை; மேனித்**
**திரு ஞெமர்ந்து அமர்ந்த மார்பினை; மார்பில்**
**தெரிமணி பிறக்கும் பூணினை; மால்வரை**
**எரிதிரிந் தன்ன பொன்புனை உடுக்கையை;**
**சேவலங் கொடியோய்! நின் வலவயின் நிறுத்தும்**
**ஏவலுள் பணிந்தமை கூறும்**
**நாவல் அந்தணர் அருமறைப் பொருளே!**

எரிநெருப்பை யொப்ப விளங்கும் செந்தாமரை மலரினைப் போன்ற கண்களைக் கொண்டோனே! காயாவின் இதழ் விரிந்த மலரைப்போன்று விளங்கும் கார்வண்ணத் திருமேனியை உடையோனே! அம் மேனிக்கண்ணே திருமகள் நீங்காது உறையும் மார்பினைக் கொண்டோனே! அம் மார்பினிடத்தே தெரிந்தெடுத்துத் தொடுத்த மணிகள் ஒளிவீசிக் கொண்டிருக்கின்ற பூணாரத்தைப் பூண்டிருப்பவனே! நீலமலையினை எரியானது சூழ்ந்தாற்போல் விளங்கும், செம்பொன் புனைந்த உடுக்கையை உடுத்திருப்போனே! கருடச்சேவலை வெற்றிக் கொடியாக உடையவனே! நின் ஆற்றலுக்கு உள்ளாகவே அனைத்தையும் நிறுத்துகின்ற நின் ஆணைக்குள்ளாகவே அனைத்துயிரும் பணிந்து தொழில்கேட்கின்ற, அந்தச் செவ்வியை எடுத்துரைக்கின்ற நாவன்மைபெற்ற அந்தணரின் அரியவான நான்மறைக்கட்கும், மூலப்பொருளாக இலங்குகின்ற பெருமானே!

**சொற்பொருள் :** எரி - எரி நெருப்பு. பூவை - காயா மலர். திரு - திருமகள். தெரிமணி - தெரிந்தெடுத்த மணி; இது செம்மணி. மால் வரை - நீலமலை. பொன் - செம்பொன். உடுக்கை - உடை. சேவல் - கருடச்சேவல். வலம் - வெற்றி; ஆற்றல். ஏவல் - ஆணைச் சக்கரம்; ஆக்ஞாசக்கரம். நாவல் - நாவன்மை கொண்டவர். அந்தணர் - அருளாளர். நிறுத்தல் - நிலைபெறுமாறு செய்தல்.

**விளக்கம் :** இப்பகுதி திருமாலை நீலமேனியினனான கண்ணபிரானாகக் கொண்டு போற்றுகின்றது. அருமறையின் உட்பொருளாக விளங்கும் ஆதியாகிய அவனைப் போற்றுகின்றது. கொச்சகமாகிய இப்பகுதி 'எருத்து' என்றும் சொல்லப்படும்.

## தானவரை வென்றனை!

**இணைபிரி யணிதுணி பிணிமணி எரிபுரை**
**விடரிடு சுடர்படர் பொலம்புனை வினைமலர்**
**தெரிதிரள் எரியுரை மிகுதன முரண்மிகு**
**கடல்தரு மணியொடு முத்தியா கத்தோன்றி**
**நெறிசெறி வெறியுறு முரல்விறல் அணங்குவில்**
**தாரணி துணிமணி வெயிலுறு மெழில்புகழ் மலர்மார்பின்**
**எரிவயிர் நுதியெறி படையெருத்து மலையிவர் நவையில்**
**துணிபட வினமணி வெயிலுற எழில்தனச்**
**சிமையிருள் கலமுறு சிறுபுரி யொருபுரி நாண்மலர்**
**மலரில சினவளர் பருதியின் ஒளிமணி மார்பணி**
**மிக நாறுரு வினவிரை வளிமிகு கடுவிசை**
**உடுவுறு தலைநிரை இதழணி வயிறிரிய வமரரைப்**
**போரெழுந் துடன்றிரைத் துரைஇய தானவர்**
**சிரமுமிழ் புனல்பொழி பிழிந்தூ**
**முதிர்பதிர் பலதொட வமர்வென்ற கணை!**

*இப்பகுதி உறுப்புப் பெரிதும் சிதைவுற்றுக் காணப் படுவது; இதன் பொருள் அதனால் தெளிவாகவில்லை; அதனால் பொருளும் தரப்படவில்லை.*

### அறிதல் அரிது

**பொருவேம் என்றவர் மதம்தபக் கடந்து**
**செருமேம் பட்ட செயிர்தீர் அண்ணல்!**
**இருவர் தாதை! இலங்குபூண் மாஅல்!**
**தெருள நின் வரவு அறிதல்**
**மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே;**

*'நின்னை எதிர்த்துப் போரிடுவோம்' எனக் கூறி எதிர்த்து வந்தாரது செருக்கழிய, அவரை அழித்து வெற்றி கொண் டோனே! போர்க்களத்தே பகைவரினும் மேம்பட்டோனாக விளங்கும் குற்றமற்ற தலைவனே! நான்முகன், மதனன் ஆகிய இருவருக்கும் தாதையாகியவனே! ஒளியிலங்கும் பூண்களைப் பூண்டோனாகிய திருமாலே! நீ வந்து அருளுகின்ற அந்தச் செவ்வியை அறிதலானது, மயக்கற்ற தேர்ச்சியையுடைய அறிவிற் சிறந்தார்க்கும் அரிதாகும் பெருமானே!*

**சொற்பொருள் :** *மதம் - செருக்கு. கடந்து - வெற்றி கொண்டு. செரு - போர். செயிர் - குற்றம். இருவர் - மதனனும் நான்முகனுமாகிய இருவர். மருள் - மயக்கம். தேர்ச்சி - தெளிந்த முடிவு. முனைவன் - முற்றிய அறிவன்; 'முனைவன் கண்டது முதனூலாகும்' என்பனதக் கருதுக.*

**விளக்கம் :** *'நின் வரவு அறிதல் மருளறு தேர்ச்சி முனைவர்க் கும் அரிதே' என்னும்போது, எளியேமாகிய எமக்கு இயலுமோ? ஆதலின், அதனை ஒரு பொருட்டாகக் கருதாது நீயேயாக வந்து எமக்கு அருளிச்செய்தல் வேண்டும் என்கின்றனர். படைப்புக்கு மூலமாகிய இச்சைக்கும், படைப்புக்குக் காரணமாகிய இருவர்க் கும் தாதையாகியவன் என்பதனால், படைப்போரைப் படைத் தானும் திருமாலே என்கின்றனர்.*

### எவன் எளிது?

**அன்ன மரபின் அனையோய்! நின்னை**
**இன்னன் என்று உரைத்தல் எமக்கெவன் எளிது?**

*மேற்கூறியவும் பிறவுமாகிய அத்தகைய் முறைமையினை உடையோனே! நின்னை 'இன்ன தன்மையன்' என்று வரையறை செய்து கூறுதல், எமக்கு எவ்வாறு எளிதாகும்?*

**சொற்பொருள் :** *மரபு - முறைமை. அனையோய் - அத்தன்மையோனே! எவன் - எவ்வாறு.*

**விளக்கம் :** *நின்னை இத்தகையான் எனவுரைத்தல் எமக்கு எளிதன்று; ஆகவே எம் சிற்றறிவுக்கு எட்டிய வகையிற் புகழ் வோம்; அதனையும் ஏற்று எமக்கு அருள்க என்பதாகும். மடங்கல் - ஊழிப் பெருந்தீ ('மடங்கலும், கணிச்சியும், காலனும், கூற்றும்' - கலி 105).*

### அருளல் வேண்டும்!

**அருமைநற் கறியினும் ஆர்வம் நின்வயின்**
**பெருமையின் வல்லாய் யாமிவண் மொழிபவை**
**மெல்லிய எனாஅ வெறாஅது அல்லியந்**
**திருமறு மார்ப நீ அருளல் வேண்டும்!**

*நின் தன்மைகளை அறிந்து நின்னைப் போற்றுதல் அரிய செயலாகும். அதனை நன்கு அறிந்தபோதிலும் எம் ஆர்வம் நின்னடத்தாகவே உள்ளது. பெருமைகளுள் வல்லவனே! யாம் இவ்விடத்தே கூறுபவை எல்லாம் பொருள்வளமற்ற புன் சொற்கள் என்று கருதி வெறுத்துவிடாது, அகவிதழ்களுடன் பொருந்திய செந்தாமரை மலரிலே வீற்றிருப்பவளான திருமகள் விளங்கும் மார்பினனாகிய நீயும், எமக்கு இரங்கியவனாக அருளிச் செய்தல் வேண்டும், பெருமானே!*

**சொற்பொருள் :** *அருமை - அவனை முற்றவும் அறிந்து கூறுதற்கு இயலாத அருமைப்பாடு. ஆர்வம் - விருப்பம். மெல்லிய - வன்மையற்றவை; பொருட் செறிவற்றவை. அல்லி - அகவிதழ்கள்.*

**விளக்கம் :** *நெஞ்சத்திடத்து அம்மையைக் கொண்டவ னாகிய நீ, எம்பாற் கருணைகொண்டு, எம் போற்றுதலையும் உவந்தேற்று, எமக்கும் உதவுவதற்கு முற்பட வேண்டும் என்பதாம்.*

### அனைத்தும் நீ!

**விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்**
**அறனும், ஆர்வலர்க்கு அளியும் நீ!**
**திறனிலோர்த் திருத்திய தீதுதீர் சிறப்பின்**
**மறனும், மாற்றலர்க்கு அணங்கும் நீ!**
**அங்கண்ஏர் வானத்து அணிநிலாத் திகழ்தரும்**
**திங்களும், தெறுகதிர்க் கனலியும் நீ!**
**ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்**
**மைந்துடை ஒருவனும், மடங்கலும் நீ!**
**நலமுழுது அளைஇய புகரறு காட்சிப்**
**புலமும், பூவனும், நாற்றமும் நீ!**
**வலனுயர் எழிலியும், மாசு விசும்பும்**
**நிலனும், நீடிய இமயமும் நீ!**

ஆற்றல் மிகுந்த, தூய சிறப்பை உடையவர்கள் அந்தணர்கள். அவர்கள் பேணிக் காக்கின்ற அறவொழுக்கமும் நீயே! நின்பால் அன்பு உடையோருக்கு, அவர்க்கருளும் அருளாக அமைந்து நின்று உதவுபவனும் நீயே!

திறனற்றோரைத் திருத்திய, குற்றத்தின் நீங்கிய சிறப்பினை யுடைய மறமாண்பு என்பதும் நீயே! நின்னைப் பகைத்தோர்க்கு காட்சியளவாலேயே அச்சத்தை உண்டாக்கும் அணங்கும் நீயே!

அழகிய இடத்தை உடையது வானம்; அதனிடத்தே அழகான நிலவொளியைப் பரப்பியதாக விளங்கி வருகின்ற திங்களும் நீயே! அனைத்தையும் எரித்துப் பொசுக்கவல்ல சுடுகதிர்களையுடைய கதிரவனும் நீயே!

ஐந்து தலைகளை உயர்த்துள்ள நாகம் கவிந்து நிழல்செய்ய விளங்கும், அச்சத்தைப் பகைவர்க்குத் தருதலையுடைய அரிய ஆற்றலைக் கொண்ட பெருவலி உடையோனாகிய ஒப்பற்றவனும் நீயே! அனைத்தையும் அழிக்கும் ஊழிக்காலக் கூற்றமும் நீயே!

'நலம்' எனக் கூறப்படுவன அனைத்தும் ஒருங்கே பொருந்திய, குற்றமற்ற தெளிந்த அறிவைத் தருகின்ற வேதமும், வெள்ளைத் தாமரைப் பூவின் மேலோனாகிய நான்முகனும், அவனிடத்தாகப் பிறக்கின்ற 'படைப்பு' என்னும் தோற்றமும் நீயே!

உலகிற்கு வெற்றியுண்டாக எழுகின்ற மேகமும், அம்மேகம் பரந்து திரிகின்ற இடமான அகன்ற விசும்பும், அதன் பயனைப் பெறுவதான இப்பூவுலகமும், இதன்கண் நெடிது உயர்ந்து விளங்கும் இமயமாகிய பெருமலையும், அனைத்தும் நீயே யாவாய்!

**சொற்பொருள்:** விறல் - வெற்றி மேம்பாடு. விழுச்சீர் - மிக்க சிறப்பு. அந்த்ணர் - அருளாளர். அறன் - ஒழுக்கம்; நன்மை தீமை களைப் பகுத்து ஆய்ந்து, தீமைகளை அறுத்து நன்மைகளை மட்டுமே செய்தொழுகும் ஒழுக்கமாதலின், 'அறன்' ஆயிற்று; இதனைப் பேணுவோரே அந்தணாளர். மறன் - மறச் செவ்வி; மாற்றாரை எதிர்த்தழிக்கும் வலிமை. கனலி - கதிரவன். மைந்து - மிக்க வலிமை. ஒருவன் - ஒப்பற்றவன். மடங்கல் - கூற்றம். நலம் - நன்மை. புகர் - குற்றம். வலன் - வெற்றி. எழிலி - மேகம். மாக விசும்பு - அகன்ற வானம். நிலன் - நிலவுலகம்.

**விளக்கம் :** திருமாலே படைப்பும் காப்பும் அழிவுமாகிய முத்தொழிலுக்கும் ஆதியெனவும், இவ்வுலகிலுள்ள அனைத் தையும் தோற்றுவித்து இயக்கும் சக்தி அவனதே எனவும் கூறிப் போற்றுகின்றனர்.

### உயிர் முதல்வன்

**அதனால்,**
**இன்னோர் அனையை இனையை யாலென**
**அன்னோர் யாம்இவண் காணா மையின்**
**பொன்னணி நேமி வலங்கொண்டு ஏந்திய**
**மன்னுயிர் முதல்வனை ஆதலின்**
**நின்னோர் அனையை நின் புகழொடும் பொலிந்தே;**

நீதான் மேற்கூறியவாறு அனைத்துக்கும் ஆதியாகவும், அனைத்தையும் படைத்தும் காத்தும அழித்தும் விளங்கும் முத்தொழிற்கு இறையாகவும் விளங்குகின்றனை! அதனாலே,

இவ்வாறாக, அனைத்துமாக நீயே அமைந்துள்ளனை ஆதலின், நீதான் 'இத்தன்மையை' என ஒப்பிட்டுக் கூறுதற்கு, அத்தன்மையாளர் எவரையும் யாம் இவ்விடத்தே கண்டிலேம். அங்ஙனம் காணாமையினால், அதுவும் எமக்கு இயல்வதில்லை. பொன்மயமான சக்கரப்படையினை வலக்கையிலே தாங்கி உயர்ந்தவனாக, இவ்வுலகத்து உயிர்களுக்கெல்லாம் காவலாக விளங்குபவனே! ஆதலினாலே, நின் பெரும் புகழோடும் அழகுற்று விளங்கியபடி, நினக்கு நீயே ஒப்பானவனாக, நீதான் உயர்ந்து விளங்குகின்றனை!

**சொற்பொருள் :** இனையை - இத்தன்மையை. பொன் - பொன்னிறம். நேமி - சக்கரம். வலம் - வலக்கரம். முதல்வன் - தலைவன்; ஆதிகாரணன்.

**விளக்கம் :** திருமாலின் அனைத்துமாகி, அனைத்தையும் பேணிப் புரந்து காத்தருளும் ஒப்பற்ற காத்தல் தன்மையை வியந்து போற்றுகின்றனர். 'மன்னுயிர் முதல்வன்' ஆதலின், எம் செயலுக்கும் முதல்வனாக அமைந்து நின்று, எம்மையும் காத்தருள்வானாக என்பதுமாம்.

### புகழ் எழில்

**நின்னொக்கும் புகழ் நிழலவை;**
**பொன்னொக்கும் உடையவை;**
**புள்ளின் கொடியவை; புரிவளையினவை;**
**எள்ளுநர்க் கடந்தட்ட இகல் நேமியவை;**
**மண்ணுறு மணிபாய் உருவினவை;**
**எண்ணிறந்த புகழவை; எழில் மார்பினவை;**

திருமாலே! நின் புகழாகிய ஒளியும் நின்னைப் போன்றே பெருஞ்சிறப்பு உடையதாகும். நின் உடை பொன்னைப் போன்று ஒளிவீசுவதாகும். நின் வெற்றிக்கொடி கருடப் புள்ளினைக் கொண்டதாகும். உள்நோக்கிச் சுரிந்த வெற்றிச் சங்கினையும், இகழ்ந்தாரைக் கொன்று வெற்றிபெற்ற வலிமை கொண்ட

*சக்கரப்படையினையும் உடையோனே! கழுவப் பெற்ற நீலமணியைப் போன்று ஒளிபரப்பும் நீல மேனியனே! எண்ணிறந்த புகழினை உடையோனே! எழில் அமைந்த மார்பினைக் கொண்டோனே!*

**சொற்பொருள் :** *புகழ் நிழல் - புகழாகிய அருள் நிழல். புள் - கருடப்புள். மண்ணுதல் - கழுவுதல்; சாணை பிடித்தல். பட்டை தீட்டல். மணி - நீலமணி.*

**விளக்கம் :** *தீமையை அழித்து வென்று. உயிரினத்தைக் காப்பவன் ஆகிய திருமாலின் படை, கொடி, சங்கம் முதலியவற்றின் சிறப்புக்களைக் கூறி அவனைப் போற்றுகின்றனர்.*

**பரவுதும் யாமே!**

**ஆங்கு,**
**காமரு சுற்றமோ டொருங்குநின் அடியுறை**
**யாமியைந்து ஒன்றுபு வைகலும் பொலிகென**
**ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்**
**வாய்மொழிப் புலவ! நின் தாள்நிழல் தொழுதே!**

*அவ்விடத்ததாக,*

*மெய்ப்பொருள் உரைப்பவான வேதங்களை உரைத் தருளிய புலவனே! நின் தாழ் நிழற்கண்ணே வாழ்பவர்யாங்கள். நின்னை விரும்பும் அடியார்களாகிய அத்தொண்டர் குழாத்தினரோடும் யாங்களும் ஒருங்கே கூடியவராக அமைதல் வேண்டும். இன்பம் நிறைந்த உள்ளத்தேமாக. நின்தாள் நிழலாகிய அக் கருணைவெள்ளத்தைத் தொழுது போற்றியவராக விளங்கல் வேண்டும். 'யாம் நின்னடிக்கண்ணே பொருந்தி ஒன்றுபட்டு நாளும் நல்வாழ்வு பெற்றுத் திகழ்வேமாக, இவ்வாறு வேண்டியவராக, நின்னைப் பரவுவேம்! பெருமானே! எமக்கும் அதனைத் தந்து அருள்வாயாக!*

**சொற்பொருள் :** *காமரு சுற்றம் - விரும்பத் தகுந்த சுற்றம்; அடியவர் கூட்டம். அடியுறை - அடிக்கண் வாழ்வார்; அடிமைகள். வைகலும் - நாள்தோறும், ஏம் - இன்பம். வாய் மொழி - மறை.*

**விளக்கம் :** *நின் தாள்நிழலாகிய அருள்நிழலில் நின்று, இன்பவாழ்வைப் பெறுவோம்; எமக்கும் அதனைப் பெறுவதற்கு அருளிச்செய்வாயாக என்பதாம். அவனருளின்றி அவனைத் தொழுது பயன்பெறுதல் என்பதும் இயலாதாகலின், முதற்கண் அதற்கான அவனது அருள்நோக்கினைத் தந்தருளுமாறு வேண்டுகின்றனர்.*

**இரண்டாம் பாடல்**

# திருமால் வாழ்த்து (2)

**பாடியவர்** : *கீரந்தையார்;* **பண் வகுத்தவர்** : *நன்னாகனார்;* **பண்** : *பாலையாழ்.*

## தொழுது பேணுவோம்!

**தொன்முறை இயற்கையின் மதியொ.....**
**...................மரபிற்றாகப்**
**பசும்பொன் உலகமும் மண்ணும் பாழ்பட**
**விசும்பில் ஊழி ஊழூழ் செல்லக்**
**கருவளர் வானத் திசையில் தோன்றி**
**உருவறி வாரா ஒன்றன் ஊழியும்**
**உந்துவளி கிளர்ந்த ஊழூழ் ஊழியும்,**
**செந்தீச் சுடரிய ஊழியும், பனியொடு**
**தண்பெயல் தலைஇய ஊழியும், அவையிற்று**
**உண்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு**
**மீண்டும் பீடுயர்பு ஈண்டி அவற்றிற்கும்**
**உள்ளீ டாகிய இருநிலத் தூழியும்,**
**நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்**
**மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய**
**செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை**
**கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய**
**ஊழி ஒருவனை உணர்த்தலின் முதுமைக்கு**
**ஊழி யாவரும் உணரா**
**ஆழி முதல்வ! நின் பேணுதும் தொழுது;**

*'ஊழிக் காலம்'* என்பது, இவ்வுலகந் தோன்றிப் பரந்து, *மீளவும் அழிந்து ஒடுங்குவது* வரையுள்ள ஒரு பரந்த கால எல்லையைக் குறிப்பதாகும். இவ்வாறு பன்முறை நிகழ்ந்து, பல்லூழிக் காலங்கள் கடந்துள்ளன என்பர். இதுகாலை நிகழ்ந்து வருவதான இவ்வூழியை **'வராக கற்பகம்'** என்றும் உரைப்பர்.

*பழைமையாகத் தொடர்ந்து வருகின்றதான இயற்கை விதியின்படி, அதனையே முறையாகக் கொண்டு, பசிய பொன் மயமான தேவருலகமும், இம்மண்ணுலகமும் ஊழிமுடிவிலே அழிந்து பாழ்பட்டுப் போயின. வெளியாகிய வானமும் இல்லாது போயிற்று. ஊழிக்காலங்கள் பல இவ்வாறு தோன்றியும் ஒடுங்கியும் சென்றன. அதன்பின், கருவானது வளர்வதற்கு உரியதாகிய வானத்திசையிலே, மீளவும் கருத்தோற்றம் பிறந்தது. அஃது, உருவென எதனையும் அறிதற்கு இயலாத நிலையிலே பிறந்ததான ஒலியொன்றை மட்டுமே கொண்டதாக, நாத தத்துவப்பொருளாக இருந்தது. அத்தகைய முதலூழிக் காலமும்*

சென்றது. அதனையடுத்து அசையும் காற்றுப் பிறந்தது! காற்றின் இயக்கத்தோடுங் கூடியதாகத் திகழ்ந்த ஊழிகள் பலவும் தோன்றின. அதன் ஊழிக் காலங்களும் பல தோன்றிக் கழிந்தன. அதனையடுத்துத் தண்ணிய பெயலைக் கொண்டதாக நீரின் ஊழிக் காலங்கள் தோன்றின. அதனால், எங்கணும் பெருவெள்ளம் நிறைந்தது. அப் பெருவெள்ளத்தினுள்ளே, அதனடியிலே இவ்வுலகமானது மூழ்கிக் கிடந்தது.

திருமாலாகிய நீதான், அவ்வெள்ளத்துள்ளே மூழ்கினை; ஆங்கு, வெள்ளத்தடியிலே மூழ்கிக்கிடந்த இவ்வுலகினை உயரே எடுத்து வெளிக்கொணர்ந்து, மீண்டும் நிலைபெறுத்தினை; இச்செயலுக்கு உள்ளீடாக அமைந்தது. பெரிய இந் 'நிலவூழி' எனப்படுகின்ற ஊழிக்காலம் ஆகும்.

இப்படித் தோன்றிய நிலவூழியும் தோன்றித், தோன்றிய பின்னரும் பலகாலங்கள் அவ்வாறே கிடந்து வந்தது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், குற்றமற்ற கமலம், வெள்ளம் என்று சொல்லப்படும் பேரெண்களின் அளவான காலங்கள் பலவும் அப்படியே கழிந்தன. நின் செயற்குறிப்பின் தொகுதியாகி எழுந்த இவற்றையெல்லாம் அழித்தும் மீளத் தோற்றுவித்தும் வருகின்ற திருவிளையாட்டினை நீயும் தொடர்ந்து நிகழ்த்தி வந்தனை!

நின் இச் செய்கையினை எண்ணி வரையறுத்து, இத் தன்மைத்தென உணர எவராலுமே இயலாது. பல்லூழிகளுக்கும் முற்பட்டவனாக, ஆதிமுதலாக, நீதான், நீ ஒருவனே தான் இருப்பவன். ஆதலின், நின் முதுமையையும் எத்தனை ஊழிகளின் அளவென எவரும் உணர்ந்து அறிய மாட்டார்கள்! இத்தகைய பழைமையினை யுடையவனே! சக்கரப் படையினை வலக்கரத்தே ஏந்தியுள்ள தலைவனே! நின்னைத் தொழுது, நின் புகழைப் போற்றுகின்றேம். எமக்கும் அருள்வாயாக.

**சொற்பொருள் :** தொன்முறை - தொன்மையான முறை மையையுடைய; 'முறைமை' என்பது நியதி; இது நெறி பிறழாமல் தொடர்ந்து வருவது. பசும் பொன் உலகம் - தேவர் உலகம்; பசி பொன் மயமான உலகம். ஊழ் - தோற்றம்; முளை. ஊழி - தோன்றி நிகழ்வது. உந்தல் - அசைத்தல். பனி - குளிர்ச்சி. பீடு - பெருமை. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் என்பன பேரெண்கள்; கோடிக்கும் மேற்பட்டவை.

**விளக்கம் :** 'ஊழி முதல்வனும், அனைத்துக்கும் ஆதியும் திருமாலே' என்று கூறுகின்றனர். அவனது பழைமையையும் சிறப்பையும் அவ்வாறு போற்றுகின்றனர். வானம் முதலில் தோன்றிற்று. அதனின்று காற்றும், நெருப்பும், நீரும், நிலமும் முறையே தோன்றின, இவை மீள ஒடுங்குங் காலத்து நிலம்

நீரிலும், நீர் நெருப்பிலும் என்னும் முறையே ஒன்று மற்றொன்றனுட் சென்று ஒடுங்கும். இவ்வாறு ஆன்றோர் பஞ்ச பூதத் தோற்றமுறைமையை உரைப்பர். அப் பஞ்ச பூதங்களுக்கும் முதல்வனாகியும், அவையே தானாகியும், அவற்றைக் கடந்து தனித்து நிற்பவனாகியும் விளங்குபவன் திருமால் என்பதாம். 'ஒருவனுமே உலகு ஏழும் படைத்தான்; ஒருவனுமே உலகேழும் அளித்தான்; ஒருவனுமே உலகேழும் துடைத்தான்; ஒருவனுமே உலகோடு உயிர்தானே' (திருமந். 404) என்பதும் நினைக்க. அவ்வொருவனே திருமாலாகவும் காட்சிதருவான் என்பது இதன் கருத்து.

### தொன்மை நிலை!

**நீயே, வளையொடு புரையும் வாலியோற் கவன்**
**இளையன் என்போர்க்கு இளையை யாதலும்,**
**புதையிருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு**
**முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்,**
**வடுவில் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த**
**கெடுவில் கேள்வியுள் நடுவா குதலும்.**
**இந்நிலைத் தெரிபொருள் தேரின், இந்நிலை**
**நின்னிலைத் தோன்றும்நின் தொன்னிலைச் சிறப்பே;**

சங்கினோடு ஒப்பான நிறத்தைக்கொண்ட வெண்மேனியன் பலராமன்; அவனும் நீயே! அவனுக்கு இளையோனாகிய 'கண்ணன் நீ' என்போர்க்கு, அவ்வாறே அவன் தம்பியாகவும் நீயே தோன்றுகின்றனை! 'நிறைந்த இருளொத்த கருநிற உடையையும், அழகிய பனைக்கொடியையும் உடையோனாகிய அப் பலராமனுக்கு நீ முற்பட்டவன்' என்போருக்கு, அவ்வாறே அவனுக்கு மூத்தோனாகவும் நீ காணப்படுகின்றனை!

குற்றமில்லாக் கோட்பாடுகளைக் கொண்டவர் உயர்ந்தோர். அவர் ஆராய்ந்த அழிவற்ற மறைகளுள், அவற்றின் நடுவான, அவற்றின் உட்பொருளாக அமைந்து விளங்குபவனும் நீயே! இந்நிலையவான, தெரிந்துள்ள உண்மைகளை எல்லாம் ஆராயின், இந்நிலையெல்லாம் நின்னிடத்துத் தோன்றும் நின் தொன்மைநிலையினது சிறப்பேயாகும்!

**சொற்பொருள்** : வளை - சங்கு. புரையும் - ஒக்கும். வாலியோன் - வெண்மேனியன்; பலராமன். புதையிருள். நிறைந்த இருள்; அடர்ந்த இருள். பொலம் - அழகு. வடு - குற்றம். கெடு - அழிவு; காலவெல்லையும் ஆம். கேள்வி - கேட்கப்படுவது; மறை. தெரிபொருள் - தெரிந்த மெய்ப்பொருள்.

**விளக்கம்** : திருமாலே பலராமனாகவும், கண்ணனாகவும், அவர்க்கும் முற்பட்டோனாகவும், அவரவர் நினைப்பிற்கேற்பத்

தோன்றி அருள்பவனாவான் என்பதாம். அனைத்தும் கடந்த அவனுக்கு, இந்தக் குறிப்பிட்ட உருவெல்லாம் மாயத் தோற்றமே என்பதுமாம்.

### உரை சிறந்தது

**ஓங்குயர் வானின் வாங்குவில் புரையும்**
**பூண்அணி கவைஇய வாரணி நித்திலம்**
**நித்தில மதாணி அத்தகு மதிமறுச்**
**செய்யோள் சேர்ந்தநின் மாசில் அகலம்**
**வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்**
**வைவான் மருப்பின் களிறு மணனயர்பு**
**புள்ளி நிலனும் புரைபடல் அரிதென**
**உள்ளுநர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று;**

*ஓங்கி உயர்ந்தது வானம். அதனிடத்தே வளைந்த வானவில் தோன்றும். அதனையொத்து ஒளிவிளங்கும் பலநிறப் பூண்களை அணிந்தவன்; அவற்றிற்கு இடையே வாரால் தொடுக்கப்பெற்ற அழகிய முத்தாரத்தை அணிந்திருப்பவன்; அதனிடத்தே முத்துப்பதித்த பதக்கம் விளங்கத் திகழ்பவன் நீ! அழகிற் சிறந்தது அப்பதக்கம். அது முழுநிலவைப் போன்று ஒளியுடன் தோன்றும். குற்றமற்ற நின் மார்பினிடத்தே செய்யோளாகிய திருமகள் நிலையாக வீற்றிருப்பாள். அவளிருக்கும் நிலை நித்திலப் பதக்கமாகிய மதியிடத்தே மறு ஒன்று அமைந்து விளங்குவது போன்று காணப்படும்.*

*மிக்கெழுகின்ற அலைகளாலே கழுவப்பட்ட, ஒளி விளங்கும் புள்ளிகளுக்கு இடையே, கூர்மையான வெள்ளிய நின் கொம்பு களுக்கு இடையே, நிலமகள் தானும் ஒரு புள்ளி போலவே அந்நாளில் விளங்கினாள். வராகக்களிறாகிய நீதான் அவளை அந்நாளிலே எடுத்து மணந்து கொண்டாய். 'நின் கொம்பிடத்துப் புள்ளிகளுள், தானும் ஒரு புள்ளியளவாகவே விளங்கிய நில மகளும் ஏதும் துன்புறுதல் அரிது' என்னுமாறு, அவளை நீதான் தாங்கிக் காத்தனை! இவ்வாறு ஊழிவெள்ளத்துள் மூழ்கிக்கிடந்த நிலமகளை எடுத்துக் காத்த நின் சிறப்பினை எண்ணுவோர், நின் ஆற்றலைப் புகழ்ந்து உரைப் பார்கள். அப்புகழுரைகளோடு, நின் செயலும் மென்மேலும் சிறந்து விளங்கும்."*

**சொற்பொருள் :** வாங்கு வில் - வளைந்த வில்; வானவில். பூண் - அணி; மாலை. கவைஇய - சூழ்ந்து கிடக்க. நித்திலம் - முத்து. மதாணி - பதக்கம். பொறி - புள்ளி. நாப்பண் - நடுவே. வை - கூர்மை. வான் மருப்பு - வெண் கொம்பு. களிறு - கேழலாகிய களிறு; மாலின் வராகவுருவைக் குறித்தது. புள்ளி நிலன் - புள்ளியளவே தோன்றிய நிலவுலகம்; நிலமகள்.

**விளக்கம் :** *திருமகள் நின் மார்புப்பதக்கத்து நடுவே ஒரு புள்ளிபோல விளங்குவாள்; நிலமகள் நின் புள்ளிகளைக் கொண்ட கொம்பின் இடையிலே தானும் ஒரு புள்ளி போன்று விளங்குவாள்' என்பதாம். இதனால் திருமாலது பேராற்றலும், பேருருவும், பெரும்புகழும் உரைக்கப்பட்டன. 'கோட்டிற் கொண்டு நிலமகளை மணந்த காலத்து, மார்பில் மறுப்போலச் செய்யவளைக் கொண்டிருத்தல் சிறப்பாகுமோ?' என்று சொல்லலும் ஆம். அவள்தான் செய்யவள் ஆதலின், அதனை ஏற்றிருந்தாள் என்பதும் ஆம்.*

**நின் படை!**

**ஓடியா உள்ளமொடு உருத்தொருங்கு உடனியைந்து**
**இடியெதிர் கழறும் காலுறழ்பு எழுந்தவர்**
**கொடியறு பிறுபு செவிசெவிடு படுபு**
**முடிகள் அதிரப் படிநிலை தளர**
**நனிமுரல் வளை முடியழி பிழிபு**
**தலையிறுபு தாரொடு புரள**
**நிலைதொலைபு வேர்தூர் மடல்**
**குருகு பறியா நீளிரும் பனைமிசைப்**
**பலபதி னாயிரங் குலைதரை உதிர்வபோல்**
**நில்லாது ஒருமுறை கொய்யுபு கூடி**
**ஒருங்குருண்டு பிளந்து நெரிந்துருள்பு சிதறுபு**
**அளறு சொரிபு நிலஞ் சோரச்**
**சேரார் இன்னுயிர் செகுக்கும்**
**போரடு குருசில் நீ ஏந்திய படையே;**

*தளர்ச்சியற்ற உள்ளத்தோடு கூடியவராக, நின்பாற் சினங் கொண்டவராக, ஒருங்கே ஒன்றுபட்டுப் பலரும் திரண்டு கூடியவராக, காற்றை யொத்த வலிமையும் விரைவும் கொண்டவராக, இடியொத்த முழக்கத்தைக் கொண்டவருமாகப் பகைவர் நின்மேற் போருக்கு எழுந்தனர். அவர்களின் கொடிகள் அற்று வீழவும், செவிகள் செவிடுபட்டுப் போகவும், மணிமுடிகள் அதிர்ந்து வீழவுமாக, அவர்கள் நின்றநிலை முற்றவும் கெட்டழியு மாறு, மிக்க குரலோடு நின் சங்கமும் அந்நாளிலே முழங்கிற்று.*

*நின் கையில் ஏந்திய சக்கரப் படையானது, நின் பகைவரின் தலைகள் எல்லாம் அறுபட்டு வீழவும், அறுபட்டு வீழ்ந்த அத்தலைகள் அவர் கழுத்து மாலைகளோடு கிடந்து புரளவும், அவர்களை நிலைகெட்டுஅழியுமாறு செய்தது. தம் நிலை வெட்டுப்பட்டுப் போக, வேரும், தூரும் , மடலும், குருத்தும் சிறிதும் அழிவெய்தாதிருக்கவும், நெடிய கரிய அப்பனைகளின் மேலுள்ள பலவான பதினாயிரம் காய்களைக் கொண்ட*

குலைகள் எல்லாம் அறுபட்டுத் தரையிடத்தே வீழ்ந்து சிதறுவதைப்போலப், பகைவரின் தலைகள் பலவும் அறுபட்டுச் சிதறி வீழ்ந்தன; வலியிழந்தன. சாய்ந்து, ஒரு முறையாகக் கொய்யப் பட்டுக் கூடி, ஒருங்கே உருண்டு பிளந்து சிதைந்து, விழுந்து, சிதறி உருண்டு ஓடின, அத் தலைகள். அவ்வாறு அவை அறுபட்டு வீழ்ந்தபோது, அவற்றினின்றும் வெளிப்பட்ட மூளையும் இரத்தமுமாகிய சேறு நிலத்திலே எங்கணும் பரவியது. இவ்வாறு, பகைவரது இனிய உயிரைப் போக்கும், வெற்றிப் போரையுடை தலைவனே! நின் வலிமைதான் என்னே!

**சொற்பொருள் :** ஒடிதல் - தளர்தல்; சோர்தல். உள்ளம் - உள்ளச் செருக்கு. உருத்து - சினந்து. இயைந்து - பொருந்தி. கழறும் - முழக்கும்; இது போர்முழக்கம். படிநிலை - தரையில் நின்ற நிலை. வளை - சங்கம். குருகு - குருத்து; பனங் குருத்தின் உருவத்திற்கு உவமை. குலை - காய்க் குலைகள். அளறு - சேறு; மூளையும் குருதியுமாகிய சேறு. சேரார் - பகைவர். இன்னுயிர் - இனிதான உயிர். குருசில் - தலைவ. படை - சக்கரப்படை.

**விளக்கம் :** எதிர்த்தாரின் தலைகளை அறுபட்டு வீழும் பனங்காய்களைப் போலச் சிதறி வீழுமாறு வெட்டி வீழ்த்தி, அவர் செருக்கடக்கி, உயிரைப் போக்கிய போர்வெற்றியை உடைய தலைவன் திருமால் என்பதாம். இதனால், அவனை நம்பி, அவனடி சேர்ந்தோர்க்குப் பகைவரால் வரும் துயரமும் இல்லை என்பதுமாம்.

## கருடக் கொடியாய்!

**ஒன்னார் உடங்குண்ணும் கூற்றம் உடலே;**
**பொன்னேர் பவிரழல் நுடக்குதன் நிறனே;**
**நின்னது திகழொளி சிறப்பிருள் திருமணி;**
**கண்ணே, புகழ்சால் தாமரை யலிரிணைப் பிணையல்;**
**வாய்மை வயங்கிய வைகல், சிறந்த**
**நோன்மை நாடின் இருநிலம்; யாவர்க்கும்**
**சாயல் நினது வான்நிறை என்னும்**
**நாவல் அந்தணர் அருமறைப் பொருளே!**
**அவ்வும் பிறவும் ஒத்தனை; உவ்வும்**
**எவ்வயி னோயும் நீயே**
**செவ்வா யுவணத் துயர்கொடி யோயே!**

நின் சக்கரப்படையின் உடலானது, பகைவரின் உயிர்களை ஒருசேர உண்ணுகின்ற கூற்றம் ஆகும். பொன்னை உருக்கும் பொழுது எழுகின்ற செந்தீச் சுடரினைப்போல ஒளியகைந்து தோன்ற, விளங்கும் அதன் திறன்.

*நின் திருமேனியது விளங்கும் ஒளியானது சிறந்த கரிய மணியைப் போன்றது. நின் கண்கள் புகழ்மிகுந்த தாமரை மலர்கள் இரண்டை இணைசேரப்பிணைத்து வைத்தாற் போலத் தோன்றுவன. நின் வாய்மை பொய்யாது விளங்கும் நாளினைப் போன்றது. நின் சிறந்த தவநிலைமையை ஆராயின் அதுதான் இப் பெருநிலத் தினும் பொறுமை மிக்கதாகும். யாவருக்கும் அருளுகின்ற நின் அருளின் தன்மையானது வானத்து மேகங்களைப் போன்றதாகும். இவ்வாறெல்லாம், நாவன்மை கொண்ட அருளாளர்கள், அருமறையின் உட்பொருளான நின்னைப்பற்றி, நின் செவ்வியைப் பற்றி, உரைத்துப் போற்றுவார்கள்.*

*சிவந்த வாயையுடைய சுருடச்சேவலைப் பொறித்துள்ள, உயர்ந்த வெற்றிக் கொடியினை உடையோனே! முன்சொன்ன அப்பொருள்களையும், அவையன்றிப் பிறவான பொருள் களையும் ஒத்திருப்பவன் நீ! இவ்வாறு ஒப்பாயிருக்கும் நீயே, அவற்றைக் கடந்தவனாக, எவ்விடத்தானாகவும் பரந்து விளங்குகின்றன!*

**சொற்பொருள் :** *ஒன்னார் - பகைவர். உடங்கு - ஒருசேர. அவிரழல் நுடக்கு - எரிசுடரின் அசைவு. இருள் திருமணி - கருமணி; நீலமணி. வைகல் - நாள். சாயல் - அருள். வான்நிறை - வானத்து மேகங்கள். உவணம் - கருடச் சேவல்.*

**விளக்கம் :** *நின்னை இவ்வாறு ஒப்பிட்டு யாம் கூறினாலும், தனக்கு ஒப்பேதும் இல்லாதவனாகிய நீதான், அவற்றைக் கடந்து, எவ்விடத்தானாகவும் விளங்குவாய் என்பதாம். 'வாய்மை வயங்கிய வைகல்' என்றது. அதனுண்மை தெளிவாவது போலவே, அவனுண்மையும் தெளிவென்றதாம்.*

**காணும் வரவு**

**கேள்வியுள் கிளந்த ஆசான் உரையும்**
**படிநிலை வேள்வியுட் பற்றியாடு கொளலும்**
**புகழியைந் திசைமறை உறுகனல் முறைமூட்டித்**
**திகழொளி ஒண்சுடர் வளப்பாடு கொளலும்**
**நின்னுரு புடன் உண்டி**
**பிறருடன் படுவாரா**
**நின்னொடு புரைய**
**அந்தணர் காணும் வரவு;**

*அந்தணர்க்குத் திருமால் எவ்வாறு வந்து தோன்றிக் காட்சி தருவான் என்பதனை இங்குக் கூறுகின்றார்:*

*வேதங்களுள் தேர்ந்த வேள்வித் தலைவன் சொல்லும் மந்திர மொழிகளினும், படிப்படியான நிலையையுடைய வேள்விச் சாலையுள் இடப்படும் யாகபலியாகிய ஆட்டினைக்*

கொண்டு போதலாகிய அச் செயலினும், புகழ்பொருந்த இசைக்கும் மறைவிதிகளின்படியே யாகத்தீயை முறையாக மூட்டி, அது சுடரிட்டு எரியுங்காலத்தே, ஒள்ளிய அச்சுடரிடத்தே காணப்படும் வளமைப்பாட்டினை ஏற்றுக் கொள்ளுவதிலும், நின் உருவத்தோடு, நின் உணர்வையும், பிறரும் கண்டு போற்றி ஏற்றுக் கொள்வர். நின்னோடு கூடிய புகழ்மைக்குத் தக்கவாறு, அந்தணர் போற்றிக் காண்கின்ற நின்னுடைய வருகை இவ்வாறேயாகும், பெருமானே!

**சொற்பொருள் :** கேள்வி - வேதங்களைக் கேட்டறிந்த அறிவு. ஆசான் - ஆசிரியன்; வேள்வித்தலைவன். ஆடு - யாகப் பலியாகிய ஆடு; இதனையாகத் தூணில் கட்டி வைப்பர். கனல் - வேள்வித் தீ.

**விளக்கம் :** திருமால் சாதாரண மக்கட்குச் சிலைவடிவாக வும், அந்தணர்க்கு வேள்வித்தீச் சுடரிடையிலும், யோகிகட்கு அவர் உள்ளத்திலும், சித்தர்களுக்கு எங்கும் எதனிடத்துமாகவும் காட்சியளிப்பான் என்ற உண்மையை உரைத்ததாம்.

### எம் அறிவு துன்புறாதிருக்க

**வாயடை அமிர்தம் நின் மனத்தகத் தடைத்தர**
**மூவா மரபும் ஓவா நோன்மையும்**
**சாவா மரபின் அமரர்க்காச் சென்ற நின்**
**.................................மரபினோய் நின்னடி**
**தலையுற வணங்கினேம் பன்மாண்**
**கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்**
**கடும்பொடும் கடும்பொடும் பரவுதும்**
**கொடும்பாடு அறியற்க எம்மறி வெனவே!**

நின் மனத்துள்ளே, தேவர்கட்கு அமுதத்தைத் தருதற்கு நீதான் நினைத்தனை! அவ்வளவிலே அமுதம் அவர்கள் வாயினைச் சென்றும் அடைந்தது. அவர்கள் முதுமையற்ற தன்மையையும், தொலைவற்ற வலிமையையும் பெற்றனர். சாதல் அற்ற தன்மை யையும் அவர்கள் அடைந்தனர். இவ்வாறு, அமரர் பொருட் டாகச் சென்ற நின் அருண்மை வியத்தற்குரியது. இத்தகு நன்மை கொண்டோய்! நின் திருவடிகளைத் தலைபொருந்த யாமும் வணங்கினேம். கலக்கமற்ற நெஞ்சினேமாய், நின் பல புகழையும் சொல்லி நின்னைப் போற்றினேம்; நின் திருவடிகளை வாழ்த்தினேம். எதற்காக?

எம் அறிவானது கொடுமையான தன்மை எதனையும் அறியாதிருக்குமாறு அருள்வாயாக என்பதற்காகவே! இதனை விரும்பியே எம் பல்வகைச் சுற்றத்தோடும் நின்னைப் போற்றுகின் றேம்! எமக்கும் கருணைபாலித்து அருளிச் செய்வாயாக!

**சொற்பொருள் :** நோன்மை -வலிமை. கலி - கலக்கம். கடும்பு - சுற்றம். கொடும்பாடு - கொடுமைப்பாடு; மாறுபாடு.

**விளக்கம் :** அறிவு மாறுபடாதிருக்க அருளுமாறு வேண்டுகின்றார் ஆசிரியர். அறிவு தெளிவாயின் செயலும் சிறப்பாகும்; அதனால் அனைத்தும் சிறக்கும் என்பதாம். இங்கே கடும்பென்றது அடியவர் திருக்கூட்டத்தினை. 'கலியில் நெஞ்சினேம்' என்றதனை நினைவிற்கொள்க. கலிகொண்ட நெஞ்சினர் எக்காலத்தும் கடவுளருளைப் பெறமாட்டார். அக் கலிதான் நீங்குதற்கும் கருணைக்கடலான பெருமானின் இன்னருள் நோக்கம் முதற்கண் வேண்டும் என்பதாம்.

அறிவு என்பதே தெளிவைத் தருவதுதான். அதன்கண் தெளிவுகுன்றி மயக்கம் ஏற்படும்போதே கொடும்பாடுகள் கிளைக்கின்றன. தோன்றாத துணையாய் உள்ளிருந்து இயக்கும் இறைவன் அதனைக் களைய முற்படுகிறான். உயிர் அதற்கு உட்படும்போது மயக்கம் விலகுகின்றது; அதற்கு விலகிச் செல்லும்போது இருள் சூழ்கின்றது; இருளின் விளைவான நலிவுகளும் பிறவும் அலையலையாக எழுந்து வருத்துகின்றன. இதனின்றும் விடுபட இறைவனை உள்ளத்தானாக உணர்ந்து அவன் அடியுறை நிலையினை முற்றவும் புகலாக அடைதல் வேண்டும் என்பதாம்.

### மூன்றாம் பாடல்

## திருமால் வாழ்த்து (3)

**பாடியவர் :** கடுவன் இளவெயினனார்; **பண்வகுத்தோர் :** பெட்டகனார்; **பண் :** பண்ணுப் பாலையாழ்.

### மாயோனே! மாயோனே!

**மாஅ யோயே! மாஅ யோயே**
**மறபிறப் பறுக்கும் மாசில் சேவடி**
**மணிதிகழ் உருவின் மாஅ யோயே!**

மாயவனே! மாயவனே! உயிர்க்குலத்தின் மீளமீளப் பிறக்கும் பிறவிகளாகிய தலையை அறுத்து, அவற்றை அத்துயரினின்றும் விடுவிக்கும் குற்றமற்ற சிவந்த பாதங்களையும், நீலமணி போலத் திகழும் உருவினையும் கொண்ட மாயோனே!

**சொற்பொருள் :** மறுபிறப்பு - தொடர்ந்துவரும் பிறப்பு; இது வினைகாரணமாக வந்தமைவது; வினைக்குத் தூண்டுவது மாயா காரியமாகிய உடலும், அதன் உறுப்புக்களாகிய ஐம்பொறிகளும் மணி - நீலமணி.

**விளக்கம் :** 'பிறவிப் பிணியினின்றும் விடுபட்டு உயர்வதற்கு உதவும் பெருமானே' என்று போற்றுகின்றனர். அவன் சேவடிகளைப் புகலிடமாகக் கொண்ட அடியவரே அந்நிலை பெறுவர்; இதனால் அவன் சேவடிகளுக்கு அச்சிறப்பை உரித்தாக்கிக் கூறுகின்றனர். மாசு காரணமாக வந்தடையும் பிறவித்துயரை, மாசில் சேவடி போக்கும் என்கின்றார். மாயோனாகிய அவனையே மாயையின் பிடிப்பினின்றும் விடுபட்டுப் பிழைத்தற்குத் துணைக் கொள்ள விரும்புகின்றார்; 'இறைவனடி சேர்ந்தாரே பிறவிப் பெருங்கடலை நீந்துவர்' என்பதும் நினைக்க.

## நின்னின் தோன்றியவை!

**தீவளி விசும்பு நிலன் நீர் ஐந்தும்,**
**ஞாயிறும், திங்களும், அறனும், ஐவரும்,**
**திதியின் சிறாரும், விதியின் மக்களும்,**
**மாசில் எண்மரும், பதினொரு கபிலரும்,**
**தாமா இருவரும், தருமனும், மடங்கலும்,**
**மூவேழ் உலகமும், உலகினுள் மன்பதும்,**
**மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம்**
**மாயா வாய்மொழி உரைதர வலந்து;**

*நெருப்பும் காற்றும் வானும் நிலனும் நீருமாகியன ஐம்பெரும் பூதங்கள்; ஞாயிறும் திங்களும் என்னும் இவையிரண்டும் ஒளிதரும் பெருஞ்சுடர்கள்; அறம் பொருள் இன்பம் என்னும் அறநெறியின் தலைவனாகக் குறிக்கப் பெறுபவன் அறவோன்; செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பவர் ஐந்து கோள்களுக்கு உரியோர்; திதியின் பிள்ளைகள் அசுரர் என்போர்; விதியின் மக்கள் ஆதித்தர் பன்னிருவர்; வசுக்கள் எண்மரும் குற்றமற்றவர் எனப் போற்றப்படுபவர்; உருத்திரர்கள் பதினொருவர்; அசுவினி தேவர்கள் இருவர்; தருமதேவன் ஒருவன்; அவன் ஏவலை மேற்கொண்டு உயிருண்ணுவது கூற்றம்; மேல் கீழ் நடுவென்னும் முந்நிலைகளில் ஏழேழாக அமைந்த உலகங்கள் இருபத்தொன்று; இவ்வுலகங் களுள் வாழ்வன எண்ணற்ற உயிர்கள்; இவை அனைத்துமாகத் திகழும் மாயோனே! அழிவற்ற வேதங்கள், இவ்வாறு சொன்னவற்றையே யாமும் மேற்கொண்டு, இவை அனைத்தும் நின்னினின்றும் தோன்றிப் பரவினவை எனச் சொன்னேம்!*

**சொற்பொருள் :** வளி - காற்று. அறன் - யாகத் தலைவன் எனவும் உரைப்பர். விதி - காசிபன். பதினொரு கபிலர் - உபபிரமர்கள்.

**விளக்கம் :** உலகத்தோற்றத்திற்கு ஆதி காரணனாக விளங்குபவன் மாயோனாகிய அவனே என்கின்றனர்; சுத்த

*மாயையாகிய சக்தியினின்றே அனைத்தும் தோன்றின என்று தத்துவங்களும் உரைக்கும். காசிபன் உபப்பிரமருள் ஒருவன்; இவனுக்கு மனைவியர் இருவர்; அவர் திதி, அதிதி என்போர்; இவருள் திதியின் மக்கள் அசுரர்கள்; அதிதியின் மக்கள் சுரர்கள்.*

### தொழாரும் உளரோ

**வாய்மொழி ஓடை மலர்ந்த**
**தாமரைப் பூவினுள் பிறந்தோனும், தாதையும்,**
**நீயென மொழியுமால் அந்தணர் அருமறை;**
**ஏஎர் வயங்குபூண் அமரரை வௌவிய அமிழ்தின்**
**பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினை!**
**பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளின்**
**நிவந்தோங்கு உயர்கொடிச் சேவலோய்! நின்**
**சேவடி தொழாரும் உளரோ! அவற்றுள்**
**கீழேழ் உலகமும் உற்ற அடியினை!**

*வாய்மொழி எனப்படுவன வேதங்கள். அவை தொடர்ந்து கேட்கப்பட்டே வருவன. இத்தகைய ஓட்டத்தை உடைய அவ்வோடையிலே மலர்ந்த தாமரைப் பூவினுள்ளே பிறந்தான் அயன். அவனும், அவனுக்குத் தாதையாக விளங்குவோனும் நீயே! இவ்வாறு அந்தணரின் அரிய மறைகள் நின்னைக் குறித்து உரைக்கின்றன.*

*அழகு விளங்கும் பூண்களை உடையோர் அமரர்கள், அவரிடத்தினின்றும் கைப்பற்றிய அமிழ்தத்தால் தன்னைப் பெற்றவளின் துயரத்தைப் போக்கியவன் கருடன்; அக் கருடனாகிய புள்ளினை ஊர்தியாக உடையோனே!*

*பெற்றவளின் துயரைப் போக்கிய அக் கருடப் புள்ளின் உருவத்தைப் பொறித்த, உயர்ந்து விளங்கும் வெற்றிக் கொடியையும் உடையோனே!*

*நின் சிவந்த பாதங்களைத் தொழாதவரும் உளரோ!*

*அத் திருவடிகளுள் கீழேழ் உலகங்களிற் பொருந்திய ஒரு திருப்பாதத்தையும் உடையோனே!*

**சொற்பொருள் :** *வாய்மொழி - வேதம். ஓடை - ஓட்டத்தை உடையது. ஏஎர் - அழகு. புள் - கருடப்புள். பயந்தோள் - தாய்; அவள் பெயர் விந்தை.*

**விளக்கம் :** *உலகம் மீளவும் தோன்றுங்காலத்தே, ஊழி வெள்ளத்தே அறிதுயில் அமர்ந்திருக்கும் மாயவனின் உந்தியிலிருந்து ஒரு தாமரை மலரும்; அதனின்றும் பிரமன் தோன்றி உலகைப் படைப்பான் என்பது புராணம். தாயின் அடிமைத்*

*தளையை அறுக்கக் கருடன் தேவரை வென்று, அவர் காப்பில் இருந்த அமுதத்தைப் பற்றிக் கொணர்ந்தான் என்பது கருட புராணம். திருமால் வாமனனாக மாவலியிடம் இரந்து பெற்ற மூவடிநிலத்தை அளந்து கைக்கொண்ட காலத்தே, அவன் திருவடிகளுள் ஒன்று கீழேழ் புவனங்களினும் சென்று பொருந்திற்று என்பதும் புராணம். இவற்றால் திருமாலின் சிறப்புக் கூறப்பெற்றது; அவன் பேருருவாம் பெருந்தன்மையும் உரைக்கப் பெற்றது.*

## பாடுவார் வகை

**தீசெங் கனலியும் கூற்றமும் ஞமனும்**
**மாசில்ஆ யிரங்கதிர் ஞாயிறும் தொகூஉம்**
**ஊழி ஆழிக்கண் இருநிலம் உருகெழு**
**கேழலாய் மருப்பின் உழுதோய் எனவும்,**
**மாவிசும்பு ஒழுகுபுனல் வறள அன்னச்**
**சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய் எனவும்,**
**ஞாலத்து உரையுந் தேவரும் வானத்து**
**நாலெண் தேவரும் நயந்துநிற் பாடுவோர்**
**பாடும் வகையேஎம் பாடல் தாமப்**
**பாடுவார் பாடும் வகை!**

*அனைத்தும் ஒடுங்குதற்குரிய சர்வ சங்கார காலத்திலே, அனைத்தையும் எரித்தொழிக்கும் பெருநெருப்பாக விளங்குபவனும், அனைத்துயிரையும் பற்றிச் செல்லும் கூற்றமாக நிற்பவனும் அனைத்துக்கும் விதிப்படி பயன்களை விதிக்கும் விதியாக அமைவோனும், எல்லாமும் நீயே!*

*குற்றமற்ற ஆயிரம் சுடுகதிர்களைப் பரப்புகின்ற ஞாயிறாக விளங்குவோனும் நீயே!*

*இவை அனைத்தும் ஒன்றாகக் கூடி உலகை அழித்து ஒடுக்குகின்ற ஊழியிறுதிக் காலத்திலே, கடலினிடத்தே, இப்பெரிய நிலவுலகத்தை நிறம்பொருந்திய பன்றியாக உருக்கொண்டு, கொம்புகளினாலே பேர்த்தெடுத்துக் கொணர்ந்து காத்த கருணையோனும் நீயே!*

*அவ்வூழிக் காலத்தே, பெரிய விசும்பினின்றும் விடாது பெய்துகொண்டிருந்த ஊழிப் பெருமழையாலாகிய வெள்ளமானது வற்றும்படியாக, அன்னச் சேவலாக உருக்கொண்டு, சிறகரினால் விசிறிக் காத்தவனும் நீயே!*

*இவ்வுலகத்தே வாழ்வோரான தேவர்களும், வானத்துக்கண் வாழ்வோரான முப்பத்திரண்டுவகைத் தேவரும் நின்னை விரும்புவர்; நின் புகழைப் பாடுவர். அவர் பாடும் மேற்குறித்த அவ்வகையே, யாம் பாடும் எம் பாடலும் விளங்கும். இவ்வாறு*

முன்னர்ப் பாடியோர் பாடியவகையே தொடர்ந்து பாடுவது என்பதன்றி, எவர்தாம் நின் புகழைத் தாமே கண்டறிந்து பாடுதற்கு வல்லார்?

**சொற்பொருள் :** தீ - ஊழித் தீ. செங்கனலி - செந்நெருப்பு; கனலுதல் உடைமையால் கனலியாயிற்று. கூற்றம் - உயிரை உடலினின்றும் கூறுபடுத்துவது. ஞமன் - வினைக்கேற்ப உயிர்களைச் செலுத்துபவன். ஊழி - கடல். உருகெழு - நிறம் பொருந்திய. புலர்த்தல் - காய வைத்தல். ஞாலத்து உரையும் தேவர் - உலகின் கோயில்களிலும் தேவகோட்டங்களிலும் பிறவற்றிலும் நிலைபெற்றுநின்று காக்கும் காவல் தெய்வங்கள். நாலெண்தேவர் - உருத்திரர் பதினொருவர்; வசுக்கள் எண்மர்; சூரியர் பன்னிருவர்; மருத்துவர் இருவர் ஆகியோர்; இவர் முப்பத்திருவர் என்பர்.

**விளக்கம் :** ஊழிக்காலத்துப் பெருவெள்ளமாகப் பரவி எங்கும் நிறைந்த கடலின் நடுவே கிடந்த உலகினைக் கேழலாய்ச் சென்று, கொம்புகளால் எடுத்து வந்தவன் மாயோன் என்பது புராணம். திருமால் அன்னச் சேவலானதற்குச் சிவபிரானின் முடிதேடப் போயின கதைக்கு மாறாகப் புதியதொரு கதை இங்கே காணப்படுகிறது. ஞாலத்து உறையும் தேவரை, மனிதராகப் பிறந்தும் தெய்வமாகி உயர்ந்த சித்தர், முனிவர், சான்றோர், பக்தர், கற்புடைமகளிர் எனவும் கொள்ளலாம். அவரும் தெய்வமாக நின்று அருளுதலால்.

### இரு கை மாலே!

**கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்**
**எரிசினம் கொன்றோய்! நின் புகழுருவினகை;**
**நகையச் சாக நல்லமிர்து கலந்த**
**நடுவுநிலை திறம்பிய நயமில் ஒரு கை;**
**இரு கை மால்!**

'கூந்தன்மா' என்னும் உருவோடு நின்னைக் கொல்ல வந்தவன் 'கேசி' என்னும் அரக்கன். எரியை ஒத்த சினத்தோடு வந்த அவனை, நீதான் கொன்றனை!

நின் புகழை எல்லாம் தன் செயலாகவே கொண்டு, அப்புகழின் உருவாக விளங்கும் கையினைக் கொண்டோய்!

அமுதம் பங்கிட்ட காலத்தே மோகினியாக ஆடிப் பாடி, அசுரரை நமையாடச் செய்து, சிரித்தே சாகுமாறு அழித்து, அமுதைத் தேவருக்குத் தந்தனை! நன்மை விளைப்பதாகிய அவ்வமுதங் கலந்தது நின் ஒரு கை! இருசாராருக்கும் சமமாகத் தருவதற்கு மாறாக, நடுவுநிலை பிறழ்ந்த நயமற்ற ஒரு கையினையும் கொண்டோனே!

*இவ்வாறு இரு கைகளைக் கொண்டோனாக விளங்கு வோனே! திருமாலே!*

**சொற்பொருள் :** *கூந்தல் - கேசி என்னும் அரக்கன். நகையச் சாக - சிரித்தே சாகுமாறு. திறம்பிய - மாறுபட்ட.*

**விளக்கம் :** *கொடியோனைக் கொன்று புகழால் சிறப்புற்ற ஒரு கையினையும், நடுநிலை பிறழ்ந்த நயமற்ற ஒரு கையினையும், ஆக, இரண்டு கைகளைக் கொண்ட திருமாலே என்பதாம்.*

**பல கைகள்!**

**முக்கை முனிவ! நாற்கை அண்ணல்!**
**ஐங்கை மைந்த! அறுகை நெடுவேள்!**
**எழுகை யாள! எண்கை ஏந்தல்!**
**ஒன்பதிற்றுத் தடக்கை மன்பே ராள!**
**பதிற்றுக்கை மதவலி! நூற்றுக்கை யாற்றல்!**

*அவ்விரு கைகளுடன் யோக தண்டமாகிய மூன்றாவது கையினையும் கொண்டோனாக, முனிவனாக விளங்குபவனே!*

**நான்கு கைகளைக் கொண்ட தலைவனே!**
**ஐந்து கைகளைக் கொண்ட கணபதியே!**
**இருபக்கத்தும் ஆறு கைகளைக் கொண்ட நெடுவேளே!**
**ஏழு கைகளைக் கொண்ட தலைவனே!**
**எட்டுக் கைகளைக் கொண்ட முதல்வனே!**

*ஒன்பது பெருங் கைகளைக் கொண்ட நிலைபெற்ற பெருமை கொண்டோனே! பத்துக் கைகளைக் கொண்ட வலிமை மிக்கவனே! நூறு கைகளைக் கொண்ட ஆற்றலாளனே!*

**சொற்பொருள் :** *முனிவன் - உலக இச்சைகளை முனிந்த வன். அண்ணல் - தலைவன். மைந்தன் - குமாரன். நெடுவேள் - முருகன். ஏந்தல் - தலைவன். மதவலி - பெருவலிமை.*

**விளக்கம் :** *'முக்கை முனிவன்' என்றது சிவனைக் குறிப்பதும் ஆகலாம். அவன் யோகநிலையிலே இருப்பவன் ஆதலின் முனிவன் என்றனர். நாற்கை அண்ணல் நான்கு வேதங்களையும் கைகளாகக் கொண்ட பிரமன். அறுகை நெடுவேள் என்றனர்; நெடுவேள் பன்னிரு கைகளைக் கொண்டவன்; பக்கத்துக்கு ஆறான கைகளை உடையவன் என்று கொள்க. பிற, எங்கும் பரந்தவன் என்பது குறிக்க வந்தன வாகலாம்.*

**எண் வரம்பு அறியா உடலினை!**

**ஆயிரம் விரித்தகைம் மாய மள்ள!**
**பதினா யிரங்கை முதுமொழி முதல்வ!**

**நூறாயிரங் கை ஆறறி கடவுள்!**
**அனைத்தும் அல்ல பல அடுக்கல் ஆம்பல்**
**இனைத்தென எண்வரம்பு அறியா யாக்கையை!**

*ஆயிரமாக விரித்த கைகளைக் கொண்டோனாக விளங்கும் மாயத்தில் வல்ல மள்ளனே! பதினாயிரங் கைகளோடுங் கூடிய வேத முதல்வனே! நூறாயிரங் கைகளோடுங் கூடிய, அறுவகை நெறியையும் அறிந்தோனாகிய கடவுளே!*

*இவை அனைத்தும் முடிந்தன அல்ல. இவ்வாறு சொல்லப் படும் ஆம்பல் பல அடுக்கிய பேரெண்களின் அளவான கைகளை உடையாய்! இவ்வளவினது என எண்ணி அறிந்து, எல்லை அறியப்படாத, அத்துணை உடல்களை மேற்கொண் டோனே!*

**சொற்பொருள் :** *மள்ளன் - மற்போர் வல்லவன். முது மொழி - வேதங்கள். ஆறு - ஆறங்கங்கள்; நெறியும் ஆம். கடவுள் அனைத்தும் கடந்தும் அனைத்தின் உள்ளாகவும் நிற்பவன். ஆம்பல் - ஒரு பேரெண்.*

**வனப்பு வரம்பு அறியா மரபினை!**

**நின்னைப் புரை நினைப்பின் நீயலது உணர்தியோ**
**முன்னை மரபின் முதுமொழி முதல்வ!**
**நினக்கு விரிந்தகன்ற கேள்வி அனைத்திலும்**
**வலியினும் மனத்தினும் உணர்வினும் எல்லாம்**
**வனப்பு வரம் பறியா மரபி னோயே!**

*தொன்மைக்கும் தொன்மையான மரபினை உடையோ னாகிய வேத முதல்வனே! நினக்கு ஒப்புமை சொல்ல நினைப்பின் அதுதானும் நீயேயல்லாது, பிரிதாக யாதொன்றனையும் நீயேனும் அறிவாயோ?*

*நினைக்காவே பரந்து அகன்ற வேதவேதாந்தங்கள் அனைத் தினாலும் அறியமாட்டாத மரபினனே! ஆற்றலாலும், மனத்தாலும், உணர்வாலும், இவை எல்லாமும் சேர்ந்தும், நின் வனப்பின் எல்லையைக் காண முடியாதபடி விளங்கும் அளந்தறிய வியலாத தன்மையினை உடையவனே!*

**சொற்பொருள் :** *புரை - ஒப்பு. கேள்வி - வேதங்கள். வலி - ஆற்றல். மனம் உணர்வு வலி என்பவற்றை மனம் புத்தி அகங்காரம் என்பார்கள்.*

**விளக்கம் :** *தனக்குத் தானலது பிற ஏதும் ஒப்பற்றவன்; மனம் புத்தி அகங்காரங்களாலும் அறிந்துணர இயலாதவன் திருமால் என்பதாம். அத்தகையான் அவனாகலின் அவனை முன்னோர் போற்றிய மரபினை யொட்டியே தாமும் போற்றுவ தாக ஆசிரியர் கூறுகின்றனர்.*

### அமரர்க்கு முதல்வன்!

**அணி நிழல் வயங்கொளி ஈரெண் தீங்கதிர்ப்**
**பிறைவளர் நிறைமதி உண்டி.**
**அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வன் நீ;**

*அழகிய குளிர்ந்த ஒளி விளங்கும் பதினாறு இனிய கதிர்களை உடைய பிறைகளாகி, வளர்கின்ற நிறைமதியமான உணவினை உண்பர் அமரர். அழகிய மணிகள் பதித்த பசும்பூண்களை அணிந்தவரான, அழகிய மணிகள் பதித்த பசும்பூண்களை அணிந்தவரான, அவ்வமரர்க்குத் தலைவனாக விளங்குபவனும் நீயே யாவாய்!*

**சொற்பொருள் :** *நிழல் - தன்மை குறித்தது. பிறை - கலை. நிறைமதி - முழு நிலவு. உண்டி - உணவு; அமுது.*

**விளக்கம் :** *தேவர்கள் சந்திர கலைகளின் மூலமாகவே தமக்குரிய உணவான அமுதத்தைப் பெற்று உண்பார்கள் என்பது புராணம்.*

### அனைவர்க்கும் முதல்வன்!

**திணிநிலம் கடந்தக்கால் திரிந்தயர்ந்து அகன்றோடி**
**நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணிநெகிழ்பு அவிழ்தண்தார்**
**அன்னவர் படஅல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ;**
**அதனால், பகைவர் இவர், இவர் நட்டோர் என்னும்**
**வகையும் உண்டோ, நின் மரபறி வோர்க்கே?**

*அணுச்செறிவால் விளங்குவது இம் மண்ணுலகம். முன் காலத்தே நின் திருவடிகளால் இதனை அளந்தனை. அப்போது, நீ எடுத்த பேருருவைக் கண்டனர் அவுணர்கள். தங்கள் மனங் கலங்கியவர்களாகத் தளர்ந்தனர். இவ்வுலகையே கைவிட்டு வெளியேறி ஓடி மறைந்தனர்.*

*நின் ஆற்றலுக்கு அஞ்சிய அவர்கள், கடலுட் பாய்ந்து உயிர்பிழைக்கவும் முயன்றனர். கட்டு நெகிழ்ந்து அவிழ்ந்து வீழும் குளிர்ந்த மாலையின் பூக்களைப்போல அவர்கள் கடலுள் சிதறி வீழ்ந்து ஒழிந்தனர். எஞ்சிப் பிழைத்தோர் நின்னைப் பணிந்தனர். அவர்கட்கும், அஞ்சி மாண்டோர்க்கும் முதல்வன் நீயே ஆவாய்.*

*அதனால், நினக்குப் பகைவர் இவரென்வும், நட்பினர் இவர் எனவும் கருதப்படும் ஒரு முறைமையும் யாதும் உளதோ? நின் மரபினை அறிவோர்க்கு இவ்வாறு கருதும் முறைமை என்பது யாதுமே இல்லை. அவுணர் நினக்குப் பகைவரும் அல்லர்; அமரர் நினக்கு நட்பினரும் அல்லர்! அனைவருக்கும் முதல்வன் நீயே யாவாய்!*

**சொற்பொருள் :** *திணி நிலம் - அணுச் செறிவால் அமைந்த நிலம், அயர்ந்து - சோர்ந்து. அகன்று - உலகைவிட்டு நீங்கி, பிணி - கட்டு. நெகிழ்பு - தளர்ந்து. அன்னவர் - அவுணர். வகை - முறைமை.*

**விளக்கம் :** *நினக்கு அஞ்சியவர் தாமே கடலுட் பாய்ந்து மாண்டனர்; எஞ்சியோர் நின்னைப் பணிந்து உயிர் பிழைத்தனர். நீயோ மாண்டோர், எஞ்சியோர் ஆகிய அனைவருக்குமே முதல்வனாக இருப்பவன். இதனை அறியாமையாலேயே சிலர் நின்னைப் பகைவனெனக் கொண்டு மாய்ந்தனர் என்பதாம்.*

## தன்மை அறிந்தோம்!

**ஆயிர அணர்தலை அரவுவாய்க் கொண்ட**
**சேவல் ஊர்தியும் செங்கண் மாஅல்**
**ஓவெனக் கிளக்கும் கால முதல்வனை!**
**'ஏஎ' எனக் கிளத்தலின் இனைமைநற்கு அறிந்தனம்;**

*படம் எடுத்து உயர்த்த அயிரம் தலைகளைக் கொண்டவன் ஆதிசேடனாகிய பாம்பு. அதனைத் தன் வாயிற் கௌவிக் கொண்டிருப்பவன் கருடச் சேவலாகிய நின் ஊர்தி. அவனும், ஒருசமயம், ஊன்றிய நின் விரலின் அழுத்தத்தைத் தாங்கானா யினான். 'செங்க்ண் மாலே! என்னைக் காத்தருள்க' எனக் கூறிய வனாக, 'ஓ' வெனக் குரலெழுப்பியும் கதறினான். அத்தகைய ஆற்ற லுடையவன், காலங்களைக் கடந்து நிற்கும் முதல்வன், நீயாவாய்!*

*சாமவேதம் 'ஏஎ' என நின்னைப் பற்றி எடுத்துக் கூறுதலின், நின் தன்மைகளை யாமும் அறிந்தோம். அதனையே யாமும் கூறுகின்றோம்!*

**சொற்பொருள் :** *அணர்தலை - உயர்ந்து அசைந்தபடி இருக்கும் தலைகள். சேவல் -கருடச் சேவல். கால முதல்வன்- காலங்களைக் கடந்து நிற்கும் முதல்வன்.*

## நீயே எல்லாம்!

**தீயினுள் தெறல்நீ! பூவினுள் நாற்றம் நீ**
**கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!**
**அறத்தினுள் அன்பு நீ! மறத்தினுள் மைந்த நீ!**
**வேதத்து மறை நீ! பூதத்து முதலும் நீ!**
**வெஞ்சுடர் ஒளியும் நீ! திங்களுள் அளியும் நீ!**
**அனைத்தும் நீ! அனைத்தின் உட்பொருளும் நீ!**
**உறைவும் உறைவதும் இலையே உண்மையும்**
**மறவியில் சிறப்பின் மாயமார் அனையை!**
**முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலில்**
**பிறவாப் பிறப்பிலை! பிறப்பித்தோர் இலையே!**

நெருப்பினுள் அதன் சுடுகின்ற தன்மையாக இருப்பவன் நீ! பூவினுள் அதன் மணமாக விளங்குபவன் நீ! கற்களுள் மாணிக்கக் கல்லாக விளங்குபவன் நீ! சொல்லினுள் வாய்மையாகத் திகழ்பவன் நீ! அறநெறிகளுள் அன்பாக நிற்பவன் நீ! மறத்த கையுள் ஆற்றலாக அமைந்திருப்பவன் நீ!

வேதங்களுள் மந்திர சொரூபமாக நிற்பவன் நீ! ஐம்பெரும் பூதங்களுள் முதலாவதான வானம் நீ! வெம்மையான சுடராகிய கதிரவனின் ஒளி நீ! குளிர்ந்த சுடராகிய திங்களுள் தண்மையாக இருப்பவன் நீ!

காணப்படும் பொருள் அனைத்தும் நீ! அப் பொருள்களின் உட்பொருளாக அமைந்திருப்பவனும் நீயே!

ஆதலினாலே, நினக்குத் தங்குமிடம் என்பதும், நின்னிடத்துத் தங்குவது என்பதும் யாதுமில்லை. மெய்ப் பொருளாகவும், மறதியின் சிறப்பையுடைய மாயமென்னும் அனைத்துமாகவும், நீயே விளங்குகின்றனை!

முதல் முறை, இடைமுறை, கடைமுறை என்னும் இம் முத்தொழில் நிகழ்ச்சிகளுள் அனைத்தையும் செய்பவனும் நீ! நீ பிறவாத பிறப்பென்பது யாதும் இல்லை. நின்னைப் பிறப்பித்தது என்பதும் யாதும் இல்லை.

**சொற்பொருள் :** தெறல் - சுடுதல். நாற்றம் - மணம். மணி - மாணிக்கம். அறம் - ஒழுக்கம். மறம் - தறுகண்மை. மறை - மந்திரமாகிய மறைபொருள். பூதத்து முதல் - வானம். அளி - அளிக்கும் தண்கதிர். மறவி - மறதி.

**விளக்கம் :** அனைத்துமாகி, அனைத்தையும் பிறப்பித்தும், காத்தும், ஒடுக்கியும் விளங்குபவன் திருமாலே என்பதாம்; ஆயின் தனக்கொரு முதல் எனவொன்று இல்லாதவன் அவன் என்பதும் ஆம்.

### காத்தருள்வாய்!

**பறவாப் பூவைப் பூவி னோயே!**
**அருள்குடை யாக அறங்கோ லாக**
**இருநிழல் படாஅமை மூவேழ் உலகமும்**
**ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ!**

காயாம் பூவைப் போலும் நீலவண்ணத் திருமேனியினை உடையோனே! அருளே நின் கொற்றக் குடையாகவும், அறமே நின் செங்கோலாகவும் கொண்டு, இருவேறு நிழலின் கண்பட்டு அழியாமற்படிக்கு, மூவேழாகிய உலகங்களையும், நின் ஒரு குடைநிழலுக்கே உட்பட்டதாகக் கொண்டு, நீயே பேணிக் காத்து வருகின்றனை!

**சொற்பொருள் :** *பூவை - காயா. இரு நிழல் - இருவகை ஆட்சி. ஏமம் - காவல்; அனைத்தையும் காப்பவன் அவனன்றிப் பிறரில்லை என்பதாம்.*

### சொல்லும் சிப்பினை!

**பாழெனக் காலெனப் பாகென ஒன்றென**
**இரண்டென மூன்றென நான்கென ஐந்தென**
**ஆறென ஏழென எட்டெனத் தொண்டென**
**நால்வகை ஊழிஎண் நவிற்றும் சிறப்பினை!**

*'பாழ்' என்னும் சூனியமாக நிற்பவனும் நீ! நிலம் நீர் தீ காற்று வான் எனப்படும் ஐந்து பெரும் பூதங்களும் நீ! வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தம் என்னும் ஐந்து கன் மேந்திரியங் களும் நீ! ஓசையும் ஊறும் ஒளியும் சுவையும் நாற்றமும் ஆகிய ஐம் புலன்களும் நீ! மெய் வாய் கண் மூக்கு செவி மனம் எனும் ஆறு ஞானேந்திரியங்களும் நீ! ஏழாக வகுக்கப்படும் தாதுக்களும் நீ! எட்டாகக் கூறப்படும் திக்குக்களும் நீ! ஒன்பதாக விளங்கும் கோள்களும் நீ! இவ்வாறு எண்ணப்பட்ட பலவாகவும் விளங்கி நால்வகை ஊழிகளினும் ஆராய்ந்து, சான்றோராற் கூறப்படும் சிறப்பினை உடையவனும் நீயே!*

**சொற்பொருள் :** *பாழ் - ஏதுமற்றது; சூனியம். கால் - முளை. பாகு - பகுத்து அறியப்படுவது. நால்வகை ஊழி - கிருத, திரேதா, துவாபர, கலி என்னும் யுகங்கள். ஒன்று முதலான எண்கள் தத்துவப் பொருளாக அமைந்த உலக நிகழ்வைக் குறிப்பன. தொண்டு - ஒன்பது.*

**விளக்கம் :** *முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய் விளங்கும் அப்பழம்பெரும் நிலைக்கும், அதனின்றும் தோன்றிப் பரந்த உலக நிலைக்கும் ஆதியாக விளங்குபவன் திருமாலே என்பதாம்.*

### துதிகள்!

**செங்கண் காரி! கருங்கண் வெள்ளை!**
**பொன்கண் பச்சை! பைங்கண் மாஅல்!**
**இடவல! குடவல! கோவல! காவல!**
**காணா மரப! நீயா நினைவ!**
**மாயா மன்ன! உலகாள் மன்னவ!**
**தொல்லியற் புலவ! நல்லியாழ்ப் பாண!**
**மாலைச் செல்வ! தோலாக் கோட்ட**
**பொலம்புரி ஆடை வலம்புரி வண்ண!**
**பருதி வலவ! பொருதிறல் மல்ல!**
**திருவின் கணவ! பெருவிறல் மள்ள!**

சிவந்த கண்களோடு கூடிய கரிய திருமேனியை உடையோனே (வசுதேவன்); கரிய கண்களுடன் கூடிய வெண் மேனியனே! (சங்கருடணன்); பொன்னிறக் கண்களையுடைய பச்சைமேனியனே (பிரத்தியும்நன்); பசிய கண்களை உடைய திருமாலே (அநிருத்தன்)!

இடமாகவும் வலமாகவும் நின்று கூத்தாடும் கூத்தனே! குடக்கூத்தில் வல்லவனே! கோக்களைக் காத்தலில் சிறந்தோனே! அனைத்துயிரையும் காப்பவனே! யாவராலும் தம் முயற்சிகளாற் காணவியலாத மரபினை உடையோனே! அன்பர் உள்ளத்துள் நீங்கா நினைவாக நிற்பவனே! அழிவற்ற மன்னனே! உலகை யாள்கின்ற மன்னவனே! தொன்மை இயல்புகளை அறிந்தோனே! நல்ல முறையில் யாழிசைக்கும் யாழிசைப் பாணனே! துளசி மாலை அணிந்த செல்வனே! தோல்வியறியாத சங்கினை உடையவனே! பொன்னாலியன்ற ஆடையினையும், வலம்புரிச் சங்கையொத்த வண்ணத்தையும் கொண்டவனே! வலக்கையிற் சக்கரத்தை ஏந்தியிருப்பவனே! மற்போரில் வல்ல ஆற்றலுடையவனே! திருமகளின் மணாளனே! பேராற்றலை யுடைய மள்ளனே!

**சொற்பொருள் :** குடவல - குட + அல எனப் பகுத்துக் குடக்கூத்து ஆடுதற்குரிய குடத்தையும்; பகைவரை அழித்தற்கான கலப்பைப் படையினையும் உடையோனே எனவும் கொள்வர்.

## நேமி நிழல்!

**மாநிலம் இயலா முதன்முறை அமயத்து**
**நாம வெள்ள நடுவண் தோன்றிய**
**வாய்மொழி மகனொடு மலர்ந்த**
**தாமரைப் பொகுட்டுநின் நேமி நிழலே!**

ஆதி நாளிலே, இப் பெருநிலமானது வெளிப்பட்டுத் தோன்றாத அக் காலத்திலே, அச்சமுடைய ஊழிப்பெரு வெள்ளத்தின் நடுவாகத் தோன்றிய சத்தியரூபனாகிய நின் மகனாகிய பிரமனோடு, மலர்ந்த தாமரை மலரினை உந்தியிடத்தே தோற்றுவித்த பெருமானே! நின் சக்கரப்படையின் நிழலே இவ்வுலகுக்கும், எமக்கும் காவலாக என்றென்றைக்கும் விளங்குமாக!

**சொற்பொருள் :** மாநிலம் - பெரிதான நிலப்பரப்பு. நாம வெள்ளம் - அச்சந்தரும் ஊழிப் பெருவெள்ளம். வாய்மொழி மகன் - வேதனாகிய பிரமன்.

**விளக்கம் :** காத்தற் கடவுள் திருமால்; அவனுடைய படையாக அமைந்தது சக்கரம்; ஆகவே, அதனுடைய நிழலிலே தான் அனைத்துலகமும் நின்று நிலைபெறுகின்றது என்பதாம்; அவனே அனைத்துமாகியவன் என்பதுமாம்.

### நான்காம் பாடல்

# திருமால் வாழ்த்து (4)

**பாடியவர் :** *கடுவன் இளவெயினனார்;* **பண் வகுத்தவர் :** *பெட்டகனாரி;* **பண் :** *பண்ணுப் பாலையாழ்.*

## நன்கு அறிந்தோம்

**ஐந்திருள் அறநீக்கி, நான்கினுள் துடைத்துத் தம்**
**ஒன்றாற்றுப் படுத்த நின் ஆர்வலர் தொழுதேத்தி**
**நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கால் அவை நினக்கு**
**இறும்பூது அன்மைநன்கு அறிந்தேம்............**

*ஐம்பொறிகளாலும் உண்டாகின்ற மயக்கமாகிய அஞ்ஞான இருளை முற்றவும் அறப்போக்கி, நான்கு குணங்களாகிய அவற்றை மேற்கொள்ளலினாலே உள்ளத்தின் அழுக்கைத் துடைத்துத், தம்மைத் தியானமாகிய ஒப்பற்ற நெறியினிடத்தே ஒன்றுபடுத்தியவர் நின் அன்பர். அவர், நின் திருவடிகளைத் தொழுது போற்றி, நின் புகழையும் பலவாக விரித்துச் சொல்லியுள்ளனர்.*

*அவற்றை யாமும் எடுத்துச் சொல்லுங் காலத்தே, அவையெல்லாம் நினக்குச் சிறப்பில்லாத ஒரு நிலையினை நன்றாக அறிந்தேம்.*

**சொற்பொருள் :** *ஐந்து - ஐம்பொறிகள்; மெய், வாய், கண், மூக்குச், செவி என்பன; இவை ஆசைகளை எழுப்பி அறிவை மழுங்கச் செய்வன; ஆதலின், 'இருள்' என்றனர். நான்கு - நான்கு குணங்கள்; இவை மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்பன; அனைத்துயிரிடத்தும் நட்புக் கோடல் மைத்திரி; அனைத்துயிருக்கும் இரங்கி அருளுதல் கருணை; அனைத்திலும் இன்பங்காணல் முதிதை; பொருள்களிடத்துப் பற்றற்றிருப்பது உபேட்சை. இவற்றை மேற்கொள்ள, உள்ளத்திருள் தானே அகலும் என்பது சான்றோர் கண்ட தெளிவு. ஒன்று - கடவுள் தியானம், மனத்தைத் தியான நிலையில் ஒருவழிப்படுத்தல்; இது இறைடியார் இயல்பு. இறும்பூது - வியப்பான களிப்பு.*

**விளக்கம் :** *நின் அடியவர் நின்னைப் பலவாறு போற்றித் துதிக்கினும், நீ அவற்றைக் கடந்து நிற்பவனாதலின், அவற்றையே மீட்டும் சொல்லுதல் நினக்குக் களிப்புத் தருவதன்று என்பதாம்; ஆயினும், எம் ஆசை காரணமாகச் சொல்லுகின்றோம் என்பதுமாம்.*

## செங்கண் செல்வ!

**.............ஆயினும்**
**நகுதலும் தகுதியீங்கு ஊங்குநின் கிளப்பத்**
**திருமணி, திரைபா டவிந்த முந்நீர்,**
**வருமழை யிருஞ்சூல் மூன்றும் புரையு மாமெய்;**
**மாஅ மெய்யொடு முரணிய உடுக்கையை**
**நோனார் உயிரொடு முரணிய நேமியை;**
**செயிர்தீர் செங்கண் செல்வ!....................**

*நின் புகழின் விரிவு அத்தன்மை உடையது என்றாலும், யாமும் நின் புகழைச் சொல்லுகின்றேம். நின்னை முற்றவும் அறிந்து போற்றும் தகுதி எமக்கு இல்லை. அதனால், நீதான் நகுதலும் கூடும். ஆயினும், எம் ஆர்வத்தை மட்டுமே மனங் கொண்டு, எமக்கும் நீ அருளிச் செய்தல் வேண்டும்.*

*அழகான நீலமணியையும், அலை முழக்கம் ஓய்ந்த கடலினையும், சூல்கொண்டெழுந்த கரிய மழை மேகத்தையும் ஒப்பாக விளங்கும் திருமேனியை உடையோனே! அக் கரிய உடலோடும் மாறுபட்டுத் தோன்றும் பொன் வண்ண உடையைக் கொண்டோனே! பகைவரின் உடலோடு மாறுபட்டு, அதனை அழிக்கச் செல்லும் சக்கரப் படையை உடையோனே! குற்றம் தீர்ந்த சிவந்த கண்களைக் கொண்ட செல்வனே!*

**சொற்பொருள் :** *திருமணி - நீலமணி. பாடு - ஒலி. இருஞ்சூல் - கரிய சூல். மாமெய் - கரிய திருமேனி. உடுக்கை - உடை. நோனார் - பகைவர். செயிர் - குற்றம். செங்கண் - சிவந்த கண். செல்வன் - செல்வியாகிய திருமகளின் நாயகன்; செல்வத்திற்கு உரியோன்; தானே செல்வமாக விளங்குபவன்.*

## வாய்த்த உகிரினை!

**......நிற் புகழப்**
**புகைந்த நெஞ்சின் புலர்ந்த சாந்தின்**
**பிருங்க லாதன் பலபல பிணிபட**
**வலந்துழி, மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து**
**அலர்ந்த புகழோன் தாதை ஆகலின்**
**இகழ்வோன், இகழா நெஞ்சினனாக, நீ இகழா**
**நன்றா நட்ட அவன் நன்மார்பு முயங்கி**
**ஒன்றா நட்ட அவன் உறுவரை மார்பில்**
**படிமதம் சாம்ப ஒதுங்கி**
**இன்னல் இன்னரொடு இடிமுரசு இயம்ப**
**வெடிபடா ஒடிதூண் தடியொடு**
**தடிதடி பலபட வகிர்வாய்த்த உகிரினை;**

*பிரகலாதன் நின்னைப் புகழ்ந்தான். அதனைக் கேட்டான் இரணியன். புழுங்கிய மனத்தோனும். மார்பிடத்துக் காய்ந்த*

சந்தனச் சாந்தோனும் ஆயினான். தன் மகனாகிய பிரகலா தனைப் பலவாறாகப் பிணிப்புமாறு கட்டியும் போட்டான். மனமும் உடலும் மிகவும் ஒடுங்குதற்குக் காரணமான பெருந்துன் பத்தைப் பிரகலாதன் அப்போது அடைந்தான். அவ்வாறு துன்பமிழைத்த இகழ்தற்குரியோன் தன் தந்தையாதலின், அவனை இகழ்தற்குரியவனாகிய பிரகலாதனும், இகழ்தற்கு மனமற்ற வனாகத் தன் துயரைப் பொறுத்திருந்தான்.

நீயோ, இரணியனின் செயலை இகழ்ந்தனை. நின்னிடத்தே நல்ல நட்புக் கொண்டோனாகிய பிரகலாதனின், நல்ல மார்பிடத்தே சென்று பொருந்தினை. நின்னோடு மனம் பொருந்தாது, நின்னை இகழ்தலையே மேற்கொண்டோனாகிய இரணியனின், பெருமலை போன்ற மார்பின்மேற் பாய்ந்தனை! அவன்பாற் படிந்திருந்த செருக்கு அழியும்படியாக, அவன் மீது மோதினை! அவ்வேளையிலே மிக்க உற்பாதங்களோடு இடியாகிய முரசமும் வானத்தே எழுந்து ஒலிக்கத் தொடங்கிற்று. வெடி பட்டுத் துண்டாய்ப்போன தூணின் துண்டங் களோடு, இரணியனின் தசைத் துண்டங்களும் பலவாகக் கலந்து வீழுமாறு, அவன் மார்பைப் பிளந்தனை! அவ்வாறு வகிர்தலைச் செய்த வலியமைந்த நகத்தினை உடையோனே! நரசிங்கப் பெருமானே!

**சொற்பொருள் :** புலர்ந்த சாந்து - காய்ந்த சந்தனச் சாந்து; சாந்து காய்தற்குக் காரணம் சினத்தால் உண்மான மன வெப்பம். வலந்துழி - கட்டியவிடத்து. நோய் - துன்பம். கூம்பிய - ஒடுங்கிய. அலர்ந்த புகழ் - இகழ்தற்குரிய புகழ். உறுவரை மார்பு - பெருமலை போன்ற மார்பு. ஒதுங்கி - பாய்ந்து பற்றி. சாம்ப - கெட. இன்னர் - உற்பாதம்; கெட்டகுறிகள். தடி - மாமிசத் துண்டங்கள். உகிர் - நலம்.

**விளக்கம் :** திருமாலின் வைகுண்ட வாயிலிற் காவலருள் ஒருவனாக இரந்தவனே இரணியனாகப் பிறந்தான் என்பது புராணம். அவன் பெற்ற வரம், 'மூன்று பிறவிகள் திருமாலின் பகைவனாகப் பிறந்து, திருமாலாற் கொல்லப்பட்டு, மீளவும் வைகுந்தத்தைச் சேர்தல்' என்பதாம்.

## குன்றினோடு ஒக்கும்

**புருவத்துக் கருவல் கந்தத்தால்**
**தாங்கியிவ் வுலகம் தந்தடிப் படுத்ததை நடுவண்**
**ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்;**

இவ்வுலகின் நடுவிடத்தாக ஓங்கியிருப்பது, பலரும் புகழ்தற்கு உரியதாக விளங்கும் மேருமலையாகும். அதுதான் உலகை நிலைபெறுத்தி நிற்கச்செய்வது என்பர். பழங்காலத்தே நீதான் நின் கருமையான வலிய கழுத்தால், கடலடியிலே

மறைந்திருந்த இவ்வுலகினைச் சுமந்து வெளிக்கொணர்ந்து நிலைநிற்கச் செய்தனை! அச் செயலது தன்மை முற்கூறிய மேருமலையின் செயலுக்குச் சமானமாகும்.

**சொற்பொருள் :** புருவத்து - பழங்காலத்து; பூருவத்து என்பது குறுக்கல் விகாரம் பெற்றது. கந்தம் - கழுத்து. பலர் புகழ் குன்று - மேருமலை; அது உலகைச் சாயவிடாது நிறுத்திக் காத்து நிற்கின்றது என்பர்.

### பிரிந்து சார்வன

**நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள;**
**நின், தண்மையும் சாயலும் திங்களுள ;**
**நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள ;**
**நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள ;**
**நின், நாற்றமும் ஒண்மையும் பூவையுள ;**
**நின், தோற்றமும் அகலமும் நீரிலுள ;**
**நின், உருவமும் ஒலியும் அகாயத்துள ;**
**நின், வருதலும், ஒடுக்கமும் மருத்தினுள ;**
**அதனால், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்**
**ஏம மார்ந்த நிற் பிரிந்து**
**மேவல் சான்றன எல்லாம்;**

அனைத்தையும் அழிக்கின்ற நின் வெம்மையும், அனைத்தையும் விளக்கமுறச் செய்யும் நின் விளக்கமும், ஞாயிற்றிடத்தே பொருந்தியுள்ளன.

அனைவருக்கும் அருளுகின்ற நின் குளிர்ந்த நோக்கும், மென்மைப் பண்பும் திங்களிடத்தே அமைந்துள்ளன. அனைவர் பாலும் ஒப்பாக அருள்சுரக்கும் நின்னியல்பும், நின் கொடைக் குணமும் மழையினிடத்தே பொருந்தியுள்ளன. நின் காக்கும் தன்மையும், பொறுமைப் பண்பும் பூமியினிடத்தே விளங்குகின்றன.

நின் மணமும் ஒளியும் காயாம்பூவிடத்தே விளங்குகின்றன. நின் தோற்றமும் பரப்பும் கடலிடத்தே அமைந்துள்ளன. நின் நுண்ணுருவமும், ஒலியும் ஆகாயத்திடத்தே பொருந்தியுள்ளன. நின் பிறப்பும் ஒடுக்கமும் காற்றிடத்தே அமைந்துள்ளன;

இவ்வாறு அமைந்துள்ளதனாலே,

இவையும் உவையும் அவையுமாகிய எல்லாப் பொருள்களும், தமக்குக் காவலாகப் பொருந்திய நின்னிடத்திருந்து பிரிந்து, மீளவும் நின்னை வந்தே அடைவனவாக உள்ளன.

**சொற்பொருள் :** விளக்கம் - ஒளிப்பாடு. தண்மை - குளிர் நோக்கம். சாயல் - மென்மை. சுரத்தல் - அருள்தல். வண்மை -

*கொடை. புரத்தல் - காத்தல். நோன்மை - பொறுமை. ஒண்மை - ஒளியாம் தகைமை. தோற்றம் - வெளிப்பட்டுத் தோன்றுதல். வருதல் - பிறப்பு. ஒடுக்கம் - இறப்பு.*

**விளக்கம் :** *அனைத்துப் பொருள்களும் அவனிடத்திருந்து தோன்றி, மீளவும் அவனையே சென்றடைவன என்பதாம். எனினும், அவனே பலவாகவும் தோற்றுகின்றவன் ஆவன் என்பதும் ஆம்.*

## ஒப்பற்ற கருடக்கொடி!

**சேவ லோங்கு உயர்கொடி யோயே!**
**சேவ லோங்கு உயர் கொடி;**
**நின் னொன்று உயர்கொடி பனை ;**
**நின்னொன்று உயர்கொடி நாஞ்சில்;**
**நின்னொன்று உயர்கொடி யானை ;**
**நின், ஒன்றா உயர்கொடி ஒன்றின்று;**

*கருடச் சேவலோடு உயர்ந்து விளங்கும் வெற்றிக் கொடியோனே! கருடச்சேவலுடன் உயரப் பறக்கும் நின் கொடியோடு, நினக்கு உரியதாகச் சிறந்த பனைக்கொடியும் உயரப் பறந்தபடி இருக்கும். நின்னுடைய உயர்ந்த கொடிகளுள் மற்றொன்று கலப்பைக் கொடியாகும். நின் கொடிகளுள் மற்றொன்று உயரப்பறக்கும் யானைக்கொடியாகும். இவ்வாறு பலவான கொடிகளைக் கொண்டவன் நீ! எனினும் இவற்றுள் கருடச்சேவற் கொடியே ஒப்பற்றதாக உயர்ந்து விளங்குவதாகும்.*

**சொற்பொருள் :** *ஒன்றின்று - ஒப்பற்றது. நாஞ்சில் - கலப்பை. சேவல் - கருடச் சேவல்.*

**விளக்கம் :** *கருடன், பனை, கலப்பை, யானை என்னும் இவற்றைக் கொடிகளாகக் கொண்டாலும், இவற்றுள் சிறந்து விளங்குவது கருடக்கொடியே என்பதாம். அதன் சிறப்பை அடுத்துக் கூறுகின்றனர்.*

## பாம்பு! பாம்பு!

**விடமுடை அரவினுடல் உயிரொருங்கு உவணம்**
**அவன், மடிமேல் வலந்தது பாம்பு;**
**பாம்பு தொடி; பாம்பு முடிமேலன;**
**பாம்பு பூண்; பாம்பு தலைமேலது;**
**பாம்பு சிறை தலையன;**
**பாம்பு, படிமதம் சாய்ந்தோய்! பசும்பூணவை**
**கொடிமேல் இருந்தவன் தாக்கிரை யதுபாம்பு;**

*நஞ்சைக் கொண்ட பாம்பின் உடலையும் உயிரையும் ஒருங்கே உண்ணும் கருடன் அக் கொடியின்கண் விளங்குவான்.*

*அவனது இடையிற் கச்சாகக் கட்டப்பெற்றிருப்பதும் ஒரு பாம்பு. அவன் தோள்வளையாக விளங்குவதும் பாம்பு. அவன் முடிமேல் விளங்கும் தலைமாலையும் பாம்புகளால் ஆயது. பிற அணிகலன் களும் யாவும் பாம்புகளே! அவன் தலைமேலாக விளங்கும் 'சூட்டு' என்னும் அணியும் பாம்பு. அவன் சிறகுகளின் மீது அணிந்திருக்கும் அணிகளும் பாம்புகள். பாம்பினது பகையின் செருக்கை அழித்தோனே! பசிய பொன் அணிகலன் அணிந்த நின் இருக்கையாகும் கருடன், தனக்கு இரையாகத் தாக்கிக் கொள்ளுவதும் பாம்பே யாகும்.*

**சொற்பொருள் :** *விடம் - நஞ்சு. உவணம் - கருடன். வலந்தது - கட்டியிருப்பது. மடி - வயிறு. தொடி - தோள்வளை. படிமதம் - பகையாகிய. வலிமை. பசும் பூண் - பசும் பொன்னா லாகிய அணிகள்.*

**விளக்கம் :** *கொடிய நஞ்சுடைய பாம்புகளை இவ்வாறு கொண்டிருப்பதனால், நின் கருடனைக் கண்டு, பகைவர் அஞ்சி நடுநடுங்குவர் என்பதாம்.*

### வேறு வடிவு இல்லையே!

**கடுநவை அணங்கும் கடும்பும், நல்கலும்**
**கொடுமையும் செம்மையும் வெம்மையும் தண்மையும்**
**உள்வழி உடையை; இல்வழி இலையே;**
**போற்றோர் உயிரினும் போற்றுநர் உயிரினும்**
**மாற்றேம் ஆற்றல் இலையே; நினக்கு**
**மாற்றோரும் இலர், கேளிரும் இலர்; எனும்**
**வேற்றுமை இன்று; அது போற்றுநர்ப் பெறினே;**
**மனக்கோள் நினக்கென வடிவுவே றிலையே;**

*மிகத் துன்பமுண்டாகுமாறு தாக்கி வருத்தும் சினமும், எளியோர்க்கு அருளும் இரக்கமும், கொடுமையும், செம்மையும், வெம்மையும், தண்மையுமாகிய இக் குணங்களை உடைய வரிடத்தே, நீயும் அவ்வக் குணங்களை உடையோனாக விளங்கு வாய். இவை யாதும் அற்றவரிடத்து, நீயும் அவ்வாறே யாதும் அற்றவனாக விளங்குவாய்.*

*நின்னைப் போற்றாத பகைவரின் உயிரை நீ போக்குதல் என்பதும் இல்லை; நின்னைப் போற்றும் அன்பரின் உயிரை நீ காப்பதென்பதும் இல்லை. ஏனெனில், நினக்கு மாற்றார் என்பாரும் யாருமிலர்; நினக்கு உறவானவரும் யாரும் இலர்.*

*யாவரிடத்தும் ஒருதன்மைத்தாகவே விளங்கும் நின் னிடத்து அவ் வேற்றுமையும் இல்லை. இந்த உண்மையை உணர்ந்து நின்னைப் போற்றும் அடியார்கள், நின்னை நினைத் தலைப் பெற்றால், அவரவர் மனக்கோட்பாட்டின்படியே,*

அவ்வவ் வடிவாகவே நின்று, நீயும் அவர்க்குத் தோற்றமளித்து விளங்குவாய். இஃதன்றி, நினக்கெனக் குறிப்பிட்ட வடிவென்பதும் வேறாக யாதுமில்லை.

**சொற்பொருள் :** கடு நவை - கொடிய துன்பம். அணங்கு - தாங்கி வருத்தும் தன்மை. கடும்பு - சினம். நல்கல் - அருளல். கொடுமை - கொடியவே பிறர் மாட்டுச் செய்தலாம் தன்மை. செம்மை - செவ்வியவே செய்துஒழுகுதல். வெம்மை - அழிக்கும் தன்மை. தண்மை - அருளும் தன்மை. மனக்கோள் - மனத்துக்கண் கொள்ளும் கொள்கை; அதன் சார்பான, வடிவு. ஏம் - காத்தல்; ஏமம் என்பதன் இடைக்குறை.

**விளக்கம் :** அவரவர் எண்ணங்கட்கும், நிலைகட்கும் ஏற்ப அவ்வவ் வடிவினனாகத் திகழ்தலன்றித், தனக்கென வடிவமாக ஏதும் இல்லாதவன் திருமால் என்பதாம். 'உள்வழி உடையை; இல்வழி இலையே' என்னும் சொற்கள் இறைமையின் நல்ல விளக்கமாம்.

### அருமறைப் பொருளே!

**கோளிருள் இருக்கை ஆய்மணி மேனி**
**நக்கலர் துழா அய் நாறிணர்க் கண்ணியை!**
**பொன்னின் தோன்றிய புனைமறு மார்ப!**
**நின்னின் தோன்றிய நிரையிதழ்த் தாமரை**
**அன்ன நாட்டத்து அளப்பரி யவை!**
**நின்னின் சிறந்த தாளிணை யவை!**
**நின்னின் சிறந்த நிறை கடவுளவை!**
**அன்னோர் அல்லா வேறும் உள ; அவை**
**நின்னோர் அன்னோர் அந்தணர் அருமறை ;**

அள்ளிக் கொள்ளலாம்படியான செறிந்த இருளுக்கு இருப்பிடம் போல்வதான, அழகிய நீலமணியை நிகர்த்த மேனி வண்ணத்தை உடையோனே! அதன்கண் மலர்ந்த பூங்கொத்துக் களோடுங் கூடிய துளசியினது மனங்கமழுகின்ற கண்ணியைச் சூடியுள்ளோனே! பொன்னைப்போலப் பொலிவுடன் தோன்று கின்ற, திருமகளாகிய அழகிய மறுவினைக் கொண்ட மார்பை உடையோனே!

நின்னிடத்திருந்து தோன்றிய அடுக்கமைந்த இதழ்களைக் கொண்ட தாமரை மலரினைப்போன்று விளங்கும் சிவந்த கண்களோடு அளப்பரிய சிரிப்பினையும் உடையோனே!

நின்னைக் காட்டினும் சிறப்புடையன நின் திருவடிகள். நின்னிடத்தே சிறந்து விளங்கும் நிறைந்த கடவுள் தன்மையினை யும் நீ உடையை! அக்கடவுள் தன்மைகளே அல்லாமலும், வேறான சிறந்த தன்மைகளும் நின்னிடத்தே பலவாக உள்ளன.

அவை எல்லாம் நின்னையொத்த தேவவிருடிகள் மட்டுமே உணரும் அருமறைப் பொருள்களாகும்.

**சொற்பொருள் :** கோள் - கொள்ளல், மணி - நீலமணி. நக்கலர் - அலர்ந்த பூவிதழ். இணர் - பூங்கொத்து. பொன்னின் - பொன்னையொப்ப; அழகெலாம் ஒருருக் கொண்ட தென்னு மாறு. நிரையிதழ் - அடுக்கிய இதழ். கடவுள் - கடவுள் தன்மை.

**விளக்கம் :** தாம் சேர்ந்து இன்புறுதல் திருமாலின் அடிகளே யாதலின், அவற்றை அவனினும் சிறந்தவாகக் கூறினர். 'நிறை கடவுளவை' என்றது, அவனின்றும் விளங்கிச் செயல்படும் பலவான கடவுள் நிலைகளை. எனினும், அவனை முற்றவும் அறிவோர் அவனையொத்த சான்றோரே என்பதாம்.

## எல்லாம் நீயே!

**அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை**
**ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்**
**கால்வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்**
**அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்!**
**எவ்வயி னோயும் நீயே! நின் ஆர்வலர்**
**தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே;**
**அவரவர் ஏவ லாளனும் நீயே;**
**அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே!**

செந்தீயையொத்த தழைகளையும், கொழுவிய நிழலைத் தரும் பல கிளைகளையும் கொண்ட ஆலமரமும், கடப்ப மரமும், நல்ல ஆற்றிடைக் குறைகளும், காற்று வழங்குதலைத் தடுக்கும் தன்மையுடைய குன்றங்களும், பிறவிடங்களுமாகிய அவ்வவ் விடங்களிற் பொருந்திய வேறுவேறான பெயர்களைக் கொண் டோனே! அவ்விடங்களன்றியும், மற்றையவான எவ்விடத்தினும் விளங்குவோனும் நீயே ஆவாய். நின் அன்பர்கள் நின்னைத் தொழுகின்ற அவ்வத்தன்மைகளின் அமைதிகளோடு அவ்வவ்வாறே பொருந்தியிருப்பவனும் நீயே யாவாய்.

அவ்வன்பர்கள் எண்ணியவற்றை முடித்தலான் அவர்க்கு ஏவலாளனாகத் திகழ்வோனும் நீயே. அவரவர்களால் தேடப் படுகின்ற அறம் பொருள் இன்பம் வீடாகிய, மெய்ப்பொருள் களுக்குப் பாதுகாவலனாக விளங்குவோனும் நீயே யாவாய்.

**சொற்பொருள் :** அழல் - செந்தீ. குழை - தழை. சினை - கிளை. ஆற்று நடு - ஆற்றிடைக் குறை ; ஆற்று நடுவிலே விளங்கும் மேடு. கால் - காற்று. ஆர்வலர் - அன்பர். தொழுதகை அமைதி - தொழுது போற்றும் தகைமையாகிய அமைதி; தொழும் கையிடத்தே பொருந்திருயிருக்கும் தன்மையுமாம். செய்பொருள்

- செய்யப்படும் மெய்ப்பொருள்; இவை அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அரணம் - காவல்.

**விளக்கம்** : திருமால் கோயில் கொண்டிருக்கும் இடங்களைக் கூறி, அவ்விடத்தும், மற்றும் எவ்விடத்தும், அன்பர் மனத்தகத்தும் பொருந்தியிருப்பவனும் அவனே என்கின்றனர். அவன் அன்பர்க்கு ஏவலனும் காவலனும் ஆகின்ற அந்தக் கிருபாகர நிலையையும் உரைத்துப் போற்றுகின்றனர்.

**ஐந்தாம் பாடல்**

# செவ்வேள் (5)

**பாடியவர்** : கடுவன் இளவெயினனார்; **பண் வகுத்தவர்** : கண்ணனாகனார்; **பண்** : பாலையாழ்.

## 1. வெற்றி வேல்

**பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்**
**சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கித்**
**தீயழல் துவைப்பத் திரியவிட் டெறிந்து**
**நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து**
**வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய**
**கொன்றுணல் அஞ்சாக் கொடுவினைக் கொல்தகை**
**மாய அவுணர் மருங்கறத் தபுத்த வேல் –**

மாயப் போரில் வல்லவர் அவுணர். அவர்கள் ஆற்றிய போர்களுள் எல்லாம் அவர்களே வெற்றி பெற்று வந்தனர். அதனால், 'வென்றியின் மக்கள்' - வெற்றியே பெறுகின்ற புண்ணியப் பயனைக்கொண்ட மக்கள் - என்று பலரும் அவரைக் கருதினர். ஒன்றுபட்டு அவரைப் போற்றியும் வந்தனர். இத்தகைய பெரும் புகழைப் பெற்றவர் அவுணர்கள்.

அவர்கள் எவ்வகைப்பட்ட உயிரையும் கொன்று போக்கி, அதனுடலைத் தின்பதற்குத் துணிந்தவர்கள்; எத்தகையவொரு கொடிய செயலையும் பழிபாவத்திற்கு அஞ்சாராய்ச் செய்பவர் கள்; எதிர்த்தாரைக் கொல்லும் பண்பினர்கள் - அவர்களை மன்னிக்கும் இயல்பற்றவர்கள். இத்தகையோராகிய அவுணர் தம் சுற்றமே அற்றுப்போகும்படியாக, முற்றவும் அவர்களை அழித்த சிறப்புடையது நின் கை வேல்!

பரந்ததும், குளிர்ச்சியுடையதுமான, கடலிடத்தே சென்று, அவுணர் கோமானாகிய சூரன் நினக்கஞ்சி ஒளிந்து கொண்டான். அவனைக் கொல்லக் கருதிய நீதான், மிகவுயர்ந்த 'பிணிமுகம்' என்றும் போர்க் களிற்றினை ஊர்ந்தவனாகப், பாரெல்லாம் துகள்படும்படியாக, அவனை நோக்கிச் சென்றனை. அவனோடு கடும்போர் செய்தனை. தீயின் கொழுந்து அக் கடலையே வற்றச்

*செய்வதுபோல அழுமாறு, நின் வேலைச் சுழற்றி ஒலியோடு விட்டெறிந்தனை. அனைவருக்கும் துன்பத் தையே செய்தலை இயல்பாகக் கொண்ட சூரன், தன் அச்சந்தரும் உருக்கரந்து, அசையும் மாமரமாகி நின்றான். அம் மாமரம் வேரோடும் வெட்டுப்பட்டு வீழ்ந்தொழியும்படியாக, நின் வேலினை நீயும் அந்நாளிலே எறிந்தனை!*

**சொற்பொருள் :** *பாய் - பரந்த. இரும் - பெரிய ; கரிய வெனினும் ஆம். பனி - குளிர்ந்த. புக்கு - புகுந்து; சென்று. சேயுயர் - மிகவுயர்ந்த. பிணிமுகம் - முருகனூர்ந்த களிற்றின் பெயர்; பகைவர்க்கு நோய் செய்யும் முகத்தோற்றத்தைக் கொண்டது என்பது கருத்து. துவைப்ப - ஒலிக்க. திரிய - சுழன்று செல்லுமாறு. 'தீயழல் துவைப்ப' என்றது. தீக் கொழுந்து விட்டுவிட்டு ஒளி செய்தபடி, வேல் கடுவிரைவுடன் சென்றது என்பதாம். நோய் - துன்பம். நுடங்கல் - அசைதல். சூர் - சூரன். தபுத்த - கொன் றொழித்த.*

**விளக்கம் :** *வெற்றியே பெற்று வந்தோரும், கொடியோரும், மாயத்திலே வல்லோருமான அவுணரை அடியோடு அழித்த வெற்றி வேலினை உடையை ; ஆதலின் எளியேமாகிய எம்மைக் காத்தல் நினக்கு மிக மிக எளிது என்பதாம்.*

### வரை உடைத்தோய்!

**நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்**
**குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து**
**மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை!**
**மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத் தோள்**
**ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை!**

*நாவலந்தீவு என்னும் பெயரைக் கொண்டது, குளிர்ந்த சோலைகளைக் கொண்டது, இந் நிலப்பகுதி. இதன் வடக்கின் கண்ணதாகிய பொழிலொன்றினிடத்தே, 'கிரவுஞ்சம்' என்கின்ற பறவையின் பெயரினைப் பெற்றதாக உயர்ந்து நின்றது ஒரு பெருமலை. அப் பெருமலையினை உடைத்து, அதனிடையே வழியினை அமைத்த ஆறுமுகங்களை உடையோனே!*

*மென்மை கொண்ட ஆறு தலைகளையும், முழவனைய பன்னிரு தோள்களையும், இளஞாயிற்றின் செவ்விய அழகைப் போன்ற நிறவழகையும் கொண்டோனே! தாமரை மலரிடத்தே பிறந்தே பிறப்பினைக் கொண்ட பெருமானே!*

**சொற்பொருள் :** *நாவல் - நாவன்மரம். குருகு - கிரவுஞ்சம். கயம் - மென்மை. ஞாயிறு - இளஞாயிறு; 'ஞாயிற்றேர் நிறத்தகை நளினம்' எனத் தாமரைக்குக் கூட்டியும் உரைக்கலாம். நளினம் - தாமரை.*

## எல்லாம் நின் ஆணையே!

**காஅய் கடவுள் சேஎய்! செவ்வேள்!**
**சால்வ! தலைவ! எனப் பேஎ விழவினுள்**
**வேலவன் ஏத்தும் வெறியும் உளவே;**
**அவை. வாயும் அல்ல; பொய்யும் அல்ல;**
**நீயே வரம்பிற்றில் உலகம் ஆதலின்**
**சிறப்போய்! சிறப்பின்றிப் பெயர்குவை;**
**சிறப்பினுள் உயர்பாகலும்**
**பிறப்பினுள் இழிபாகலும்**
**ஏனோர் நின் வலத்தினதே;**

*"பெருமானே! ஊழிக்காலத்தின் முடிவிலே அனைத்தையும் அழித்துத் தானே தனியனாக நிற்கும் கடவுளாகிய சிவபெருமானின் குமாரனே! செம்மை வண்ணத்தோடு அனைவராலும் விரும்பப்படும் சிறப்பைக் கொண்ட செவ்வேளே! சிறந்த குணங்களின் உருவாக விளங்குவோனே! எம் தலைவனே!" எனவெல்லாம் நின்னை அழைப்போனாகிய பூசாரியானவன், நின்னைப் போற்றித் துதித்து அழைத்து இயற்றும் வெறியயர் களத்துள், அச்சத்தை உண்டாகும் அவ் விழவுக்களத்தினுள், நீ அவன்பால் தோன்றிவருதலும் உண்மையே!*

*அவ் வெறியயர்தலும், அதன்கண் நீ தோன்றுதலும் ஆகிய இவையெல்லாம் உண்மையானவையும் அல்ல; ஏனெனில் நீதான் அவற்றைக் கடந்து எங்கும் விளங்கும் பரம்பொருள் ஆதலின். ஆனால், நீதான் அங்கும் தோன்றி அவர்க்கும் அருளுதலின், அவைதாம் பொய்யானவையும் அல்ல. எல்லையற்று விளங்கும் இவ்வுலகினுள் காணப்படுவன அனைத்தும் நீயே. ஆதலின், அவ் வேலனின் பாட்டால் நீ சிறப்படைவாய் எனினும், அதுதான் நின் உண்மைப் புகழுக்கு மிகவும் குறைப்பட்டதே யாகலின், அப் பெருஞ் சிறப்பினின்றும் நீ நீங்கிவிடுவாய்!*

*நல்வினைச் சிறப்பால் உயர்நிலை பெறுதலும், தீவினை மிகுதியால் இழிபிறப்பினை அடைதலும் என்பது பிறர்க்கெல்லாம் உளதாம். அவராகிய அப் பிறரும் நின் ஆணைக் கேற்பவே அவற்றை அடைகின்றனர். ஆகவே, நீதான் மிக்க சிறப்பினை உடையை என்பதாம்.*

**சொற்பொருள் :** *காஅய்தல் - கோபித்தல்; காஅய்கடவுள் - சிவபிரான். செவ்வேள் - முருகன்; சிவந்த வேள். கருநிறத்து வேள், காமன்; அவன் மால்மகள். சால்வ - சால்புடையோய். பேஎ விழவு - அச்சந்தரும் விழுவுக்களம். வேலவன் - வேலனை வேண்டிப் பாடி அழைக்கும் வெறியாடி. வலம் - ஆணை.*

**விளக்கம் :** வேலனின் அழைப்பிற்கு இணங்கத் தோன்றி அருள் புரியும் இரக்கம் உடையை; அவன் பாட்டு நின் புகழ்மையைச் சரியாகக் கூறாதபோதும், அதன் அன்பை மட்டுமே நினைந்து அவ்விடம் செல்லும் அருளாளன் நீ என்பதாம். 'வினைப்பயனை விதிக்கும் விதியும் நீயே' என்பவர், 'ஏனோர் நின் வலத்தினது' என்றனர்.

### உருவு திரித்தோன்!

**ஆதி யந்தணன் அறிந்துபரி கொளுவ,**
**வேத மாபூண் வையத் தேர் ஊர்ந்து,**
**நாகம் நாணா, மலை வில் லாக,**
**மூவகை ஆரெயில் ஓரழல் அம்பின் முளிய**
**மாதிரம் அழல வெய்து, அமரர் வேள்விப்**
**பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்**
**உமையோடு புணர்ந்த காம வதுவையுள்,**
**அமையாப் புணர்ச்சி அமைய, நெற்றி**
**இமையா நாட்டத்து ஒருவரம் கொண்டு**
**விலங்கென விண்ணோர் வேள்வி முதல்வன்**
**விரிகதிர் மணிப்பூண் அவற்குத்தான் ஈத்தது**
**அரிதென மாற்றான் வாய்மையன் ஆதலில்**
**எரிகனன் றானாக் குடாரிகொண் டவன்உருவு**
**திரிந்திட் டோனிவ் வுலகேழும் மருளக்;**

ஆதி அந்தணனாகிய பிரமதேவன் செலுத்தும் முறை யறிந்தோனாய்ச் செலுத்த, வேதங்களாகிய குதிரைகள் பூட்டப் பெற்ற வையகமாகிய தேரிலேறிச் சென்றான் சிவபிரான். மேரு மலையினை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பினை நாணாகவும் கொண்ட வில்லினை, அவன் கைக்கொண்டான். பொன் வெள்ளி இரும்பு என்னும் மூவகைப்பட்ட உலோகங்களால் அமைந்த கடத்தற்கரிய திரிபுரக் கோட்டைகளைக் குறித்து ஓர் அழல் அம்பினை ஏவினான். திக்கெல்லாம் பற்றி எரியச் சென்ற அவ்வம்பினால், அக் கோட்டைகள் மூன்றும் எரிந்து அழிந்தன.

அவன் வெற்றியைப் போற்ற நினைத்தனர் அமரர்கள். அவனைக் குறித்த வேள்வியை அவர்கள் செய்தனர். அதன் கண், அவர்கள் அளித்த அவிர்ப்பாகத்தை உண்ட சிவபிரான் தன் சீற்றம் தணிந்தான். பசுமையான கண்களைக் கொண்டவனானான். உமையம்மையை மணந்து, அவளோடுங் கூடிக கலந்த இன்பக் கலவியுள், அடங்குதலற்ற புணர்ச்சியுள் பொருந்திக் களிப்பவனும் ஆயினான். ஒளிபரப்பும் மணிகள் பதித்த அணிகளைப் பூண்டோனும், தேவர்கள் செய்த வேள்விக்கு முதல்வனாகத் திகழ்ந்தோனுமாகிய தேவர் கோமானான இந்திரன், இமைத்தலற்ற நெற்றிக்கண்ணைக் கொண்டோனான அச் சிவபிரானிடம்,

*'உங்கள் கூட்டத்தால் உண்டாகும் கருவைச் சிதைக்க வேண்டும்' என்கின்ற ஒரு வரத்தை வேண்டிப் பெற்றான். அவ் விந்திரனுக்குத் தான் தந்தருளிய வரத்தினை மாற்றுதற்கு அரிது எனத், தான் வாய்மையாளன் ஆதலினாலே, சிவபிரான் சிந்தித்தான். நெருப்புக் கனன்று தணியாதே கொழுந்துவிட்டு எரியும் தன் மழுப்படையைக் கொண்டு, அக் கருவின் உருவத்தை, மூவேழுலகங்களும் மருட்சி கொள்ளும்படியாகச் சிதைத்து, அழித்து விட்டான்.*

**சொற்பொருள் :** *ஆதி அந்தணன் - பிரமன்; அந்தணர் மரபுக்கு இவனே ஆதியாதலின், இவ்வாறு பெயர் பெற்றனன். பரி - குதிரை. கொளுவ - செலுத்த. நாகம் - பாம்பு; இது வாசுகி. மலை - மேருமலை. முளிதல் - வெந்தழிதல். மாதிரம் - திசை. பாகம் - அவிர்ப்பாகம். வதுவை - மணம். விலங்கு - சிதைப்பாயாக. குடாரி - மழு. உருவு - கரு. திரித்தல் - அழித்தல்; சிதைத்தல். மருள - வியப்பால் மயங்க.*

**விளக்கம் :** *திரிபுராந்தகனாகிய சிவபிரான் தன் சினந் தணிந்தோனாகி, உமையோடு கலந்து இன்புற்றிருந்த காலத்து உண்டாகிய, அச் சிவகருவைச் சிதைக்குமாறு இந்திரன் வேண்டினான். சிவனும், அவ்வாறே சிதைத்துவிட, அது தான் சிதைந்து உமையின் கருப்பையினின்றும் கழிந்தது. அதனால் உலகம் மருண்டது, ஆதிசக்தியின் கருப்பைக் கருவும் சிதைவுற்று வீழ நேர்ந்த அந்த நிலையைக் கண்டு என்பதாம்.*

### மாதவர் மனைவியர் பெற்றனர்!

**கருப்பெற்றுக் கொண்டோர் கழிந்தசேய் யாக்கை**
**நொசிப்பின் ஏழுறு முனிவர் நனியுணர்ந்து**
**வசித்ததைக் கண்ட மாக மாதவர்**
**மனைவியர் நிறைவயின் வசிதடி சமைப்பின்**
**சாலார், தானே தரிக்கென அவரவி**
**உடன்பெய் தோரே அழல்வேட்டு அவ்வவித்**
**தடவுநிமிர் முத்தீப் பேணியமன் எச்சில்**
**வடவயின் விளங்கால் உறையெழு மகளிருள்**
**கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய**
**அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்;**
**மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்**
**நிறைவயின் வழாஅது நிற் சூலினரே;**
**நிவந்தோங்கு இமையத்து நீலப் பைஞ்சுனைப்**
**பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்;**

*சிதைவுற்று வெளிப்போந்த அச் சிவ கருவை ஏழு முனிவர்களும் பெற்றுக் கொண்டனர். சிவகுமரனின் உடலின் சிதைவுற்ற கூறுகள் அவை என்பதனைத் தம் நுண்ணிய*

ஞானத்தால் அவர்கள் நன்றாக அறிந்தனர். வெட்டுப்பட்டுக் கிடந்த அதனைக்கண்ட அந்தப் பெருந்தவமுனிவர்கள், அவற்றைத் தம் மனைவியர் அப்படியே தம்முள் ஏற்று வளர்த்தனராயின், தம் கற்புநெறியில் நிறைவோடு திகழார் எனக் கருதினர்.

அதனால், அவர் யாகத்தீயை விரும்பி வளர்த்து, அத்தீ தானே அதனைத் தரிப்பதாக என, அதனுள் அவியோடு சேர்த்து இட்டனர். அங்ஙனம் அவியோடு சேர்த்து இடப்பட்ட அக்கருச் சிதைவும், யாககுண்டத்துள் ஓங்கி எழுந்த அம் முத்தீக்களாலும் உண்ணப்பட்டு, எச்சிலாக எஞ்சி நின்றது.

வானத்து வடதிசைக்கண் வீற்றிருக்கின்ற ஏழு கற்புடை மகளிருள்ளும், கடவுள் தன்மைபெற்ற ஒப்பற்ற நட்சத்திரமாகிய அருந்ததி ஒருத்திமட்டும் நீங்கலாகக், கார்த்திகைப் பெண்கள் என விளங்கும் அறுவரும், அக் கருத் துண்டுகளைப் பெற்றுத், தாந்தாம் அந்நிலையே உண்டனர்.

குற்றமற்ற கற்பினை உடையவர், மகா தவசிகளின் மனைவியராகிய அவர்கள். அவர்கள் தம் நிறையுடைமை யினின்றும் வழுவாதவராக, அச் சிவகருவைத் தம் கருப் பையிலேயும் தாங்கினர்.

மிகவும் உயர்ந்து விளங்குவது இமயம். அதன்கண் உள்ளதான நீலநிறமான பசிய சுனையிடத்தே மலர்ந்திருந்த தாமரை மலர்களாகிய படுக்கைகளில், அவர்கள் தனித்தனியாக ஆறு குழந்தைகளைப் பெற்றனர்.

**சொற்பொருள் :** நொசிப்பு - நுண்ணுணர்வு. வசித்தல் - வெட்டல். நிறை - கற்பு. தடவு - யாககுண்டம். முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி. ஆல் - கார்த்திகை மகளிர்; ஆரல் இடைக்குறைந்து நின்றது. சாலினி - அருந்ததி. நீலம் - நீலநிறம்; நீலநிறத் தருப்பைப் புல்லும் ஆம். பாயல் - படுக்கை.

**விளக்கம் :** வருவது உணரா இந்திரன் சிவகருவைச் சிதைக்க விரும்பினான்; ஆனால், அது முடிவில் வளர்ந்து ஆறு குமரர்களாகப் பிறந்தது. இதனால், காலப்போக்கின் நியதியை இந்திரனாலும் மாற்றஇயலாது என்பதாம்.

### ஒப்பற்றவனே, வாழ்க!

**பெரும்பெயர் முருக! நின் பயந்த ஞான்றே 50**
**அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்**
**எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென**
**அறுவேறு துணியும் அறுவ ராகி**
**ஒருவனை வாழி! ஓங்குவிறல் சேஎய்!**

பெரும் புகழையுடைய முருகப் பெருமானே! நின்னை அவர்கள் அவ்வாறு பெற்றெடுத்த அந்நாளிலேயே, அரிதாகப் பொருந்திய சிறப்பினை உடையோனாகிய தேவர் கோமான், தன் நிலையைக் கடந்துவந்து, அக் குழந்தைகளைத் தாக்கினான். நெருப்பைக் கக்கும் வச்சிரப்படையைக் கொண்டு, ஆறாக இருந்த நின்னைத் தாக்கினான். வேறாகத் துண்டுபட்ட ஆறு துண்டுகளும் அறுவராகத் தோன்றிப், பின் அனைத்தும் ஒன்று பட்டு ஒருவனாக நீயும் விளங்கினை. அத்தகைய சிவகுமாரனே! நீ வாழ்க! உயர்ந்த வெற்றியை உடைய செம்மேனியனே, நீ வாழ்க!

**சொற்பொருள் :** அமர் - பொருந்திய. வச்சிரம் - வச்சிரப் படை. துணி - துண்டு. விறல் - வெற்றி.

**விளக்கம் :** முருகனின் பிறப்பைப் பற்றிய பழைய செய்தி இவ்வாறு இதன்கண் உரைக்கப்படுகின்றது. ஆறு குழந்தைகளும் இந்திரனால் தாக்கப்பட்டு, ஒருவனாக ஒன்றி நின்ற செய்தியை அறிக.

### அனைவரும் கொடுத்தனர்!

**ஆரா உடம்பின்நீ அமர்ந்து விளை யாடிய**
**போரால் வறுங்கைக்குப் புரந்தரன் உடைய**
**அல்லலில் அனலன் தன்மெய்யின் பிரித்துச்**
**செல்வ வாரணம் கொடுத்தோன்; வானத்து**
**வளங்கெழு செல்வன்தன் மெய்யின் பிரித்துத்**
**திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன்;**
**திருந்துகோல் ஞமன்தன் மெய்யின் பிரிவித்து**
**இருங்கண் வெள்யாட்டு எழில்மறி கொடுத்தோன்;**

வளர்ச்சி பெறாத உடம்பினோடு நீ விருப்பமுடன் விளையாட்டாகச் செய்த போரினிடத்தே, நின் வெறுங்கை களின் வலிமைக்கே எதிர்நிற்க இயலாதவனாக, இந்திரன் தோற்றான். அவன் தோல்வியுற்றதும், தேவர்கள் நின்னைப் பணிந்தனர். நினக்குத் திறையாகப் பலவற்றையும் வழங்கினர்.

நின்னால் துன்புறாத போதினும், தீக்கடவுளானவன் தன் உடம்பினின்றும் ஒரு கூற்றைப் பிரித்தெடுத்து, அதனைச் சிறந்த கோழிச்சேவலாக்கி நினக்குரிய கொடியாகத் திகழுமாறு தந்தனன். வானத்துச் செல்வங்களுக்கு உரியோனாகிய இந்திரன், தன்னுடம்பின் ஒரு கூற்றைப் பிரித்துப் புள்ளிகளோடு விளங்கும் தோகை கொண்ட அழகிய மயிலாக ஆக்கி நினக்குரிய ஊர்தியாகத் தந்தான்.

*திருத்தமான செங்கோன்மையை உடையவனான எமன், தன் உடம்பினின்றும் ஒரு கூற்றைப் பிரியச்செய்து, அதனைக் கரிய கண்களை உடைய வெள்ளாட்டுக் குட்டியாக்கி நினக்குக் கொடுத்தான்*

**சொற்பொருள் :** *ஆராஉடம்பு - முதிராத குழந்தைப் பருவத்து உடல். ஆர்தல் - நிறைதல். புரந்தரன் - இந்திரன்; தேவரைக் காப்பவன். அல்லல் - துன்பம். வாரணம் - கோழிச் சேவல். பொறி - புள்ளி. ஞமன் - எமன். மறி - குட்டி.*

**விளக்கம் :** தோற்றோர் போரிக்கண் வென்றோனுக்குத் *திறையளந்து தம் அடிமைத் தன்மையைத் தெரிவிப்பர். அவ்வாறே, தேவர் தலைவர்கள் முருகப் பெருமானுக்குச் சேவலும் மயிலும் ஆடுமாகிய இவற்றை அளித்தனர் என்பதாம்.*

## எல்லைகடந்த புகழோய்!

**ஆஅங்கு, அவரும் பிறரும் அமர்ந்துபடை அளித்த**
**மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும்**
**பொறிவரிச் சாபமும் மரனும் வாளும்**
**செறியிலை ஈட்டியும் குடாரியும் கணிச்சியும்**
**தெறுகதிர்க் கனலியும் மாலையும் மணியும்**
**வேறுவேறு உருவின்இவ் வாறிரு கைக்கொண்டு**
**மறுவில் துறக்கத்து அமரர் செல்வன்றன்**
**பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம்பு இகந்தோய்;**

*அவ்வாறாக, முற்கூறிய தீக்கடவுள் ஆகியோரும், மற்றைத் தேவரும் விருப்போடுங் கூடியவராகப் படைகளை அளித்தனர். ஆட்டுக்குட்டியும், மயிலும், கோழிச்சேவலும், முத்திரையோடுங் கூடியதான கட்டமைந்த வில்லும், தோமரமும், வாளும், தழைமாலை யணியப்பெற்ற ஈட்டியும், குடாரியும், கணிச்சி என்னும் மழுவும், எரிக்கும் கதிர்களைச் சொரியும் கனலியும், வெவ்வேறு உருவினவாகிய இவற்றை நின் பன்னிருகைகளிலும் நீயும் ஏந்திக் கொண்டனை. குற்றமற்ற தேவருலகுக்கு உரியோனாகிய இந்திரனது புகழின் எல்லையையும், தாமரைக் கொட்டையை விட்டு நீங்காதே கிடந்த அந்தக் குழவிப் பருவத்திலேயே கடந்து நின்ற புகழுடையோனே!*

**சொற்பொருள் :** *அமர்ந்து - விரும்பி. சாபம் - வில். மரன் - தோமரம். குடாரி - கோடரியும் ஆம். கணிச்சி - மழு. கனலி - கனலியை ஏந்திக்கொண்டு என்பதாகும்.*

## சேரார் சிலர்

**நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை**
**மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை**
**செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடி னோரும்**
**சேரா வறத்துச் சீரி லோரும்**
**அழிதவப் படிவத்து அயரி யோரும்**
**மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார்;**

*நின் குணமாகிய அருளைத் தம்பால் ஏற்றிருப்போரும், நின் பண்பாகிய அறத்தைத் தாமும் மேற்கொண்டோரும், நிலைபெற்ற நற்குணங்களை உடையோரும், பெருந்தவத்தினை உடையோரும், நின்னை வணங்கி நின்னை, வந்து அடைபவர் ஆவர். இவரன்றி,*

*உயிர்களைக் கொல்லும் சினம் கொடிய நெஞ்சத்திடத்தே நீடித்திருக்கப் பெற்றோரும், அறநெறியின்கண் பொருந்தாது நிற்கும் சீர்மையில்லாதவரும், அழிந்த தவவடிவோடு நின்னை மறந்தவர்களும், மறுபிறப்பு என்பதே இல்லையென்று வாதிடும் அறிவற்றோரும் ஆகிய இவர்கள், நின்னை ஒருபோதும் அடையவே மாட்டார்கள்.*

**சொற்பொருள் :** *நின் குணம் - நின் குணமாகிய அருளுதல். அறம் - அறநெறி. செறுதீ - கொல்லும் தீத்தன்மை. சீர் - சிறப்பு. அயரியோர் - மறந்தோர். மடவோர் - அறிவிலிகள்.*

**விளக்கம் :** *'மறுபிறப்பு இல்லை' என்போர் நல்வினை தீவினைக் கூறுபாடுகளைக் கருதார்; ஆதலின் அறநெறி நில்லார்; அரும்பொருளைக் கருதார் என்பதாம்.*

## யாம் இரப்பவை

**நின்னிழல் அன்னோர் அல்லது இன்னோர்**
**சேர்வார் ஆதலின், யாஅம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்;**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**
**உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!**

*நின் திருவடி நீழலை முற்கூறிய தீயோரை அல்லாரான பிறர் சேர்பவராவர். ஆதலினாலே, உருளாகப் பூக்கும் கொத்துக் களைக் கொண்ட கடம்பினது தழைத்த மாலையினை அணிந் தோனே! யாம் நின்னிடம் இரப்பவை, பொருளும், பொன்னும், போகமும் அல்ல. அருளும், அன்பும், அறனுமாகிய மூன்றையுமே யாம் இரக்கின்றோம். அவற்றைத் தந்தருளி எம்மையும் காப்பாயாக!*

**சொற்பொருள் :** *உருள் - உருண்டைத் தன்மை. ஒலித்தல் - தழைத்தல்.*

**விளக்கம் :** அறநெறிக்கண் நின்று, முருகப்பெருமான்பால் அன்பு செலுத்தி, அவனருளைப் பெற்று, நிலையான பேரின்பத்தை அடைய விரும்புகின்றவர், அவற்றை முறையே வேண்டுகின்றனர்; 'அருளும் அன்பும் அறனும்' என்னும் மூன்று சிறப்புக் களையும் விரும்புகின்றனர்.

'கடம்பின் ஒலிதாரோயே' என்பதற்குக் 'கடம்பிலே வீற்றிருக்கும் தழைத்த மாலையை உடையோனே' எனவும், 'கடப்ப மலர்களால் தழையக் கட்டப்பெற்ற தாரினை அணிவோனே' எனவும் சொல்லலாம். கடம்பு - செங்கடம்பு; இது முருகனுக்கு உரியது.

**ஆறாம் பாடல்**

## வையை (6)

**பாடியவர் :** ஆசிரியர் நல்லந்துவனார்; **பண் வகுத்தவர் :** மருத்துவன் தாமோதரனார். **பண் :** பாலையாழ்.

வையை யாற்றிலே புதுவெள்ளம் வருகின்றது. மக்கள் களிப்புடன் சென்று நீராடி இன்புறுகின்றனர். தலைவன் ஒருவன் தன் இற்பரத்தையுடன் சென்று புதுப்புனல் ஆடி மகிழ்ந்தான். அதனைக் கேட்ட அவன் காதற்பரத்தை புலந்தாள். அவளை விரும்பிச்சென்றவன் அவள் ஊடலை நீக்கிக் கூடினான். வையை நீர் விழவணியும், தன் தலைவனின் செயல்களும், அத் தலைவனின் மனைவிக்குத் தெரிந்தது. அவள் பெரிதும் வருந்தினாள். தலைவனை ஏற்றுக் கொள்ளுமாறு தன்பால் தூதுவந்த விறலிக்கு, அவனுடைய செயல்களைக் கூறித், தான் அவனை ஏற்கவியலாது என்று மறுத்து உரைக்கின்றாள். பெருங்குடி இல்லத்திலே நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி இது. ஒரு தலைவனோடு தொடர்புடைய நான்கு பெண்களின் தன்மைகளை இது நளினமாக எடுத்துக் காட்டுகின்றது.

இல்லத்தின் தலைவியாக விளங்கும் தலைமகள்; பரத்தை எனினும், தலைவன் ஒருவனை மட்டுமே தனக்கு உரிமையாளனாகக் கொண்ட இற்பரத்தை; பொருளுக்காகத் தலைவனை இன்புறுத்தும் காதற்பரத்தை; அவன் ஏவிய தொழிலைச் செய்து அவனுக்கு உதவியாக அமைந்த விறலி; இந் நான்கு பெண்களையும், அவர்களின் உள்ளப் போக்குகளையும் இப் பாடலிற் காணலாம்.

இதனை அறிந்த ஆசிரியர் நல்லந்துவனார், இப் பாடலைப் பாடியுள்ளார். அந்நாளைய மதுரையிலே வாழ்ந்தாரான பெருங்குடித் தமிழரின் வாழ்வமைதியை அறிந்துகொள்ள இப் பாடல் உதவும்.

## புதுவெள்ளம் வருகின்றது!

**நிறைகடல் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்**
**பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்**
**நிலமறை வதுபோல் மலிர்புனல் தலைத்தலைஇ**
**மலைய இனங்கலங்க மலைய மயிலகவ**
**மலைமாசு கழியக் கதழும் அரவி யிழியும்**
**மலிநீர் அதர்பல கெழுவு தாழ்வரை**
**மாசில் பனுவற் புலவர் புகழ்புல.**
**நாவிற் புனைந்த நன்கவிதை மாறாமை**
**மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்**
**தாயிற்றே தண்ணம் புனல்;**

*கடல் நீர் நிறைந்தது. அதன் கண்ணுள்ள நீரை முகந்து கொண்ட மேகங்கள் வானிடம் எங்கணும் பரவின. தம்மிடத்தே நிறைந்து தளும்பும் நீரின் பாரத்தை அவை தாங்க மாட்டா வாயின. அச் சுமையைக் கழித்துத் தாம் களைப்பாற நினைத்தன போல, அவை பெருமழையைப் பொழிந்தன.*

*நிலப்பகுதிகள் அனைத்தையும் மறைப்பதுபோல, மிக்க மழைநீர் இடங்கள்தோறும் பெருகி நிறைந்தது. மலையிடத் துள்ள உயிரினங்கள் கலக்கம் அடைந்தன. மலையின்கண்ணுள்ள மயில்கள் களிப்பால் அகவத் தொடங்கின. மலைப்பகுதிகளிற் படிந்திருந்த தூசுகள் நீங்கின. அருவிகள் விரைவோடு வீழ்ந்தன. இவ்வாறு வீழ்ந்த அருவி நீரானது, பல வழிகள் பொருந்திய மலையடிவாரப் பகுதிகளிற் பரவிச் சென்றது.*

*குற்றமற்ற நூலறிவையுடையவர் புலவர்கள். புகழ்தரும் அறிவுரைகளைக் கூறுவன அவர் நா. அந் நாவினால் அவர்கள் நல்ல கவிதைகளைப் புனைவார்கள். அக் கவிதைகள் பொய்யாகிப் போவதில்லை. அவை எங்கணும் சென்று பொருந்திப் பரவும்; விரைந்து அதன் பயனான தொழில்களையும் பெருகச் செய்யும்.*

*இவ்வாறே, குளிர்ந்த புனலானது எங்கணும் தாவிச் சென்று பரவிற்று; எங்கணும் பொருந்திப் பரவிற்று. இதனால், உழவர்கள் விரைந்து தம் தொழில்களை மேற்கொள்வாரும் ஆயினர்.*

**சொற்பொருள் :** *நிறைகடல் - என்றும் வற்றாதே நீரால் நிறைந்திருக்கும் கடல். உராய் - பரவி. துளும்பும் - மேலெழுந்து விழும். அசைவிட - களைப்பாற. வானம் - மேகம். நிலம் - பூமி; நிலையுடைத்தாதலின் நிலம் ஆயிற்று. மலிர்புனல் - மிக்கநீர். இனம் - உயினம்; மானினமும் ஆம். மாசு - அழுக்கு. கதழும் அருவி - விரைவோடு வீழும் அருவிநீர். அதர் - வழி. தாழ்வரை - மலையடி*

வாரம். பனுவல் - நூலறிவு. புலம் - அறிவு. கவிதை - பாட்டு. மாறாமை - அதன் கருத்து அவ்வாறே பிறழாதே நிலைபெறுதல். வினை - தொழில். நந்த - பெருக. தண்ணம் புனல் - குளிர்ந்த அழகிய புனல். அம் - அழகு; அது மலையினின்றும் சுமந்துவரும் பல்வகை மலர்களாலும் தழைகளாலும் உண்டாவது.

**விளக்கம் :** கார்காலம் தொடங்கவும் மலையிலே மழை பொழிகின்றது; அம் மழை நீரானது அழகுடனும் தண்மையுடனும் வையையில் நிரம்பி வருகின்றது; அதனால் எங்கணும் புத்துணர்வு எழுகின்றது. மக்கள் மனக்கிளர்ச்சி கொள்ளுகின்றனர்.

## காதலர் களிப்பு

**புகை பூ அவி யாராதனை அழல் பல ஏந்தி**
**நகை யமர் காதலரை நாளணிக் கூட்டும்**
**வகை சாலும் வையை வரவு;**

வையை பெருகி வருகின்றது. புதுநீரில் திளைத்தாட மதுரை மக்கள் எழுகின்றனர். அவர்களுள் இளைஞரும் கன்னியரும் பெரிதும் களிப்போடு செல்கின்றனர். புகைத்தற்குரியனவும், சூடிக்கொள்வதற்கான பூவும், வழிபாட்டிற்குரியன வாகிய பொருள்களும், நெருப்பும் ஆகிய பலவற்றையும் கைகளில் ஏந்தியவராக அவர்கள் செல்கின்றனர். மகிழ்ச்சி பொருந்திய தம் காதலரை அந் நீர்விளையாட்டுக்குரிய நாளணிகளை அணியச் செய்விக்கின்றனர். வையை ஆற்றின்கண் வரும் புதுவெள்ளத்தின் வரவு, காதலரின் இம்முறைமைகளுக் கெல்லாம் பொருந்துவதாக விளங்குகின்றது.

**சொற்பொருள் :** புகை - அகில் சாந்தம் முதலியவான புகைத்தற்குரிய பொருள்கள்; அவை நீராடிய பின்னர் மகளிர் தம் கூந்தற்கு நறுமணப்புகை ஊட்டுவதற்கு ஆகும். பூ - மலர்கள் மகளிர் சூடிக்கொள்வதற்கு. அவிஆராதனை - அவியாகிய வழிபாட்டிற்குரிய பொருள்கள். அழல் - நெருப்பு; புகைப் பொருள்களை இட்டுப் புகைப்பதற்கு. நாளணி-விழா நாளுக்குரிய உடையும் பிறவுமாகிய அலங்காரங்கள். வகை - முறைமை.

**விளக்கம் :** புதுநீரின் வரவறிந்த காதலருள்ளம் களிப்புக் கொள்ளுகின்றது. வெள்ளத்தில் திளைத்தாட விரும்பிய அவர்கள், அதற்கான பொருள்களோடு, முறையாகப் புறப்படுகின்றனர்.

## ஊரின்கண் ஒலி தோன்றல்

**தொடிதோள் செறிப்பத் தோள்வளை இயங்கக்**
**கொடிசே ராத்திருக் கோவை காழ்கொளத்**
**தொகுகதிர் முத்துத் தொடைகலிழ்பு மழுக**
**உகிரும் கொடிறும் உண்டசெம் பஞ்சியும்**
**நகிலணி அளறும் நனிவண்டல் மண்ட**
**இலையும் மயிரும் ஈர்ஞ்சாந்து நிழத்த**
**முலையும் மார்பும் முயங்கணி மயங்க**
**விருப்பொன்று பட்டவர் உளநிறை உடைத்தென**
**வரைச் சிறை உடைத்ததை வையை; வையைத்**
**திரைச்சிறைஉடைத்தன்று கரைச்சிறை அறைகெனும்**
**உரைச்சிறைப் பறையெழ ஊரொலித் தன்று;**

*அணியணியாக மக்கள் வையையை நோக்கிச் செல்லுகின்றனர். அவர்கள் உள்ளத்தின் களிப்பினாலே அவர்கள் நடையிலும் மிடுக்குத் தோன்றுகின்றது. தோளில் அணிந்திருந்த தோள்வளைகள், தோள்கள் பூரித்தமையால் செறிவு கொண்டவையாயின. அதனால், அவற்றை முன்னங்கைகளில் இறக்கிவிட, அவை அங்கே ஒன்றோடொன்று மோதி ஒலிசெய்த வண்ணமிருந்தன. மார்பினும் தோளினும் எழுதப்பெற்ற தொய்யிற் கொடிகளோடு சேர்ந்து, மார்பிற் கிடந்தசையும் அழகிய ஆரங்கள், தம்முட் கலந்து தழுவுதலால் மயங்கி உதிர்ந்தன. தொகுதிப்பட்ட கிரணங்களையுடைய முத்துச் சரங்கள், தம் தொடுப்பினின்றும் நீங்கியவையாய், சந்தன குங்குமக் குழம்புகளிலே படிந்து நிறம் மாறுபட்டன. நகங்களினும் கன்னங்களினும் ஊட்டப்பெற்ற செம்பஞ்சிக் குழம்பும், மார்பிடத்தே அழகுறத் தீட்டப்பெற்ற சந்தனக் குழம்பும் தம்முட் கலந்து கரைந்து, மிகுதியான வண்டல் போலப் படிந்து தோன்றின. தலைமாலையும், அவிழ்ந்து சோரும் கூந்தலும் குளிர்ந்த சந்தனச் சாந்தினை அழித்தன. மகளிர் முலைகளினும் ஆடவர் மார்பினும் அணிந்திருந்த அணிகள் தம்முட் பொருந்தி ஒன்றுடன் ஒன்று கலந்து மயங்கிக் கிடந்தன. விருப்பத்தால் ஒன்றுபட்டவரது உள்ளத்து நிறையாகிய காப்பினைப் பொங்கியெழும் அவரது ஆர்வமானது உடைத்தாற்போல, கரையாகிய சிறையை உடைத்தபடி வையையும் பெருகி வந்தது. வையை வெள்ளத்தின் அலைகள் கரையாகிய தடையை உடைத்தன; மீளவும் கரையை அடைத்துத் தடையை ஏற்படுத்த அனைவரும் வருகவெனப் பறையறைக எனக் காவலர் கூவினர். அவர் குரலோடு கரை யடைக்க வம்மினென்று அறையப்பட்ட பறையினின்று எழுந்த ஒலியும் கலந்து, ஊரே ஒலியோடு விளங்கலாயிற்று. ஊரவரும் ஒலியோடு ஆற்றை நோக்கி எழுந்து வரலாயினர்.*

**சொற்பொருள் :** தொடி - வளையல். செறிப்ப - அழுத்த. இயங்க - மேல்கீழாக அசைய; ஒலிக்க. கொடி - தொய்யிற் கொடி. திருக்கோவை - அழகிய சரம்; மேகலையும் ஆம். உகிர் - நகம். கொடிறு - கன்னம். அளறு - சந்தனக்குழம்பு. இலை - தழைமாலை. நிறை - மனவுறுதியாகிய தன்மை; நிறுத்தும் செவ்வியால் நிறை ஆயிற்று. கரைச்சிறை - கரையாகிய தடை; சிறை - சிறகரும் ஆம்; ஆற்றின் இருமருங்கும் விளக்கும் கரைகள் சிறகரைப் போன்று விளங்கும் என்க. ஊர் - ஊர் மக்கள்.

**விளக்கம் :** வையைப் புதுவெள்ளத்தில் ஆடித் திளைக்கச் செல்வாரான காதலர், தம்முள் தழுவிக் கலந்து செல்வதனால், அவர் அணிகளும் பிறவும் தம்முட் கலந்து மயங்கின என்பதாம். அவர், தம் நிறையழிந்து, ஆர்வத்தாலே எல்லை கடந்து சென்றது போலப், புது வெள்ளமும் கரையாகிய எல்லையைக் கடந்து செல்லத் தொடங்கியது என்பதுமாம். இதனால், நீராடச் செல்லும் இவரது ஆரவாரத்துடன், கடையடைக்க வருகவென்ற பறையொலியும், கூச்சலுமாக எங்கணும் நிறைந்து, மதுரை நகரமே ஒலிமிக்கதாயிற்று என்பதுமாம்.

## செல்வார் தன்மை

**அன்று, போரணி அணியின் புகர்முகம் சிறந்தென**
**நீரணி அணியின் நிரைநிரை பிடிசெல**
**ஏரணி அணியின் இறையரும் இனியரும்**
**ஈரணி அணியின் இகல்மிக நவின்று**
**தணிபுனல் ஆடும் தகைமிகு போர்க்கண்**
**துணிபுனல் ஆகத் துறைவேண்டு மைந்தின்**
**அணியணி யாகிய தாரர் கருவியர்**
**அடுபுனல் அதுசெல அவற்றை இழிவர்**
**கைம்மான் எருத்தர் கலிமட மாவினர்**
**நெய்ம்மாண் சிவிறியர் நீர்மணக் கோட்டினர்**
**வெண்கிடை மிதவையர் நன்கிடைத் தேரினர்**
**சாரிகை மறுத்துத் தண்டா உண்டிகை**
**ஓரியவு உறுத்தர ஒரூர்பு இடந்திரீஇச்—**

புது வெள்ளத்தின் வரவாகிய அந்நாளிலே அனைவரும் வையையை நோக்கிப் பயணமாயினர். போருக்குரிய அணிகளாலே களிறுகள் ஊக்கமிக்குச் செல்வதைப் போன்று, நீரணி விழவுக்குரிய அணிகளாலே ஊக்கமிக்கவான பிடியானைகள் வரிசை வரிசையாக வையையை நோக்கிச் செல்லலாயின. அழகாக அணிந்த அணியினரான இளைஞரும், அவருக்கு இனியரான அவர்தம் காதலியரும், நீராடுதற்குரியவான அணியினை அணிவாராயினர். நீர் விளையாட்டாகிய போரைப்

பற்றி அவர்கள் மிகுதியும் பேசிக்கொண்டனர். குளிர்ந்த புதுப்புனலிலே திளைத்தாடுகின்றதான, தகைமிகுந்த அந்தப் போரினிடத்தே, தாம் தாம் மேற்கொள்ளும் களமாகக் குறித்த துறைகளை நோக்கி, ஆற்றலுடனே அவற்றைக் கைக்கொள்ள விரும்பியவராக முன்னேறிச் செல்வாராயினர். அணியணியாக, அவர்கள் முன்னணிப் படைகளைப் போலச் சென்றனர். அவர்கள் நீர்ப்போருக்கு வேண்டும் கருவிகளாகிய பலவற்றையும் கொண்டு சென்றனர். புனலாட்டத்திற்குச் செல்லத் தொடங்கும் அவர்கள், முதற்கண் தம் அணிகளைக் கழற்றிப் போடுவர். அதன் பின்னரே நீரிற் குதித்து ஆடுவர்.

யானைகளின் எருத்தின் மேலோராகச் சிலர் சென்றனர். மனச்செருக்குடைய குதிரைகளின் மேலோராகச் சிலர் சென்றனர். புழுகு நெய்யால் நிரப்பப்பெற்ற நீர்த்துருத்தியைச் சிலர் எடுத்துக்கொண்டு சென்றனர். மணநீர் நிரப்பிய கொம்புகளைச் சிலர் கொண்டுபோயினர். வெண்மையான கிடேச்சுக் கட்டையால் செய்யப்பெற்ற மிதவைகளைச் சிலர் கொண்டுசென்றனர். நன்றாகச் செய்யப்பெற்ற கிடேச்சுக் கட்டைத் தேரினைக் கொண்டுபோயினர் சிலர். இவ்வாறு கூட்டம் கூட்டமாக மக்கள் வையையை நோக்கிச் சென்றனர். யானை குதிரைத்திரள்களை அவற்றின் போக்குப்படி போகாமல் தடுத்து, ஒரே நேர்வழியூடேயே செல்லுமாறு செலுத்திச் செலுத்தி மக்கள் சென்றுகொண்டிருந்தனர். இதனால் வழியிடமெங்கணும் மக்கள் திரிந்தபடியிருந்தனர் என்னும் நிலைமையும் உண்டாயிற்று.

**சொற்பொருள் :** போர்அணி - போருக்குச் செல்லுவதற்குரிய ஒப்பனைகள். புகர்முகம் - களிறு. நீர் அணி - நீராடலுக்குரிய அணிகள். இகல் - மாறுபாடு; நீர் விளையாட லாகிய போர்; போட்டியும் வெற்றி தோல்விகளும் கொண்டதாகலின் நீர்விளையாட்டு 'இகல்' எனப்பெற்றது. நவின்று - விரும்பி. தணிபுனல் - குளிர்ந்த புனல். மைந்து - வலிமை. தாரர் - தார்ப் படையினர்; முன்னணிப் படையினர்; தாரணிந் தோரும் ஆம். கருவியர் - கருவிகளைக் கொண்டோர். கைம்மான் - யானை. கலி - மனச்செருக்கு. கலிமடமா - குதிரை. சிவிறி - நீர்த்துருத்தி. நெய் - புழுகுநெய். கோடு - கொம்பு. கிடை - கிடேச்சுக் கட்டை. சாரிகை - குதிரைச் செலவு. உண்டிகை - யானை முதலிய கூட்டம். இயவு - வழி. திரீஇ - திரிய.

**விளக்கம் :** புதுப்புனல் விழவிற் கலந்தாடச் செல்வோர் அதற்கேற்ற அணிகள், கருவிகள் முதலியவற்றுடன், யானைகளின் மீதும் குதிரைகளின் மீதும் அமர்ந்து செல்வாராயினர். அவர்கள், ஒருவருக்கு முற்பட்டு ஒருவர் செல்ல முயன்றும்,

வழியே செல்லுமாறு தம் ஊர்திகளைச் செலுத்தியும் சென்ற நிலை, போர்க்களத்தை நோக்கி முன்னணிப் படைவீரர்கள் நெருங்கிச் சென்றாற்போன்ற ஆரவாரத்துடன் இருந்தது என்க.

### அந்தணர் கலங்கினர்

**சேரி இளையர் செலவரு நிலையர்**
**வலியர் அல்லோர் துறைதுறை அயர**
**மெலியர் அல்லோர் விருந்து புனல் அயரச்**
**சாறும் சேறும் நெய்யும் மலரும்**
**நாறுபு நிகழும் யாறு வரலாறு;**
**நாறுபு நிகழும் யாறு கண்டழிந்து**
**வேறுபடு புனலென விரைமண்ணுக் கலிழைப்**
**புலம்புரி அந்தணர் கலங்கினர் மருண்டு;**

மேற்கண்டவாறு மதுரை நகரத்து மக்கள் பலரும் ஆற்றங் கரையிலே திரிவாராயினர். இத்னால், புறஞ்சேரிப் பகுதியி லிருந்த இளைஞர் தாம் வெளியே செல்வதற்கும் அரியரான நிலையினர் ஆயினர். அனைவரும் ஒருவரை முற்பட ஒருவராகச் சென்று துறைகளில் இடம்பிடிக்க முயன்றனர். வலிமையற்றோர் ஆற்றுநீரிற் குதித்தாடப் பயந்தனர்; துறை துறையாகத் துறை யருகேயே நின்று அவர் நீராடுவாரும் ஆயினர்.

மெலியவரல்லாத வன்மையாளரோ புதுப்புனலிற் குதித்து நீர்விளையாட்டு அயரலாயினர். இதனால் அவர்கள் அணிந் திருந்த பலவகை மணப்பொருள்களாகிய சாறும் சந்தனக் குங்குமக் குழம்பாகிய சேறும், புழுகுநெய்யும், மலரும் ஆற்று வெள்ளத்திற் கரைந்து கலந்தன. இவற்றால் கலப்புற்று வந்த அப் புதுப்புனல், தானும் அம் மணத்தோடு வரலாயிற்று.

அறிவு பெருகுவதற்கு உரியவான நூல்களைக் கற்பவர் அந்தணர். அவர்கள் வையைத் துறைக்கு நீராட வந்தனர். புதுமணத்தோடு செல்லும் நீரைக் கண்டு நெஞ்சம் தளர்ந்தனர். தூய்மைகெட்டுத் தன்மை வேறுபட்ட நீரெனக் கண்டு, மக்கள் தாம் பூசியிருந்த மணக்கலவைகளோடு வரும் அதனில் நீராட மனம் வெறுத்துக், கலக்கமுற்று மயங்கி நின்றனர்.

**சொற்பொருள்** : சேரி - புறஞ்சேரி; நகர்க் கோட்டைப் புறத்தே ஆற்றங்கரை ஓரமாகக் குடியிருந்தோர்; அவர் செலவரு நிலையின்ரானது அப்பகுதியிற் புதுப்புனலாட வருவாரது கூட்டமும், அவர்களது யானை குதிரைகளாகிய ஊர்திகளும் நெருங்கி மிகுந்து விட்டதனால். வலியர் - மனவலிமையும் உடல் வலிமையும் கொண்டோர்; மெலியர் - அவ்வலிமை அற்றோர். சாறு - மணப் பொருள்களுள் ஒருவகை. சேறு - சந்தன குங்குமக் குழம்பு. நெய் - கூந்தற்கு ஊட்டும் மணநெய். மண்ணுதல் -

கழுவுதல். புலம்புரிதல் - வேதவேதாந்தங்களைக் கற்றறிதல்.

**விளக்கம் :** அந்தணர் தூய நீரிற் காலையில் நீராடித் தாம் முறைப்படி ஆற்றுவதற்கான கடமைகளைச் செய்பவர்; அதனால், அவர் மணநாற்றத்தோடு வரும் புனலில் நீராடாதவராக, அதனைக் கண்டு மயங்கி நின்றனர் என்க.

## சேறுபடு புனல்

**மாறுமென் மலரும் தாரும் கோதையும்**
**வேரும் தூரும் காயும் கிழங்கும்**
**பூரிய மாக்கள் உண்பது மண்டி**
**நாரரி நறவம் உருப்ப நலனழிந்து**
**வேறா கின்றிவ் விரிபுனல் வரவெனச்**
**சேறாடு புனலது செலவு;**

ஆடவரும் பெண்டிரும் சூட்டிக் கழித்த மென்மலர்களும், ஆடவர் மார்புகளை அணிசெய்திருந்த தாரும், பெண்கள் அணிந்திருந்த கோதையும் ஆற்றுநீரோடு கலந்து வந்தன. மரஞ் செடி கொடிகளின் வேரும், புதரும், காயும், கிழங்கும் புதுப்புனலால் அடித்துக் கொள்ளப்பட்டு நீரோடு மிதந்து வந்தன. இவற்றை உண்ணக் கருதியவராகத் தாழ்குடியினர் பலர் நீரிற் குதித்தனர். ‘பன்னாடையால் வடிகட்டப் பெறும் கள்ளின் கலங்கலைப் போலத் தூய்மை நலன் கெட்டு வேறுபட்டது. இந்தப் பரந்த புனலின் வரவு’ என்று பலரும் சொல்லுமாறு, சேறாகக் குழம்பிய புதுப்புனலின் போக்கும் அமைந்தது.

**சொற்பொருள் :** மாறும் மென்மலர் - கழித்துப் போடப் படும் மென்மலர். தூரு - புதர்; சிறு புதர்களை ஆற்று வெள்ளம் அடித்துக் கொணரும். பூரியர் - கீழ் மக்கள். மண்டி - மிக்கு; மிகுதியாகத் திரண்டு. விரிபுனல் - பரந்த புனல்.

**விளக்கம் :** புதுப் புனலின் வரவு, கள்ளின் கலங்கலைப் போல விளங்கிற்று என்பதாகும்.

## மலர்ந்த புனல்

**வரையழி வாலருவி வாதா லாட்டக்**
**கரையழி வாலருவி கால்பா ராட்ட**
**இரவிற் புணர்ந்தோர் இடைமுலை யல்கல்**
**புரைவது பூந்தாரான் குன்றெனக் கூடார்க்கு**
**உடையோ டிழிந்துராய் ஊரிடை ஓடிச்**
**சலப்படை யான் இரவில் தாக்கிய தெல்லாம்**
**புலப்படப் புன்னம் புலரியில் நிலப்படத்**
**தான் மலர்ந் தன்றே**
**தமிழ்வையைத் தண்ணம் புனல்;**

இரவு வேளையில் மலையில் மழை பெய்தது. மலைப்பகுதி களைக் கடந்து, வெள்ளிய அருவிகள் அசைந்து ஒலியோடு வீழ்ந்தன. தூய அருவி நீரைக் காற்று எடுத்து மோத எழுந்த அலைகளால் காட்டாற்றின் கரைகள் உடைந்தன. 'கடப்பந் தாரோனாகிய குமரனின் திருப்பரங்குன்றம், தம்முள் இரவுக் குறியிடையிலே ஒன்றுபட்டோர், தம் காதலியரின் முலைகளி டையிலே தங்கியிருக்கின்ற அந்த இன்பத்திற்கு ஒப்பான இன்பத்தைத் தருவது' என்று, அதனைச் சேர்ந்து இன்புறாத வருக்கு உரைத்தலோடு இழிந்துவந்தது அந்த அருவிநீர். அந்நீர், ஊரிடையே ஓடிச் சென்று தெருக்களின் இருபுறமும் மோதிச் சலப்படையால் தாக்கியபடி சென்றது. அஃதெல்லாம் வெளிப் பட்டுத் தோன்றப் புல்லிய ஒளியையுடைய புலர்காலை வேளையிலே, தரையிடத்து இரவில் தான் சென்ற அடையாளங் களைக் காட்டிற்று. இவ்வாறு, தமிழ் வையையின் குளிர்ந்த அழகிய புனலானது, தான் அனைவருக்கும் வெளிப்பட்டுத் தோன்றுமாறு பெருக்கெடுத்து வந்தது.

**சொற்பொருள் :** வரை - மலை. அழி -கடந்து. வால் - வெண்மை. கால் - காற்று. அல்கல் - தங்கல். பூந்தாரான் - கடப்பந்தாரோன். சலப்படை - சலமாகிய படை. புலரி - புலர் காலை.

**விளக்கம் :** இரவில் மழைபெய்ததை மக்கள் பகலிலேயே அறிந்தனர் என்பதாம். இதனால், இரவை எவரும் வெளியிற் கழித்தாக வேண்டிய நிலைமை அந்நாளைய மதுரையில் இல்லை என்பதுமாகும்.

## காமப் பெருக்கு

**விளியா விருந்து விழுவார்க்குக் கொய்தோய்!**
**தளி ரறிந் தாய் தாம் இவை;**
**பணிபொசி பண்ப! பண்டெல்லாம் நனியுருவத்**
**தென்னோ துவள்கண் டீ!**
**எய்தும் களவினி! நின் மார்பின் தார்வாடக்**
**கொய்ததும் வாயாளோ கொய்தழை கைபற்றிக்**
**கொய்ததும் வாயாளோ செப்பு;**
**புனைபுணை ஏறத் தாழ்த்ததை; தளிரிவை**
**நீரில் துவண்ட; சேஎய் குன்றம்; காமர்**
**பெருக்கன்றோ வையை வரவு!**

மேற்சொன்னவாறு தலைவன் காதற்பரத்தையிடம் கூறினான். தானாடிய வையைப் புதுநீர் வரவினைப் பற்றி அவளுக்கு எடுத்துரைத்தான். அவள் அதனைக் கேட்டாள். அவனைப் பழித்து ஊடினாள். அவள் ஊடலைத் தீர்த்துக் கூடு தற்கு முயன்றான். இவற்றைக் கூறும் பகுதி அடுத்து வருவது.

'கெடாத விருந்தாகத் திகழும் புதியராய பரத்தையருக் கென்று தழையினைக் கொய்தோனே! அத் தளிர்தாம் நீ கொணர்ந்துள்ள இவை என்பதனை நீயும் அறிந்தவன் அன்றோ!' என்று சொல்லி, அவன் தந்த தழையை ஏற்க மறுத்து ஒதுக்கு கின்றாள் அவள். அவன் பணிமொழி பேசியும், தளர்ந்தானைப் போலக் காட்டியும், அவளிடத்துத் தன்பால் இரக்கத்தை உண்டாக்க முயலுகின்றான். அதனைக் கண்டாள் அவள்.

"பணி மொழி பேசியும், தளர்ந்தானைப்போலக் காட்டியும் நடிக்கும் பண்பாளனே! முன்னெல்லாம் நீயும் எனக்குத் தழை கொணர்வாய். அதுதான் பசுமை விளங்குஞ் சிறந்த உருவத்தோடு விளங்கும். இப்பொழுது கொணர்ந்துள்ள இதுவோ துவண்டி ருக்கின்றது. இதனைக் காண்பாயாக" என்கின்றாள்.

'யாவளோ ஒருத்திக்காகக் கொய்து சென்றாய். அவள் ஏற்க மறுத்தாள். அதனால் இவ்விடத்தே கொணர்ந்தாய்' என்று, குறிப்பாகப் பேசுகின்றாள் அவள்.

'நின் களவு உறவு அவளுடன் இனி வாய்க்கும்.'

'நின் மார்பிடத்துத் தாரும் வாடும்படியாக மிக வருந்திக் கொய்து கொணர்ந்திருக்கின்றனை. இப்படிக் கொய்து கொண்டு போய்க் கொடுத்த பின்பும் அவள் நினக்கு உடன்பட மாட்டா ளோ?'.

'கொய்த இத் தழையைக் கையிற் பற்றியவனாகச் சென்று, அவளை இரந்து வேண்டியிருப்பாயே! அவ்வாறு வேண்டிய பின்னரும் அவள் உனக்கு இசைய மாட்டாளோ? சொல்வா யாக' என்று குத்திப் பேசியவளாக, அவனைப் பழிக்கின்றாள் அவள்.

"வையையிற் புதுப்பெருக்கு மிகுதி. அதனைக் கடக்கப் புனைந்த கட்டுமரத்தில் ஏறி வரவேண்டியதாயிற்று. அதனாற் காலம் தாழ்த்தது. இத் தளிரும் நீரிலே அலைப்புண்டு துவண்டது. முருகப்பிரான் குடிகொண்டிருக்கும் பரங்குன்றம் சான்று; நான் ஏதும் தவறிற்றிலேன். வையைக் கண் புது நீர் வரவு மிகவும் அழகான நீர்ப்பெருக்கு அல்லவோ? அதனைக் காணவும், அதன் பாற் சென்று ஆடிக்களிக்கவும் நீயும் என்னுடன் எழுந்தருள்க" என்கின்றான் அவன்.

**சொற்பொருள் :** விளிதல் - கெடுதல். விருந்து - புதியவர். விழுவார் - விரும்பப் படுவார். நனியுருவம் - பசுமையோடு கூடிய தன்மை. புணை - கட்டுமரம்; தெப்பம். சேய் - குமரன். காமர் - அழகு.

**விளக்கம் :** *தன்னை மறைத்து, அவளைத் தெளிவிக்கப் பலவும் கூறுகின்றான் அவன். அவளோ, அவன் சொல்லிலும் செயலிலும் குறைகண்டு மீண்டும் ஊடி ஒதுங்குகின்றாள். அவள், மேலும் அவனை இகழ்ந்து கூறுவது பின்வரும் பகுதி.*

### வையை வயமாக வை!

**ஆமாம் அதுவொக்கும் காதலங் காமம்**
**ஒருக்க வொருதன்மை நிற்குமோ? ஒல்லைச்**
**சுருக்கமும் ஆக்கமும் சூளுறல் வையைப்**
**பெருக்கன்றோ? பெற்றாய் பிழை;**
**அருகு பதியாக அம்பியின் தாழ்ப்பிக்கும்;**
**குருகிரை தேரக் கிடக்கும்! பொழிகார் இல்;**
**இன்னிள வேனில், இதுவன்றோ வையை! நின்**
**வையை வயமாக வை;**

*'ஆமாம். காமர்ப் பெருக்கமன்றோ வையைப் புதுவரவு' எனக் கூறியது பொருந்துவதுதான். காதற்காமமானது முற்றவும் ஒரேதன்மைத்தாக நிற்கும் இயல்பினதோ? விரையச் சுருங்கு வதும், மிகுவதும் வையைப் பெருக்கைப் போலவே அதற்கும் இயல்புதானே! அதனால், ஏதும் சூளுரைத்தலைச் செய்யாதிருப் பாயாக. அதனால், நீயும் தெய்வத்திற்குப் பிழை செய்த ஒரு குற்றத்தையே பெற்றனை!*

*"நின் ஊர் அருகே உள்ளதுதான் எனினும், தெப்பத்தில் ஏறி வரவேண்டிய நிலையில் ஆற்றுநீர் நின்னைக் காலம் தாழ்க்கச் செய்கின்றது! குருகினம் இரைதேடுமளவுக்கு நீர்வற்றிக் கிடக்கும், 'மழை பொழிதற்குரிய கார்காலமும் இதுவன்று. இனிதான இளவேனிற்காலம் இது. இக் காலத்திலும் வையையில் புதுவெள்ளப் பெருக்கம் உண்டாமோ? நின் செயலின் தன்மை யோடு வையையின் தகைமையையும் ஒருசேர வைத்தனையோ? என்கிறாள் அவள்.*

**சொற்பொருள் :** *ஒருக்க - முற்ற. ஒல்லை - விரைய. சுருக்கம் - குறைதல். ஆக்கம் - பெருகுதல். பிழை - குற்றம். பதி - ஊர். அம்பி - படகு; தெப்பம். குருகு - நாரை போன்றன. கார் - கார் மேகம்.*

### காத்தி வரவு!

**செல்யாற்றுத் தீம்புனலில் செல்மரம் போல**
**வவ்வுவல் லார்புணை யாகிய மார்பினை**
**என்னும் பனியாய் இரவெல்லாம் வைகினை;**
**வையை உடைந்த மடையடைத்தக் கண்ணும்**
**பின்னும் மலிரும் பிசிர்போல இன்னும்**
**அனற்றினை துன்பவிய நீயடைந்தக் கண்ணும்**

**பனித்துப் பனிவாரும் கண்ணவர் நெஞ்சம் 85**
**கன்றுபு காத்தி வரவு;**

*ஆற்றது ஓடும் இனிய நீரினிடத்தே, நீரினது வேகத்தால் இழுத்துச் செல்லப்படுகின்ற ஒரு கட்டுமரத்தைப்போல நீயும் நின்னைப் பற்றிக்கொள்ளுதலில் வல்லாராகிய மகளிரது வயப்பட்டு, அவருக்குப் புணையாக அமைந்த மார்பினை உடையவன் ஆயினை! என்னை நினைந்து சற்றும் வருந்தாயாய், இரவுப் பொழுது முற்றவும் அவருள் ஒருத்தியது வீட்டிடத்தேயே அவரோடும் கூடியிருந்தனை. வையைக் கரையிலுள்ள மடை யானது உடைந்தவிடத்து, உடைந்த அதனை அடைத்த விடத்தும், அதன்பின்னரும் அவ்விடத்தே கசிந்து ஒழுகும் நீரினை அறிவாய். அவ்வாறே, அவரைவிட்டுப் பிரிந்து இவ்விடத்துக்கு வந்தவிடத்தும், அவருக்குப் பிரிவாகிய துன்பத்தைத் தந்து வருத்தமுறச் செய்தனை. அத்துன்பம் நீங்க, நீதான் அவரை மீளவும் சென்று பொருந்திய விடத்தும், அதற்கு மகிழாராய், 'நீ தான் மீளவும் பிரிவாயோ' எனக் கலங்கிக் கண்ணீர் சோர வருந்துவர்அவர். அத்தகையாரது நெஞ்சம் மீளவும் கொதிப் படையாமற் காத்தனையாய் விளங்குக! இங்கே வருதலைக் கைவிடுவாயாக!*

**சொற்பொருள் :** *செல்யாறு - ஓட்டமுடைய ஆற்று நீர். செல்மரம் - செல்லுகின்ற கட்டுமரம். வவ்வு வல்லார் - அதனைக் கைப்பற்றிக் கொள்ளுதற்கு வல்லார். பனி - துன்பம். மலிரும் - கசிந்தொழுகும். பிசிர் - நீர்த்துளிகள். அனற்றினை - வெம்மை யுறச் செய்தனை. பனித்து - வருந்தி. கனற்றுபு - கொதிக்கச் செய்தலை. காத்தி - காப்பாயாக.*

**விளக்கம் :** *ஆற்று நீரிற் சிக்கிஅலமருவார். அவ்விடத்தே வெள்ளத்தே வரும் கட்டுமரத்தைக் கண்டதும், விரைந்து அதனைப் பற்றிக்கொள்ள முயல்வர்; வல்லார் அதனைப் பற்றிக் கொண்டு இன்புறுவர். அவ்வாறே தலைவனையும், அவனை விரும்பியடைய முயன்ற பரத்தையருள், கொளற்கு வல்லாள் ஒருத்தி கைப்பற்றிச் சென்றனள் என்பதாம். உடைந்த மடையை அடைத்த பின்னரும் நீர்க்கசிவு ஒழுகுபதுபோலத் தன் நிறைகெட்டு அவளோடு சென்று கூடியிருந்தவன், மீளவும் தன் வீட்டிற்கு வந்த காலத்தும், அவள் நினைவாகவே சுழன்றனன் என்பதாம். இதனை யறிந்த தலைவி அவனை வெறுத்தாளாய், 'மீளவும் அவளிடத்தேயே செல்க' எனக் கூறி ஊடுகின்றனள்.*

## தலை தொட்டேன்

**நல்லாள் கரைநிற்ப நான்குளித்த பைந்தடத்து**
**நில்லாள் திரைமூழ்கி நீங்கி எழுந்தேன்மேல்**

**அல்லா விழுந்தாளை எய்தியெழுந் தேற்றுயான்**
**கொள்ளா வளவை எழும்; தேற்றாள் கோதையின்**
**உள்ளமுத்தி யாளெவளோ? தோய்ந்தது யாது? எனத்**
**தேறித் தெரிய உணர்நீ; பிறிதுமோர்**
**யாறுண்டோ? இவ் வையை யாறு;**
**இவ்வையை யாறென்ற மாறென்னை? கையால்**
**தலைதொட்டேன் தண்பரங் குன்று**

*"நானும் ஒரு பசுமையான குளத்திலே குளித்துக் கொண்டிருந்தேன். அழகியவளான ஒருத்தி அதன் கரையில் நின்றிருந்தாள். அவள் அப்படியே நில்லாளாய்த் தானும் நீரினுட் குதித்தாள். நீருள் மூழ்கியவள், மீளவும் மேலெழுந்து வந்தாள். அங்ஙனம் மேலெழுந்து வந்தவள், என்மேல் வந்து மயங்கி விழுந்தாள். அங்ஙனம் விழுந்தாளை என் கையிடத்தே யான் தாங்கி எடுத்துக் காக்க முயன்றேன். அதற்கு முன்பாக அவளாகவே என்னைவிட்டு எழுந்தாள். அவள் யாதும் குற்றமில்லாத ஒரு பெண். நிகழ்ந்தது இவ்வாறாகவும், என்னைத் தன் மாலையின் உள்ளாக அழுத்தித் தழுவிக் கொண்டவள்தான் யாவளோ? யான் அவளோடு தழுவிய இடந்தான் யாதோ? இவற்றைத் தெளிவாக விளங்குமாறு நீயும் ஆய்ந்து அறிவாயாக." இவ்வாறு தலைவன் கூறுகின்றான்.*

*"வேறோர் யாறும் இவ்விடத்தே உளதோ? எல்லாம் இவ் வையை யாறேதான்" என்கின்றாள் அவள்.*

*"யானாடியது வையையாறு என்று நீ கூறிய மாற்றந்தான் எதனாலோ? அஃதன்று; யான் ஆடியது பசிய தடாகமே! தண்ணிய பரங்குன்றின்மேல் ஆணை; நின் தலையைத் தொட்டேன்." என்கின்றான் அவன். அவள் தலையைத் தொட்டு ஆணையும் இடுகின்றான்.*

**சொற்பொருள் :** *நல்லாள் - அழகியவளான ஒரு பெண். பைந்தடம் - பசிய தடாகம்; குளம். நீங்கி - தான் வீழ்ந்த இடத்தி னின்றும் அகன்று. அல்லாவிழல் - மயங்கி வீழல். தேற்றாள் - தெளியாள்; தன் செயலது பின்விளைவை அறியாதவள். மாறு - மாறுபாடான பதில்.*

**விளக்கம் :** *தலைதொட்டுச் சூளுரைக்கும் பண்டைய தமிழர் வழக்கத்தை இப் பகுதி காட்டுகின்றது. தலைவன், தான் ஆற்றுக்கே செல்லவில்லை என்கிறாள்; செல்லாதபோது, அவள் கூறிய குற்றச்சாட்டுக்கள் எல்லாம் பொய்யேயாகும் என்றும் கூறி வாதிடுகின்றான்.*

*இதனையடுத்துக் காதற்பரத்தையின் வீட்டிலிருந்த முது பெண்டிர், அவள் ஊடலைத் தணியச் செய்தனர். தலைவனும், அவளோடு கூடி மிகவும் இன்புற்றுக் களித்தான்.*

*இவ்வாறு, தன் தலைவனின் செயலை விறலியிடம் நிகழ்ந்தது நிகழ்ந்தாற்போலக் கூறி, அதனால் அவனைத் தான் இனியும் ஏற்றற்கு இயலாது என ஊடி உரைக்கின்றாள். இதனை அடுத்து வரும் பகுதி காட்டும்.*

**வாடற்க வையை**

**சினவல்நின் உண்கண் சிவப்பஞ்சு வாற்குத்**
**துனி நீங்கி யாடல் தொடங்கு; துனிநனி**
**கன்றிடின் காமம் கெடூஉம்; மகளிவன்**
**அல்லா நெஞ்சம் உறப்பூட்டக் காய்ந்தே**
**வல்லிருள் நீயல்; அது பிழை யாகுமென**
**இல்லவர் ஆட, இரந்து பரந்துழந்து**
**வல்லவர் ஊடல் உணர்த்தர, நல்லாய்!**
**களிப்பர்; குளிப்பரி;, காமம் கொடிவிட**
**அளிப்ப; துனிப்ப; ஆங்காங்கு ஆடுப;**
**ஆடவார் நெஞ்சத்து அலர்ந்தமைந்த காமம்**
**வாடற்க வையை நினக்கு!**

*"மகளே; நின் மையுண்ட கண்களுள் சிவப்பு எழுமானால் அதற்கு அஞ்சுபவன் நின் காதலன். அவன்பால் நீயும் சினங் கொள்ளாதே. நின் துன்பத்தினின்றும் விலகி ஆடலைத் தொடங்குவாயாக. ஊடற் சினமாகிய துயரமானது மிகவும் முற்றுமாயின் காமவின்பம் அழிந்துபோம், இவன் மயங்கிய நெஞ்சிற்கு மேலும் துன்பத்தை ஊட்டக் கருதிச் சினங் கொண்டு, இவ் வல்லிருள் நேரத்தில், நீயும் இவனைப் போக்கி விடாதே. அது நினக்கே பிழையாக அமையும்' என்று முது பெண்டிருள் ஒருத்தி உரைக்கின்றாள்.*

*அதனைக் கேட்டுச் சிறிது உள்ளம் மாறிய காதற் பரத்தையின் சினத்தை, அவ்வீட்டிலுள்ளார் பிறரும், ஆடியும், இரந்தும், பலபடியாக விளக்கி உரைத்தும், தாம் துன்புற்றாற் போல வாடியும் தணியச் செய்கின்றனர். அச்செயலிலே அவர் வல்லவர். அதனால், அவளும் தெளிவுற்றாள்.*

*நல்லவளே! அதன் பின்னர் நம் தலைவனும் அவளும் கூடிக் களித்தனர். காமக்கடலிற் குளித்துத் திளைத்து இன்புற்றனர். காமவின்பமான கொடிவிட்டுத் தழைக்க அவன் அருளினான்; இடையிடையே அவள் சிறுக ஊடினாள். இவ்வாறு ஊடியும் கூடியும் அவர்கள் புனல் விளையாட்டிற் குரிய துறைகள் பலவிடத்தும் சென்று, ஆங்காங்கே ஆடிக் களித்தனர்.*

*வையைப் பேராறே! நின்னிடத்தே போந்து நீராடும், அவரது நெஞ்சங்களிடத்தே மலர்ந்து விளங்கிய காமவிருப்ப மானது என்றும் வாடதிருக்க நீயும் அருள்வாயாக!*

இவ்வாறு வையையை வேண்டுகின்றாள் தலைவி. இதனால் தலைவன் அக் காதற் பரத்தையுடனேயே வாழ்க என்றனள்; தான் அவனை ஏற்க விரும்பாமையினையும் உணர்த்தினள்.

**சொற்பொருள் :** துனி - துன்பம். நனிகன்றல் - மிகவும் முற்றுதல். காமம் - காமவின்பம். அல்லா நெஞ்சம் - மயங்கிய நெஞ்சம். நீயல் - போகச் செய்தல். இல்லவர் - வீட்டினுள்ளார்; தோழியரும் பிறரும். கொடிவிடல் - தழைத்துப் படர்தல்.

**விளக்கம் :** தலைவனுக்காகத் தூது வந்தவள் விறலி. அவளிடம் ஏதும் விடை கூறினாள் அல்லள்; தலைவனுக்கும் காதற் பரத்தைக்கும் இடையே ஏற்பட்ட ஊடலைப் பற்றிக் கூறினாள். முடிவில், அது தெளிந்து அவள் அவனோடு களித்திருப்பதையும் சொன்னாள். இறுதியில் வையையை வாழ்த்துகின்றாள்.

இதனால், தலைவியின் மனக்குறிப்பை, ஊடற் சினத்தைத் தானறிந்த விறலி, தலைவனிடம் சென்று கூறுவாள் என்பதும், அவன், அதன் பின்னர்த் தானே வந்து அவள் ஊடலைத் தணிப் பதற்கு முயல்வான் என்பதும் இதன் முடிபாகும்.

வையைப் புதுநீர் விழாவிலே, மதுரை நகரத்தார் ஆடிக் களிக்கும் களிப்பைக் கூறுகின்றனர்; அதன்மூலம் அக் காலத்துத் தமிழ்க் குடியினரின் வாழ்வியல் நலத்தையும், உளப்பாங் கையும் எடுத்துக் காட்டுகின்றனர். பெருநிலையினரான தலைவர்கள் தம் கற்பு மனைவியரை யன்றியும், பிற காமத் தொடர்புகளையும் உடையவராயிருந்தனர் என்பதும், அவரது அச்செயலைக் குறித்துத் தலைவியர் ஊடிச் சினந்தனர் என்பதும், அச்சினத்தைத் தணிவித்து, அவரை அடைவதற்குத் தலைவர்கள் முயன்றனர் என்பதும், அம் மகளிரும் தம் மேதகு கற்புச் செவ்வியினாலே தம் தலைவரின் பொருந்தா ஒழுக்கத்தைக் கடிந்து பேசியும், வெறுத்து ஒதுக்காதவராய் அவரை மீண்டும் ஏற்றுக்கொள்வர் என்பதும், இப்பாடலால் அறியப்படும்.

**ஏழாம் பாடல்**

## வையை (7)

**பாடியவர் :** மையோடக் கோவனார்; **பண் வகுத்தவர் :** பித்தாமத்தர்; **பண் :** பாலையாழ்.

தலைமகன் தலைமகளோடு புதுப்புனலில் ஆடி மகிழ்ந் தான். இதனைக் கேட்டதும், செவிலித்தாயின் உள்ளம் களிப் படைகின்றது. தன் மகளான தலைவியின் தோழியைத் தன்னருகே அழைத்தாள். 'தலைவனும் தலைவியும் புனலாடி இன்புற்றது

பற்றிய செய்திகளைக் கூறுவாயாக' என்று, தன் மகளிடம் கேட்டாள். அவள் அதனைச் சுவையோடு விளக்கமாகத் தாய்க்கு உரைக்கின்றாள். இப் பொருளமைதியைக் கொண்ட பாடல் இது.

**வந்தது புனல்!**

**திரையிரும் பனிப்பௌவம் செவ்விதா அறமுகந்து**
**உரவுரும் உடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது**
**கரையடை குளமெனக் கழன்றுவான் வயிறழிபு**
**வரைவரை தொடுத்த வயங்குவெள் ளருவி**
**இரவிருள் பகலாக யிடமரிது செலவென்னாது**
**வலனிரங்கு முரசின் தென்னவர் உள்ளிய**
**நிலனுற நிமிர்தானை நெடுநிறை நிவப்பன்ன**
**பெயலால் பொலிந்து பெரும்புனல் பலநந்த**
**நலனந்த நாடணி நந்தப் புலனந்த**
**வந்தன்று வையைப் புனல் -**

அலைகளைக் கொண்டதும் பெரியதுமான குளிர்ச்சி கொண்ட கடலினை, முறையாக முற்றவும் முகந்து கொண்டதாக, வலிய இடியேறுகள் சினத்தோடு முழங்கத், தம்மேல் ஏறியுள்ள சுமையைத் தாங்கமாட்டாவான மேகங்கள், கரையுடைந்த குளத்து நீரையொப்பத் தம் கட்டுக்குலைந்த வாய், தம் வயிறு கிழியப் பெற்றவாய்ப், பெருமழையினைப் பொழியலாயின. இவ்வாறு வீழ்ந்த மழை நீரால் மலைப் பகுதிகள் எல்லாம் விளங்கும் வெள்ளிய அருவிகளைத் தொடுத்தாற்போல விளங்கின. இரவின் இருட்போதிலும், பகற் போதிலும், செல்லுதற்கான இடம் போதற்கரிது என்று கருதாவாய், அவ்வருவி நீர் சென்று பாய்ந்து சென்றது.

வெற்றி வெற்றியென முழங்கும் முரசத்தைக் கொண்டவரான பாண்டியர். பகைநாட்டைக் கொள்ளக் கருதிய செயலைச் செய்து முடிப்பதற்கு, நிமிர்ந்து செல்லும் படை வரிசைகளது தோற்றத்தைப் போன்று, சமநிலத்தை அடைந்து செல்லும் மழைநீரின் தோற்றமும் விளங்கியது. இவ்வாறு வீழ்ந்த புதுமழையினாலே நிலப்பகுதி அழகுபெற்றது. பெருகிய நீர்த் தேக்கங்கள் பலவும் பெருக்கத்தை அடைந்தன. நாட்டிலே நன்மை உண்டாகுமாறு, நாட்டுப் பகுதிகளில் எங்கணும் அழகும் வளமும் பெருகின. வயற்பகுதிகளுள் உழவரின் முயற்சிகள் எழுந்தன. இவ்வாறு பலப்பல எழுச்சிகளையும் ஏற்படுத்தியபடி வந்த மழை வெள்ளமானது, வையையாற்றினும் புதுப்புனலாகப் பெருகி வந்தது.

**சொற்பொருள் :** *இரும்பனிப் பெளவம் - பெரிய குளிர்ந்த கடல்; கரிய குளிர்ந்த கடலும் ஆம். செவ்விதா - முறையாக. உரவு - வலிமை. உடன்று - சினந்து. கழன்று - பொறை நீங்கி. வயிறழிபு - வயிறு கிழிந்து வீழ்வதாய். வலன் - வெற்றி. நிலன் - பகை நாடு. நிமிர்தானை - தோல்வியே அறியாமையாற் செருக்கி நிமிர்ந்து செல்லும் படை வரிசை. நிவப்பு - உயர்ச்சி. நந்துதல் - பெருகுதல். புனல் - புதுப் புனல்.*

**விளக்கம் :** *மலையிற் பெய்த மழைநீர், வரையிழி அருவி களாகப் பாய்ந்து, நிலத்தினைச் சார்ந்து, பல நீர்நிலைகளையும் பெருகச் செய்ததாய், வையைக் கண்ணும் பெருகிவரும் புதுப் புனலாய் வந்தது என்பதாம். அலையலையாக வரும் புது வெள்ளத்து வரவுக்கு, அலையலையாகச் செல்லும் பாண்டியர் படையணிகளை உவமை கூறினர். அவை பாண்டியருக்கு வெற்றியைத் தவறாமல் தேடித்தருவது போலவே, ஆற்றுப் புதுப் புனலும் பாண்டியரின் நாட்டிலுள்ள வெம்மையைப் போக்கி வளனைத் தவறாமற் பெருக்கும் என்பதாம்.*

### புது நாற்றம் பெற்ற புனல்

**நளியிருஞ் சோலை நரந்தம் தாஅய்**
**ஒளிர்சினை வேங்கை விரிந்தஇணர் உதிரலொடு**
**துளியி லுழந்த தோய்வருஞ் சிமைதொறும்**
**வளிவாங்கு சினைய மாமரம்வேர்கீண்டு**
**உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி**
**உழவர் களிதூங்க முழவு பணைமுரல**
**ஆட லறியா அரிவை போலவும்**
**ஊட லறியா உவகையள் போலவும்**
**வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது**
**விதியாற்றா னாக்கிய மெய்க்கலவை போலப்**
**பொதுநாற்ற முள்ளுட் கரந்து, புதுநாற்றம்**
**செய்கின்றே செம்பூம் புனல் -**

*செறிந்த பெருஞ்சோலைகளிடத்துள்ள நரந்தம் புற்களின் மீது வெள்ளம் பரவி வந்தது. ஒளிரும் கிளைகளைக் கொண்ட வேங்கை மரங்களின் மலர்ந்த பூங்கொத்துக்களின் உதிரல் களோடு கலந்து வந்தது. மழைத் துளிகளால் வருத்தமுற்ற அடைதற்கரியவான மலைமுடிகள் தோறும், காற்றால் வளைக்கப்பட்டு முறிந்துபோன மாமரங்களை வேரொடும் பெயர்த்துக்கொண்டு வந்தது. உயரமான இடங்களிலுள்ள பலவற்றையும், பள்ளமான இடங்களிலே பரப்பியபடி வந்தது!*

*உழவர்கள் களிப்பினாலே ஆடி மகிழவும், முழவுகளும் பறைகளும் ஒலிக்கவுமாகப் புதுப்புனல்விழாப் பொலிவோடு*

வந்தது. ஆடற்கலையை முறைப்படத் தெரியாதவளான ஓர் அரிவையாள் தாறுமாறாக ஆடிவருவதைப் போலவும், ஊடற் கலையினை உணர்ந்தறியாதாளான ஒரு பெண், உவகைமிக்கா ளாய்ச் செருக்கோடு செல்வதுபோலவும், புதுவெள்ளம் தன் போக்கிற் செருக்குடன் சென்றது. தான் விரும்பிய வழியாகச் சென்று, தன்னைத் தடுத்த தடைகளைப் பொருதி உடைத்த படியே அது சென்றது. விதிமுறைக்கு இணங்காதவன் ஒருவன் ஆக்கிய, உடலிற்குப் பூசுதற்குரிய கலவைச் சாந்தினைப் போலப், பொதுவான மணமொன்றைத் தனக்குள்ளே மறைத்துக் கொண்டதாகவும், புதுமையான ஒரு மணத்தைச் செய்த படியாகவும், சிவந்த அழகிய புதுப்புனலும் வையைக்கண் பெருக்கெடுத்து வந்தது.

**சொற்பொருள் :** நளி - செறிந்த. இருஞ்சோலை - பெரிய சோலை; இருளடர்ந்த சோலையுமாம். நரந்தம் - ஒருவகை மணங்கொண்ட புல். சிமை - மலையுச்சி. வளி - காற்று. வேர் கீண்டு - வேரினைத் தோண்டிப் பறித்து. பயம்பு - பள்ளம். களி - களியாட்டு. பணை - பறை. விதியாறு - செய்யும் நூல் முறைமை. செம்பூம் புனல் - செம்மண் நிலத்துத் தோய்ந்து வருதலால் சிவப்பு நிறமும், பல மலர்களையும் தளிர்களையும் சுமந்து வருதலால் அழகையும் கொண்ட புதுப்புனல். புது நாற்றம் - புது வகையான மணம்.

**விளக்கம் :** கட்டுமீறித் தன் போக்கின்படி எல்லாம் பெருகி வருகிறது புதுப்புனல். இதன் போக்கிற்கு ஆடலறியா அரிவை யின் செலவையும், ஊடலறியா மங்கையின் உவகைப் பெருக்கை யும் உவமித்த நயத்தை உணர்ந்து இன்புறுக. இன்னின்ன கலந்து அமைத்தால் இன்ன மணத்தைச் சாந்து பெறும் என்னும் முறைமைக்கு மாறாகப் பலவற்றையும் கலந்து அமைத்த சாந்து, அவ்வவற்றின் தனித்தன்மையை உள்ளடக்கிப் புதியவொரு கலவைமணத்தைப் பரப்புவது போலப், பலவற்றையும் சுமந்து வரும் புதுப்புனலும், அவ்வவற்றின் மணத்தையும் தன்னுள் மறைத் துத், தான் ஓர் புது மணத்தை உடையதாக விளங்கிற்று என்க.

## பாய்புனல் பரந்தது!

**கவிழ்ந்த புனலிற் கயந்தண் கழுநீர்**
**அவிழ்ந்த மலர்மீ துற்றென ஒருசார்;**
**மாதர் மடநல்லார் மணலின் எழுதிய**
**பாவை சினத்த தெனவழ ஒருசார்;**
**அகவய விளநெல் அரிகாற் சூடு**
**தொகுபுனல் பரந்தெனத் துடிபட ஒருசார்;**

பெண்களின் கைவளைகள், ஆழிகள், தொய்யகங்கள், அணிந்துள்ள துகில்கள், மேகலைகள், காஞ்சிகள் ஆகியவற்றையும், ஆண்களின் தோள்வளைகளையும், மற்றும் அவர்கள் அணிந்தவை அனைத்தையும் கவர்ந்து செல்லும் தன்மை கொண்டதாயும் வெள்ளம் கட்டுமீறிச் சென்றது.

பகைவரை அழித்த் தானையை உடையவனும், தென்னவனுமாகிய பாண்டியன் தன்னை எதிர்த்துத் தோற்றழிந்த பகைவரது நாட்டிடத்தே புகுந்த காலத்து, அங்குள்ள பலவற்றையும் கவர்ந்து கொள்வதைப்போல, வையையாறு தன்பாற் புகுந்து நீராடுவாரின் பல பொருட்களையும் தான் கவர்ந்து கொண்டதும் அழகுடையதாகவே விளங்கும்.

**சொற்பொருள் :** ஏமம் - காவல். துனைந்து - விரைந்து. கோதை - பெண்கள் தலைமாலை. கண்ணி - ஆடவர் தலைமாலை. தண்தார் - மார்பிடத்துக் குளிர்ந்த மாலை; இருவருக்கும் பொது. ஆழி - மோதிரம். வாகுவலயம் - தோள்வளை. உடைபுலம் - தோற்றவர் நாடு. மாறுஅட்ட - பகையைக் கொன்றொழித்த. தானை - படை.

**விளக்கம் :** பகையழித்த பாண்டியர் படை, தோற்றார் நாட்டுட் சென்று அங்குள்ள பலவற்றையும் கவர்ந்து கொள்ளுதலைப் போல, வெள்ளமும் தன் போக்கில் குறுக்கிட்டவான பல பொருள்களையும் கவர்ந்து, வெற்றிமிடுக்கோடு செல்வதாயிற்று என்பதாம்.

## பெருக்கிம் வடிவு

**புரிந்த தகையினான் யாறாடு வாருள்**
**துரந்து புனல்தூவத் தூமலர்க் கண்கள்**
**அமைந்தன; ஆங்கண் அவரு ளொருத்தி**
**கைபுதைஇ யவளை**
**ஏக்கழுத்து நாணாற் கரும்பின் அணைமென்றோள்**
**போக்கிச் சிறைப்பிடித்தாள்! ஓர் பொன்னங் கொம்பு**
**பரிந்தவளைக் கைப்பிணை நீக்குவான் பாய்வாள்**
**இரும்பீர் வடியொத்து மைவிளங்கும் கண்ணொளியாற்**
**செம்மைப் புதுப்புனல் சென்றிரு ளாயிற்றே**
**வையைப் பெருக்கு வடிவு -**

அனைவரும் விரும்பத்தகுந்த குணங்களை உடையவன் பாண்டியன். அவனுக்கு உரியது வையையாறு, அவ்வாற்றுப் புதுப்புனலுள் பலரும் குதித்து ஆடி மகிழ்ந்தனர். அவர்களுள் ஒருத்தி பீச்சுங்குழலுள் நீரையேற்றி மற்றொருத்தியின் கண்களை நோக்கித் தூவினாள். தூவப்பெற்ற அந் நீரை ஏற்றபடி நின்றவளின் தூய தாமரை மலரைப்போன்ற கண்கள், இமைத்தலின்றி

அந்நிலையே அமைந்திருந்தன. அவ்விடத்துப் புனல் தூவப்பெற்ற மற்றொருத்தியோ, தன் க்ண்களைக் கையால் மூடிக்கொண்டாள். அங்ஙனம் மூடினாளைத் தோற்றாளாகக் கொண்டனர். நீரைத் தூவியவள் இறுமாப்போடு தன் கழுத்திலிருந்த பொற்கயிற்றால், குங்குமக் குழம்பால் எழுதப் பெற்ற கரும்பையுடைய மூங்கிலைப் போன்ற மென்மையான தோள்களைக் கட்டி, அவளைச் சிறைப்படுத்தினாள். அதைக் கண்ட பொற்கொம்புபோன்ற மற்றொருத்தி, அவ்வாறு சிறைப்பட்டவளுக்காக இரக்கங் கொண்டாள். அவளுடைய கைக்கட்டை நீக்குவதற்காகத் தானும் பாய்ந்து சென்றாள். அவள் கண்கள் இரும்புவாளால் துண்டாக்கப் பெற்ற மாவடுவைப் போலவும், மையுண்ணப் பெற்றும் விளங்கின. அவளுடைய அக் கருங்கண்களின் ஒளி செந்நிறத்தோடு காணப்பெற்ற புதுப்புனலிற் பட்டது. அதனால் அப் புதுப்புனல் தன் நிறங்கெட்டுத் தானும் கருநிறத்தைக் கொண்டதாக ஆயிற்று.

**சொற்பொருள் :** புரிதல் - விரும்புதல். தகை - குணம். துரத்தல் - செலுத்தல். தூமலர் - தாமரை மலர்; கண் - சிவந்தது நீராடியதனால் என்க. ஏக்கழுத்தல் - இறுமாத்தல். நாண் - பொற்கயிறு. பரிந்து - அன்புற்று. வடி - மாவடி. வடிவு அழகு.

## நறா ஆர்ந்தவள் கண்

**விரும்பிய ஈரணி மெய்யீரந் தீரச்**
**சுரும்பார்க்கும் சூர்நறா ஏந்தினாள் கண்ணெய்தல்**
**பேர்மகிழ் செய்யும் பெருநறாப் பேணியவே**
**கூர்நறா ஆர்ந்தவள் கண்; -**

விரும்பத்தகுந்த ஈரமான அணிகளைக் கொண்ட உடலினது ஈரமானது தீரும்பொருட்டு, ஒருத்தி, வண்டு மொய்க்கும் போதைகொண்ட கள்ளைத் தன் கையில் ஏந்தி நின்றாள். அவ்வேளையில் அவள் கண்கள் கரிய நெய்தல் மலரைப்போலத் தோற்றின. அவள் பெருமகிழ்ச்சியை உண்டாக்கும் போதை மிக்க கள்ளைக் குடித்தாள். குடித்ததும், அவளுடைய கருநிறக் கண்கள், பெரிய நறவம் பூவைப்போலச் செந் நிறத்தை அடைந்தன.

**சொற்பொருள் :** ஈரணி - ஈரமான அணிகள். சுரும்பு - வண்டு. சூர்நறா - போதைமிக்க கள். பெருநறா - பெரிய நறவம் பூ. நறவு என்றது கள்ளுக்கும் நறவம் பூவுக்கும் வந்தது காண்க.

## ஊருடன் ஆடும்

**கண்ணியல் கண்டேத்திக் காரிகைநீர் நோக்கினைப்**
**பாணா தரித்துப் பலபாட, அப் பாட்டுப்**

**பேணா தொருத்தி பேதுற, ஆயிடை**
**என்னை வருவ தெனக்கென் றினையா**
**நன்ஞெமர் மார்பன் நடுக்குற, நண்ணிச்**
**சிகைகிடந்த ஊடலிற் செங்கண் சேப்பூர,**
**வகை தொடர்ந்த ஆடலுள் நல்லவர் தம்முள்,**
**பகை தொடர்ந்து, கோதை பரியூஉ, நனிவெகுண்டு**
**யாறாடு மேனி அணிகண்ட தன்னன்பன்**
**சேறாடு மேனி திருநிலத் துய்ப்பச், சிரமிதித்துத்**
**தீர்வில தாகச் செருவுற்றாள்! செம்புனல்**
**ஊருடன் ஆடும் கடை; -**

*அவளுடைய கண்களின் அந்தச் சிவந்த இயல்பினைக் கண்ட அவள் தலைவன் அவளைப் புகழ்ந்தான். அவளுடைய அழகிய நோக்கினைப் பாட்டிலே அமைத்துப் பலவாறாகப் பாடினான். அப் பாட்டுக்களைத் தலைவியைக் குறித்ததெனத் தெளியாத மற்றொருத்தி, தன்னைக் குறித்ததென கருதியவளாக மயங்கினாள். அவ்விடத்தே, 'எனக்கு என்ன துன்பம் வருவதாகுமோ?' என்று வருந்தினான் தலைவன். நன்றாகப் பரந்த மார்பினனான அவன் நடுக்கங் கொண்டான். தன் காதலியை நெருங்கிச் சென்றான்.*

*தன் காதலனை மற்றொருத்தி காதலுடன் நோக்கியதைக் கண்டாள் அவள். மதுப்போதையாற் சிவந்திருந்த அவள் கண்கள், ஊடற்சினத்தால் மேலும் சிவப்பேறின. முறையோடு நிகழ்ந்துகொண்டிருந்த நீர்விளையாட்டுள் கலந்துகொண்ட பெண்கள் கூட்டத்துள், தன் தலைவனைக் காதலித்து நோக்கிய அவள்மீது பகை கொண்டாள். தன் கோதையை அறுத்துப், பெரிதும் வெகுண்டவளாக, அவன்மீது மோதினாள். அவள் சினங்கொண்டதைக் கண்ட அவன், சந்தனச்சேறு பூசிய தன் திருமேனி அழகிய நிலத்திடத்தே பொருந்துமாறு பணிந்து, அவளை வேண்டியவனாக இரந்தான். அவளோ, அவன் தலைமீது தன் பாதத்தால் உதைத்தாள். அவன் பணிந்தும் தீர்வில்லாததான பெரும்பகையை அவள் மேற்கொண்டாள். இவையெல்லாம் செம்புனலிடத்தே ஊரவருடன் கூடி நீராடிய காலத்து நிகழ்ந்தனவே யாம்.*

**சொற்பொருள் :** *கண்ணியல் - கண்ணின் அழகு. காரிகை நீர் - அழகுத் தன்மை. பண் - பாட்டு; பண்ணமைந்தது. பேணாது - அது தன்னைக் குறித்ததன்றென்று தெளிந்து அறியாது. சிகை - குறை. பரியூஉ - அறுத்து. சேறு - சந்தனக் குழம்பு.*

## இன்புற அருள்க

**புரிநரம் பின்கொளைப் புகல்பாலை யேழும்**
**எழுப்புணர் யாழும் இசையும் கூடக்**
**குழலளந்து நிற்ப முழவெழுந் தார்ப்ப**
**மன்மகளிர் சென்னியர் ஆடல் தொடங்கப்**
**பொருதிழி வார்புனற் பொற் பஃது**
**உருமிடி சேர்ந்த முழக்கம் புரையும்**
**திருமருத முன்றுறை சேர்புனற்கண் துய்ப்பார்**
**தாமந் தலைபுனை பேளநீர் வையை**
**நிற்பயம் பாடி விடிவுற் றேமாக்க**
**நிற்படிந்து நீங்காமை யின்றுபுணர்ந் தெனவே.**

*முறுக்குண்ட நரம்பினை இசைத்துக் கொள்ளப் படுவன வாகிய, சொல்லப்பட்ட பாலைப்பண்கள் ஏழினையும் எழுப்ப, தாள அமைதியோடு பொருந்தி நிற்கும் அவையும், அவற்றோடு பொருந்திய இசைப்பாட்டும் ஒன்றுகலந்து எழுந்தன. குழலின் இசையோ அவற்றின் இசையளவை ஒத்து நின்று இசைக்கப் பட்டது. அவற்றோடு கலந்து முழவொலியும் மிகுதியாக ஒலித்தது. அரசனாற் சிறப்புப்பெற்ற அரங்கக்கூத்தியரும் பாணரும் ஆடலைத் தொடங்கினர். கரைகளை மோதியபடி செல்லும் புதுப்புனலின் அழகிதான ஒலியோ, சினத்தோடு முழங்கும் இடிமுழக்கைப்போல விளங்கும். இவ்வாறான ஒலிகளோடும் கூடிய திருமருதமுன்றுறையிடத்துப் பொருந்திய நீரிடத்தே, மூழ்கித்திளைப்பவர் மாலைகளைத் தலைமீதாகப் புனைந்தபடி செல்லும், அச்சந்தரும் நீர்ப்பெருக்கைக் கொண்ட வையைப் பேராறே!*

*இன்று கூடினாற்போலவே, நின்னிடத்தே மூழ்கிப் பெறு கின்ற இந்த இன்பம் எம்மிடத்திருந்து என்றும் நீங்காதே நிலைப்பதாக! நின்னாற் பெறுகின்ற பயன்களைப் பாடிப்பாடி, எம் துன்பம் நீங்கப் பெற்றேமாக, யாமும் இன்புற்று மகிழ் வேமாக!*

**சொற்பொருள் :** *புரி - முறுக்கு. கொளை - கொள்ளுதல்; தாள அமைதியுமாம். பாலை ஏழு - செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப் பாலை, மேற்செம்பாலை என்பன.*

**விளக்கம் :** *இவ்வாறு தோழி செவிலிக்குச் சொல்லு கின்றாள். இதனைக் கேட்ட செவிலியும், வையையை வாழ்த்து கின்றாள். இறுதி வேண்டுதலை அவள் செய்ததாகவே கொள்க.*

### எட்டாம் பாடல்

# செவ்வேள் (8)

**பாடியவர் :** *நல்லந்துவனார்;* **பண் வகுத்தவர் :** *மருத்துவன் நல்லச்சுதனார்;* **பண் :** *பாலையாழ்.*

### பரங்குன்றமும் இமயமும்

**மண்மிசை அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்**
**புள்மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும்**
**மலர்மிசை முதல்வனும் மற்றவ னிடைத் தோன்றி**
**உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும்**
**மருந்துரை இருவரும் திருந்துநூல் எண்மரும்**
**ஆதிரை முதல்வனிற் கிளந்த**
**நாதர்பன் னொருவரும் நன்திசை காப்போரும்**
**யாவரும் பிறரும் அமரரும் அவுணரும்**
**மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்**
**பற்றாகின்று நின் காரண மாகப்**
**பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்;**

*நிலத்திடத்தே தோன்றி மலர்கின்றதான திருத்துழாய் மலரினையும், செந்தாமரை மலரானது தந்த செல்வத்துக்கு உரியவளான திருமகளையும், புட்களிற் சிறந்ததான கருட னுருவம் எழுதப்பெற்ற கொடியையும் உடையவன் திருமால். அவனும், இடபஊர்தியை உடையவனாகிய சிவபிரானும், தாமரை மலர்மீது இருப்போனாகிய நான்முகனும், அவனிடத் திருந்தும் தோன்றி உலகத்தின் இருளைப் போக்கியவரான ஆதித்தர் பன்னிருவரும், தேவ மருத்துவர்கள் இருவரும், சிறந்த நூற்புலமை கொண்டோரான வசுக்கள் எண்மரும், ஆதிரை முதல்வனாகிய சிவபிரானது பெயராலேயே சொல்லப் படுகின்றவரான பதினொரு உருத்திரரும், நல்ல திசைகளைக் காப்போராகிய இந்திரன், நிருதி, இயமன், அக்கினி, வருணன், வாயு, குபேரன், ஈசானனாகிய எண்மரும், மற்றுமுள்ள தேவர்கள் யாவரும், இவரொழிந்த அமரரும் அவுணரும் ஆகிய பிறருமாகிய எல்லாரும், விரும்பத்தக்க வேதங்களைக் கற்ற சிறந்த தவமுதல்வர்களாகிய எழுவரும், நின்னைக் கண்டு போற்றும் பொருட்டாக இத் திருப்பரங்குன்றத்திற்கு வருபவராகின்றனர். ஆதலினாலே, இப் பரங்குன்றமானது எம் பெருமானாகிய சிவபிரான் குடிகொண்டிருக்கும் இமயக்குன்றமாகிய திருக் கயிலாயத்தையே ஒப்புடையதாக விளங்குவதாகும்.*

**சொற்பொருள் :** *மண் - நிலவுலகம். மலர் தரு செல்வம் - பரந்த செல்வமும் ஆம். புங்கவம் - ஆனேறு. புள் - கருடப்புள். மேவரு - விரும்பத்தக்க. முதுமொழி - மறை.*

**விளக்கம் :** கடவுளரும் முனிவரும் தேவரும் பலருமாகிய பிறரும் ஒருங்கிருக்கும் காரணத்தால், திருப்பரங்குன்றமும் கயிலாயமும் தம்முள் ஒத்த சிறப்புடையவாயின என்பதாம்.

### மாலைச் சுனை

**இமயக் குன்றினிற் சிறந்து**
**நின் னீன்ற நிரையிதழ்த் தாமரை**
**மின் னீன்ற விளங்கிணர் ஊழா**
**ஒருநிலைப் பொய்கையோ டொக்கும் நின்குன்றின்**
**அருவிதாழ் மாலைச் சுனை;**

இமயக் குன்றினிடத்துள்ள பொய்கைகளுட் சிறந்து விளங்குவதும், நின்னை ஈன்ற காலத்துப் பாயலாகத் தாங்கிய நிறைந்த இதழ்களைக் கொண்ட தாமரை மலர்களைக் கொண் டிருப்பதும், மின்னலிடத்திருந்தும் தோன்றினாற்போன்ற ஒளி விளங்கும் பூங்கொத்துக்களைத் தோற்றுவித்திருப்பதுமான, ஒப்பற்ற நிலையைக் கொண்டதான சரவணப் பொய்கையோடு, நின் பரங்குன்றிடத்துள்ள, அருவி வீழ்ந்தபடியிருக்கும் மயக்கந் தரும் சுனையும் ஒப்புடையதாக விளங்கும்!

**சொற்பொருள் :** நிரையிதழ் - வரிசையாக அமைந்த இதழ். இணர் - பூங்கொத்து. ஊழா - தோற்றுவித்திருக்கின்ற

### மலைமுழை அதிரும்

**முதல்வ! நின் யானை முழக்கம் கேட்ட**
**கதியிற்றே காரின் குரல்;**

**குரல் கேட்ட கோழி குன்றதிரக் கூவ**
**மதநனி வாரணம் மாறுமாறு அதிர்ப்ப**
**எதிர்குதி ராகின்று அதிர்பு மலைமுழை;**

முதல்வனே! நினக்குரிய யானையாகிய பிணிமுகத்தின் முழக்கினைக் கேட்டாற்போன்ற தன்மைகொண்டது கார் மேகத்தின் இடிக்குரல் ஆகும். அக் காரின் முழக்கைக் கேட்டதும், நின் கோழிச் சேவலானது, தானும் அதற்கெதிராகக் குன்றமே அதிரும்படியாகக் கூவும்.. அக் குரலைக் கேட்டதும் மிக்க மதத்தைக் கொண்ட யானையும் முழங்கும். இவை மாறிமாறி முழக்கமிட, அம் முழக்கங்கள் மலைக்குகைகளுட் சென்று மோதி எதிரொலிகளாக எழுகின்றன. இவ்வாறு ஒலியும் எதிரொலியு மாக ஓயா முழக்கை உடைத்தாயிருப்பது நின் பரங்குன்றம்.

**சொற்பொருள் :** முருகனின் யானை - பிணிமுகம் என்னும் களிறு. கதி - ஓசையின் தன்மை. கோழி - சேவற் கோழி. வாரணம் - யானை.

## கூடல் வரவு

**ஏழ்புழை ஐம்புழை யாழிசை கேழ்த்தன்ன இனம்**
**வீழ்தும்பி வண்டொடு மிஞிறார்ப்பச் சுனைமலரக்**
**கொன்றை கொடியிணர் ஊழ்ப்பக் கொடிமலர்**
**மன்றல் மலர மலர்க்காந்தள் வாய்நாற**
**நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத்**
**தென்றல் அசைவரூஉம் செம்மற்றே, அம்ம!நின்**
**குன்றத்தால் கூடல் வரவு;**

*ஏழுதுளைகளையும், ஐந்துதுளைகளையும் கொண்ட குழலிசையினையும், யாழிசையினையும் ஒத்தாற்போல முரலுகின்ற, தம் இனத்தை விரும்புகின்றவான வண்டுகளோடு, தும்பியினமும் ஆரவாரிக்கும்படியாகச் சுனையிடத்துள்ள நீர்ப்பூக்கள் மலர்ந்திருக்கும். கொன்றையிடத்தே கொடிபோல விளங்கும் பூங்கொத்துக்கள் விளங்கும். மலர்க் கொடிகளிடத்தே மணமுள்ள மலர்கள் மலர்ந்திருக்கும். காந்தளின் மலர்ந்த மலர்கள் இடமெங்கணும் மலர்ந்திருக்கும். இவ்வாறு, நன்றாக இதழவிழ்ந்த பலவகை மலர்களும் மணத்தைப் பரப்பியும், தேன்துளிகளைச் சிந்தியும் விளங்கத், தென்றலானது அசைந்து வந்தபடியிருக்கும் சிறந்த தன்மை யுடையதாயிருப்பது, நின் பரங்குன்றத்திற்குக் கூடலிலிருந்து வருகின்ற வழியாகும்!*

**சொற்பொருள் :** *புழை - துளை. கேழ் - நிறம். வீழ் - விரும்பும். மிஞிறு - வண்டின் ஒரு வகை. நறை - தேன். செம்மல் - தலைமை. வரவு - வழி. கூடல் - மதுரை.*

## குமுறிய உரை

**குன்றம் உடைத்த ஒளிர்வேலோய்! கூடல்**
**மன்றல் கலந்த மணிமுரசின் ஆர்ப்பெழக்**
**காலொடு மயங்கிய கலிழ்கட லென**
**மால்கடல் குடிக்கும் மழைக் குரலென**
**ஏறதிர்க்கும் இந்திரன் இரும் உருமென**
**மன்றல்அதிரதிர மாறுமாறு அதிர்க்கும்நின்**
**குன்றம் குமுறிய உரை;**

*சிரவுஞ்சமாகிய குன்றத்தை உடைத்த ஒளிரும் வேற் படையினை உடையாய்! கூடலிடத்தே மணவிழாக்களிற் பொருந்திய அழகிய முரசங்களின் ஆரவாரம் எழும். காற்றோடு பொருதி மயங்கிய கடலின் கலக்கத்தைப் போலவும், பெருங்கடலைக் குடிக்கும் மேகங்களின் இடிமுழக்கைப் போலவும், இந்திரனது படையாகிய இடியானது இரும்உரும் என முழக்குமாறு போலவும், அம் முரம்சங்களின் ஒலியானது மாறி மாறி எழுந்தொலிக்கும். மணமுரசங்கள் கூடலில் அதிரவதிர, அதற்கு*

எதிராக எதிராக எதிரொலி செய்து ஒலிமுழக்கும் நின் குன்றத்தின் ஒலிமுழக்கமும், மணமுரசுகளின் ஒலியையே எழுப்பும். இவ்வாறு மணமுரசுகளின் ஒலிமுழக்கை உடைத்தாயிருப்பது நின் குன்றம்!

**சொற்பொருள் :** குன்றம் - முதலது கிரவுஞ்சம்; பின்னது திருப்பரங்குன்றம். மன்றல் - மணவிழா. மால் கடல் - பெருங்கடல்; கருங்கடலும் ஆம்; மயங்கிய கடலும் ஆம். ஏறு - இடியேறு.

**விளக்கம் :** பெருமான் மணக்கோலத்தோடு வீற்றிருக்கின்ற குன்றமாதலின், அதனின்று எப்போதும் மண முரசுகளின் முழக்கம் எழுந்தபடியேயிருக்கின்றது என்கின்றனர்.

### மகிழ் நல்கும் குன்றம்

**தூதேய வண்டின் தொழுதி முரல்வவர்**
**காதல் மூதூர் மதில் கம்பலைத் தன்று;**
**வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி**
**நெடுமென் பணைத்தோள் குறுந்தொடி மகளிர்**
**ஆராக் காமம் ஆர்பொழிற் பாயல்**
**வரையகத்து இயைக்கும் வரையா நுகர்ச்சி**
**முழயா நுகர்ச்சி முற்றாக் காதல்**
**அடியோர் மைந்தர் அகலத் தகலா**
**அலர்ஞெமல் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி**
**புலரா மகிழ்மறப் பறியாது நல்கும்**
**சிறப்பிற்றே தண்பரங் குன்று;**

தம்மைப் பிரிந்துறையும் தலைவரிடத்தே, தலைவியர் வண்டுகளைத் தூது விட்டனர். அவ் வண்டுக் கூட்டங்கள் மதுரை அகநகருட் சென்றன. ஊரவர் எல்லாரும் அறியுமாறு மதுரைப் பழநகருட் சென்ற அவ் வண்டினம், எங்கணும் முரல்வவாய் ஆரவாரித்தன. இதனால் மதிற்பகுதியிடத்தே பெரிதான அலரும் எழுந்தது. குறிப்பிட்ட தலைவர்களும் தம்மை உணர்ந்தனர்.

"மாவடுப் பிளப்பினையும் உருவமைதியால் வெற்றி கொண்ட கண்கள்; மாந்தளிரைப் போனற் ஒளிவிளங்கும் பொன்மேனி; நெடிய மென்மைவாய்ந்த மூங்கிலனைய தோள் கள்; இத்தகையவர் சிறுவளை அணிந்தோரான நம் காதல் மகளிர்" என்று கூறியவராக, அவர்கள், தத்தம் காதலியரை நினைந்தனர். அவர்களைச் சந்திக்கக் கருதியவராகப் பரங்குன்றின் சோலைப்பகுதிகளுக்கும் விரைந்தனர். அங்கே அவர்கள் - பிரிந்தவர்கள் கூடினர்; இன்புற்றனர்.

இவ்வாறாக, அமையாத காமவின்பத்தைக் காதலர் நுகர்ந்து இன்புறுதற்குரிய இடமாக விளங்கிய பரங்குன்றத்துச் சோலையாகிய பாயலானது, பிரிந்துறைந்த அக் காதலரை

மலையிடத்தே ஒன்றுபடுத்தும் சிறப்பும் உடையதாகும். நுகர நுகரத் தீராத நுகர்விலே அவர்கள் திளைத்தனர். முற்றாத காதலின்பத்தினை அவர்கள் நுகர்ந்தனர். காதலியர் தம் காதலரது மார்பிடத்து அணைப்பினின்றும் அகலாதவராக மயங்கிக் கிடந்தனர். மலர்களிடத்துத் திரியும் இயல்புடைய மகன்றிற் பறவைகளின் பிரிவற்ற நல்ல கூட்டத்தைப் போன்று, அக் காதலரும், தம்முள் கெடாத மகிழ்ச்சியை என்றும் மறத்தற்கு அறியாத தன்மையில் பெற்று அநுபவிக்க உதவும் சிறப்பினைக் கொண்டது, தண்மையுடைய திருப்பரங்குன்றம் ஆகும்.

**சொற்பொருள் :** ஏய- ஏவப்பெற்ற. தொழுதி - கூட்டம். முரல்வு - வண்டினத்து ஆரவாரம். கம்பலை - அலரின் மிகுதி. வடுவகிர் - மாவடுப் பிளப்பு. பணை - மூங்கில். குறுந்தொடி - சிறிய வளை; சிறுவளை அவரது பருவத்து இளமையைக் குறிப்பது. ஆராக் காமம் - நுகரநுகரத் தெவிட்டாத தீராக் காமம். முற்றாக் காதல் - முதிர்ந்து சலிப்பை உண்டாக்காது, என்றும் இளமை யோடு திகழும் காதலன்பு. அடியோர் - தலைவியர். மைந்தர் - வலியாளர்; தலைவர். மகிழ் - மகிழ்வு; இன்பம். மகன்றில் - ஒருவகைப்பறவை. புலரா - கெடாத. சிறப்பிற்று - சிறப்பை உடையது.

**விளக்கம் :** பிரிந்துறையும் காதலரைத் தம்முள் ஒன்று படுத்தி, ஆராத காதலின்ப நுகர்விலே திளைக்கச் செய்யும் சிறப்பை உடையது தண்பரங் குன்றம் என்பதாம். அவரது துயரைப்போக்கி இன்பத்தைத் துய்க்குமபடியாகத் தானே அளிப்பது என்பதுமாம்.

### காலையும் மாலையும்

**இனிமன்னும் ஏதிலர் நாறுதி; ஆண்டுப்**
**பனிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர்**
**மாலைக்கு மாலை வரூஉம்; வரைசூள் நின்**
**காலைப் போய் மாலை வரவு;**

ஒரு தலைவிக்குத் திடுமெனத் தலைவன்பாற் சிறுசினம் உண்டாகிறது. அவன், 'நின்னைப் பிரியேன்' என்று கூறிப் பிரியத் தொடங்கும்போது, அவள் ஊடிச் சீறுகின்றாள்.

"இவ்வேளை, நீதான் மிகவும் ஏதிலரான பரத்தையரின் இன்பத்தை நுகர்ந்து வந்தாயாதலின், அவர் உடலின் நறு நாற்றத்தை நீயும் நாறுபவனாகத் திகழ்கின்றனை! காலையில் வீட்டைவிட்டுப் போகும்நீ, மாலையிலேதான் மீண்டும் வருகின் றாய். இடைப்பட்ட நேரத்தே, அவ்விடத்துச் சேரிக்கண் உள்ளாரான குளிர்தாமரை மலர்போலும் கண்களை உடைய

வரான பரத்தையரோடுங்கூடிக் களியாட்டம் அயர்கின்றாய்! ஒள்ளிய மலர்கள் விளங்கும் மாலை நேரத்திற்கு மாலைநேரமாக மட்டுமே என்பால் வருகின்றாய். ஆகவே, பரங்குன்றைக் குறித்துப் பொய்யாணையிடும் நின் செயலையேனும் செய்யாது நிறுத்துக" என்கிறாள்.

**சொற்பொருள் :** மன்னும் - மிகவும், ஏதிலர் - அயலாரான பரத்தையர். ஆண்டு - அவ்விடத்து; பரத்தையர் இல்லிடத்து. பனிமலர் - குளிர்ந்த தாமரை மலர்; கண்கள் சிவப்பென்றது கூடலின் பயனால் விளைந்ததனைக் குறித்துக் கூறியது. நகை - ஒளி. சூள் - ஆணை

## நின் சூள்!

**இனிமணல் வையை இரும்பொழிலும் குன்றப்**
**பனிபொழி சாரலும் பார்ப்பாரும்**
**துனியல் மலருண்கண்! சொல்வேறு நாற்றம்**
**கனியின் மலரின் மலர்கால் சீப் பின்னது;**
**துனியல் நனி நீ! நின் சூள்;**

தலைவன் தலைவியின் குற்றச்சாட்டைக் கேட்டுத் திடுக்கிடு கின்றான். அவளைத் தேற்றித் தெளிவிப்பானாக, மீண்டும் ஆணையிட்டு உரைக்கின்றான்.

"நீதான் பெரிதும் வருத்தமுறாதே. குவளை மலர் மையுண்டாற் போன்ற கண்களை உடையவளே! நீ கூறிய சொற்கள் உண்மைக்கு மாறுபட்டதாகும். இப்பொழுது, மணல் பரந்த வையையாற்றின் கரையிடத்துப் பெரிய சோலைகளும், பரங்குன்றிடத்துக் குளிர்ச்சியைப் பொழியும் மலைச் சாரலும், பார்ப்பாரும் சான்றாகக் கூறுகின்றேன்; என் உடலின்கண் மாறுபட்ட புதுமணத்தை நீ கண்டது, நின் கூற்றுப்போல் நான் பரத்தையரைக் கூடியமையாற் பெற்றதன்று. பழங்களினும், மலர்களினும் படிந்துவரும் காற்று வீசுவதனால் நீ காண்பதே அப் புதுமணம் என்று அறிந்து தெளிவாயாக.

**சொற்பொருள் :** துனியல் - வருந்தாதே கொள். நாற்றம் - மணம். சீப்பினது - வீசுதலால் உண்டானது.

## சூளுரைத்தல் வேண்டா!

**என்பாணி நில்நில்! எலாஅ பாணி நீ நின்சூள்!**
**சான்றாளர் ஈன்ற தகாஅத் தகாஅ மகாஅன்!**
**ஈன்றாட்கு ஒரு பெண் இவள்;**
**'இருண்மையீர் உண்கண் இலங்கிழை ஈன்றாட்கு**
**அரியளோ! ஆவது அறிந்திலேன்? ஈதா**
**வருபுனல் வையை மணல் தொட்டேன்; தருமணவேள்**

**தண்பரங் குன்றத்து அடிதொட்டேன் என்பாய்!**
**கேளிர் மணலின் கெழுவும் இதுவோ?**
**ஏழுலகும் ஆளி திருவரைமேல் அன்பளிதோ;**
**என்னை அருளி அருள்முருகு சூள்சூளின்**
**நின்னை அருளில் அணங்கான்மெய் வேல் தின்னும்,**
**விறல்வெய்யோன் ஊர்மயில் வேல்நிழல் நோக்கி**
**அறவர் அடிதொடினும் ஆங்கவை சூளேல்!**
**குறவன் மகளாணை கூறேலோ கூறேல்!**
**ஐய! சூளின் அடிதொடு குன்றொடு**
**வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்;**

இருவரது ஊடலையும், ஊடலுரைகளையும் கண்டாள் தோழி. அவள் தலைவனிடத்தே சில செய்திகளைக் கூறுகின்றாள்;

சான்றாண்மை உடையோர் பெற்றெடுத்தவனாக இருந்தும், தகுதியற்ற செயல்களையே தொடர்ந்து செய்துகொண்டு வருபவனே! நான் கூறும் சொற்களைக் கேட்பதுவரைக்கும் ச்ற்றுப் பொறுமையாக நின் பேச்சை நிறுத்துவாயாக. மீளவும் நீதான் ஆணையிடுதலையும் சிறிது காலத்துக்கு நிறுத்தி வைப்பாயாக.

“இவளைப் பார்; இவளைப் பெற்ற தாய்க்கு இவள் ஒரே பெண்ணாகப் பிறந்தவள். இருட்சியையும், மைதீட்டப் பெற்ற வனப்பையும்,செவ்வரிகளையும் கொண்ட கண்களை உடையாள் இவள்; விளங்கும் அணிகளை உடையாள் இவள்; இவள்தான் இவளைப் பெற்ற தாய்க்குத் தாங்கிப் பெறுதற்கரிய சுமை யாவாளோ? ஆனால், நின்னைக் காதலித்ததன் பயனால், இவளுக்கு ஆகப்போவது என்னவென்பதை யானும் அறிந்திலனே!

“இதோ பார்; புனல் வரத்தையுடைய வையையின் மணலைத் தொட்டேன்; மணவாழ்வைத் தரும் முருகவேளது தண்ணிய பரங்குன்றத்து அடியைத் தொட்டேன்; ஆணையிட்டுக் கூறுவேன்' என்பாய். எம் உறவினைப்போல விளங்கும் வையை மணலிடத்தே உனக்குள்ள நட்புறவும் இதுதானோ? ஏழுலகங்களையும் ஆட்சி செலுத்துவோனான முருகப் பெருமானுக்கு உரியதான அழகிய மலையின்மேல் நீ கொண்டிருக்கும் அன்பினது தன்மையும் இரக்கத்திற்கு உரியதுதானோ?

“எம்பால் அருள் கொண்டவனாகக் காட்டுதற் பொருட்டாக, நின் தீயொழுக்கத்தை மறைத்தாயாக, அருளாளனாகிய முருகனின்மீது பொய்யாணையிட்டு ஏதும் உரைத்தாயானால், நின்னை அருளற்றவான அணங்குகளோடு கூடிப் பெருமானிடத் திருக்கும் சத்திய வேற்படையும் உண்டு விடும்.

"வெற்றி கொள்ளும் போர்வெம்மை கொண்டோனாகிய முருகப்பிரான் ஊர்கின்ற மயிலதும், வேலதும் நிழலைத் தரையிடத்துக் கண்டு, அவற்றைத் தொட்டும் ஆணையிடாதிருப் பாயாக. அறிவோர் அடிதொட்டுச் சூளுரைப்பினும், அவர் அதனைப் பொய்த்தாலும் நின்னைப் பொறுப்பார்; ஆனால் அவையோ பொய்ச்சூளைப் பொறுக்கவே மாட்டா.

"குறவன் மகளான வள்ளி நாய்ச்சியாரின்மீது ஆணையிட்டு உரைத்தலை ஒருபோதும் செய்யாதிருப்பாயாக; அவள் காதல் ஒழுக்கத்தை மறவாது பேணுபவள்; எம்மைக் கருணையோடு காப்பவள்!

'ஐயனே! இனிச் சூளுரைப்பதாயின், வாய்மையாளர் அடிதொட்டுப் போற்றும் பரங்குன்றத்தோடு, வையைக்குத் தகுந்த மணலாகிய சிறப்பைத்தருகின்ற அதனோடும் சாற்றிச் குளுரைக்கா திருப்பாயாக.

**சொற்பொருள் :** பாணி - காலம். சூள் - ஆணை. சான்றாளர் - சான்றாண்மை உடையவர். கேளிர் - உறவினர். கெழுவு - அன்பு. அணங்கு - வருத்தும் தேவப்பெண். விறல் - வெற்றி. ஊர்மயில் - ஊரும் மயில்.

**விளக்கம் :** 'சான்றாளர் பெற்ற மகனாயிருந்தும் நீ தகுதி யற்றவே செய்வாய் ஆயினை! என்பவள், 'தாஅகத்தகாஅ மகாஅன்' என்றனள். தகுதியற்ற செயலாவது, தலைவியை மறந்து சேரிக்கண் உறவாடுதலும் அதனை மறுத்துப் பொய்ச் சூள் உரைத்தலும். 'அரியளோ?' என்றது, தாய்க்குத் தாங்கற்கு அரியளல்லள் ஆயினும், பொய்ச்சூளால் நீ துன்புற்று நலிய, இவளும் நின் பொருட்டு நலிந்து உயிர் விடுவாளே' எனத் தலைவியின் காதற்பாசத்து மிகுதியை உரைத்ததாம். 'கேளிர் மணலின்' என்றது, அதுதான் பவை புனைந்து ஆடிய காலத்தெல்லாம் உறவோடு விளங்கியமையால். 'அன்பு அளிதோ' என்றது, அதுதான் மெய்யன்பாக விளங்காமை யான் என்று குறைகூறியதாம். அறவர் - சான்றோர். குறவன் மகள் - வள்ளி. அறவர் சான்றோர். குறவன் மகள் - வள்ளி. அறவர் பொறுப்பர்; குறவன் மகள் பொறாள் என்பதாம்.

## அடிசேர்ந்து சொல்லுங்கள்!

**யார்பிரிய யார்வர யார்வினவ யார்செப்ப**
**நீருரைசெய் நீர்மையில் சூளென்றி நேரிழாய்!**
**கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை**
**நயவரு நறவிதழ் மதருண்கண் வாணுதல்**

**முகைமுல்லை வென்றெழில் முத்தேய்க்கும் வெண்பல்**
**நகைசான்ற கனவன்று; நனவன்று நவின்றதை;**
**இடுதுனி கையாறா என்துயர் கூரச்**
**சுடுமிறை ஆற்றிசின், அடிசேர்ந்து சாற்றுமின்;**

தோழியுரைத்ததைக் கேட்டான் தலைவன்; 'அவ்வாறாயின், நீங்கள் எனக்காக வேண்டிக் கொள்வீராக' எனக் குறும் பாகப் பின்வருமாறு கூறுகின்றான்;

'நேரிழையாளே! யார் பிரிய, யார் வருவது? யார் கேட்ப, யார் விடை கூறுவது?' நீர் உரைக்கும் சூளெல்லாம் உண்மையற்ற சூள்' என்கின்றனை.

"கயத்திடத்துள்ள நெய்தற்பூக்களின் மொட்டுக்கள் இதழவிழ்ந்து மணம்பரப்பி மலர்ந்துள்ளாற் போன்ற, செருக்கிய மையுண்ட கண்களையும், அனைவரும் விரும்பும் நறவம்பூக் களின் இதழினைப்போன்ற ஒளிவீசும் நெற்றியினையும், முல்லை மொட்டுக்களையும் தோற்றத்தால் வெற்றி கொண்டு, முத்தக் களைப் போல விளங்கும் வெள்ளிய பற்களையும் உடையாள் தலைவி. அவளிடத்து யாமுற்ற உறவானது நகைத்தலைப் பொருந்திய கனவுறவு அன்று.

"என்மேலிடும் துயரமே காரணமாகக் கொண்டு, என் துயரத்தினை அவளும் சேர்ந்து அடையுமாறு, பகைவரைச் சுட்டு வருத்தும் இறைவனாகிய முருகன் செய்வான் என்பாய். அவ்வாறு அவன் செய்வானாயின், நீர்தாம் அவன் திருவடிகளை யடைந்து, நும் குறையை அவனிடத்தே கூறுவீராக."

**சொற்பொருள் :** நீர்மையில் சூள் -உண்மைத் தன்மையற்ற சூள். மணநகை - மணம்பொருந்த மலர்ந்த நிலை. நறவு - நறவம்பூ. மதர் - செருக்கு. வாள் - ஒளி. நகைசான்ற - நகைத்தலைப் பொருந்திய. துனி - துயரம். கையாறா - துன்பத்தின் காரணமாக. சுடும் இறை - சுட்டெரிக்கும் இறையாகிய முருகப் பிரான்.

**விளக்கம் :** பொய்ச் சூளாயின், முருகன் என்னை வருத்துவான் என்பாயாயின், அதனால் யான் நோய்கூற, எனக்கு அன்புடையாளான தலைவியும் துயரடைவாள்; அதுபோக நீதான் முருகனைப் பணிந்து வேண்டுக என்பதாம்.

## தாள் தொழ எழுவோம்!

**மிக ஏற்றதும் மலர்; ஊட்டுதும் அவி;**
**தோற்றுதும் பாணி; எழுதும் கிணை; முருகன்**
**தாள்தொழு தண்பரங் குன்று;**

அவன் பேச்சைக் கேட்டாள் தோழி. தலைவியையும், தன்னொத்த பிறரையும், 'முருகனைத் தொழப் போவோம்' என்று அழைக்கின்றாள்.

"முருகப்பெருமானது திருவடிகளைத் தொழுது வேண்டுதற் பொருட்டாக, யாமனைவரும் தண்ணிய பரங்குன்றிற்குச் செல்வோம், எழுவீராக. மிகுதியான மலர்களை அவன் திருவடிகளிற் சொரிவோம். அவனுக்குரிய பலியினைப் படைத்து ஊட்டுவோம். தாளத்தோடும் கூடிய பாட்டைப் பாடி வெறியாடுவோம். தடாரிப் பறையினையும் முழக்குவோம். அனைவரும் எழுவீராக."

**சொற்பொருள் :** அவி - பலியுண்வு. பாணி - தாளம். கிணை - தடாரிப் பறை.

### நீயே காண்க!

**தெரியிழாய் செல்கென்றாய்! எல்லா! யாம் பெற்றோம்**
**ஒருவர்க்கும் பொய்யாநின் வாயிற்சூள் வெளவல்;**
**பருவத்துப் பன்மாண்நீ சேறலின் காண்டை;**
**எருமை இருந்தோட்டி எள்ளீயும் காளை**
**செருவம் செயற்கென்னை முன்னைத்தன் சென்னி**
**அருள்வயினான் தூங்கும் மணிகையால் தாக்கி**
**நிரைவளை ஆற்றிருஞ் சூள்!**

அனைவரும் சென்று முருகனைப் போற்றுகின்றனர். அவ்விடத்தே தலைவியின் செயலைக் காட்டியபடி, தோழி, தலைவனிடத்தே இவ்வாறு கூறுகின்றாள்:

"தெரிந்தெடுத்த அணிகளை உடையாளே! முருகனின் சினத்தைத் தணிவிக்குமாறு வேண்டிப் பணிவதற்குச் செல்க." என்று, ஏடா, நீயும் சொன்னாய், அந்த நின் சொல்லாலேயே யாம் நின் தன்மையைத் தெரியப் பெற்றோம்.

"ஒருவருக்கும் பொய்யுரை கூறாத நின் வாயினிடத்திருந்து, இனியும் சூளுரைத்தலைச் செய்யாதிருப்பாயாக.

"எருமைக்கடா ஊர்தியை ஊர்ந்து வருவோனான காலனது ஆணையையும் இகழ்ந்து, அடியவர்க்கு அருள்தரும் காளை முருகப்பெருமான், அவன் பொய்ச்சூள் கூறிய நின்னைச் சினந்து கொள்வதற்கு முன்பாக, நிரைத்த வளைகளை உடையாளான நின் காதலி, அவன் திருமுன்பில் தொங்கும் மணியினைத் தன் கையால் தாக்கி ஒலியெழுப்பியவாறே, பெரிய பொய்ச்சூளால் நின்னை வந்தடையும் துயரத்தை ஆற்றுதற்கு, அவனடிகளில் தன் தலையைச் சேர்த்தபடி பணிந்து வேண்டுகின்றாள். நின் பரத்தையரைச் சேர்தற்குச் செல்லும் பருவத்தே, நீதான்

பலகாலும் அவ்வழிச் செல்வாயாதலின், இவளுடைய இத்தகையையும் கண்குளிரக் காண்பாயாக.

**சொற்பொருள் :** சூள்வெளவல் - சூழினைச் சூழ்ந்து கொள்ளல். பருவம் - காலம். இருந்தோட்டி - பெரிதான கட்டளை. 'எருமை இருந்து ஒட்டி!' எனக் கொள்ளலும் ஆம். எள்ளீயும் - இகழ்ந்து அருள்தரும்; எமனை இகழ்ந்து போக்கி, அன்பர்க்கு அருளும். செருவம் - மாறுபாடு. தூங்கும் - தொங்கும். நிரைவளை - வரிசையாக அணியப் பெற்ற வளையல்கள்; அவற்றையுடைய தலைவியைக் குறித்தது.

**விளக்கம் :** 'நின் பிழையையும் மறந்து, நின்மேற் சினவா திருக்குமாறு முருகனை அடிதொழுது வேண்டுவாளான, நின் காதலியது பெற்றிமையைக் காண்பாயாக' என்பதாம். காணும் நீதான், இவ்ளை இனியும் பிரிவுத்துயரால் நலியுமாறு செய்து வருத்துவாயோ என்றலுமாம்.

## வரைசேர்ந்து தொழுவார்!

**வளிபொரு சேண்சிமை வரையகத்தால்**
**தளிபெருகும் தண் சினைய**
**பொழில்கொளக் குறையா மலரக்**
**குளிர் பொய்கை யளறுநிறைய**
**மருதம் நளிமணல் ஞெமர்ந்த**
**நனிமலர்ப் பெருவழிச்**
**சீறடியவர் சாறுகொள எழுந்து**
**வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்**
**ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்**
**நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்**
**மணியும் கயிறும் மயிலும் குடாரியும்**
**பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி**
**அருவரை சேராத் தொழுநர்;**

காற்றுப் பொருதும் உயரமான உச்சிகளையுடைய பரங் குன்ற வரையின் உள்ளிடத்தாக மழைவளம் பெருகும். அதனாற் பொழில்கள் எல்லாம் தண்ணிய தளைகள் பொருந்திய கிளைகளைக் கொண்ட மரங்களை உடையவாய் விளங்கும். அவை குறைவற்ற மலர்களை உடையவாயும் விளங்கும். குளிர்ந்த பொய்கைகளுள் மழைநீர் சென்று பெருகுதலால், அவ்விடங் களிற் சேறு நிறையும். மழைநீர் மருதப் புறங்களிலும் சென்று பாய்தலால் அவ்விடத்தே மிக்க மணல் செறிந்திருக்கும். அம் மணலின் மேலாக மிகுதியான மலர்கள் வீழ்ந்து அழகு செய்திருக்கும். இவ்வாறாக மதுரைக்கும் பரங்குன்றிற்கும் இடைப்பட்ட மணல்பரந்த பெருவழி காணப்படும்.

அவ்வழியாகச் சிற்றடிகளை உடையவரான பெண்கள், முருகப்பிரானுக்கு விழாக் கொள்ளுதலை விரும்பியவராகப் புறப்பட்டு வரலாயினர். நிறத்தாலும் மணத்தாலும் வேறுபட்ட சாந்து வகைகளும், சிறப்புப்பொருந்திய புகைத்தற் பொருள் களும், வழிக்கண்ணே வீசுங் காற்றால் அவியாத காப்புள்ள விளக்குகளும், மணங்கமழும் பூக்களும், இசை நுவலும் முழவு களும், மணிகளும், நூற்கயிறுகளும், பொன்னாற் செய்யப் பெற்றுக் காணிக்கை இடுதற்கெனக் கொணரப்படும் மயில்களும், கோடரிகளும், பிணிமுகம் என்னும் யானைகளும், இவையுட் பட்ட பிற வழிபாட்டுப் பொருள்களுமாக, அவர்கள் ஏந்திக் கொண்டு வந்தனர். அன்பரல்லாத பிறரால், அடைதற்கரிய பரங்குன்ற வரையைச் சேர்ந்து, அவர்கள் பெருமானைத் தொழுவாரும் ஆயினர்.

**சொற்பொருள் :** சேண்சிமை - தொலைவாக உயர்ந்த மலையுச்சி. தளி - மழை. சினை - கிளை. குறையா மலர - குறைவின்றி மலர. அளறு - சேறு. நளிமணல் - மிக்க மணல். ஞெமர்தல் - பரவுதல். சீறடி - சிறியவடி. சாந்தம் - மணச்சாந்துகள். வீறு - வெற்றிச் சிறப்பு. குடாரி - கோடரி. சேரா - சேர்ந்து.

## தொழுது வேண்டுவார்

**கனவில் தொட்டது கைபிழை யாகாது**
**நனவிற் சேர்ப்பநின் நளிபுனல் வையை**
**வரபுன லணிகொள வரங்கொள் வோரும்;**
**கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்;**
**செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்**
**ஐயமர் அடுகென அருச்சிப் போரும்;**
**பாடுவார் பாணிச் சீரும்; ஆடுவார் அரங்கத் தாளமும்;**
**மஞ்சாடு மலைமுழக்கும்**
**துஞ்சாக் கம்பலை—**

முருகனைத் தொழுவாரான இளமகளிர் பலரும், தத்தம் வேண்டுதலைக் கூறி முறையிடுகின்றனர். அவற்றை இப் பகுதியிற் காணலாம்.

"கனவிலே, தாம் தம் காதலரோடு சென்று வையைப் புதுப்புனலிலே கைகோத்து நீர்விளையாட்டயர்ந்து இன்புற்றது பிழைபட்டுப்போதல் கூடாது. அவ்வாறே நனவிலும், நினது, வையையின் மிகுந்த புதுப்புனல் வரவிலே யாமும் நீரணி கொண்டு இன்புறுவதற்கு வரமருள்வாயாக" என்று சிலர் வேண்டினர்.

நெடுங்காலமாகப் பிள்ளைப்பேறு இல்லாதோரான சிலர், 'இனியேனும் எம் வயிற்றிடத்துக் கருப்பம் அடைவதாக' என்று

வேண்டிக், காணிக்கையாக இன்னது தருவோம் என்று கூறித் தொழுதபடி யிருந்தனர்.

'எம் காதலர் பொருள் செய்தற்குச் சென்றுள்ளவிடத்துப் பொருள்தான் அவருக்கு எளிதாக வாய்த்தற்கு அருள்வாயாக' என்று சில பெண்கள் தம் வேண்டுதலைப் பெருமானின் செவிக்கண் இட்டுவைத்தபடி வேண்டினர்.

'போருக்குச் சென்றுள்ளாரான எம் காதலர், பகைவரை அழித்து வெற்றிவீரராக மீள்வாராக' என்று கூறிச் சிலர் அருச்சித்துக் கொண்டிருந்தனர்.

இன்னுஞ் சிலர், பெருமானின் புகழைப் பாடிக் கொண் டிருந்தனர். மற்றுஞ் சிலர் பெருமானின் திருமுன்பாக ஆடிக் கொண்டிருந்தனர்.

வேண்டுதலைச் செய்திருந்த பெண்களின் குரலோடு, பாடுவோரின் தாளக்கட்டமைந்த பாடல்களின் ஒலியும், ஆடுவோரின் அரங்கிடத்தே ஆடற்கேற்ப எழுந்த தாள வொலியும், மேகந்தவழும் மலையிடத்தே எதிரொலிக்கும் இடிமுழக்கமும் ஆகப், பரங்குன்றம் இடையறாத ஆரவாரத்தை உடையதாக விளங்கிற்று.

**சொற்பொருள் :** நளிபுனல் - மிக்க புனல். புனல் அணி - நீரணி விழாவிற் கலந்தாடல். உறுதல் - அடைதல். கடம் படல் - கேட்டது நடப்பின் இன்னது தருவேம் எனக் கடம்பட்டு நிற்றல். ஐ - தலைவன். பாணி - தாளம். மஞ்சு - மேகம். கம்பலை - பேராரவாரம்.

**நீராடிய மகளிர்!**

**பைஞ்சுனைப் பாஅய் எழு பாவையர்**
**ஆயிதழ் உண்கண் அலர்முகத் தாமரை**
**தாள்தா மரைத் தோள் தமனியக் கயமலர்**
**தங்கைப் பதுமம், கொங்கைக் கயமுகை** 115
**செவ்வாய் ஆம்பல் செல்நீர்த் தாமரை**
**புனல்தா மரையோடு புலம்வேறு பாடுறாக்**
**கூரெயிற்றார் குவிமுலைப் பூணொடு**
**மாரன் ஒப்பார் மார்பணி கலவி -**

தம் காதலரைத் தம்முடன் கூட்டுமாறு கடம்பூண் டோருள் சிலர் புண்ணிய சரவணத்துட் பாய்ந்து நீராடுவாரா யினர். அந்த அழகைக் கூறுகின்றது இப்பகுதி.

பசுமையான சுனைநீரிற் பாய்ந்து, நீர்மேலாகப் பெண்கள் எழுந்தனர். அதனால், மையுண்ட அவர்களின் கருங்கண்கள் அழகிய இதழ்களையுடைய தாமரை இதழ்களைப் போலச்

செம்மை கொண்டன. அவர்களின் முகம் தாமரை மலர்; அவர்கள் பாதங்கள் தாமரை மலர்; அவர்கள் தோள்கள் பொற்றாமரைக் குளத்துத் தாமரை மலர்; அவர்கள் உள்ளங்கைகள் தாமரை மலர்; அவர்கள் மார்பங்கள் கயத்து விளங்கும் தாமரை முகைகள்; அவர்கள் செவ்வாய் ஆம்பல் மலர்; இவ்வாறு கயத்துட் செல்லும் தாமரை மலரான பெண்களின் உறுப்புக்கள், புனலிடத்து மலர்ந்துள்ள தாமரை மலர்களோடு கலந்து, கட்புலனுக்கு வேறுபாடு தோன்றாவண்ணம் விளங்கின.

இதனைக் கண்ட அவர்தம் காதலரும் நீருட் குதித்துத் தம் காதலியரைத் தழுவி எடுத்தனர். கூர்மையான பற்களை உடையவரான அம் மகளிரின் குவிந்த முலைகளின்மேல் விளங்கும் பூண்களோடு, மதனனைப் போன்றோரான அவர்தம் காதலரின் மார்புகள் பொருந்தி அழகு செய்தன. அவ்வேளை அவரணிகளும் தம்முட் கலந்து அழகு செய்தன.

**சொற்பொருள் :** தமனியம் - பொன். செல்நீர்த் தாமரை - செலவயரும் தன்மை கொண்ட தாமரை; பெண்ணைக் குறித்தது. புலம் - கட்புலம்.

**மன்னுக பரங்குன்றம்!**

**அரிவையர் அமிர்த பானம்**
**உரிமை மாக்கள் உவகையமிர்து உய்ப்ப**
**மைந்தர் மார்வம் வழிவந்த**
**செந்தளிர் மேனியார் செல்லல் தீர்ப்ப**
**என வாங்கு,**
**உடம்புணர் காதலரும் அல்லாரும் கூடிக்**
**கடம்பமர் செல்வன் கடிநகர் பேண**
**மறுமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த**
**நெறிநீர் அருவி அசும்புறு செல்வம்**
**மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா**
**தண்பரங் குன்றம் நினக்கு!**

அரிவையரின் இதழமுதாகிய பானத்தை, அதனை உண்ணுதற்கு உரிமையுடைய அவர்தம் காதலர்கள், உவகையோடு அமுதமாகக் கருதி, அவர் தரத் தாம் உண்டு களித்தனர். அம் மைந்தரது மார்பினைத் தழுவிப்பெற்ற இன்பத்தின் வழியாக வந்த எக்களிப்பு செந்தளிர்மேனியராகிய அம் மகளிரின் துன்பத்தைப் போக்கிற்று.

என்றிவ்வாறாக,

ஒன்று கலந்து தழுவியின்புற்ற காதலரும், அவர்களல்லாப் பிற அடியவரும் கூடிக், கடப்பமரத்தின் அடிக்கண்ணே

குடிகொண்டருளும் செல்வனாகிய முருகப்பெருமானின் காவல மைந்த திருக்கோயிலிடத்தே விருப்புடன் சென்று வழிபட்டனர்.

இவ்வாறு தன்னடியவர் விரும்பி வந்து வழிபட்டுப் போற்றக், கறைமிடற் றண்ணலாகிய சிவபெருமானுக்கு, மாசற் றோளான உமாதேவியார் பெற்றுத்தந்த செல்வனாகிய முருகப் பெருமானின் கோயில் விளங்குவதாகும்.

நெறிப்படச் செல்லும் அருவி நீரும், ஊற்று நீருமாகிய நீர் வளம், தரை வெடிப்புற மழை பெய்தலற்று வறண்டு போயின காலத்தும், தண்ணிய திருப்பரங்குன்றமே, நின்னிடத்து என்றும் நிலைபெற்று நின்று, நினக்குச் சிறப்பைத் தருவதாக!

**சொற்பொருள் :** அமிர்தம் - முதலது வாயூறல்; பின்னது அமுதம். உய்ப்ப - செலுத்த. செல்லல் - துன்பம். மறு மிடற்று அண்ணல் - கழுத்திற் கறையுடைய அண்ணலாகிய சிவன். மாசிலோள் - குற்றமிலாள்; உமையம்மை. அசும்பு - ஊற்று நீர்.

**விளக்கம் :** இவ்வாறு, பலரும் வந்து பெருமானைப் போற்றித் தத்தம் துயர்தீர்ந்து இன்புறுதற்கு உதவியாகப் பெருமானின் இருப்பிடமாக அமைந்து விளங்கும் திருப்பரங் குன்றமே! நீயும் நீர்வளத்திற் குறையாது என்றும் தண்பரங் குன்றமாகவே விளங்குக என்கின்றார். இது பாடியோரின் வாழ்த்துரை; தமிழ் நன்மக்களின் உள்ளார்ந்த விருப்பும் ஆகும்.

**ஒன்பதாம் பாடல்**

## செவ்வேள் (9)

**பாடியவர் :** நல்லந்துவனார்; **பண் வகுத்தவர் :** மருத்துவன் நல்லச்சுதனார்; **பண் :** பாலையாழ்.

முருகப் பெருமான் வள்ளி நாயகியைக் காதலித்து மணந்து கொண்டான். இதனை அறிந்ததும் தெய்வானை அம்மைக்குச் சினம் ஒருபுறமும், அழுகை ஒரு புறமுமாக எழுந்து வருத்திற்று. இதன் தொடர்பான பல செய்திகளைச் சுவைபடக் கூறுகின்றனர் ஆசிரியர்.

### கண்மழையும் வான்மழையும்

**இருநிலம் துளங்காமை வடவலன் நிவந்தோங்கி**
**அருநிலை உயர்தெய்வத் தணங்குசால் தலைகாக்கும்**
**உருமுச்சூழ் சேட்சிமை உயர்ந்தவர் உடம்பட**
**எரிமலர்த் தாமரை யிறைவீழ்ந்த பெருவாரி**
**விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்**
**தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி**
**மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்! நீ**
**மையிருநூற் றிமையுண்கண் மான்மறிதோள் மணந்த**
**ஞான்று.**

**ஐயிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகள் மலருண்கண்**
**மணிமறை தலைஇயென மாவேனில் காரேற்றுத்**
**தணிமழை தலையின்று தண்பரங் குன்று;**

*பெரிதான இந் நிலவுலகமானது நிலைகெட்டு அழிந்து போகாமற்படிக்கு, இதன் வடதிசைப் புறத்தே, உயர்ந்து ஓங்கிய அரிய நிலையினை உடையதும், உயரிய தெய்வத்தன்மை வாய்ந்த அணங்குகள் சிறப்புறப் பேணிக் காப்பதும், இடியேறுகள் சூழ்ந்திருக்கும் மிகவுயரிய முடிகளை யுடையதுமாகத் திகழும் இமயத்தினிடத்தே, உயர்ந்தோர் பலரும் வீற்றிருப்பார்கள். அவர்கள் ஏற்றுக் கொண்டாட, எரியொத்த செந்தாமரை மலரைப்போலும் திருமேனியினைக் கொண்ட இறைவனான சிவபெருமான், தன் சடையிடத்தே தாங்கித் தரைக்கண் வீழச் செய்த பெருவெள்ளமான கங்கை நீரானது, அப் பெருமானது விரித்த செஞ்சடைப் பொற்றையிடத்தே தோன்றித் தரைக்கண் விழுகின்ற ஒப்பற்ற மலரைப் போலத் தோன்றும். இவ்வாறாகக் கங்கையின் சீற்றம் தணியுமாறு தாங்கிக் காத்தவன், தானே தனிமுதல் என்னுஞ் சிறப்புடைய சலதாரி எனப் பெற்றனன்.*

*நீலமணிபோலும் கறைவிளங்கும் கழுத்தையுடையோ னாகிய அத் தலைவனுக்கு, மதிப்புவாய்ந்த கார்த்திகை பெண் களிடத்தே தோன்றிய பெருமானே! நீதான் மையாகிய கரிய இழுதினைப் பூசிய இமைகளால் காக்கப்பெறும் மையுண்ட கண்களை உடையவளான, மான்மறியாகிய வள்ளிநாயகியை மணந்து கொண்டனை, அந்நாளிலே, ஆயிரங்கண்களை உடலிடத்துக் கொண்ட இந்திரனின் மகளாகிய தேவயானைப் பிராட்டியின் குவளைமலர் மையுண்டாற்போல் விளங்கும் கண்கள், மணிபோலும் நீர்த்துளிகளைச் சிந்தின. அதனைக் கண்டதும், பெரிதான அவ்வேனிற் காலத்தினும் மேகங்கள் திரண்டெழுந்து, தாமும் அழுவனபோல மிக்க மழையினைத் தண்ணிய இப் பரங்குன்றிடத்துப் பெய்தலைத் தொடங்கியதே!*

**சொற்பொருள் :** *இரு நிலம் - பெருநிலமாகிய இந் நாவலந் தீவு. துளங்கல் - கலங்கியழிதல், நிவத்தல் - உயர்தல். தெய்வத் தணங்கு - தெய்வத் தன்மை கொண்ட அணங்குகள். தலை காக்கும் - சிறப்புறக் காக்கும். சிரம் - முடி. உயர்ந்தவர் - தேவ இருடிகள்; இவரைச் சப்தரிஷிகள் என்பர். எரி - செந்நெருப்பு. பெருவாரி - பெருவெள்ளம்; கங்கை. போறை - பொற்றை. ஊழ்த்தல் - தோன்றல். விழு - சிறந்த. சலதாரி - சலத்தைத் தரித்தவன்; சிவபிரான். ஆரல் - கார்த்திகைப் பெண்டிராகிய ரிஷி பத்தினிகள்! இவர் சிவகருவை ஏற்றுக் குழந்தைகளாகப் பெற்றெடுத்தது முற்பாட்டினும் கூறப்பெற்றது. இருநூறு - கரிய இழுது. மான்மறி - மான் குட்டி; என்றது வள்ளி நாயகியை. மணி*

- நீலமணி; கண் மையோடு கலந்து வருதலாற் கண்ணீர் நீலமணி போலத் தோற்றும் என்க. தணிமழை - சிறந்த மழை.

**விளக்கம் :** சலதாரி எனவும், மணிமிடற்றண்ணல் எனவும் சிவபெருமானைக் குறிப்பிட்டது, அவ்வாறு அப் பெருமான் கங்கையையும்;, மோகினியையும் ஏற்ற காலத்து உமையம்மை அழாதிருந்தாள்; ஆனால் தேவயானைப் பிராட்டியோ அழத் தொடங்கினாள் என்று குறித்தற்காம்; இந் நயத்தை அறிக. இந்திரன் மகள் கண்ணீர் சொரிய, அவன் ஏவலுக்குட்பட்ட மேகங்கள், அவள் துயருக்கு ஆற்றாவாய்த் தாமும் நீரைச் சொரியப் பரங்குன்றிற் காலமல்லா வேனிற் காலத்தும் பெருமழை பெயலாயிற்று என்பதாம்.

## தமிழாய்ப் பயன் கொள்வார்

**நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்**
**வாய்மொழிப் புலவீர்யீ! கேண்மின் சிறந்தது;**
**காதற் காமம் காமத்துச் சிறந்தது;**
**விருப்போர் ஒத்தது மெய்யுறு புணர்ச்சி;**
**புலத்தலிற் சிறந்தது கற்பே; அதுதான்**
**இரத்தலும் ஈதலும் இவையுள் ளீடாப்;**
**பரத்தையுள் ளதவே பண்புறு கழறல்;**
**தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற**
**நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே**
**கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை;**
**சுணங்கறைப் பயனும் ஊடலுள் ளதுவே;**
**அதனால், அகறல் அறியா அணியிழை நல்லார்**
**இகறலைக் கொண்டு துனிக்கும் தவறிலர்; இத்**
**தள்ளாப் பொருளியல்பின் தண் டமிழாய் வந்திலார்**
**கொள்ளாரிக் குன்று பயன்;**

நான்மறைகளின் வாசகங்களையும் விரித்துரைத்து, அவற்றின் நல்ல புகழை உலகுக்கு விளக்குகின்ற வாய்ப்பேச்சில் வல்லாரான வடமொழிப் புலவர்களே! சிறந்த ஒன்றைக் கூறுவோம்; கேட்டுக் கொள்வீராக.

காதலோடு கூடிப் பெறுகின்ற காமவின்பமே, நுகரப்படும் காமவின்பங்களுள் சிறந்ததாகும். தம்முள் ஒருவருக்கொருவர் விருப்பங் கொண்டோரான தலைவன் தலைவியர், தம்முள் மனமொத்துப் பெறுகின்ற உடற்சேர்க்கை யாகின்ற கூட்டமே காதற் காமம் ஆகும். அஃதன்றிக் கற்புக்காமம் என்பது ஊடலினாற் சிறப்பாவதாகும். அக் கற்பறந்தான் தலைவன் இரந்து வேண்டுதலும், அதற்கிரங்கிய தலைவி தன்னை அவனுக்கு

அளித்தலுமாகிய இவை உட்பொருளாகக் கொண்டு, தலைவனின் பரத்தை உறவினாலே உண்டாவதாகும். பண்புறு கழறல் என்பது, புதியவளான பரத்தையின் தோள்நலத்தை நுகர்ந்தவனாக, அவள் வீட்டிலிருக்கும் தலைவனிடத்தே, செவ்வணி அணிந்தவளாகத் தலைவியின் தோழி நாட்காலையிலே சென்று, தலைவி பூப்புற்றமையைக் குறிப்பாகத் தெரிவிக்கத், தலைவன் அதனை யறிந்தானாக வந்து, தலைவியின கூட்டம் பெறுதல் ஆகும். தலைவியின் சுற்றத்தார் வருந்துமாறு பரத்தையானவள் தன் மனையிடத்திருந்து பழித்துரைத்தலால் உண்டாகும், தலைவி, தலைவன் கூட்டம் சுணங்கறை எனப்படுவதாகும். சுணங்கறை என்னும் இக் கூட்டத்துப் பயனும் ஊடலினால் உண்டாவதேயாகும். அதனால், தம் கணவர் தம்மைவிட்டு அகன்றிருத்தல் என்பதையே அறியாதவரான, அழகிய ஆபரணமணிந்தாரான இல்லத் தலைவியர், அத் தலைவர் மீது ஊடற்பகையினை மேற்கொண்டவராக, அவரை வருத்தும் தவறினைச் செய்ய மாட்டார்கள்.

இத்தகைய தள்ளுதற்கில்லாத அகப்பொருள் இலக்கணத்தோடமைந்த, தண்ணிய தமிழ்ப் பண்பாட்டின் வழியிலே வராதோரான பிற பெண்கள், இப் பரங்குன்றிடத்திலே, எவ்வகைப் பயனையும் கொள்ளமாட்டார்கள்.

**சொற்பொருள் :** நான்மறை - நான்கு வேதங்கள். இசை - புகழ். விருப்பு - விருப்பம்; ஆசை. புலத்தல் - ஊடல். கழறல் - இடித்துரைத்தல். செவ்வணி - செவ்வாடையுடுத்துச் செஞ்சாந்து பூசிச் செம்பூச் சூடிச் செல்லுதல்; இது தலைவி பூப்புற்றாள்; அவளைக் கூடியிராது இப் பரத்தையில்லில் மயங்கியிருத்தல் பொருந்தாது எனக் கடிந்து குறிப்பாற் கூறுதலாம். சுணங்கறை - கூடலின்பம். கேள் - சுற்றம்; தோழியரும் செவிலியரும் முதலியோர். இகறல் - ஊடிப் பகைத்தல். துனி - வருத்தம். குன்று - பரங்குன்றம்; குன்றிடத்து நிகழும் ஒழுக்கமாகிய குறிஞ்சியொழுக்கமும் ஆம்.

**விளக்கம் :** தேவானைப் பிராட்டியார் கொண்ட துயரமும் அதனாற் கொண்ட ஊடற் சினமும் குறிஞ்சித்திணை ஒழுக்கத்தோடு பொருத்தமாவதன்று என்பதாகக் கூறுகின்றனர் போலும். என்றும், தம் கணவன்மார் தமக்குரியர் என்னும் பண்பாட்டில் உறுதியானவர் தமிழ்க்குடிப் பெண்கள். அவர்கள் ஊடிச் சினத்தலும், அவர்க்குப் பணிமொழி பலவும் கூறித் தெளிவித்துத் தலைவர் அவரைக்கூடி இன்புறலும் இயல்பு. இஃதன்றி, இருவரும் ஒருவரையொருவர் வெறுத்தலும் பகைத் தலும் இல்லை. இதனை நினைவிற் கொள்ளல் வேண்டும்.

## வணக்கமும் பிணக்கமும்

**ஊழாரத் தேய்கரை நூக்கிப் புனல்நந்த**
**காழாரத் தம்புகை சுற்றிய தார்மார்பில்**
**கேழாரம் பொறப்ப வருவானைத் தொழாஅ**
**வாழிய மாயாநின் தவறிலை! எம்போலும்**
**கேழிலார் மாணலம் உண்கோ? திருவுடையார்**
**மென்தோண் மேல்அல்கி நல்கலும் இன்று**
**வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப்**
**பெய்ய வுழக்கும் மழைக்கா, மற் றைய?**
**கரையாவெந் நோக்கத்தாற் கைசுட்டிப் பெண்டின்**
**இகலின் இகந்தாளை - அவ்வேள் தலைக்கண்ணி**
**திருந்தடி தோயத் திறைகொடுப் பானை -**
**வருந்த லெனவவற்கு மார்பளிப் பாளைக்**
**குறுகலென் றெள்ளிழை கோதைகோ லாக**
**இறுகிறுக யாத்துப் புடைப்ப -**
**ஒருவர் மயிலொருவர் ஒண்மயிலோ டேல,**
**இருவர் வான்கிளி ஏற்பின் மழலை**
**செறிகொண்டை மேல்வண்டு சென்றுபாய்ந்தன்றே,**
**வெறிகொண்டான் குன்றத்து வண்டு;**

*ஆற்றிடத்து வரும் புது வெள்ளமானது, முறையாகப் போதலாலே தேய்ந்த கரையிடத்துள்ள வயிரம் பாய்ந்த சந்தன மரங்களை, அவ் வெள்ளமானது பேர்த்துக்கொண்டுவரும். அக்கட்டைகளின் நறுமணம் சூழ்ந்ததும், தார் விளங்குவதுமான தன் மார்பிடத்தே முத்தாரம் அழகு செய்ய வந்தான், முருகப் பிரான். அங்ஙனம் வந்தானைத் தேவானைப் பிராட்டி தொழுத படி எதிர்கொண்டாள்.*

*"மாயத்தில் வல்லவனே, நீ வாழ்க! நின்பால் ஏதும் தவறில்லை. எம்மைப்போலும் நின்னைப் பிரிந்த துயரத்தால் மேனி வண்ணம் கெட்டாரது நலத்தை உண்கின்றாயோ?"*

*"அழகினை உடையாரான பெண்களின் மென்மை வாய்ந்த தோள்களின் மேலாகப் பொருந்தி அவருக்கு அருளுதலும், இந்நாளிலே கூரிய பற்களை உடையாரான, நின் தன்மை அறியாதவரான அம்மகளிரின் நிலைதான், இனி எப்போது பெய்யும் என்று மழைக்காக ஏங்கியிருக்கும் பசும்பயிரின் நிலையினதாக மாறுவதற்குத் தானோ? ஐயனே, இதனை உரைப்பாயாக."*

*இவ்வாறு அன்பினால் தன்னிடத்து இளகிவராத வெம்மை யான சுடுநோக்கால், தன் கைவிரலைச் சுட்டிக் காட்டியபடி, மாற்றாளான வள்ளிநாயகியின் காரணமாகத் தன்மேற் பகைத்துப் பேசி அகன்று செல்வாளான தேவானைப் பிராட்டிக்கு,*

முருகவேளானவன், தன் தலைக்கண்ணியை அவள் திருத்தமான அடிகளிலே தோயுமாறு திறையாகச் செலுத்தி, அவள் பாதங்களிற் பணிந்தவனாக, அவளுக்குத் திறைகொடுத்து அவளருளை வேண்டி நின்றான்.

'அவளும், அவனை 'வருந்தாதே' என்று சொல்லியவளாக, அவன் தழுவிக்கொள்ளும் பொருட்டாகத் தன் மார்பினை அவனுக்கு அளித்தபடி நின்றாள்.

'அவள்பால் நெருங்காதே' என்று, அப்போது கூறியவளாக, ஒள்ளிய இழையணிந்த வள்ளிநாயகியானவள், தன் தலைமாலையினையே கைக்கோலமாகப் பற்றி மிகவும் இறுக்கமாக முருகனைக் கட்டிப் பிடித்தாள்; தேவானைப் பிராட்டியையும் அடிக்கத் தொடங்கினாள்.

தம் தலைவியர் மோதிக்கொள்வதைக் கண்டதும், ஒருவரது மயில் மற்றவரது ஒள்ளிய மயிலோடு எதிர்த்துச் சண்டையிடத் தொடங்கியது. இருவரின் சிறந்த கிள்ளைகளும் தம் மழலை மொழிகளால் ஒன்றையொன்று ஏசிக்கொள்ளலாயின. வெறியாடலை ஏற்றுக்கொண்டு அருள்பவனாகிய முருகப் பெருமானின் பரங்குன்றத்துள்ள வள்ளிநாயகிக்கு ஆதரவான வண்டுகள், தேவானைப் பிராட்டியின் செறிந்த கொண்டைமேல் மொய்த்துள்ள வண்டுகளின்மேற் சென்று பாய்ந்தன.

**சொற்பொருள் :** ஊழ் - முறைமை. தேய் கரை - தேய்ந்து அழியும் கரை. நூக்கி - பேர்த்துத் தள்ளியபடி. காழ் - வயிரம். கேழ் - நிறம். மாண் நலம் - சிறந்த அழகுநலம். திருவுடையார் - அழகியரான பெண்கள். அல்கி - தங்கி. நல்கல் - அருளுதல். வை - கூர்மை. உழக்கும் - வருந்தும். வெந் நோக்கம் - சுடும் பார்வை; சினத்தால் வெம்மைகொண்டு நோக்கும் நோக்கம்; இதற்கு மாறுபட்டது அருள்நோக்கம். மழைக்கா - மழைக்காக; 'மழைக்கா' எனப் பிரித்து மழையை விரும்பும் சோலை என்பதும் ஆம். யாத்து - கட்டி. வான் கிறி - சிறந்த கிளி; வானத்துப் பறக்குமியல்பினவான கிளிகளும் ஆம். செறி கொண்டை - செறிவான கொண்டை. வெறி - வெறியயர்தல்;

**விளக்கம் :** முருகப்பிரானைத் தேவானைப்பிராட்டி குறை கூறியவற்றைக் கேட்டு, அவன், அவள் அடிகளில் பணிந்து வீழ, அவள் மார்பளித்து நின்றாள்; அதனைக் கண்டதும் வள்ளி நாயகி சினங்கொண்டு, முருகனைத் தழுவவிடாது தானே கட்டிப் பிடித்தபடி, அவளைப் புடைக்கத்தொடங்கினாள் என்க. தன் எதிரேயே மற்றொருத்தியின் பாதங்களிலே தன் கணவன் பணிந்து வீழ்வதை எவள்தான் பொறுத்து நிற்பாள்! தேவியர் தம்முட் சண்டையிட, அவருக்குரிய மயில்களும், கிளிகளும் தம்முட்

சண்டையிட்டன, இருவர் கொண்டைப் பூக்களினும் மொய்த்திருந்த குன்றத்து வண்டுகளும், இருபகுதியாகப் பிரிந்து தமக்குள் மோதலாயின என்பதாகும்.

'நின் தவறிலை'; 'மாணலம் உண்கோ'; 'திருவுடையார்' என்னுஞ் சொற்கள் குறிப்பு மொழிகள்.

## தோழிமார் மோதினார்

**தார்தார் பிணக்குவார்; கண்ணியோச்சித் தடுமாறுவார்;**
**மார்பணி கொங்கைவார் மத்திகையாப் புடைப்பார்;**
**கோதை வரிப்பந்து கொண்டெறிவார்;**
**பேதை மடநோக்கம் பிறிதாக, ஊத**
**நுடங்கும் நொ சிநுசுப்பார் நூழில் தலைக்கொள்ளக்**
**கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்**
**வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்;**
**தேரணி அணிகயிறு தெரிபு வருவார்;**
**வரிசிலை வளைய மார்புற வாங்குவார்;**
**வாளி வாளிகள் நிலைபெற மறலுவார்;**
**தோள்வளை ஆழி சுழற்றுவார்**
**மென்சீர் மயிலிய லவர்;**

இந் நிகழ்ச்சியை இருதேவியரின் தோழியரும் கண்டனர். அவர்களும், தமக்குள் இரு சாரராகப் பிரிந்து சண்டையிடத் தொடங்கினர் என்பது இப்பகுதி.

வள்ளிநாயகியும் தேவானைப்பிராட்டியும் தத்தம் மார்பிடத்து மாலையைப் பறித்துத் தமக்குள்அடித்துக்கொண்டனர். தலைக் கண்ணிகளை ஓங்கியபடி மாறுபட்டாரை அடிக்க முற்பட்டனர். மார்பிடத்து அணிந்திருக்கும் கொங்கைக் கச்சினைச் சாட்டை வாராகப் பற்றிக்கொண்டு புடைத்துக் கொண்டனர். மாலை களையும், பூப்பந்துகளையும் ஒருவருக் கொருவர் சுழற்றி எறிந்து கொண்டனர்.

இதனாற் பேதைமை கொண்ட தேவானைப் பிராட்டியின் நொக்கமும் வேறுபட்டது. அவள் சோர்வுற்றாள். வாயால் ஊதும் காற்றுக்கே வளைந்தொடிவது போன்ற நுண்ணிடை களை உடையாரான அப் பெண்கள், தம்முள் நெருங்கிப் போரிடலை அடுத்துத் தொடங்கினர்.

குளத்துநீருள் மூழ்கித் திளைக்கும், மதநீர் நாற்றம் வீசுகின்ற தலையினையுடைய, களிறுகளின் போரிடும் தகைமையைப் பெற்றவர்களேபோல, ஒருவருக்கொருவர் கைவளைத்துப் பற்றியும் போரிடத் தொடங்கினர்.

வெற்றிகொள்ளும் கதியைக் கொண்ட போர்க்குதிரை களைப் போல, அவர்களும் இடசாரி வலசாரியாகச் சுழன்றும் போரிட்டனர். தேருக்கு அழகுசெய்யும் அழகிய கயிற்றைப் பற்றும் முறை தெரிந்து பற்ற வருவாரைப் போல, ஒருவர் சடையினை ஒருவர் பற்றி இழுத்தும் போரிட்டனர். கட்டமைந்த வில்லினை வளைப்பதற்காக மார்புறத் தாங்கி வளைப்பதைப் போல, ஒருவர் மற்றவர் உடலைத் தாங்கி வளைத்தும சிதைக்க முற்பட்டனர்; ஒருவர் கண்களாகிய வாளிகள் பிறரது கணள்களாகிய அம்புகள் மேல் நிலையிட்டு நிறிகுமாறு சினந்தும் நோக்கினர். தோள்வளைகளைக் கழற்றிச் சக்கரப் படைபோலச் சுழற்றி எறிந்தும் போரிட்டனர்.

மென்மைத் தன்மை வாய்ந்த மயிலின் சாயலைக் கொண்ட வரான அத் தோழிமார், இவ்வாறு ஒருவரோடொருவர் போரிடலாயினர்.

**சொற்பொருள் :** பிணக்கல் - மாட்டியிழுத்தல். மத்திகை - சாட்டை. நொசி - நுண்மை. நூழில் - நெருங்கிப் போரிடல். பரி - குதிரையோட்டத்தின் கதி. மார்க்கம் - நடை. வரிசிலை - கட்டமைந்த வில். வாளி - அன்பு. ஆழி - சக்கரம்.

## குறவர்க்கு வெற்றி!

**வாள்மிகு வயமொய்ம்பின்**
**வரையகலத்தவனை வானவன்மகள்**
**மாணெ ழில் மலருண்கண்**
**மடமொழியவர் உடன்சுற்றிக்**
**கடிசுனையுள் குளித்தாடுநரும்**
**அறையணிந்த அருஞ்சுனையான்**
**நறவுண்வணடாய் நரம்புளர்நரும்**
**சிகைமயிலாய்த் தொகைவிரித்தாடுநரும்**
**கோகுலமாய்க் கூவுநரும்**
**ஆகுலம் ஆகுநரும்**
**குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்**
**வித்தகத் தும்பை விளைத்தலான்; வென்வேலாற்கு**
**ஒத்தன்று தண்பரங் குன்று;**

ஒளிமிக்கதும், வெற்றிதரும் ஆற்றலுடையதும், மலை போன்றதுமான மார்பினைக் கொண்டோனான முருகப் பிரானையும், வானவர்கோமானின் மகளாகிய தேவானைப் பிராட்டியையும், மிக்க எழிலையுடைய மையுண்ட குவளை மலரைப் போன்ற கண்களையும், மடப்பம் பொருந்திய பேச்சினையும் உடையவரான, வள்ளிநாயகியின் தோழிமார் ஒருங்கே சுற்றி வளைத்துக் கொண்டனர்.

அந்த வெற்றிக்களிப்பினாலே வள்ளிநாயகியின் தோழிமார் மகிழ்ச்சி கொண்டனர். காவலையுடைய சுனைநீருட் குதித்துச் சிலர் நீராடத் தொடங்கினர். பாறைகளாற் சூழப்பெற்ற அரிய சுனையிடத்து மலர்களிற் சென்று தேனுண்ணும் வண்டு களைப்போல, நரம்புக்கருவிகளை இயக்கிச் சிலர் இசைப்பா ராயினர். ஆடுகின்ற மயில்களைப் போலத் தம் தலைமயிரையே தோகைகளைப் போல விரித்தவராகச் சிலர் கூத்தும் ஆடத் தொடங்கினர். குயில்களைப் போலச் சிலர் கூவவும் தொடங்கினர்.

இவற்றைக் கண்டு தேவானைப் பிராட்டியின் தோழிமார் மேலும் துன்புறுவாராயினர்.

குறிஞ்சிக்குரிய குன்றவரின் மறத்தன்மை பொருந்திய வள்ளிநாயகியின் தோழிமார் சுற்றம் திறமையோடு போரிட்டு வெற்றி பெற்றதனாலே, வெற்றி வேலையுடையவனாகிய குமரப் பெருமானுக்குத் தண்ணிய பரங்குன்றமும் பொருத்தமுடைய தாக ஆயிற்று.

**சொற்பொருள் :** வாள் - ஒளி. வயம் - வெற்றிச் சிறப்பு. மொய்ம்பு - ஆற்றல். கடி - காவல். அறை - பாறை. நறவு - தேன். நரம்பு - நரம்புக் கருவிகள். தொகை - தோகை. கோகுலம் - குயில். ஆகுலம் - துன்பம். வித்தகம் - திறமை. தும்பை - போர்; ஒரு திணையுமாம்; அது பகைவரோடு போரிடலை நினைத்துத் தும்பைப் பூவைச் சூடுதலாம்.

### படாகை நிலைபெற்றது

**கடுஞ்சூர் மாமுதல் தடிந்தறுத்தவேல்**
**அடுபோராள! நின் குன்றின்மிசை**
**ஆடல் நவின்றோர் அவர்போர் செறுப்பவும்;**
**பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்;**
**வல்லாரை வல்லார் செறுப்பவும்;**
**அல்லாரை அல்லார் செறுப்பவும்;**
**ஓர் சொல்லாய்ச்**
**செம்மைப் புதுப்புனல்**
**தடாகம் ஏற்ற தண்சுனைப் பாங்கர்ப்**
**படாகை நின்றன்று;**

கொடியவனாகிய சூரன், கடல் நடுவுள் உருக்கரந்து நின்ற மாமரத்தை வெட்டிச் சிதைத்தலின் மூலமாக ஒளி மிகுந்த, வெற்றி வேலினைக் கொண்ட, போராடும் ஆற்றலுடைய முருகப் பெருமானே!

நின் பரன்குன்றின்மேல் தொடங்கிய போராட்டம் அத் துடனும் நிற்கவில்லை. குறமகளிருள் ஆடல்வல்லவர் தேவ மகளிருள் ஆடல்வல்லவருடன் போரிட்டு அவரை வென்றனர்.

வானவர் மகளிருட் பாடல்பயின்றவரைப் பாணர் மகளிர்கள் தம் பாட்டால் வெற்றி கொண்டனர். இவ்வாறு, ஒவ்வொரு கலையினும் வல்லவர், அவ்வக்கலையில் வல்லவரான தேவானைப் பிராட்டியின் சுற்றத்தாரோடு போரிட்டு வென்றனர். கலைவல்லார் அல்லாரான பிறரை, அவ்வாறே கலைவல்லார் அல்லாரான குன்றவர் போரிட்டு வென்றனர். இவ்வாறு எப்புறமும் போரென்னும் ஒரே சொல்லாகவே பரந்தது.

செம்மையான புதுப்புனலை ஏற்றுள்ள தடாகத்தோடு மாறுபடடாற்போல விளங்கிய தண்ணிய சுனையின் பக்கத்தே, வள்ளிநாயகியின் வெற்றிக்கொடியும் நின்று நிலைபெற்று.

**சொற்பொருள் :** சூர் - சூரன். 'கடுஞ்சூர் மா' - எனக் கொண்டு, 'கொடிய அச்சத்தை விளைக்கும் மாமரம்' எனவும் கொள்ளுக. அடும் - பகையை அழிக்கும். செம்மை - சிவப்பாம் தன்மை. தடாகம் - பொய்கை . பாடாகை - கொடி.

## நாள்தொறும் சிறப்பாக!

**மேஎ எஃகினவை ;**
**வென்றுயர்ந்தகொடி விறல்சான்றவை ;**
**கற்பிணைநெறியூடு அற்பிணைக்கிழமை**
**நயத்தகுமரபின் வியத்தகுகுமர!**
**வாழ்த்தினேம் பரவுதும் தாழ்த்துதுந்தலை நினை யாம்**
**நயத்தலிற் சிறந்தஎம் அடியுறை**
**பயத்தலிற் சிறக்க நாள்தொறும் பொலிந்தே!**

அன்பரால் விரும்பத்தகுந்த வேற்படையினை உடையோனே! இவ்வாறு வள்ளிநாயகியின் சுற்றத்தார், தாம் எதிரிகளான வானவன் மகளின் சுற்றத்தாரை வெற்றி கொண்டு உயர்த்த கொடியனது, அவர்தம் வெற்றியாற்றலுக்குச் சான்று பகரும். கற்பு மணத்தாலே ஒன்றுபடுதல் என்கின்ற வடபுலத்து ஒழுக்கத்தோடு, கலந்த அன்பினாலே ஒன்றுபடுதல் என்னும் உரிமையினையும் விருப்புடன் ஏற்று விளங்கும் பண்பினையுடைய, வியக்கத்தக்க குமரப் பெருமானே!

யாம் விரும்புதலினாலே நாளுக்குநாள் சிறப்புற்ற எம் அடியுறை வாழ்வானது. நீதான் எமக்கு அருளிச் செய்தலினாலே, நாள்தோறும் மேலும் அழகுபெற்றுச் சிறப்படையுமாறு, நின் அடிகளில் எம் தலைகளைத் தாழ்த்தினேமாய், யாம் நின்னை வாழ்த்தினேம்! நின் புகழினைப் பாடினேம்! எமக்கும் அருள்புரிக, பெருமானே!

**சொற்பொருள் :** மேஎ - விரும்பும். எஃகு - வேல். விறல் - வெற்றி. அடியுறை - அடியவராக வாழும் வாழ்வு. பயத்தல் - அருளுதல். பயத்தலின் - அருளுதலினால்.

**விளக்கம் :** வெற்றி வேலோனாகிய பெருமான், தேவியரும், அவர் தம் சுற்றத்தவரும் ஒருவரோடொருவர் போரிட்டதனை வேடிக்கையாகக் கண்டு மகிழ்ந்தான். கற்பு மணம், அன்பு மணம் என்னும் இருநெறியையும் ஏற்பானேபோலத் தேவியர் இருவருக்கும் சமாதானஞ் சொல்லி, இருவரையும் சமமாகவே ஏற்றும் விளங்கினான். 'அவனடி தொழுவார் என்றும் இல்லற இன்பத்தில் களிப்பினாலே திளைப்பார்' என்பது இப்பாடலின் அறிவுரையாகும்.

**பத்தாம் பாடல்**

# வையை (10)

**பாடியவர் :** *கரும்பிள்ளைப் பூதனார்;* **பண் வகுத்தவர் :** *மருத்துவன் நல்லச்சுதனார்;* **பண் :** *பாலையாழ்.*

*'கார்கால வரவிற்கு முன்பாகத் திரும்புவேன்' என்று உறுதி கூறிப் பிரிந்தான் தலைவன். சொன்னபடி அவன் வராததனாலே தலைவியின் துயரம் மிகுதியாகின்றது. 'கார்காலம் தொடங்கி, வையைக்கண் புதுப்புனலும் வந்தது; அவன்தான் வந்தானிலன்' எனத் தலைவி நினைந்து வருந்துகின்றாள். தலைவியின் துயரமிகுதியைக் கருதினாள் தோழி; பாணனைத், தலைவனிடம் சென்று தலைவியின் நிலையை உரைத்து, 'விரைய மீளச் செய்யுமாறு தூதுவிடுக்கின்றாள், பாணன் தலைவனிடம் உரைப்பது போல அமைந்த பாடல் இது.*

## புதுப்புனல் வந்தது

**மலைவரை மாலை அழிபெயல் காலை**
**செலவரைக் காணாக் கடல்தலைக் கூட**
**நிலவரை யல்லல் நிழத்த விரிந்த**
**பலவுறு போர்வைப் பருமணல் மூஉய்**
**விரியரி யாணு முகிழ்விரி சினைய**
**மாந்தீந் தளிரொடு வழையிலை மயக்கி**
**ஆய்ந்தளவா ஓசை அறையூஉப் பறையறைய்ப்**
**போந்தது வையைப் புனல்;**

*மலைப்பகுதிகளில் முதல் நாளின் மாலைப்போதிற் பெரு மழை பெய்தது. மாலைவேளையில், எல்லை காணவியலாத கடலைச் சென்று அடைதற்குச் செல்லும் புது நீரின் செலவும் சமதளத்தில் தொடங்கியது. அந் நீர்ப்போக்கின் பகுதிகளிலுள்ள நிலப்பகுதிகளின் கோடை வெம்மைத் துயரமும் நீங்கியது. பரந்து, பலவாகச் செறிந்து, போர்வையைப் போல ஆற்றுப்போக்கில் கிடந்த பருமணற் பகுதிகளை மூடியபடி, புதுப்புனலும் சென்றது, வரிவரியான அழகுடன் கூடிய வண்டுகள் ஊதுதலினாலே*

*மொட்டுவிரிந்த மலர்கள் நிரம்பிய கிளைகளைக் கொண்ட மாவினது இனிய தளிரோடு, வாழையிலைகளையும் சிதைத்துப், புதுப்புனல் தன்னோடு கொண்டு வந்தது. புதுப்புனற் பெருக்கை ஆராய்ந்த காவலர்கள், உடைகரைகளை அடைக்க வருமாறு, ஊர்வரை அழைக்க முழங்கும் பறையறைதலின் முழக்கமும் எழுந்தது. இவ்வாறாக, மதுரைக்கண் வையையிடத்தே புதுப்புனல் வந்தது.*

**சொற்பொருள் :** *மலைவரை - மலையிடத்து. அழிபெயல் - பெரும் பெயல். வரை - எல்லை. நிழத்த - கவிய. மூய் - மூடி. ஆணு - அழகு. அரி - வண்டு; மயக்கி - சிதைத்து.*

### மக்கள் புறப்படல்

**புனல்மண்டி ஆடல் புரிவான் சனமண்டித்**
**தாளித நொய்ந்நூற் சரணத்தர் மேகலை**
**ஏணிப் படுகால் இறுகிறுகத் தாளிஉஇ**
**நெய்த்தோர் நிறவரக்கின் நீரெக்கி யாவையும்**
**முத்துநீர்ச் சாந்தடைத்த மூஉய்த் தத்திப்**
**புகவரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்**
**மிகவரினும் மீதினிய வேழப் பிணவும்**
**அகவரும் பாண்டியும் அத்திரியும் ஆய்மாச்**
**சகடமும் தண்டார் சிவிகையும் பண்ணி**
**வகைவகை ஊழூழ் கதழ்புமூழ்த்து ஏறி -**

*புதுப்புனலின் வருகையை அறிந்தனர் மதுரை நகரத்து மக்கள். புதுப்புனலிடத்தே திளைத்து ஆடல் புரிவதற்கு விரும்பி அவர்கள் திரண்டெழுந்தனர். காலுக்கு இதந்தரும் மெல்லிய நுலாற் செய்யப்பெற்ற மிதியடிகளை அணிந்து கொண்டனர். மேகலை, ஏணிப்படுகால் என்பவற்றை இறுக்கமாகக் கட்டிப் பூட்டிட்டுக் கொண்டனர். இரத்தம்போன்ற செவ்வரக்கின் சாயநீரை நிரப்பிய பீச்சாங்குழல் முதலான பொருள்கள் யாவற்றையும் எடுத்துக் கொண்டனர். முத்தாகப் பனிநீரைச் சொரியும் செம்பு, சந்தனக் கலவைகளைக் கொண்ட பெட்டி முதலியவற்றையும் தம் கைக் கொண்டனர்.*

*தாவி ஏறுதற்கரியதும், பொங்கிய பிடரிமயிரை உடையது மான, புள்ளினைப்போல விரைவாகச் செல்லும் குதிரையும்; மிகவிரைவாக் வந்தாலும் மெலிருக்க இனிதாக விளங்கும் பிடியானையும்; அழைத்தற்கரிய அழகினைக் கொண்ட எருதுகள் பூட்டிய வண்டியும்; கோவேறு கழுதையும்; தெரிந்தெடுத்த குதிரை பூட்டிய வண்டியும்; தண்டு மரங்களோடு கூடிய சிவிகையும் ஆகிய இவற்றை அழகு செய்தனர்.*

இத்தகைய ஊர்திகளின்மேல், விரைந்து வையைக்குச் செல்லக் கருதிய மக்கள், முறைமுறையே வகைவகையாக ஏறிக் கொண்டனர்.

**சொற்பொருள் :** மண்டி - ஒருவருக்கொருவர் முற்பட்டு நெருங்கி எழுந்து. தாளிதம் - தாள் + இதம் - தாளிக்கு இதம் தருவது. மேகலை - கலைக்கு மேலாக அணியும் அணி. ஏணிப்படுகால் - காலை உளப்படுத்தி விளங்கும் அணி. தாளிஉஇ - தாளிட்டு. நெய்தோர் - இரத்தம். பாண்டி - எருது. பாண்டில் - எருது பூட்டிய வண்டி. அத்திரி - கோவேறு கழுதை. ஊழூழ் - முறை முறையாக. கதழ்வு - விரைவு. மூழ்த்து - மொய்த்து.

### மந்த கதியிற் சென்றோர்

**முதியர் இளையர் முகைப்பரு வத்தர்**
**வதிமண வம்பலர் வாயவிழ்ந் தன்னார்**
**இருதிற மாந்தரும் இன்னினி யோரும்**
**விரவுநரை, யோரும் வெறுநரை யோரும்**
**பதிவத மாதர் பரத்தையர் பாங்கர்**
**அதிர்குரல் வித்தகர் ஆக்கிய தாள**
**விதிகூட்டிய இளமென் னடை போலப்**
**பதியெதிர் சென்று பருஉக் கரை நண்ணி -**

முதியரும், இளையரும், மலர்தலுக்குரிய மொட்டுப் பருவத்தினரும், புதுமணம் பெற்ற இதழ்விரிந்த புதுமலர் யாரும் ஆகிய பெண்டிர் அனைவரும் புறப்பட்டனர். உயர்ந்தோர், மக்கள் ஆகிய இருதிறத்து மாந்தரும், அவர்க்கு மிக்க இனிய வரான அவர்தம் காதலியரும், நரைவிரவிய பருவத் தோரும், முற்ற நரைத்த முதியோரும் புறப்படடனர். கற்புடைப் பெண்டிரும், பரத்தையரும், அவர்களின் பாங்கியரும் புறப் பட்டனர். குரல் அதிரச்செய்து இசை எழுப்புதலிலே வல்லவர் இசைத்த, தாளமுறையோடு பொருந்திய வாத்தியத்தின் மென்மையான நடையமைதியைப் போல, ஊரவர் பலரும் வையையை எதிர்நோக்கிச் சென்றவராக, அதன் பெரிதான கரையினைச் சென்றடைந்தனர்.

**சொற்பொருள் :** வதி - தங்கிய. வம்பலர் - புதுமலர். இருதிற மாந்தர் - இரு திறத்து மக்கள். பதிவத மாதர் - கற்புடைய மகளிர். இயம் - இசைக் கருவி. மென்னடை - மென்மையான நடை; மந்த கதி; இது மக்கள் நெருக்கத்தால் உண்டாயது என்று கொள்க.

### விரும்பும் புதுப்புனல்

**நீரணி காண்போர் நிரைமாடம் ஊர்குவோர்**
**பேரணி நிற்போர் பெரும்பூசல் தாக்குவோர்**

**மாமலி ஊர்வோர் வயப்பிடி உந்துவோர்**
**வீமலி கான்யாற்றின் துருத்தி குறுகித்**
**தாம் வீழ்வார் ஆகம் தழுவுவோர் தழுவெதிராது**
**யாமக் குறையூடல் இன்னசைத் தேனுகர்வோர்**
**காமக் கணிச்சியால் கையறவு வட்டித்துச்**
**சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்**
**தாம்வேண்டு காதற் கணவர் எதிர்ப்படப்**
**பூமேம்பா டுற்ற புனைசுரும்பிற் சேம**
**மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து**
**தாய்வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்**
**ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார் போல்**
**யாம் வேண்டும் வையைப் புனலெதிர்கொள் கூடல்;**

*கரையை அடைந்தாருட் சிலர் பொங்கிவரும் புதுவெள்ளத்தின் அழகைக் கண்டு இன்புற்றனர். வரிசையாக நீரணி மாடங்களில் ஊர்ந்து சென்றனர் சிலர். பேரணியாக அணி வகுத்து நின்றனர் சிலர். பெரும் பூசலிட்டு ஒருவரையொருவர் நீரால் தாக்கியபடி ஆடினர் சிலர். குதிரைகள் மீதேறி ஆற்றுநீருட் செலுத்திச் சென்றனர். சிலர். இளைய பிடிகளின் மீது அமர்ந்து அவற்றைச் செலுத்தினர் சில்ர். பூக்கள் மலிந்த காட்டாற்றின் திட்டுக்களை அடைந்து, அவ்விடத்தே, தாம் விரும்பும் காதலரது மார்பைத் தழுவிக் கொண்டிருந்தனர் சிலர். காதலரது தழுவலுக்கு எதிரேற்று இசையாது, யாமத்துக் கழிந்த குறைப்பட்ட ஊடலாகிய விரும்பத்தக்க இனிய தேனைப் பருகி நின்றனர் சிலர்.*

*காமவிருப்பமெனும் கோடரியாலே செயலற்றிருக்கும் தம் ஊடல் நிலையைச் சுழற்றி எறிந்துவிட்டுக், காவலாகிய திரையை இட்டுத், தம் கணவருடனே மலரமளியிற் சென்று கூடிக் களித்தனர் சிலர்.*

*தாம் விரும்பிய காதலையுடைய கணவர் எதிர்ப்பட்டவிடத்து, மேன்மை பொருந்திய பூவினைத் தானாகவே விரும்பிச் சென்றடைகின்ற அழகிய வண்டினைப் போலத், தமக்குக் காவலாக அமைந்த தளர்நடைப் பாட்டியரிடமிருந்து தப்பிச் சென்று, பிற தடைகளையும் கடந்துசென்று, தாம் செல்வதற்கு விரும்பும் பட்டினத்தை அடைந்து கரையினைச் சேரும் காவல் பொருந்திய கப்பலின் வரவினை ஆவலோடு எதிர்கொள்ளும் வணிகரைப்போல, அத்துணை மகிழ்வோடு எதிர்கொண்டு வரவேற்று இன்புற்றனர். இவ்வாறாக யாம் அனைவரும் எதிர் கொள விரும்பும் வையைப் புதுப்புனலையும் கூடல் நகரம் எதிர் கொண்டுள்ளது.*

**சொற்பொருள் :** *மாடம் - நீரணிமாடம் என்னும் மேற் கட்டியமைந்த ஒருவகை ஓடம். மாமலி - குதிரைத் திரள். வயப்பிடி*

- இளையபிடி. துருத்தி - ஆற்றிடைக் குறை. வீழ்வார் - விரும்புவார். நசை - விருப்பம். கணிச்சி - கோடரி. மடநடை - தளர் நடை. பட்டினம் - துறைமுகப் பட்டினம். ஏம் உறு - காவல் பொருந்திய; இன்பம் பொருந்திய எனினும் ஆம்.

**விளக்கம் :** நீரணி விழாவானது இவ்வாறு காதலர் களியாட்டயரும் இன்ப விழாவாகவே நிகழ்ந்தது என்பான், தலைவனிடத்தும் அந் நினைவை எழுப்புகின்றான்.

**யானைக் காதல்**

**ஆங்க, அணிநிலை மாடத்து அணிநின்ற பாங்காம்**
**மடப்பிடி கண்டு வயக்கரி மாலுற்று**
**நடத்த நடவாது நிற்ப ; மடப்பிடி**
**அன்னம் அனையாரோ டாயா நடைக்கரிமேல்**
**செல்மனம் மாலுறுப்பச் சென்றெழின் மாடத்துக்**
**கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று**
**மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்**
**செய்தொழில் கொள்ளாது மதிசெத்துச் சிதைதரக்**
**கூங்கை மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி**
**நீங்கும் பதத்தால் உருமுப் பெயர்த்தந்து**
**வாங்கி முயங்கி வயப்பிடி கால்கோத்துச்**
**சிறந்தார் நடுக்கம் சிறந்தார் களையல்**
**இதையும் கயிறும் பிணையும் இரியச்**
**சிதையும் கலத்தைப் பயினால் திருத்தும்**
**திசையறி நீகானும் போன்ம்;**

அவ்விடத்து, அழகிய நீரணி மாடங்களுள் ஒன்றன் அருகாமையிலே நின்ற பக்குவமான இளைய பிடியினை, அயலே நின்ற இளங்களிறு ஒன்று கண்டது. கண்டதும், அதன் மீது அது காமவிருப்புக் கொண்டது. பாகர் செலுத்தவும் தான் மேற் செல்லாது நின்றது. அதனைக் கண்டு தானும் மயங்கியதான அவ்விளம்பிடியும், தன்னருகே மெல்ல வந்தாரான அன்னநடை மாதரோடு, நடை ஒய்ந்ததாய்ச் சென்றபடியிருந்த களிற்றின் மேலாகச் சென்ற தன் மனமானது மயக்கத்தைச் செய்யச் சென்று, அழகிய அம் மாடத்துக்கண் கைவேலைப்பாட்டுடன் செய்தமைக்கப் பெற்றிருந்த பாயும் வேங்கையின் உருவத்தைக் கண்டு, உண்மையான வேங்கை யெனவே மயங்கி வெருவியது. மயங்கிய, கரிய அம் மடப்பிடி, மடப்பம் வாய்ந்தாரான பெண்கள் நடுக்கமுறுமாறு, செலுத்தும் பாகரின் மயற்சிக்கும் கட்டுப் படாது, தன் மதிகெட்டதாய்ச் சிதைந்து ஓடத் தொடங்கிற்று.

இதனைக் கண்ட களிறு தானும் நிலைகலங்கியது. கையுயர்த்திக் கூவும் அது, கரிய வளைந்த அங்குசத்தையும் தன் கையாற்

*தள்ளியபடி, அவ்விடத்தைவிட்டு அகன்று செல்லும் தகைமைத் தாய், இடிமுழக்கைப் போலப் பிளிறத் தொடங்கியது. அதனை மீண்டும் தம் கட்டுப்பாட்டிற்குள் வளைத்து அம் மடப்பிடியைத் தழுவுமாறு பாகர் அதனருகே செலுத்தினர். அருகருகே வந்ததும் பிடியும் யானையும் தம் மனச்சிதைவு நீங்கியவாய்க் களிப்புற்றன. அழகிய பெண்களின் மன நடுக்கத்தை, யானை செலுத்தும் தொழிலில் வல்லோரான பாகர்கள் இவ்வாறு தீர்த்து வைத்தனர். மேற்பாயும், கயிறும், பலகைகளின் இணைப்பும் விரிவு கண்டவிடத்து, அதனால் நீர் உட்புகுதலாற் சிதையும் நிலையடைந்த மரக்கலத்தைப் பிசினால் ஒட்டிச் சீர்ப்படுத்தும், திசையறிந்து கப்பலைச் செலுத்தும் ஓர் மாலுமியைப் போல, அப் பாகரின் அச் செயலும் சிறப்புடன் விளங்கிற்று.*

**சொற்பொருள் :** *அணிநிலை மாடம் - அழகுபடுத்திய நீரணி மாடம். பாங்கு - பக்குவம். மடப்பிடி - மடப்பத்தையுடைய பிடி. வயக்கரி - வலிய களிறு. ஆயாநடை - ஓய்ந்த நடை. மால் - மயக்கம். கைபுனை - கைவேலைப்பாட்டுத் திறனால் புனையப் பெற்ற. கிளர்வேங்கை - பாயும் தன்மையிலமைந்த வேங்கை. வெருவுற்று - நடுக்கமுற்று. மைபுரை - இருண்ட மேகத்தைப் போன்ற. சிதைதர - கைகடந்து செல்ல. கொடுந் தோட்டி - வளைந்த அங்குசம். உருமு - இடி. முயங்கி - முயங்க. கால்கோர்த்து - சேர்த்து. சிறந்தார் - முன்னது பெண்களையும், பின்னது பாகரையும் உணர்த்துவன. கலம் - மரக்கலம். பயின் - பிசின். நீகான் - மீகாமன்.*

### புனலின் தன்மை!

**பருக்கோட்டு யாழ்ப்பக்கம் பாடலோடு ஆடல்**
**அருப்பம் அழிப்ப அழிந்தமனக் கோட்டையர்**

**ஒன்றொ டிரண்டா முன்றேறார் வென்றியின்**
**பல்சனம் நாணப் பதைபதைப்பு, மன்னவர்**
**தண்ட மிரண்டுந் தலைஇத்தாக்கி நின்றவை**
**ஒன்றியும் உடம்பா டொலியெழுதற் கஞ்சி**
**நின்ற நிகழ்ச்சியும் போன்ம்;**
**காமம் கனைந்தெழக் கண்ணின் களியெழ**
**ஊர்மன்னு மஞ்சி யொளிப்பார் அவர்நிலை**
**கள்ளின் களியெழக் காத்தாங்கு அலரஞ்சி**
**உள்ளம் உளையெழ ஊக்கத்தான் உள்ளுள்**
**பரப்பி மதர்நடுங்கிப் பாரலர் தூற்றக்**
**கரப்பார் களிமதரும் போன்ம்;**
**கள்ளொடு காமம் கலந்து கரைவாங்கும்**
**வெள்ளம் தருமிப் புனல்;**

பருத்த கோட்டினையுடைய யாழின் இசையோடு பாடலும் ஆடலுமாகிய இவை மக்களின் மனத்திண்மையை அழித்தன. இவ்வாறு தம் மனக்கோட்டை அழியப்பெற்றவர்கள், முன் இரண்டாக விளங்கிய நிலைமை கெட்டவராக, மனம் ஒன்று பட்டவராயினர். எனினும், காமப்போரில் ஈடுபட்டு வெற்றி காண்பதற்கும் இயலவில்லை. அங்குத் திரண்டிருந்த பலவகை யினரான மக்களிடையே தம் எண்ணத்தைச் செயற்படுத்துவதற்கு நாணினர். நிறைவேற்ற விரும்பிய பெருநசையாலும் பதை பதைத்தனர். எதிரிட்ட மன்னவரது படையணிகள் இரண்டும் ஒன்றையொன்று எதிரிட்டுத் தாக்கி நின்றவை, தமக்குள் பகையொழிந்தவாய் ஒன்றுபட்டுப் போதற்கு மன மிசைந்தும், போரிடற்கஞ்சி உடம்பட்டனர் என்னும் பழிச் சொல் எழுவதற்கு அஞ்சியவாகத் திகைப்புற்று நின்றவோர் நிலையைப் போலிருந்தது, அவர் நிலை.

காம விருப்பமானது மூண்டெழ, அதன் காரணமாகக் கண்ணிடத்துக் களிவெறியும் எழுந்த காலத்தும், ஊரிடத்து மிக்கெழும் அலருரைக்கு அஞ்சி, அதனை அடக்கியவராகவே நின்றனர். அவர் நின்ற தன்மை, கள்ளுண்டார் கள்ளின் களிவெறி தம்மைமீறி எழவும், அதனாற் பிறர் கூறும் பழியுரைக்கு அஞ்சித், தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வது போன்றிருந்தது. ஆனால், தம்முள்ளே வெறித்தன்மை பரவி எழ, அதனைத் தம் முயற்சி யினால் தம் உள்ளத்திற்குள்ளாகவே பரப்பியவராக, வெளிப் படும் வெறியுற்ற நிலைக்கு நடுங்கியவராக, உலகம் அலர் தூற்றத் தம்முள் மறைக்கும் கள்வெறியைப் போல, அவர் கொண்ட காமவெறியும், அடக்கியும் அடங்காதாய் உள்ளத்தே கனன்று கனன்று மிகலாயிற்று.

இவ்வாறாகக் கள்வெறியோடு காமவெறியையும் கலந்து, தன் கரைகளை உடைக்கும் வெள்ளப்பெருக்கை, வையையின் புதுப்புனல் கொண்டு தருகின்றது.

**சொற்பொருள் :** கோடு - தண்டு. பக்கம் - இடம். அருப்பம் - மனவலி. தண்டம் - படையணி. தலைஇ - எதிரிட்டு நின்று. உடம்பாடு - சமாதானம். ஒலி - அலர்ஒலி; பழிச்சொல். கனைந்து - மூண்டு. களி - களியாகிய வெறி. உளை - வருத்தம். மதர் - வெறி. கரை வாங்கும் - கரையுடைக்கும்.

**விளக்கம் :** புது வெள்ளம் கரையுடைத்துப் பெருகி வருவது போன்று, அதன்கண் நீராடச் சென்றவருட் சிலரான இளை ஞரிடத்தும் கன்னியரிடத்தும் காமவிருப்பமும் கரை கடந்து மிக்கெழுந்து பெருகுவதாயிற்று என்பதாம். இந்நிலை யினும், நீதான் தலைவியைப் பிரிந்துறைதல் பொருந்தாது என்பதாம்.

காமவெறிக்கும் கள்வெறிக்கும் காட்டிய ஒப்புமை மிகவும் நயமானது ஆகும்.

### விளைக! பொலிக!

**புனல் பொருது மெலிந்தார் திமில்விடக்;**
**கனல் பொருத அகிலினாவி காவெழ;**
**நகில்முகடு மெழுகிய அளறுமடை திறந்து**
**திகைமுழுது கமழ; முகிலகடு கழிமதியின்**
**உறைகழி வள்ளத்து உறுநறவு வாக்குநர்,**
**அரவுசெறி உவவுமதியென அங்கையில் தாங்கு,**
**எறிமகர வலயம் அணிதிகழ் நுதலியர்**
**மதியுண் அரமகளென ஆம்பல்வாய் மடுப்ப ;**
**மீப்பால் வெண்துகில் போர்க்குநர்; பூப்பால்**
**வெண்துகில் சூழ்ப்பக் குழல் முறுக்குநர்;**
**செங்குங்குமச் செழுஞ்சேறு**
**பங்கஞ் செய்யகில் பல பளிதம்**
**மறுகு படவறை புரையறு குழவியின்**
**அவியமர் அழலென அறைக்குநர்;**
**நத்தொடு நள்ளி நடையிறவு வயவாளை**
**வித்தி யலையில் விளைக பொலிகென்பார்;**

புதுப்புனலிடத்தே மூழ்கித் திளைத்துக் களைத்த மகளிர், தாம் பற்றியிருந்த புணைகளைவிட்டுக் கரையேறினர். தம் ஈரத் தலைமயிரைப் புலர்த்துதற்காகக் கனலைமூட்டி, அதன்கண் அகிற்கட்டைகளை இட்டனர். அகில் மணம் அப்போது ஆற்றங்கரைச் சோலைகளிடமெல்லாம் பரவியது. அம் மகளிர் தம் நகில் முகடுகளிற் பூசிய சந்தனச்சேற்றின் நறுமணம் மடைதிறந் தாற்போல நாற்றிசைகளினும் முற்றவும் பரவிக் கமழ்ந்தது. பகையைத் தாக்கிக் கொல்லும் மகரமீனின் வடிவமாக அமைந்த 'மகரவலயம்' என்னும் அணிவிளங்கும் நெற்றியினரான பெண்கள், கருமையான உறையினுள் இட்டு வைத்திருந்த வள்ளத்தைக் கள்வார்ப்பதற்காக வெளியே எடுத்தனர். மேக மூட்டத்தைவிட்டு நீங்கிய நிலவைப்போல அவ் வெள்ளிக் கிண்ணங்கள் விளங்கின. அவற்றுள் கள்ளை வார்த்துத் தம் உள்ளங்கையில் அவர்கள் தாங்கினர். அதுதான், பாம்பாற் பற்றப்பெற்ற முழு நிலவைப் போல அப்போது தோற்றிற்று.

செவ்வாம்பலைப் போலும் வாயிதழ்களில் வைத்து அவர்கள் அக் கிண்ணத்து மதுவை அருந்தியது, தேவ மகளிர் நிலவிடத்திருந்து அமுதத்தைப் பருகுவது போன்றிருந்தது. அவர்கள் உடலின் மேலாக வெண்துகிலைப் போர்த்தனர். தம் கூந்தலிடத்துப் பூவேலை செய்யப்பெற்ற வெண்துகிலைச் சுற்றிக் கூந்தலை முறுக்கி நீரைப் போக்கினர். செங்குங்குமத்தால் ஆகிய

செழுமையான சேற்றையும், சிதைக்கப்பட்ட அகில் துண்டு களையும், பலவகைக் கருப்பூரங்களையும் அம்மியிலிட்டு, அவையெல்லாம் ஒன்றாகக் கலக்குமாறு, குற்றமற்ற குழவிக் கல்லால் அறைத்தனர். அவ்வாறு அறைக்கும்போது, அம்மியிற் பொங்கிய செஞ்சேறானது, அவிப்பொருள்களிட்ட ஓமத்தீயின் அழலைப்போலத் தோன்றிற்று. பொன்னாற் செய்யப்பெற்ற சங்கு, நண்டு, நடத்தலைக் கொண்ட இறால், வலிய வாளைமீன் ஆகியவற்றை நீர்த் தெய்வத்திற்குக் காணிக்கையாக, அலை களோடு வருகின்ற புது நீரில் விதைத்தபடியே, 'கழனிகள் விளைக; அதனால் நாட்டின் வளமைகள் சிறக்க' எனவும் வாழ்த்தினர், பெண்கள்.

**சொற்பொருள் :** திமில் - புணை. ஆவி - புகை. அளறு - சேறு. திகை - திசை. முகடு - உச்சி. அகடு - வயிறு. வள்ளம் - வட்டவடிவமான கிண்ணம். உவவுமதி - பௌர்ணமித் திங்கள். 'மகரவலயம்' - ஒருவகைத் தலையணி. அரமகள் - தேவமகள். ஆம்பல் - செவ்வல்லி. பளிதம் - கருப்பூரம். அறை - அறைத்தற் குரியது; அம்மி. ஆவி - யாக குண்டத்து இடும் பொருள்கள். 'விளைக! பொலிக!' என்பது வாழ்த்து; இதனால் நாட்டின் செழுமையினையும் சிறப்பையும் வேண்டும் நாட்டுபற்றின் செவ்வியும் நன்கு விளங்கும்.

## கண்ணெழில்

**இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்**
**நல்லது வெஃகி வினைசெய் வார்;**
**மண்ணார் மணியின் வணர்குரல் வண்டார்ப்பத்**
**தண்ணந் துவர்பல ஊட்டிச் சலங்குடைவார்;**
**எண்ணெய் கழல இழைதுகள் பிசைவார்;**
**மாலையும் சாந்தும் மதமும் இழைகளும்**
**கோலம் கொளநீர்க்குக் கூட்டுவார்; அப்புனல்**
**உண்ணா நறவினை ஊட்டுவார்; ஒண்டொடியார்**
**வண்ணம் தெளிர முகமும் வளர்முலை**
**கண்ணும் கழியச் சிவந்தன; அன்னவகை**
**ஆட்டயர்ந்து அரிபடும் ஐவிரை மாண்பகழி**
**அரந்தின்வாய் போன்ம் போன்ம் போன்ம்**
**பின்னும் மலர்க்கண் புனல்;**

தமது இல்லாமைத் துயரத்தை எடுத்துக் கூறுதற்கு முன்பாகவே, தம்பால் வந்த இரவலரது இல்லாமை நிலையை நோக்கி, அவர்க்கு நல்லது செய்தலை விரும்பி, அதற்கேற்ற செயலைச் செய்தனர் சில பெண்கள். சாணை பிடிக்கப்பெற்ற நீலமணியைப் போல ஒளியோடு விளங்கும் வளைந்த தம்

மயிர்க்கற்றையில் வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கக், குளிர்ச்சிதரும் துவர்ப்பொருள் பலவற்றைத் தேய்த்துக் கொண்டு, நீரில் மூழ்கி விளையாடினர் சில பெண்கள். தம் கூந்தலிலுள்ள எண்ணெய்ச் சிக்கு அகலுமாறு அரைப்புப் பொடியிட்டுக் கசக்கினர் சிலர். மாலை, சாந்து, கத்தூரி, அணிகள் ஆகியவற்றை நீரும் அணிபெறுமாறு நீரிடத்திட்டனர் சிலர். அப் புனல் உண்ணாத கள்ளினை அதற்குச் சிலர் ஊட்டினர். ஒள்ளிய வளையணிந்தோரான மகளிரின் முகமும், வளரும் மார்பகமும், கண்ணும் மிகுதியாகச் சிவந்தன. அவர் மேனிவண்ணம் ஒளிபெற்றது. இவ்வகையாகப் புனலிடத்தே நீர்விளையாட்டயர்ந்து விளங்கிய பெண்களின் கூர்மையான மலர்க்கண்கள், வண்டுமொய்க்கும் மணம் பொருந்திய, ஐந்தெனப்படும் சிறந்த மன்மத பாணங்களாகிய மலர்களை, அரத்தால் அராவிக் கூர்மை செய்தாற் போன்று விளங்கின.

**சொற்பொருள் :** இளிவரவு - துயரம். நல்லது - நன்மை. மண்ணல் - சாணையிடல். குரல் - கற்றை. துவர் - துவர்ப் பொருள்கள்; இவை பத்து வகையின. இழைதுகள் - அரைப்புத் தூள். மதம் - கத்தூரி. நறவு - கள். விரை - மணம். தின்னுதல் - அராவுதல்.

**விளக்கம் :** 'நீராடிக் களைத்த பெண்களின் கண்பார்வை பட்ட இளைஞர்களின் மனம் சிதைந்தது' என்பார். அவற்றின் தோற்றம் அராவப் பெற்ற மலரம்புகளின் தோற்றத்தைக் கொண்டன என்றனர்.

### கலங்கிய புனல்

**தண்டித் தண்டின் தாய்ச்செல் வாரும்;**
**கண்டல்தண் தாது திரைநுரை தூவாரும்;**
**வெய்ய திமலின் விரைபுனலோ டொய்வாரும்;**
**மெய்ய துழவின் எதிர்புனல் மாறாடிப்**
**பைய விளையாடு வாரும்; மென் பாவையர்**
**செய்தபூஞ் சிற்றடிசில் இட்டுண்ண ஏற்பார்**
**இடுவார் மறுப்பார் சிறுகிடையார்**
**பந்துங் கழங்கும் பலகளவு கொண்டோடி**
**அந்தண் கரைநின்று பாய்வாராய் மைந்தர்**
**ஒளிறிலங்கு எஃகொடு வாள்மாறு உழக்கிக்**
**களிறுபோ ருற்ற களம்போல, நாளும்**
**தெளிவின்று தீநீர்ப் புனல்;**

வாழைத் தண்டுகளை நீரிலிட்டு, விருப்போடு தண்டுக்குத் தண்டு தாவிச்சென்று விளையாடினர் சிலர். தாழைமலரின் குளிர்ந்த பூந்தாதுகளைக் கொணர்ந்து, அலைநுரைகளின்

மேலாகத் தூவிக் களித்தனர் சிலர். விரும்பத்தக்க படகுகளில் அமர்ந்து, விரையச்செல்லும் ஆற்றுநீரோடு அவற்றைச் செலுத்தினர் சிலர். முதற்கண் புனலை எதிர்த்துச் சென்று விரைவாக ஆடியவருட் சிலர், அதனால் உடல்வருத்தம் கொண்டமையால் மெல்ல விளையாடலாயினர். மென்மை வாய்ந்த பாவைப் பருவத்துப் பெண்கள், தாம் கரைக்கண் இழைத்து விளையாடிய சிறுவீடுகளிற் சிறுசோறு சமைத்து, அதனை உண்டு விளையாடினர். அச் சிறுசோற்றை இரந்து நின்றனர் இளைஞருட் சிலர். அவர்க்கு இட்டு மகிழ்வாரும், மறுத்துப் போக்குவாருமாகச், சிற்றிடை மாதரான அவர், விளங்கினர். ஏமாற்றம் பெற்ற மைந்தர்கள். தம்மை ஏமாற்றிய பெண்களின் பந்தையும் கழங்கையும், மற்றும் பல பொருள் களையும் களவாடிக்கொண்டு ஓடினர். அழகிய குளிர்ந்த கரையிடத்து நின்றவாறே அவர்கள் ஆற்று வெள்ளத்துட் பாய்ந்தனர். இவ்வாறு பலரும் ஆடிக்கலக் குதலால், இனிய தன்மை வாய்ந்த புதுப்புனலும், ஒளிவிளங்கும் வேலோடு வாளும் கைக்கொண்டு, தமக்குட் பகைகொண்டு வீரர்கள் போரிடுவதும், இருதிறத்தாரின் களிறுகளும் தமக்குள் போரிடுவதுமாகத் திகழும் போர்க்களத்தின் தன்மைபோலத் தெளிவின்றிக் கலங்கியிருந்தது.

**சொற்பொருள் :** தண்டி - விரும்பி. தாய் - தாவி. கண்டல் - தாழை. தாது - பூந்தாது. திமில் - மீன் படகு. ஒய்வார் - செலுத்துவார். உழவு - வருத்தம். எஃகு - வேல். தீ நீர் - இனிய நீர்.

## மாலை மதியம்

**மதிமாலை மாலிருள் கால்சீப்பக் கூடல்**
**வதிமாலை மாறும் தொழிலாற் புதுமாலை**
**நாளணி நீக்கி நகைமாலை பூவேய்ந்து**
**தோளணி தோடு சுடரிழை நித்திலம்**
**பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல்**
**ஆடுவார் ஆடல் அமர்ந்தசீர்ப் பாணி**
**நல்ல கமழ்தேன் அளிவழக்கம் எல்லாரும்**
**பண்தொடர் வண்டு பரியஎதிர் வந்தூதக்**
**கொண்டிய வண்டு கதுப்பின் குரலூதத்**
**தென்திசை நோக்கித் திரிதர்வாய் மண்டுகால் சார்வா**
**நளர்மலைப் பூங்கொடி தங்குபு உகக்கும்**
**பனிவளர் ஆவியும் போன்ம்; மணிமாடத்து**
**உண்ணின்று தூய பனிநீ ருடன்கலந்து**
**கால்திரிய ஆர்க்கும் புகை;**

மாலைப் பொழுதிலே நிறைந்த மயக்கந்தரும் இருளைத், தோன்றிய மதியமானது போக்கிற்று. மதுரைவாழ் மக்களும்

நீராடும் தொழிலைவிட்டு, மதுரைக்கு மீண்டு செல்லும் செயலை மேற்கொண்டார். புதுநீர் ஆடலுக்காக அணிந்த நாளணிகளை அகற்றினர். மாலையிற் பூக்கும் பூக்களைச் சூடிக் கொண்டனர். தோள்வளை, தோடு, ஒளிசுடரும் அணிகள், முத்துமாலை முதலியவற்றை அணிந்து கொண்டனர். பாடுவாரது பாடற் பொருள்கள் நீர்த்தெய்வத்தினை வேண்டுவனவாகவும், நீர்த் தெய்வத்தின் புகழைப் போற்றுவனவாகவும் விளங்கின. ஆடல் மகளிரின் ஆடலுக்கு ஏற்ற சீருடனே தாளவொலிகளும் எழுந்தன. நறுமணங் கமழும் தேனை உண்ணக் கருதியவாய் வண்டினம் எல்லாம் புறப்பட்டன. பண்பாடுவாரைத் தொடர்ந்து வந்த வண்டுகள், அவர் எதிராக வந்து, அவர் வருந்துமாறு ரீங்காரப் பண்ணை எழுப்பின. மகளிர் கூந்தலிடத்து மலர்களிலுள்ள தேனைக் கொள்ளக் கருதிய வண்டுகள் தாமும் இனிய குரலோடு பாடின. இவ்வாறு அனைவரும் தென்திசை நோக்கிப் பயணமாயினர். வீசும் காற்றின் துணையோடு வந்து, குளிர்ந்த மலையிடத்துள்ள பூங்கொடிகள் வீழ்ந்து தங்கி மகிழும், பனியோடு கலந்து மேலெழும் புகையைப் போலக் காணப்படும், அழகிய மேன் மாடங்களின் உள்ளேயிருந்து, மகளிர் தெளித்துக் கொள்ளும் பனிநீரும், அவர் புகைக்கும் நறுமணப் புகையும் காற்றோடு கலந்து, காற்றையும் மணமுடையதாக மாறச் செய்யும்.

**சொற்பொருள் :** மாலிருள் - மயக்கந்தரும் செறிந்த இருள்' கால்சீப்ப - நீக்க. நகைப் பூ -மலர்ந்த பூ. பரவல் - வேண்டல். பழிச்சுதல் - புகழ்தல். பாணி - தாளம். அளி - வண்டு. பரிய - வருந்த. கதுப்பு - கூந்தல். சூரல் - சுற்றை; கொண்டை கால் - காற்று. ஆவி - புகை; நீராவியுமாம்.

**விளக்கம் :** மதுரைத் தெருவில் வீசும் காற்றும் மணத்தோடு விளங்கிய சிறப்பை இப்படிக் கூறுகின்றனர்.

## செய்வினை ஓயற்க!

**இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்**
**பொலஞ்சொரி வழுதியின் புனலிறை பரப்பிச்**
**செய்யில் பொலம் பரப்பும் செய்வினை ஓயற்க**
**வருந்தாது வரும்புனல் விருந்தயர் கூடல்**
**அருங்கறை அறையிசை வயிரியர் உரிமை**
**ஒருங்கமர் ஆயமொடு ஏத்தினர் தொழவே!**

வறுமையுற்ற புலவர்களின் ஏந்திய கைகள் நிரம்புமாறு பொன்னைச் சொரிபவன் பாண்டியன். அவனுக்குரியதான இப் புனலும் தன் தலைவனின் புகழையே பரப்புகின்றன. வயலிடங் களுள் எல்லாம் பொன்னைப்போல விளங்கும் நென் மணிகளை இந் நீரும் பரப்புகின்றது. இவ்வாறு இது செய்யும் கொடைத் தொழில் என்றும் ஓயாதிருக்குமாக!

*மக்கள் நீர்வளமற்று வருத்தமுறாதபடி வருகின்றது புதுப்புனல். அதன்கண் மக்கள் விருந்தயர்ந்து இன்புறுகின்றனர். இத்தகைய சிறப்புடைய கூடற்பேரூரானது, குற்றமறச் சொல்லப் படும் புகழையுடையவரான பாண்டியருக்கு உரிமையுடைய தாகும். அவரும் தம்மோடு ஒருசேர விருப்பங்கொண்டு விளங்கும் ஆயத்தோடு பேர்ந்து, வையையின் புகழைப் போற்றித் தொழுதனர். 'இவ்வாறு மக்களும் மன்னனும் போற்றச் செய்யில் பொலம் பரப்பும் செய்வினை ஓயாதிருப்பதாக' என்பதாம்.*

**சொற்பொருள் :** *இலம்பாடு - வறுமை. புலவர் - அறிவாற் றல் உடையோர்; புகழ் பாடுவார். ஞெமர - நிறைய. இறை - தலைமை. பொலம் - பொன். அருங் கறை - கறை. அருகும் - குற்றம் நீங்கும். இசை - புகழ். வயிரியர் - பாண்டியர்.*

**விளக்கம் :** *இவ்வாறு நிகழ்ந்த புதுப்புனல் விழவினைப் பற்றிக் கூறினாள். இதனைக் கேட்டலுறுவானாகிய தலைவன், தன் பிழையை உணர்ந்து, தலைவிபால் மீள்தற்கு முற்படுவான் என்பதனால் ஆம். தலைவி வருத்தமற்றதாகவோ, அன்றி அவனை வேண்டுவதாகவோ ஏதும் சொல்லப்படாத பண்பாட்டினையும் கவனிக்க.*

### பதினோராம் பாடல்

## வையை (11)

**பாடியவர் :** *நல்லந்துவனார்;* **பண் வகுத்தவர் :** *நாகனார்;* **பண் :** *பாலையாழ்.*

*தலைவி ஒருவனை விரும்பினாள்; அவனுக்கே அவளை மணஞ்செய்து தருவதற்கு அவளுடைய பெற்றோரும் இசைந் தனர். மகிழ்ச்சியான இச்செய்தியை அத் தலைவனுக்கு அறிவிக்க நினைக்கின்றாள், தோழி. வையைப் புதுப்புனலில் நீராடி மகிழ விரும்பிக் கரையில் ஒருசார் நின்ற அவனை அத் தோழி கண்டாள். அவன் கேட்டறியுமாறு, வையையை நோக்கி அவள் பாடுவதாக அமைந்த பாடல் இது. இதன்கண், 'வையை யாற்றில் தைந்நோன்பு பூண்டு நீராடியதன் நோன்புப் பயனாகவே, அவள் தான் விரும்பியவனையே கணவனாக அடைந்தாள்' எனத் தோழி கூறுவது சிறப்பாகும்.*

### வந்தடைந்த புதுப் புனல்!

**விரிகதிர் மதியமொடு வியல் விசும்பு புணர்ப்ப;**
**எரிசடை எழில்வேழம் தலையெனக் கீழிருந்து**
**தெருவிடைப் படுத்தமூன்று ஒன்பதிற் றிருக்கையுள்**
**உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர;**

**வருடையைப் படிமகன் வாய்ப்பப்; பொருள்தெரி**
**புந்தி மிதுனம் பொருந்தப்; புலர்விடியல்**
**அங்கி உயர்நிற்ப அந்தணன் பங்குவின்**
**இல்லத் துணைக்குப் பாலெய்த ; இறையமன்**
**வில்லிற் கடைமகரம் மேவப்; பாம்பொல்லை**
**மதியம் மறைய ; வருநாளில்,வாய்ந்த**
**பொதியின் முனிவன் புரைவரைக் கீறி**
**மிதுனம் அடைய விரிகதிர் வேனில்**
**எதிர்வரவு மாரி இயைகென ; இவ்வாற்றான்**
**புரைகெழு சையம் பொழிம்மழை தாழ**
**நெரிதரூஉம் வையைப் புனல்;**

*விரிகதிர்களையுடைய மதியத்தோடு அகன்ற வானத்துக் கண்ணே ஒன்றுபடுத்திச் சேர்ப்பதன் பொருட்டாக, எரி போன்ற சடையினையுடையவனாகிய அழகிய களிறுபோன்ற சிவ பெருமான் தலைமை கொள்ள, அவனுக்குக் கீழாக அமர்ந் திருந்து அறங்கேட்ட முனிவர்கள், வீதிகளாகப் பகுத்தமைத் தவை மூன்றாகும். அம் மூன்று வீதிகளும் ஒவ்வொன்றினும் ஒன்பது நட்சத்திரங்களின் இருக்கைகளைப் பொருந்தியவாகப் பனி ரெண்டு இராசிகளாக விளங்கும். அவற்றுள், நிறம் பொருந்திய வெள்ளி என்னும் சுக்கிரன் ஏற்றின் தன்மை கொண்ட இடபராசியினை அடைந்தான். செவ்வாய் மேடத்திற் சேர்ந்திருந் தான். பனுவற் பொருள்களை உணர்கின்ற ஞானவானாகிய புதன் மிதுனத்தில் பொருந்தினான். புலர்கின்ற விடியற்காலைக்கு உரியோனாகிய சூரியன் தனக்குரிய வீடாகிய சிம்மத்திற்கு மேல் வீடாகிய கடகராசியில் நின்றான்; அந்தணனாகிய குருவானவன் சனியின் மகர வீட்டிற்கு அடுத்த வீடாகிய கும்பத்திற்குப் பக்கத்து வீடாகிய மீனத்தை அடைந்தான். அனைவருயிரையும் போக்கும் எமனாகிய (விதி) சனியானவன், தனுசுக்கு அடுத்ததாகிய மகரத்தில் பொருந்தி யிருந்தான். ராகுவாகிய பாம்பானவன் விரையச் சென்று சந்திரனை மறைத்தபடி மகரத்தில் நின்றான். இவ்வாறு கோள்கள் பொருந்தி வந்த பௌர்ணமி நாளாகிய (உத்தராட நட்சத்திரம்) அந்நாளிலே பொதியில் முனிவனுக்கு உரியதான உயர்ச்சிபொருந்திய மலையினைக் கடந்து காற்றும் தென்கிழக்குத் திசையைச் சார்ந்து வரலாயிற்று. சூரியனின் கதிர்கள் விரிந்து வெம்மை செய்துவந்த வேனிற்காலத்தினை வெல்லும் பொருட்டாக, எதிரிட்டு வருகின்ற கார்காலமானது வந்து பொருந்துக என்னும் தன்மையும் உண்டாயிற்று. இக் காரணங்களால், உயர்ச்சி பொருந்திய மலைப்பகுதியிடத்தே பெருமழையும் பெய்தது. அதனால் வையை யாற்றினும் புதுப் புனல், எதிர்ப்பட்டதை அழித்ததாய் முறைமையோடு வருவதா யிற்று.*

**சொற்பொருள் :** *எரிசடை எழில் வேழம் - சிவபிரான்; எரி சடை எழிலோனுக்குப் பிறந்த களிறாகிய முரகப்பெருமானும் ஆம்; இவன் அகத்தியனுக்கு உபதேசித்தவன். தெரு - வீதி; சூரியன் செல்லும் பாதை ; இது வடபாற் செலவு தென்பாற் செலவு என இரண்டாகும். அசுவினி முதல் ஆயிலியம் முடிய ஒரு வீதி, மகம் முதல் கேட்டை முடிய ஒரு வீதி; மூலம் முதல் ரேவதி முடிய ஒரு வீதி; இவை மூன்று வீதிகள் ஆகும். வீதிக்கு 4 இராசிகளாக இராசிகள் பனிரண்டாகும்; ஒன்பது நட்சத்திரங்களாக நட்சத்திரங்கள் 27 ஆகும். இடைப்படுத்த- வேறுபடுத்து வகுக்கப்பெற்ற. ஏறு - இடபம். வருடை - மேடம். அந்தணன் - குரு. பங்கு - சனி. உப்பால் - மேலாக. யமன் இறை - சனி. மதியம் மறைய வரு நாள் - சந்திர மறைப்பு நாள்; கிரகணநாள். நெரி தரூஉம் - அழிக்கும்.*

**விளக்கம் :** *இப் பகுதியிற் கூறப்பெற்ற காலத்தைக் கருதுக. இதுவே, 'ஆடிப் பதினெட்டாம் பெருக்கு' என்னும் பெயருடன், இந்நாளினும் தமிழகத்தின் தென்சீமைப் பகுதிகளிற் கொண்டாடப்பெறும் 'புதுப்புனல் விழா' ஆகும். 'பானு மத்தியம்' என்னும் அமைதி மழையைத் தருவது என்பதையும் ஆராய்க.*

## மருதத்துறையின் அழகு

**வரையன புன்னாகமும்**
**கரையன சுரபுன்னையும்**
**வண்டறைஇய சண்பக நிரை தண்பதம்**
**மனைமாமரம் வாள்வீரம்**
**சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்**
**தாய தோன்றி தீயென மலரா**
**ஊதை யவிழ்த்த உடையிதழ் ஒண்ணீலம்**
**வேய்பயில் சோலை அருவி தூர்த்தரப்**
**பாய்திரை உந்தித் தருதலான் ஆய்கோல்**
**வயவர் அரிமலர்த் துறை என்கோ?**
**அரிமலர் மீப்போர்வை ஆரந்தாழ் மார்பின்**
**திரைநுரை மென்பொகுட்டுத் தேமணச் சாந்தின்**
**அரிவை யதுதானை என்கோ? கள் உண்ணூஉப்**
**பருகு படிமிடறு என்கோ? பெரிய**
**திருமருத நீர்ப்பூந் துறை**

*மலைப்பகுதிக் கண்ணுற புன்னையின் மலர்களையும், ஆற்றங்கரைப் பாங்கிலுள்ள சுரபுன்னையின் பூக்களையும், வண்டினம் மொய்க்கும் சண்பக மலர்களையும், குளிர்ச்சியான தன்மைகொண்ட தேற்றாவின் பூக்களையும், வாள்வீர மரத்து மலர்களையும், கிளைகளைக் கொண்ட வேங்கையின் பூக்களையும், அலரிப் பூக்களையும், காந்தட் பூக்களையும், உதிர்ந்த*

தோன்றிப் பூக்களையும், தீயென்னுமாறு மலர்ந்து, காற்று மோதுதலால் கட்டவிழ்ந்த இதழ்களைக்கொண்ட, ஒள்ளிய நீலப் பூக்களையும், மூங்கில்கள் நெருக்கமாக வளர்ந்துள்ள சோலைப் புறங்களிலே அருவி நீரானது கொண்டு நிரப்பிற்று. பாயும் அலையுடைய நீரானது அவற்றைத் தள்ளிக் கொணர்ந்து தருதலால், திருமருத நீர்ப்பெருந் துறையானது, வலியவர் பூப்பறிக்கும் கோலால் அழகிய மலர்களைத் தொகுத்துப் பெறுகின்ற மலர்த்துறை என்னுமாறு இருந்தது. அழகிய மலர்களாலான மேற் போர்வையினையும், முத்தாரம் தொங்கும் மார்பினைப்போல விளங்கும் அலைநுரைகளாகிய மென்குமிழ் களையும், இன் மணத்தோடும் கூடிய சந்தனக் குழம்பினையும் உடைய வையைப் பெண்ணாளின் முன்றானை என்று சொல்லும் படியாகவும் தோன்றிற்று. கள்ளினை உண்ணுதற் பொருட்டுப் பருகும் நிலமகளின் கழுத்தைப் போலும் விளங்கிற்று.

**சொற்பொருள் :** மனை மாமரம் - தேற்றாமரம்; மனையிடத்து மாமரமும் ஆகும். கணவிரம் - அலரி. ஊதை - காற்று. வேய் - மூங்கில். உந்தி - தள்ளி. வயவர் - வலிமையாளர். பொகுட்டு - மொட்டு; அதுபோன்ற குமிழைக் குறித்தது. சாந்து - சாந்தனம். தானை முன்தானை. மிடறு - கழுத்து. படி - நிலமகள்.

**விளக்கம் :** திருமருத நீர்ப் பெருந்துறை வையைக் கரைத் துறைகளுட் புகழ்பெற்றது. மருதமரச் சோலைக்கண் அமைந்த தால் இப்பெயர் பெற்றது. புதுப்புனல் கொண்டு தந்த பூக்களால் மலிந்து விளங்கிய அதன் செவ்வியை இவ்வாறு கூறுகின்றனர். அரிமலர் மீப்போர்வை - அழகிய மலர் வேலை செய்யப்பெற்ற மேற்போர்வையும் ஆம். கள் - தேன்.

### வற்றாத வையை

**ஆநாள் நிறைமதி அலர்தரு பக்கம்போல்**
**நாளின் நாளின் நளிவரைச் சிலம்பு தொட்டு**
**நிலவுப் பரந்தாங்கு நீரிநிலம் பரப்பி**
**உலகு பயம்பகர ஓம்புபெரும் பக்கம்**
**வழியது பக்கத்து அமரர் உண்டி**
**மதிநிறை வழிவதின் வரவு சுருங்க**
**எண்மதி நிறையுவா இருள்மதி போல**
**நாள்குறை படுதல் காணுநர் யாரே!**
**சேணிகந்து கல்லூர்ந்த மாணிழை வையை**
**வயத்தணிந்து ஏகுநின் யாணர் இறுநாள் பெற!**

வளர் பிறைப் பக்கமாகிய நாட்களுள் மதியமானது நாளுக்குநாள் நிறைவடைந்து ஒளிபரப்பினாற் போல, வையையும்

நாளுக்குநாள் குளிர்வரைப் பக்கமாகிய மலைச் சாரலில் தொடங்கி, அவ் வளர்பிறை மதியத்தின் நிலவொளி உலகிற் பரந்தாற்போல, நாளுக்குநாள் பெருகும் வெள்ளத்தை நிலப்பகுதிகளுள் எல்லாம் பரப்பியது. இவ்வாறு உலகம் பயன்பெற்றுச் சிறக்குமாறு தன் நீர்வளத்தைப் பரப்பியதாய், வையை, உயிர்களைப் பாதுகாத்தலையும் செய்தது.

அடுத்து, வரும் தேய்பிறைப் பக்கத்துள், தேவர்களின் உணவாதலையுடைய மதியமானது, நாளுக்குநாள் தேய்ந்து போவது போல, வையைக்கண் நீர்வரவும் சுருங்கிக் கொண்டே வந்தது. ஆயினும், தேய்பிறை எட்டாம்நாளில் விளங்கும் பாதியளவான மதியைப்போல அதன்வரவு பாதியளவுக்கே குறைந்து வந்தது. ஆனால், நிறைமதியானது நாளுக்குநாள் குறைவுற்று முற்றவும் தேய்ந்து அமாவாசையாவது போல, வையை வரவு முற்றவும் குறைந்து இல்லாமற் போயினதைக் கண்டவரோ யாருமிலர். மலையின் மேலிடத்திலிருந்து போந்து வந்த, மாட்சியமைந்த அணிகளைக் கொண்டாளான வையைப் பெண்ணாளே! நின் புதுவரவு சுருங்கிய நாளினும் மக்கள் பயன்பெறுமாறு நீதான் நின் விரைவு தணிந்தாயாய்ச் செல்வாயாக.

**சொற்பொருள் :** அலர் தரு பக்கம் - வளர்பிறைப் பக்கம். வழியது பக்கம் - வளர்பிறையின் பின்னதாகிய தேய்பிறைப் பக்கம். சேண் - உயரம். யாணர் - புது வருவாய். இறுநாள் - நீர் சுருங்கிய நாள். வயம் - வேகமாகிய வலிமை.

**விளக்கம் :** 'நிலவாயினும் முற்றத் தேய்தலென்னும் குறையை உடையது; வைவையோ அதனையும் இலாதது' என, அதன் சிறப்பைக் கூறினர். நிலவு தண்கதிர்களால் உயிர்களின் உள்ளத்தே இன்பத்தை நிறைக்கின்றது; ஆயின் வையைப் புதுப்புனலோ உலகிடத்து நீர்வளத்தைப் பரப்பிப் புதுவருவா யாகிய செழுமையைத் தருகின்றது என்பதுமாம்.

## நீராடற்கு அமைந்தது

**மாமயில் அன்னார் மறையிற் புணர்மைந்தர்**
**காமம் களவிட்டுக் கைகொள்கற் புற்றென,**
**மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்**
**இல்லத்து நீ தனிச் சேறல் இளிவரல்**
**எனவாங்கு,** 45
**கடையழிய நீண்டகன்ற கண்ணாளைக் காளை**
**படையொடுங் கொண்டு பெயர்வானைச், சுற்றம்**
**இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப, அடல்மதுரை**
**ஆடற்கு நீர் அமைந்தது யாறு!**

நீல மயிலைப் போன்ற சாயலினரான பெண்கள். களவொழுக்கத்தில் தம் காதலரைக் கூடியின்புறுவர். பின்னர், அவரே தம் காமக்கூட்டமாகிய களவொழுக்கத்தைக் கைவிட்டவராக, முயற்சி கொள்ளும் கற்புநெறியினையும் அடைந்திருப்பர். அவ்வாறே, மிக்க புனலையுடைய வையைப் பெண்ணாளான நீயும், நின் பிறந்தவீடாகிய பெருமலையை விட்டு நீங்கி, நீ நிலையாகத் தங்கியிருத்தற்குரிய இடமாகிய கடலைநோக்கிச் செல்கின்றனை. இவ்வாறு செல்லும் நீதான் தனியாகச் செல்வது இழிவானது என்று மக்கள் கூறுவர். கடையழிய நீண்டும் அகன்றும் விளங்கும் கண்ணாளான தன் காதலியைக், காளையானவன், தன் கைப்படையாகிய துணை யோடுங் கூடியவனாகத் தன்னுடன் உடன்போக்கில் அழைத்துச் சென்றான். அதனையறிந்த தலைவியின் சுற்றத்தார், இடை வழியில் அவர்களின் போக்கைத் தடுத்து நிறுத்தினர். அதனைப் போலவே, வெற்றியாளரான மதுரை மக்கள் அணையிட்டுத் தடுத்து நிறுத்துதலினாயே, வையை யாறும், மக்கள் நீராடிக் களித்தற்குப் பொருந்தியதாக அமைந்தது.

**சொற்பொருள் :** மா மயில் - நீலமயில். அன்னார் - மயிலனையவரான கன்னியர். மறை - களவொழுக்கம். மைந்தர் - காளையர்; மைந்து - ஆற்றல். மல்லல் புனல் - பெருகிவரும் புதுப்புனல். படை - ஆயுதம். நெறி - வழி. அடல் மதுரை - பகைவரைக் கொல்லும் ஆற்றலுடையார் வாழும் மதுரை. நீர் - தன்மையும் ஆம்.

### போர்க்களம் போல்வது

**ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர்;**
**மிளிர்குந்தம் ஏந்துலோர்**
**கொள்வார் கோல்கொள்ளக் கொடித்திண்டேர் ஏறுவோர்**
**புள்ளேர் புரவி பொலம்படைக் கைம்மாவை**
**வெள்ளநீர் நீத்தத்துள் ஊர்பூர்பு உழக்குநரும்**
**கண்ணாருஞ் சாயற் கழித்துரப் போரை**
**வண்ணநீர் கரந்த வட்டுவிட் டெறிவோரும்**
**மளம்வரு மாலையின் வட்டிப் போரைத்**
**துணிபிணர் மருப்பின் நீரெக்கு வோரும்**
**தெரிகோதை நல்லார்தங் கேளிர்த் திளைக்கும்**
**உருகெழு தோற்றம் உரைக்குங்கால் நாளும்**
**பொருகளம் போலும் தகைத்தே பரிசுவரும்**
**பாய்தேரான் வையை யகம்;**

மதுரை நகரத்தார்ஆற்றின்கண் நீராடுவதற்காக வந்து திரண்டு நின்றனர். அவர்கள் நின்ற காட்சியை வருணிக்கின்றார். ஆசிரியர்; வெள்ளிய வாட்களைச் சுழற்றி நின்றனர் சிலர்.

ஒளிவீசும் வேற்படையை ஏந்தி நின்றனர் சிலர். கையிற் பற்றிச் செலுத்துதற்குரிய வாரையும், குதிரைகளை அடித்து ஓட்டுதற் குரிய கைக்கோலினையும் கைக்கொண்டவராகக், கொடி விளங்கும் திண்ணிய தேர்மீது சிலர் ஏறினர். புள்ளொத்த விரைந்த செலவையுடைய குதிரைகளையும், மேற்பட்டத்தை யுடைய யானைகளையும், வெள்ளமாகப் பரந்து செல்லும் ஆற்றுநீருட் செலுத்திச் செலுத்தித் திரிந்தனர் சிலர். கண்ணி றைந்த அழகுடைய மூங்கிற்கோலாகிய பீச்சாங்குழலில் நீரை நிறைத்துப் பிறர்மீது செலுத்தினர் சிலர். அங்ஙனம் தம்மேல் நீரைச் செலுத்தியவர்மீது, வண்ண நீர் நிறைந்த வட்டினைத் தாமும் விட்டெறிந்து களித்தனர் சிலர். மணம் பரப்பும் மாலை யினாற் சுழற்றி அடித்தனர் சிலர். அவ்வாறு அடித்தவர் மீது அறுத்துச் செய்யப் பெற்றதும், சொரசொரப் பைக் கொண்டது மான கொம்பிலே நீரை முகந்து வீசிக் களித்தனர் சிலர்.

இவ்வாறு, ஆய்ந்தெடுத்துத் தொடுத்த மலர்களைக் கொண்ட மாலையினை உடையவரான பெண்கள் பலரும், தத்தம் காதலரோடுங் கூடியவராக, நாள்முழுதும் நீராடித் திளைத்தனர். அழகுபொருந்திய அந்தக் காட்சியின் சிறப்பைச் சொல்லு மிடத்து, வையைக் கரையாகிய அவ்விடமானது, களத்தே வென்று பகைவரது குதிரைகளைக் கவர்ந்து வருகின்ற சிறப்பை யுடையவனும், பாய்ந்து செல்லும் தேரினைக் கொண்டவனுமான பாண்டியன், தன் பகைவரோடு போரிட்டிருக்கும் போர்க்களத் துள் ஒன்றைப்போலவே ஆரவாரத்துடன் தோற்றியது எனலாம்.

**சொற்பொருள் :** விதிர்ப்போர் - சுழற்றுவோர். குந்தம் - வேல்; குந்தாலிப் படையும் ஆகும். திண்தேர் - திண்மையான தேர்; வலிய தேர். புள் - பறவை. பொலம் - பொன். கைம்மா - யானை. வட்டித்தல் - சுழற்றி அடித்தல். மருப்பு - கொம்பு.

**விளக்கம் :** காதலர்கள் தம்மோடு விளையாட்டயர்ந்த வையையாகிய அவ்விடம், ஒரு போர்க்களத்தைப் போல் விளங்கிற்று என்கின்றனர்.

## தெளிந்து வரும் நீர்

**நீரணி வெறிசெறி மலருறு கமழ்தண்**
**தார்வரை யகலத்தவ் வேரணி நேரிழை**
**ஒளிதிகழ் தகைவகை செறி பொறி**
**புனைவினைப் பொலங் கோதை யவரொடு**
**பாகர் இறைவழை மதுநுகர்பு களிபரந்து**
**நாகரினல் வளவினை வயவேற நளிபுணர்மார்**
**காரிகை மது ஒருவரினொருவர் கண்ணிற் கவர்புறச்**
**சீரமை பாடற் பயத்தாற் கிளர் செவிதெவி**
**உம்பர் உறையும் ஒளிகிளர்வான் ஊர்பாடும்**

**அம்பி கரவா வழக்கிற்றே ஆங்கதை**
**காரொவ்வா வேனிற் கலங்கித் தெளிவரல்**
**நீரொவ்வா வையை நினக்கு;**

*நீரணி விழாவிற்கு மகளிர் திரண்டு வந்தனர். மணம் செறிந்த மலர்களைப் பொருந்தியதும், மணம் பரப்பிக் கொண் டிருப்பதுமான தண்ணிய மாலைகளை, அவர்கள் மலையனைய தம் மார்பிடத்து அணிந்திருந்தனர். அவ்வழகிய அணியோடு வேறு பலவான சிறந்த ஆபரணங்களையும் அணிந்திருந்தனர். ஒளிவிளங்கும் தகைமையோடு கூடிய, வகைமையோடு செறிவுற்ற நுண்ணிய வேலைப்பாடுகளைக் கொண்ட பொன்னரி மாலை களையும் அணிந்திருந்தனர். அவர்களோடும் வந்திருந்த ஆடவர் அவர்களோடுங் கூடியிருந்தபடியே இனிதான மதுவைப் பருகினர். அதனால் இருசாராரும் களிப்பு மிகப்பெற்றனர். நல்ல வலிமையான அறச்செயலையுடைய நாகர்களைப் போலத், தம்முள் இன்பநாட்டம் மிக்குப்பெற்றவர்களாக, நெருங்கிச் சேர்ந்து இன்புறும் பொருட்டாக, அவர்கள் ஒருவரையொருவர் அண்மினர். ஒருவருக்கொருவர் காமக்களி யாகிய இனிய மதுவினையும், ஒருவர் கண்ணில் மற்றவர் கவர்ந்து உண்டவராகத் திளைத்தனர். தாளத்தோடுங்கூடிய பாடல்களின் இன்பத்தாலே, மகிழ்ச்சியுறுகின்ற தம் செவிகளையும் நிறைத்துக் கொண்டனர்.*

*தேவர்கள், தாம் வாழும் ஒளிவிளங்கும் வானத்திடத்தே ஊர்ந்துசெல்லும் விமானங்களையும், ஒளிக்காமல் தன்னிடத்தே காட்டவல்ல தெளிவோடு வையை நீரும் சென்றது.*

*வையையே! கார்காலத்தில் கலங்கலான நீரோடும் வருகின்ற நீதான், இவ்வாறு தெளிந்த நீரோடும் வருகின்ற இயல்பையும் உடையையாய் இருக்கின்றனையே. நின் தன்மை ஒரு தன்மைத்தாக என்றும் இருப்பதில்லையே! இது எதனாலோ?*

**சொற்பொருள் :** *நீரணி - நீராடுதற்குரிய அணிகள். வெறி - நாற்றம். கமழ் - மணக்கும். ஏர் - அழகு. பொலம் - பொன். பாகர் - இனிமை. களி - களிப்பு. வளவினை - சிறந்த அறச் செயல்கள். சீர் - தாளம். தெவி - நிறைந்து. ஊர் பாடும் - ஊர்பு. ஆடும் - ஊர்ந்து செல்லும். கார் - கார்காலம். அம்பி - விமானம். நீர் - தன்மை.*

**விளக்கம் :** *தன்பால் நீராட வந்து கூடிய மகளிரும் ஆடவரும் தம்முட் களிவெறிகொண்டு மயக்கமுறச் செய்வ தேனும், வையை தன்னளவில் தெளிந்தநீரைக் கொண்டுள்ளது என்பதாம்.*

## தைந்நீர் ஆடுதல்

**கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்கப்**
**பனிப்படு பைதல் விதலைப் பருவத்து** 75

**ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து**
**மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்**
**புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப**
**வெம்பாதாக வியனில வரைப்பென**
**அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்**
**முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்**
**பனிப்புலர் பாடிப் பருமணல் அருவியின்**
**ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்**
**நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பின்**
**தையல் மகளிர் ஈரணி புலர்த்தர**
**வையை! நினக்கு மடைவாய்த் தன்று;**
**மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து**
**பொய்யாடல் ஆடும் புணர்ப்பின் அவரவர்**
**தீயெரிப் பாலும் செறிதவமுன் பற்றியோ**
**தாயருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல்**
**நீயுரைத்தி வையை நதி;**

முழக்கத்தோடுங் கூடிய அதிர்கின்ற குரலைக்கொண்ட மேகங்களும் வானத்தைவிட்டு நீங்கின. பெய்கின்ற பனியினாலே நடுங்குதலைக் கொண்ட பின்பனிப் பருவமும் வந்தது. அக் காலத்து ஞாயிறு காய்ந்து வருத்துவதில்லை; குளிர்ந்த பின் மழையும் பெய்யும். அக்காலத்தே களங்கமாகிய மறுவோடு விளங்கும் பெரிய திங்களின், பிறை நிறைவுற்று விளங்கும் பௌர்ணமி நாளாகிய திருவாதிரை நாளில், விரிந்த நூல்களைக் கற்றோரான அந்தணர், சிவபிரானுக்கு விழாச் செய்தலைத் தொடங்கினர். முப்புரி நூலினரான அந்தணர் பூசைப் பொருள் களைப் பொற்கலங்களுள் ஏந்தியவாறு நின்றனர். 'பரந்த இந் நிலப்பரப்பானது வெம்மையால் வாடாதிருப்பதாக' என அனைவரும் வேண்டினர். அழகிய வளையணிந்தோரான கன்னிப் பெண்கள் மார்கழி நோன்பேற்றவராக நீராடியபடி நின்றனர். சடங்குகளை அறிந்தோரான முதுபெண்டிர் அக்கன்னியருக்கு நோன்புபூண்டு நீராடும் முறைமையைக் காட்டினர். பனியோடுங் கூடிய புலர்காலைப் பொழுதினைப் பாடியபடியே அவர்கள் ஆடினர். பருத்த மணலிடத்தே அருவியைப்போல ஓடும் நீரிற் படிந்துவந்த வாடைக்காற்றும் வந்து வீசிற்று. அதனாற் பெண்கள் நடுங்கினர்.

கரையிடத்துத் தங்கியிருந்து, வேதியர்கள், தம்வேத நெறிப்படி வளர்த்துக் காத்துவருவதும், நிமிர்ந்து வளைவோடு எரிந்து கொண்டிருப்பதுமான வேள்வித்தீயருகே சென்று, அவ்வழகிய பெண்கள் தம் ஈரமான உடைகளைப் புலர்த்திய

படியே நின்றனர். வையையே! நினக்கு அந்த அவியுணவும் பொருத்தமாவதே!

சுவடி தூக்கி யாடும் இளஞ்சிறுவரின் விளையாட்டிற்கு மாறுபட்டு எழுந்து, தாமும் பொய்யான பல விளையாட்டுக் களை அக் கன்னியர் ஆடுவர். அவர் அவ்வாறு பொய்யாகக் கணவன் மனைவி எனத் தம்முட்கொண்டு ஆடுதல்தான், அவர வரை ஒன்றுபடுத்தும் முன்னைத் தவமுயற்சியால் வருவதோ...? அவரவரும் தீயெரிப்பதாலும், செறிந்த நோன்பாலும் முன்னர் நின்னை வேண்டித் தவமிருந்ததனால் அத்தொடர்பு ஏற்பட்ட தோ? இவ்வாறு, தம் தாயாரின் அருகே நின்று அக்கன்னியர் தவமாகிய தைந்நீராடலை மேற்கொள்ளல் எதன்பொருட் டாகவோ? வையை நதியே! நீதான் இதனைக் கூறுவாயாக!

**சொற்பொருள் :** கனைக்கும் - முழக்கமிடும். அதிர்குரல் - விட்டொலிக்கும் குரல். கார் - மேகம் . பைதல் - துன்பம். விதலை - நடுக்கம். நளி - குளிர்ச்சி. மறு - களங்கம். ஆதிரை - ஆதிரை நாள். விழவு - திருவாதிரை விழா. புரி - முப்புரி. அம்பா ஆடல் - தைந்நீர் ஆடல்; இது தமக்கு நல்ல கணவரைத் தரவேண்டிக் கன்னியர் ஆடுவது. முனித்துறை முதல்வியர் - மணச்சடங்கினைச் செய்தற்கு அறிந்த முதுபெண்டிர். சிறை - கரை. நெறி - ஒழுங்கு. நிமிர்தல் - உயர்ந்தெழல். நுடக்கம் - வளைவு. தையல் - அழகு. ஈரளி - ஈரமான உடை. மடை - அவியுணவு. மையாடல் - கவடி ஏந்தல். பொய்யாடல் - புனைந்தாடல். தீயெரிப்பு - அழலை மூட்டுதல். தவம் - முன்னைத் தவம்.

**விளக்கம் :** கன்னியர் தைந்நீராடி நோன்பு பூண்டனர்; அதன் பயனாகப் பிறவிதோறும் தொடர்ந்து வரும் உறவின்படி தமக்குரிய காதற்கணவரை அடைவர் என்பதாம். இதனை அவர்க்குத் தருவது வையைத் தெய்வம் என்பதுமாம்.

### கண்ணி தொடுத்தாள்

**ஆயிடை, மாயிதழ் கொண்டோர் மடமாதர் நோக்கினாள்**
**வேயெழில் வென்று வெறுத்ததோள் நோக்கிச்**
**சாய்குழை பிண்டித் தளிர்காதில் தையினாள்**
**பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்**
**குவளை குழைக்காதின் கோலச் செவியின்**
**இவள்செரீஇ நான்கு விழிபடைத்தா ளென்று**
**நெற்றி விழியா நிறைத்திலகம் இட்டாளே**
**கொற்றவை கோலங் கொண்டோர் பெண்;**
**பவள வளைசெறித்தாள் கண்டணிந்தாள் பச்சைக்**
**குவளைப் பசுந்தண்டு கொண்டு;**
**கல்லகா ரப்பூவால் கண்ணி தொடுத்தாளை**

**நில்லிகா என்பாள்போல் நெய்தல் தொடுத்தாளே**
**மல்லிகா மாலை வளாய்;**

*இவ்வாறு பெண்கள் நீராடி இன்புற்றனர். 'அவ்விடத்தே, இளமையும் அழகும் செறிந்த ஒருத்தி தன் காதிற் கரிய நீலத்தின் இதழைச் சூடிக்கொண்டவளாக, மற்றொருத்தியை நோக்கினாள். மூங்கிலின் அழகையும் வென்று, அக் கன்னியின் செயலைக் கண்டாள். சாய்ந்து துவளும் அசோகின்தளிரை அவள் தன் காதுகளிற் செறுகினாள். செறுகவே, அசோகந்தழையின் செவ்வொளி பாய்தலால், அவள் காதுகளில் விளங்கிய நீலம் தன்பாலும் செவ்வொளி (இளவெயில்) படரப் பெற்றதாக விளங்கியது.*

*மற்றொருத்தி குண்டலம் அணிதலையுடைய தன் அழகிய காதுகளில் குவளைமலரைச் செருகிக் கொண்டாள். அதனைக் கண்ட மற்றொருத்தி, இவள் இம் மலர்களைக் காதுகளிற் செரீஇனதால் நான்கு கண்களைப் பெற்றாள் என்றாள். அதனைக் கேட்ட ஒருத்தி, அவளுடைய நெற்றியிலே சிவப்புப் பொட்டினையும் இட்டு, 'நெற்றிக் கண்ணான இதனையும் கொண்டு, இவள்தான் கொற்றவையாளைப்போல நெற்றிக் கண்ணையும் பெற்றாள்' என்றனள். அவளும் கொற்றவை போலவே அழகுடன் விளங்கினாள். பவள வளையினை ஒருத்தி தன் கையிற் செறித்தாள்; அதனைக் கண்ட மற்றொருத்தி, பச்சைக் குவளையினது பசிய தண்டைப் பறித்துத் தான் வளையலாகச் செறித்துக் கொண்டாள்.*

*ஒருத்தி குளிரிப்பூவால் கண்ணி தொடுத்தாள்; அவளைத் தொடுக்காது நிறுத்துக என்பாளைப்போல, மற்றொருத்தி, மல்லிகை மலரின் இடையிடையே நெய்தலையும் கலந்து மாலை தொடுக்கலானாள், இவ்வாறு பெண்கள் பலரும் போட்டியிட்டு வையைக் கரையிலே ஆடிக் களித்தனர்.*

**சொற்பொருள் :** *மாயிதழ் - கரிய இதழ். மடமாதர் - இளங் கன்னியர். வேய் - மூங்கில். பிண்டி - அசோகம். பவளம் - பவளக் கொடி. கல்லகாரம் - குளிரிப்பூ. வளாய் - கலந்து.*

## செந்நீர் வரவு

**தண்டுத வாத் தாவுநீர் வையையுள்**
**கண்ட பொழுதிற் கடும்புனல் கைவாங்க,**
**நெஞ்சம் அவள்வாங்க, நீடு புணைவாங்க,**
**நேரிழை நின்றுழிக் கண்நிற்ப, நீர்அவன்**
**தாழ்வுழி உய்யாது தான்வேண்டு மாறுய்ப்ப,**
**ஆயத் துடன்நில்லாள் ஆங்கவன் பின்தொடரூஉத்,**

**தாயத் திறமறியாள் தாங்கித் தனிச் சேறல்**
**'ஆயத்திற் கூடு' என்று, அரற்றெடுப்பத் தாக் கிற்றே**
**சேயுற்ற கார்நீர் வரவு;**

*பாய்ந்து செல்லும் நீரைக் கொண்டது வையை ; அதனுள், வேழத்தண்டைத் தழுவியபடி நீந்திக் களித்தான் ஓர் இளைஞன். நீந்திச் சென்றபொழுதிலே கரைக்கண் தன் ஆயத்தாரோடும் நின்றாளான கன்னி ஒருத்தியை அவன் கண்டான். கண்ட பொழுதில், அவள் அவன் நெஞ்சத்தைத் தன்பால் இழுத்துக் கொண்டாள். கடுவேகத்தோடு செல்லும் புனலானது, அவன் கைகளை நெகிழ்த்து, அவன் பற்றியிருந்த புணையைத் தன்பால் இழுத்துச் செல்லத் தொடங்கியது.*

*நேரிழையாளான அவள் நின்றவிடத்திலேயே தன் கண் சென்று நின்றுவிட, நீர் அவன் விரும்பியபடி அவளிருந்த இடத்திற்கு அவனைக் கொண்டு செலுத்தாது, தான் விரும்பிய படி தன்போக்கிலேயே இழுத்துச்செல்ல முயன்றது. அதனைக் கண்டதும், அந் நங்கை ஆயத்துடன் நிற்க இயலாதவளாயினாள். அவன் பின்னாகத் தொடர்ந்து போவாளைப் போலக் கரைவழியே தொடர்ந்து ஓடத் தொடங்கினாள். அவள் தாய் அதனைக் கண்டாள். தன் மகளின் நெஞ்சத்தை அவன் கவர்ந்த அந்த நிலையை அவள் அறியாள். அதனால் அவள் போக்கைத் தடுப்பாளாகத், 'தனியேசெல்லற்க; ஆயத்தோடும் சென்று சேர்ந்திரு' என்று கூவினாள். அக் கூவலைக் கேட்ட அக்கன்னியும் செய்வதறியாது நின்று அழலானாள். இவ்வாறு காதலரின் உள்ளங்களை வருத்துவது, செந்நிறமுற்ற கார்காலப் புதுப் புனலின் வரவு. வையையே இதுதான் எதனாலோ?*

**சொற்பொருள் :** *தண்டு - வேழத் தண்டு; வாழைத் தண்டெனினும் ஆம். கைவாங்க - கையைப் பறிக்க. தாழ்வுழி - விரும்பிய இடத்து; அஃதாவது தலைவி நின்ற அவ்விடத்து. தாங்கி - தடுத்து. அரற்று எடுப்ப - அழ.*

## வேண்டித் தொழுதார்

**நீதக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தாய் என்மாரும்;**
**கழுத்தமை கைவாங்காக் காதலர்ப் புல்ல**
**விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும்;**
**பூவீழ் அரியிற் புலம்பப் போகாது**
**யாம்வீழ்வார் ஏமம் எய்துக என்மாரும்;**
**கிழவர் கிழவியர் என்னாது ஏழ்காறும்**
**மழவீன்று மல்லல்கேள் மன்னுக என்மாரும்;**

'தைந்நீரே! நீதான் யாம் நீராடுதற்கேற்ற தகுதியினை உடையை. நின் நிறம் தெளிந்தாயா யுள்ளனை' என்று கூறுவார் சிலர். 'எம் கழுத்திடத்தே பொருந்திய கைகளை வாங்காமல், எம் காதலர் எம்மை எப்போதும் தழுவியிருக்குமாறு, யாம் சிறந்த பேற்றினைப் பெறுவேமாக என நின்னை வேண்டிக் கொள்ளு கின்றோம்' என்பார் சிலர். 'பூவிடத்தே வீழ்ந்த வண்டைப்போல், யாம் வருந்துமாறு எம்மைத் தனியாக விட்டுச் செல்லாது, யாம் விரும்பும் காதலர் எம்பாலேயே என்றுமிருக்கும் இன்பத்தை யாம் அடைவோமாக' என்று வேண்டுவார் சிலர். 'கிழவர் கிழவியர்' என்ற எம்மை எவரும் பழித்துக் கூறாதபடி, ஏழாம் பருவத்தின் எல்லையினும், யாம் இவ்விளமையினையே பெற்றேமாய்ச் செல்வமும் சுற்றமும் பொருந்த வாழ்வதற்கு அருள்வாயாக' என வேண்டுவார் சிலர்.

**சொற்பொருள் :** விழுத்தகை - சிறந்த பேறு. அரி - வண்டு. புலம்ப - தனித்து வருந்த. வீழ்வார் - விரும்பப் படுவாரான காதலர். ஏமம் - இன்பம். ஏழ் - ஏழாம் பருவமான முதுவைப் பருவம். சேயுற்ற - செந்நிறம் உற்ற.

**விளக்கம் :** இதனாற் கன்னியரே யன்றியும், மணந்து தம் காதலரோடு கூடியின்புறுவாரான மங்கையரும், தம் காதலர் தம்மைப் பிரதியாதிருப்பாராகவென்று, தைந்நீராடி நோன்பு பூண்பர்என்பது காணப்படும்.

### வண்டினம் காண்மின்

**கண்டார்க்குத் தாக்கணங்கிக் காரிகை காண்மின்!**
**பண்டாரம் காமன் படையுவள் கண்காண்மின்!**
**நீ னெய்தாழ் கோதை யவர்விலக்க நில்லாது**
**பூவூது வண்டினம் யாழ்கொண்ட கொளைகேண்மின்**
**கொளைப்பொருள் தெரிதரக் கொளுத்தாமற் குரல் கொண்ட**
**கிளைக்குற்ற உழைச்சுரும்பின் கேழ்கெழுபாலை இசையோர்மின்!**
**பண்கண்டு நிறனெய்தாப் பண்தாளம் பெறப்பாடிக்**
**கொண்டஇன் னிசைத்தாளம் கொளைசீர்க்கும் விரித்தாடும்**
**தண்தும்பி இனம்காண்மின்! தான்வீழ்பு நெரித்தாளை**
**முனைகெழு சினம்நெஞ்சின் முன்னெறிந்து பின்னும்**
**கனைவரல் ஒருதும்பி காய்சினத்து இயல்காண்மின்!**

தன்னைக் கண்டார்க்குத் தாக்கி வருத்தும் அணங்கைப் போல நோய் செய்பவள் இவ்வழகியாள்; இவளைக் காணுங்கள்! காமதேவனின் பண்டாரமும் படையுமாக அமைந்த இவள் கண்களைக் காணுங்கள்! தேன்சொரியும் மாலையைப் பெண்கள் விலக்கிய போதும், தாம் விலகி நில்லாவாய், அவர் அணிந்துள்ள

பூக்களின்கண் மொய்த்துத் தேனுண்ணும் வண்டினம், யாழிசை போன்று இசைக்கின்ற ரீங்காரப் பண்ணைக் கேளுங்கள், பாட்டிற் கொள்ளப்படும் பொருளானது கேட்பாருக்கும் தெளிவாகுமாறு கொண்டு பாடாமற், குரல் கிளை உழை என்னும் மரபினைக் கொண்டு பாடும், வண்டினம் இசைக்கும் பாலைப்பண்ணின் இசையமைதியைக் கேளுங்கள். பண்ணைத் தெரிந்து, பண்ணின் திறத்தைப் பெற்று, பண்ணின் தாளத்திற்கும் பொருந்தப் பாடித், தாம் மேற்கொண்ட இன்னிசைக்கும், பொருந்திய தாளத்திற்கும் ஏற்றபடி, தம் சிறகை விரித்தாடும் தண்ணிய தும்பிக் கூட்டங்களையும் காணுங்கள். தான் விரும்பி மொய்த்த மலரினை நெரித்தானை, போர்முனையிடத்துப் பொருந்திய சினத்தோடு கூடிய நெஞ்சத்தாய் முதற்கண் தாக்கிப், பின்னும் தாக்குவதற்கு விரைந்து வருதலையுடைய ஒரு தும்பியது, சுடுசினத்தினது தன்மையைக் காணுங்கள்.

**சொற்பொருள் :** காரிகை - அழகி. பண்டாரம் - கருவூலச் சாலை. காமன் படை - மலரம்புகள். நீல்நெய் - தேன். உவள் - முன்னைச் சுட்டு; முன்னுள்ள ஒருத்தி. கொளை - பாட்டு. குரல், கிளை, உழை - பாட்டின் அமைதிகள். முனை - மாறுபட்டு எதிரும் போர் முனை. எறிந்து - தாக்கி. கனைவரல் - விரைந்து வரல். அதன்கண் வரும் யாழிசைப் பகுதிகட்குரிய தெளிவான பொருளைச் சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையுட் காணலாம்.

### எப்பிறப்பினும் அமைக!

**என வாங்கு,**
**இன்ன பண்பின் நின்தைந்நீ ராடல்**
**மின்னிழை நறுநுதல் மகள்மேம் பட்ட**
**கன்னிமை கனியாக் கைக்கிளைக் காம**
**இன்னியல் மாண்தேர்ச்சி இசைபரி பாடல்**
**முன்முறை செய்தவத்தின் இம்முறை இயைந்தேம்**
**மறுமுறை அமையத்தும் இயைக**
**நறுநீர் வையை நயத்தகு நிறையே!**

என்று இவ்வகையாக, இனிய பண்பினையும், இனிய இசையினையும் கொண்ட மக்களின் தைந்நீராடலும் திகழும். பரிபாடலால் புகழ்பெற்ற வையைப் பெண்ணே! முற்பிறவியிற் செய்த தவத்தால் இப்பிறவியில் நின்னைச் சேர்ந்து தைந் நீராடுகின்ற இப்பேற்றினைப் பொருந்தினேம். மின்னைப் போன்று ஒளிரும் அணிகளையும் நறிய நுதலையும் கொண்டா ளான ஒருத்தியது, மேம்பட்ட, கன்னிமை கனியாக் கைக்கிளை யாகிய காமச்செவ்வியின் இனிய இன்பத்தைத் தரவல்லது, நின்பால் ஆடும் தைந்நீராற் பெறுகின்ற இன்பம். நறுநீர்

வையையே! யாம் விரும்பத்தகுந்த நிறைவோடுங்கூடிய இந்தப் பேறானது எம் மறுபிறவிக் கண்ணும் எமக்குக் கைகூடுவதற்கு அருள்வாயாக!

**சொற்பொருள் :** நுதல் - நெற்றி. கைக்கிளை - ஒருதலைக் காமம். மறுமுறை - மறுபிறவி. நிறை - நிறைந்த நீர்.

**விளக்கம் :** தைந்நீராடும் பெண்கள் பிறவிதோறும் மதுரையிற் பிறந்து வையையில் ஆடி மகிழ்தலை விரும்பியவராக வையைத் தெய்வத்தை வேண்டுகின்றனர். இவ்வாறு பாட்டு முடிகின்றது. இதனைக் கேட்டலுறும் தலைவன், தோழியது பாட்டின் பொருளை அறிந்து, தானும் களிப்படைவான் என்று கொள்க.

**பன்னிரண்டாம் பாடல்**

## வையை (12)

**பாடியவர் :** நல்வழுதியார்; **பண் வகுத்தவர் :** நந்நாகனார்; **பண் :** பண்ணுப் பாலையாழ்.

தலைவன் ஒருவன், தன் தலைவியிடத்தே, கார்கால வரவிற்கு முன்னர் மீண்டு வருவதாகக் கூறிப் பிரிந்து, வினைமேற் சென்றிருந்தான். அவளும், அவன் குறித்த காலத்தின் வரவு வரை தன் பிரிவுத்துயரைப் பொறுத்திருந்தாள். கார்காலந் தொடங்கிற்று; மழை பெய்து வையையில் புதுநீரும் வந்தது. ஆனால், அவனோ மீண்டும் வந்திலன். அவள் துயரம் கரை கடந்து பெருகுகின்றது. அதனைக்கண்டு அவள் தோழியும் வருந்துகின்றாள்.

இந்நிலையில், அத் தலைவன் திரும்பி வருகின்றான். வையைக் கரையின்கண் நின்றபடி, தன்னுடன் வந்தாரோடு ஏதோ பேசியபடி நிற்கின்றான். அவனைக் கண்டாள். அவ்வேளையில் அவ்விடத்திற்கு வந்தாளான தோழி, வையைப் புனலாட்டைக் குறித்துப் புகழ்வாளைப்போலத், தலைவன் கேட்டுத் தன் பிழையை உணருமாறும், தலைவியிடத்தே விரையைச் செல்லுமாறும், இவ்வாறு கூறலானாள். அவளது நுட்பமான அறிவுத் திறத்தை உளங்கொண்டு நல்வழுதியார் இப் பாடலைப் பாடுகின்றனர்.

### தீநீர் வையை!

**வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி**<br>
**விளிவின்று கிளையொடு மேன்மலை முற்றித்**<br>
**தளிபொழி சாரல் ததர்மலர் தாஅய்**<br>
**ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்**

**அகரு வழைஞெமை ஆரம் இனையத்**
**தகரமும் ஞாழலும் தாரமும் தாங்கி**
**நளிகடல் முன்னி யதுபோலும் தீநீர்**
**வளிவரல் வையை வரவு;**

*சைய மலையிலே மழை பெய்ய, மழைநீர் மரங்களையும் மலர்களையும் தன்னோடு கொண்டதாக, வையையிடத்தே பெருகி வரலாயிற்று. இதனை இப் பகுதி கூறுகின்றது.*

*காற்றால் மோதப்பட்ட மேகங்கள், மின்னலையும் இருளையும் பரப்பிக் கொண்டு, தம் கூட்டத்தோடும் திரண்டுசென்று, மலையின் மேற்புறத்தைச் சூழ்ந்துகொண்டன. அடுத்து இடையீடில்லாதபடி மிகுதியான பெயலையும் பெய்யத் தொடங்கின. அப்பெயலால் மலைச்சாரலிடத்துள்ள இலை களையும் பூக்களையும் உதிர்த்தன. உதிர்ந்த அவற்றோடு கலந்த படி மழைநீர் கீழேநோக்கிச் செல்லத் தொடங்கியது. ஒளி விளங்கும் படப் புள்ளிகளைக் கொண்டதும், அச்சம்பொருந்திய தன்மையைக் கொண்டதுமான நாகத்தின் பெயரையுடைய நாகமரம், அகில், சுரபுன்னை, ஞெமை, சந்தனம் என்னும் இவைபோன்ற மரங்கள் வருந்துமாறு தாக்கியபடி நீர் சென்றது. தகரமும், ஞாழலும், தாரமும் ஆகிய மரங்களைச் சாய்த்துச் சுமந்து கொண்டு சென்றது. இவ்வாறு இனிய நீரையுடைய காற்றோடு கலந்துவரும் வையையின் வரவானது, செறிந்த கடல் பொங்கி எழுந்து வருவதுபோல் இருந்தது.*

**சொற்பொருள் :** *வளி - காற்று. வான் - மேகம்; வானமும் ஆகும். விளிவின்றி - இடையீடின்றி. கிளை - கூட்டம். தளி - மழை. ததர் - உதிர்ந்த மலர். நாகம் - நாகப்பாம்பு; நாகமரம்; பெயரொற்றுமைபற்றி நாகப்பாம்பினது தன்மையை இதற்கும் உரிமையாக்கிக் கூறினார். அகரு - அகில். வழை - சுரபுன்னை. ஆரம் - சந்தனம். இனைய - வருந்த. தாரம் - அரிதார மரம்.*

## நீராடச் செல்வார்

**வந்து மதுரை மதில்பொரூஉம் வான்மலர்தாய்**
**அந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு;**
**மின்னவிர் ஒளியிழை வேயு மோரும்,**
**பொன்னடர்ப் பூம்புனை திருத்து வோரும்.**
**அகில் கெழு சாந்தம் மாற்றி ஆற்றப்**
**புகைகெழு சாந்தம் பூசு வோரும்,**
**கார்கொள் கூந்தற் கதுப்பமைப் போரும்,**
**வேர்பிணி பன்மலர் வேயு மோரும்,**
**புட்டகம் பொருந்துவ புனைகு வோரும்,**
**கட்டிய கயிலணி காழ்கொள் வோரும்.**

**வாச நறுநெய் ஆடி வான்துகள்**
**மாசறக் கண்ணடி வயக்கி, வண்ணமும்**
**தேசும் ஒளியும் திகழ நோக்கி,**
**வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும்,**
**இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்**
**கட்டுவடக் கழலினர், மட்டு மாலையர்,**
**ஓசனை கமழும் வாச மேனியர்,**
**மடமா மிசையோர்,**
**பிடிமேல் அன்னப் பெரும்படை அனையோர்,**
**கடுமா கடவுவோரும் களிறுமேல் கொள்வோரும்,**
**வடிமணி நெடுந்தேர் மாமுள் பாய்க்குநரும்,**

*வையையில் புதுவெள்ளம் வந்தது. அதனையறிந்த மதுரை மக்கள் பலரும் வையையை நோக்கிச் செல்லலாயினர். அதனை உரைப்பது இப்பகுதி.*

*'சிறந்த மலர்களைத் தன்மேற் பரப்பிக் கொண்டதாய், அழகோடும் தண்மையோடும் வருகின்ற புனலானது, வையை யாற்றிலே வந்து, மதுரை நகரத்துக் கோட்டை மதிலை மோது கின்றது' என மக்கள் கேட்டனர். கேட்டதும், அவரவர்களும் நீரணி விழாவிற்குப் புறப்படலாயினர்.*

*மின்னலைப்போல விட்டுவிட்டு ஒளிபரப்பும் அணிகளைச் சில மாதர் அணிந்து கொண்டனர். பொற்றகட்டாலான அழகிய பூவணியைச் சிலர் அணிந்தனர். மார்பிடத்துப் பொருந்திய சந்தனச்சாந்தினை மாற்றி, அகிற்புகையின் மணம்கெழுமிய சந்தனச்சாந்தைப் பூசிக்கொண்டனர். கருமை கொண்ட கூந்தலைக் குழலாக முடித்தனர் சிலர். வெட்டி வேரினை இடையிடையே வைத்துக் கட்டிய பலவகை மலர்கள் பொருந்திய மாலையினைச் சூடிக்கொண்டனர் சிலர். தமக்குப் பொருந்திய சேலைகளை எடுத்து அழகுற உடுத்துக் கொண்டனர் சிலர். கொக்கிகள் பொருந்திய ஆரங்களை அணிந்து கொண்டனர் சிலர். வாசனை பொருந்திய மணநெய்யைத் தடவிக் கொண்டனர். கண்ணாடியிற் படிந்துள்ள மிக்க தூசுகளைத் துடைத்துப் போக்கிவிட்டு, அதில் தம் வண்ணமும், தேசும் ஒளியும் தோன்ற, அதனை நோக்கியபடியே வாசனைப் பொருள்களோடுங் கூடிய பாக்கினை வாயிலிட்டுக் கொண்டனர். பொருந்திய வளைகளைக் கைகளில் இட்டுக்கொண்டதோடு, தோள்வளை களையும் இட்டுக்கொண்டனர். கட்டுவடத்தையும், கழலையும் காலிடத்து அணிந்து கொண்டனர். இவ்வாறு ஒப்பனை செய்து கொண்ட மகளிர், ஒரு யோசனை தூரத்துக்கும் மணங் கமழ்தலையுடைய வாசமேனியராகத் திகழ்ந்தனர்.*

இளைய குதிரைகளின் மேலேறினர் சிலர். அன்னத்தின் பெரும்படை போன்றோரான பெண்களுட் சிலர் பிடியானைகள் மேல் ஏறிக்கொண்டனர். பெண்கள் இவ்வாறு வையையை நோக்கிப் புறப்பட, ஆடவரும், விரையச்செல்லும் குதிரைகளைச் செலுத்திச் செல்வாரும், களிற்றின்மேலாக அமர்ந்து செல்வாரும், தெளிந்த ஒலியைக் கொண்ட மணிகளைக் கொண்ட நெடுந்தேர் களின்மீது ஏறியமர்ந்து, முட்கோலாற் குத்திக் குதிரைகளை விரையச் செலுத்திச் செல்வோருமாகத் தாமும் புறப்பட்டனர்.

**சொற்பொருள் :** பொரூஉம் - மோதித் தாக்கும். வான் மலர் - உயர்ந்த மலையிடத்து மலர்கள். அந்தண் புனல் - அழகும் தண்மையும் கொண்ட புனல். வேய்தல் - பூட்டுதல்; முற்ற உடலை மறைத்தல் பற்றி வேய்தல் என்றனர். அடர் - தகடு. கார்கொள் - கார்மேகத்தின் நிறத்தைக் கொண்ட. கதுப்பு - குழல். வேர் - வெட்டிவேர். புட்டகம் - புடைவை. கயில் - கொக்கி. கண்ணடி - கண்ணாடி. வயக்கி - விளக்கி; துடைத்து. துவர் - துவரை யுடையது; பாக்கு கைவளை இடுதற்கும், தோள்வளை தொடு தற்கும் பொருந்தியது என்பதனை, 'இடுவளை தொடுவளை' என்னும் சொற்களால் அறிக. ஓசனை - ஒரு யோசனை தூரம்; காதவழி என்பதும் ஆம். மடமா - இளைய குதிரை. கடுமா - விரையச் செல்லும் குதிரை. மாமுள் - குதிரையை ஓட்டுதற்குரிய தாற்றுக்கோல்.

**விளக்கம் :** நீராடச் செல்லலுறும் மகளிரும் தம்மை வகைவகையாகப் புனைந்து செல்வர் என்கின்ற பெண்மைப் பண்பினை இப்பகுதி காட்டுகின்றது.

## கேட்டன சிலசில

**விரைபு விரைபு மிகை மிகை ஈண்டி**
**ஆடல் தலைத்தலை சிறப்பக் கூடல்**
**உரைதர வந்தன்று வையை நீர்; வையைக்**
**கரைதர வந்தன்று காண்பவ ரீட்டம்;**
**நிவந்தது நீத்தம் கரைமேலா; நீத்தம்**
**கவர்ந்தது போலும் காண்பவர் காதல்;**
**முன்துறை நிறையணி நின்றவர் மொழிமொழி**
**ஒன்றல பலபல உடனெழுந் தன்று; அவை**
**எல்லாம் தெரியக் கேட்குநர் யார்? அவை**
**கில்லா ; கேள்வி கேட்டன சிலசில ;**
**ஒத்த குழலின் ஒலியெழ முழவிமிழ்**
**மத்தரி தடாரி தண்ணுமை மகுளி**
**ஒத்தளந்து சீர்தூக்கி ஒருவர் பிற்படார்**
**நித்தம் திகழும் நேரிறை முன்கையால்**
**அத்தக அரிவையர் அளத்தல் காண்மின்!**

மேற்கண்டவாறாக, ஆடவரும் பெண்டிரும் கூட்டங் கூட்டமாக விரைந்து விரைந்து வையைக் கரையை அடைந்தனர். வையைக் கரையில் அமைந்துள்ள துறைதோறும் துறைதோறும் இவர்களின் நீராடல் சிறப்புற விளங்கிற்று. இவ்வாறு அனைவரும் போற்றிப் பேசுமாறு வையைக்கண் புதுநீரும் வந்தது. வெள்ளத்தின் போக்கைக் கண்டு மகிழ்வாரின் கூட்டமும் கரைமருங்கில் நிறைந்தது. வெள்ளம் கரை மேலாகவும் உயர்ந்தது. அதனால் அது தன்னைக் காண வந்தவரின் ஆசையையும் கவர்ந்து போவதுபோலத் தோன்றியது. திருமருத முன்துறைக்கண்ணே நிறைநிறையாக வரிசையாக நின்றவர் தம்முட் பேசிக்கொண்ட பேச்சுக்கள் ஒரேதன்மைத்தாக அல்லாமல், பலப்பலவாக ஒருங்கே எழுந்து ஒலித்தன. அவற்றை எல்லாம் தெளிவாகக் கேட்டு அறியக்கூடியவர் யார்? அவை எவராலுமே இயலாதன. ஆயினும், அவற்றுள் எம்மாற் கேட்கப் பட்டனவும் சில சில உள்ளன.

ஒத்திசைத்த குழலின் ஒலி எழ, அதற்கிசைய முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி என்னுமிவையும் சேர்ந்து ஒலித்தன. அதற்கேற்ப ஆடுவாரான மகளிர் தம் முன்கையாற் சீரினது கூறுபாட்டை அளந்தறிதலைக் காணுங்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் பின்னிடாத தகுதியுடையவர். அவர் கைகள் நிருத்தக்கலை விளங்கும் நேரிறையினைக் கொண்டவை. இவ் விசையொலியும், ஆடல் ஒலியும் எப்புறத்தும் எழுந்தன.

**சொற்பொருள் :** மிகைமிகை - கூட்டங் கூட்டமாக. தலைத் தலை - இடந்தோறும். உரைதர - பேச்சு எழுமாறு. கரை தர - கரை என்னுமாறு போல. நிவத்தல் - உயர்தல், நீத்தம் - வெள்ளம். காதல் - ஆசை. கில்லா - கூடா. ஒத்து - தாளம். நித்தம் - நிருத்தம்; ஆடல். இறை - முன்கை.

### முந்தினார் சொன்னது

**நாணாள்கொல் தோழி நயனில் பரத்தையில்**
**தோள்நலம் உண்டு துறந்தா னெனஒருத்தி**
**யாணர் மலிபுனல் நீத்தத் திரும்பிடி**
**சேண வெரிநில் சிறந்தானோ டேறினாள்**
**நாணுக் குறைவிலள் நங்கைமற் றென்மரும்;**
**கோட்டியுட் கொம்பர் குவிமுலை நோக்குவோன்**
**ஒட்டை மனவன் உரமிலி என்மரும் ;**
**சொரிந்ததூஉம் சொற்றூஉம் பற்றான் நிறந்திரிந்தாள்**
**நெஞ்சத்தை நீத்தாள் நெறிசெல்வான் பின்நிறை**
**அஞ்சிக் கழியாமோ அன்புற்றால் என்மரும்;**
**பூணாரம் நோக்கிப் புணர்முலைபார்த் தானுவன்**
**நாணாள் அவனையிந் நாரிகை என்மரும்;**

முதலில் வந்தவர், பிந்தி வந்தார்க்குத், தாம் நீராட வந்து நின்றபோது கேட்டவற்றுள் சிலவற்றை இவ்வாறு உரைக் கின்றனர் :

'தோழீ! நன்மையற்றாளாகிய பரத்தையின் தோளின் பத்தை உண்டான்; அதனாலே நம்மைக் கைவிட்டான்' என்று தன் கணவனை வெறுத்து ஊடியிருந்தாள் ஒருத்தி. வையையிற் புதுவெள்ளம் புதுவருவாயாகிய பெருவெள்ளமாக வந்தது. அதன்கண் நீராடக் கரிய பிடியானையின்மீது அதன் உயரமான முதுகிடத்தே தன் கணவனோடு ஏறியமர்ந்து வருகின்றாள் அவள். நாணத்திற் குறைவிலாதவளான அந் நங்கையைக் காணுங்கள்' என்று, ஒருத்தியைக் காட்டிச் சிலர் கூறினர்.

'கூட்டத்துள் நின்ற பூங்கொம்பினைப் போன்றாளான ஒருத்தியின், குவிந்த மார்பகத்தையே ஒருவன் பார்த்தபடி யிருந்தான். அவனைக் காட்டி, 'இவன் ஓட்டை மனத்தான்; சற்றும் மனவுறுதி இல்லாதவன்' என்று கூறி, நகையாடினர் சிலர்.

'வழிப்போக்கனான ஓர் இளைஞனைக் கண்டாள். அவன் இவளுக்குக் கையுறையாக யாதும் தந்ததும் இலன். இவள் காதலை விரும்பிப் பணிந்துவந்து யாதும் சொன்னவனும் இலன். எனினும், இவள் அவன்பால் அன்புற்றாள். அதனால், தன் நிறம் மாறுபட்டாள். வழிச் செல்வானான அவன் பின்னாகவே தன் நெஞ்சத்தையும் போக்கினாள். பெண்டிர், ஒருவன்பால் அன்புற் றாலும், தம் நிறையுடைமை அழிவதற்கு அஞ்சியேனும் அதனைக் கைவிட வேண்டாமோ' என்று, வழிபோக்கன் ஒருவனை விரும்பி மெலிந்தாள் ஒருத்தியைக் காட்டிச் சிலர் கூறினர்.

'இவள் அணிந்திருந்த முத்தாரத்தையே பார்த்தான்; அடுத்து இணையாக நெருங்கிய இவள் மார்பகங்களையே நோக்கினான்; அங்ஙனம் பார்த்தானெனக் கண்டும், அவனைக் கண்டு நாணாதாளாயுள்ளாள் இவள்' என ஒருத்தியைச் சுட்டிச் சிலர் கூறினர்.

**சொற்பொருள் :** நயன் - தன்மை. தோள்நலம் - தழுவிப் பெறுகின்ற இன்பம். யாணர் - புதுவருவாய். இரும்பிடி - கரிய பிடி; பெரிய பிடி. சேண வெரிந் - உயர்ந்த முதுகு. கோட்டி - கூட்டம்; கோஷ்டி. கொம்பர் - கொம்பு போன்ற பெண். நீத்தாள் - போக்கினாள். நெறி - வழி. நிறை - மனநிறையாகிய செப்பம். ஆரம் - முத்தாரம். நாரிகை - பெண்.

### வல்லது புனல்

**அமிர்தன நோக்கத்து அணங்கொருத்தி பார்ப்பக்**
**கமழ்கோதை கோலாப் புடைத்துத் தன்மார்பில்**

**இழையினைக் கையாத்து இறுகிறுக்கி வாங்கிப்**
**பிழையினை என்னப் பிழையொன்றும் காணான்**
**தொழுது பிழைகேட்கும் தூயவனைக் காண்மின்!**
**பார்த்தாள் ஒருத்தி நினையெனப் பார்த்தவனைப்**
**பொய்ச்சூளாள் என்பது அறியேன்யான் என்றிரந்து**
**மெய்ச்சூள் உறுவானை மெல்லியல் பொய்ச் சூளென்று**
**ஒல்லுவ சொல்லா துரைவழுவச் சொல்ல**
**உறைத்தும் செறுத்தும் உணர்த்து வானைப்**
**புல்லாது ஊடிப் புலந்து நின்றவள்**
**பூவெழில் வண்ணநீர் பூரித்த வட்டெறிய**
**வேலெழில் உண்கண் எறிநோக்கம் பட்டபுண்**
**பாய்குருதி சோரப் பகையின்று உளஞ்சோர**
**நில்லாது நீங்கி நிலஞ்சோர அல்லாந்து**
**மல்லார் அகலம் வடுவஞ்சி மம்மர்கூர்ந்து**
**எல்லாத் துனியும்இறப்பத்தன் காதலன்**
**நல்லோர் எழிலாகம் சேர்வித்தல் எஞ்ஞான்றும்**
**வல்லதால் வையைப் புனல்;**

*"தேவமகளைப் போல அழகுடையாள் ஒருத்தி, அமுதைப் போலக் கனிந்த நோக்கத்தைத் தன் தலைவன்மீது செலுத்தக் கண்டாள், அவன்தலைவி. கண்டதும், அவள் சினங்கொண்டாள். மணங்கமழுகின்ற மாலையினைத் தன் கைக்கோலாகப் பற்றி, அவனைப் புடைத்தாள். தன் மார்பிடத்துப் பொன்னரி மாலையை எடுத்து, அவன் கைகளை மிகவும் இறுக்கமாகப் பிணித்தாள். பின்னும் அவனைப்பற்றி இழுத்தவளாக, 'நீ தான் அவளை ஏமாற்றினை போலும்? நீ என்ன பிழையினைச் செய்தாய்?' என்று சீறினாள். அவனோ, தன்பாற் பிழையாக ஒன்றையும் செய்தறியாத தூய காதலன். எனினும், அவன் தன் காதலியைத் தொழுது, 'நின் சினத்தினுக்கு யான் செய்த பிழைதான் யாதோ?' எனப் பணிவோடு கேட்கின்ற அதனைக் காணுங்கள்."*

*'நின்னை ஒருத்தி காதலோடும் பார்த்தாள்' என்று தலைவி சொன்னாள். 'அவள் என்னாற் பொய்ச்சூளுரைத்து ஏமாற்றப் பட்டவள் அல்லள்; அவளை யான் கண்டும் அறியேன்' என்று கூறி, அவன் தலைவியை இரந்து நிற்பானாகி, 'மெய்யாகச் சூளுரைக்கின்றேன்' எனவும் கூறினான். அவ்வாறு மெய்யாகவே ஆணையிட்டுரைத்த அவனைப் 'பொய்யாணை இடுகின்றவன்' என்று கருதி, அவள் மேலும் சினங் கொண்டாள். அவன் மனம் பொருந்துமாறு இனிய சொற்களைச் சொல்லாது, பிழைபட்ட சொற்களைக் கூறி, அவனை ஏசினாள். அவற்றைக் கேட்ட பின்னரும், அவன் அவளை வெறுத்திலன். தான் சொன்னதையே வலியுறுத்தியும், சினத்தோடு கூறியும், அவளைத் தெளிவிக்க*

*முயன்றான். அதனாலும், அவள் மனந்தெளிந்தாள் அல்லள். அவனைத் தழுவாது ஊடியவள்ாகப் புலந்து நின்றனள். பூவின் மணமும் அழகும் பொருந்திய வண்ணநீரால் நிரப்பப்பெற்ற வட்டினை அவன் மார்பின்மீது வீசி எறிந்தனள். அவ் வட்டுப் பட்டு, அதிலுள்ள சாயநீர் அவன் மார்பை நனைத்து, உடலின் மேலும் வழிந்தோடியது. வேலின் அழகைக் கொண்ட மையுண்ட கண்களை உடையாளான அவளது தாக்கிய நோக்காகிய வெலினாற்பட்ட புண்ணிடத்திலிருந்து பாயும் செங்குருதியைப் போல, அச் சாயநீர் வழிந்தது காணப்பெற்றது. ஆனாலும், அவன் அவள்மேற் பகை கொண்டானல்லலன். ஆனால், உள்ளம் சோர்ந்தவனாக, அவளருகே நில்லாது அகன்று, தரையிடத்தே வீழ்ந்தான். அவன் வீழ்ந்ததைக் கண்டதும், அவள் சினமெல்லாம் பறந்தது. அவள் வருந்தினாள். மற்போர் செய்வானாகிய அவனது மார்பிடத்து விளங்கிய வடுவினுக்கு அஞ்சினாள்; மயக்கங் கொண்டாள். எல்லாக் கோபமும் ஒழிந்துபோகத், தன் காதலனின் சிறந்த அழகைக் கொண்ட மார்பினைத் தழுவிக் கொண்டாள். இவ்வாறு, ஊடியவரையும் ஒன்றாகச் சேரச் செய்தல் எக்காலத்தும் வையைப் புனலுக்குரிய வல்லமையே யாகும்" என்று சிலர் கூறினர்.*

**சொற்பொருள் :** *அமிர்து - அமுதம்; உண்டாரை உயிர் தளிர்க்கச் செய்வது. அணங்கு - அழகால் பிறரைத் தாக்கி வருத்தும் தேவமகள். யாத்து - கட்டி. ஒல்லுவ - இசையும் சொற்கள். உரை வழுவச் சொல்லல் - குற்றஞ்சாற்றிப் பழித்தல். உணர்த்தல் - வலியுறுத்தல். மம்மர் - மயக்கம். ஏர் எழில் - பேரழகு.*

## குருதி யாறு

**எனவாங்கு,**
**மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்**
**அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல்**
**குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி**
**நல்லிணர் நாகம் நறவம் சுரபுன்னை**
**எல்லாம் கமழும் இருசார் கரைகலிழத்**
**தேறித் தெளிந்து செறியிருள் மான்மாலைப்**
**பாறைப் பரப்பின் பரந்த சிறைநின்று**
**துறக்கத்து எழிலைத்தன் நீர்நிழற் காட்டும்**
**காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே**
**போரடு தானையான் யாறு;**

*இவ்வாறெல்லாம் புனலாட வந்தார் பலரும், பலவாறாக ஆடியும் உரைத்தும் மகிழ்வோடு நின்றனர்.*

மல்லிகை, முல்லை, மணங்கமழும் சண்பகம், அல்லி, செங்கழுநீர், தாமரை, செவ்வல்லி, வெட்சி, மகிழம், குறுக்கத்தி, பாதிரி , நல்ல கொத்தாகப் பூத்துள்ள நாகம், நறவம், சுரபுன்னை என்னும் எல்லாவகையன மலர்களின் மணமும் வையைக் கரையின் இருமருங்கும் கமழ்ந்து கொண்டிருந்தன. அவ்விரு கரைகளுக்கும் இடையே ஓடும் ஆற்றுவெள்ளம் முதற்கண் கலங்கலாக விளங்கிப் பின்னர் மிகத்தெளிந்ததாய் ஓடியது. செறிவான இருளையுடையதும் மயக்கந்தருவதுமான மாலைப் பொழுதிலே, பரந்த கல்லணைக்குள் தேங்கி நின்ற நீரானது, தன்னிடத்தே சுவர்க்கத்தின் அழகினை நிழலிட்டுக் காட்டியபடி விளங்கியது. போரிடத்துப் பகைவரைக் கொன்று வெற்றிவாகை சூடும் படைப் பெருக்கை உடையவன் பாண்டியன். அவனுக்கு உரியதான வையையாறு, மீளவும் மேகங்கள் மழைபொழிந்து தெளிவாந் தன்மையுள்ள நீரினது செவ்வியை அழிக்கின்ற காலைப் பொழுதிலே, மீளவும் சிவந்த குருதியின் தன்மையைப் பெற்றதாய்க் கலங்கலாக விளங்கிற்று.

**சொற்பொருள் :** மௌவல் - முல்லை. ஆம்பல் - செவ்வல்லி. குல்லை - வெட்சி. வகுளம் - மகிழ். குருக்கத்தி - மாதவி. கலிழ - கலங்கி விளங்க. தேறித் தெளிந்து - மிகத்தெளிந்து. செறியிருள் - அடர்ந்த இருள். மான் மாலை - மயக்கந்தரும் மாலைப் பொழுது. துறக்கம் - மேலுலகம். எழில் - அதன் அழகு. நிழற்காட்டும் - நிழலிட்டுக் காட்டும். கார் - மேகம்; இரவின் இருளும் ஆம்; அப்போது காரடு காலை என்பதற்கு இருளை அழிக்கின்ற காலைப்போது என்று கொள்ளுக.

**விளக்கம் :** போரடு தானை யானைக்குரிய ஆற்றுப் பரப்புத்தான் காரடு காலையிற் செங்குருதிக் களம்போல ஆயிற்று என்க.

### அவரைக் காண்மின்!

**சுடுநீர் வினைக்குழையின் ஞாலச் சிவந்த**
**கடிமலர்ப் பிண்டி தன் காதிற் செரீஇ**
**விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி**
**அடிமேல் அடிமேல் ஒதுங்கித் தொடிமுன்கைக்**
**காரிகை யாகத்தன் கண்ணி திருத்தினாள்**
**நேரிறை முன்கை நல்லவள்கேள் காண்மின்!**

'கொன்னைச் சுட்டுச் செய்யப்பெற்ற கைவினைத் திறனை யுடைய செம்பொன் குழையினும், மிகச்சிவந்த மணமலரைக் கொண்ட அசோகினது புதுமலர்களை ஒருத்தி தன் காதில் தொங்கும் குழையாகச் செருகிக் கொண்டாள். கட்டவிழ்ந்த மலர்களைக் கொண்ட ஒரு பூங்கொடியைப் போல அசைந்

தசைந்து, அடிமேல் அடிவைத்து நடந்து, தன் தொடி விளங்கும் முன்னங் கை அழகுடன் விளங்குமாறு வளைத்துத், தன் தலைக் கண்ணியைத் திருத்தியமைத்தாள். அத்தகைய நேரிய சந்தினைக் கொண்ட முன்னங்கையினை உடையவளான அவளையும், அவளின் கணவனையும் அதோ காணுங்கள்' என்று கூறிக் காட்டினர் சிலர்.

**சொற்பொருள் :** சுடுநீர் - சுடும் தன்மையுடைய பொன்; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. குழை - குண்டலம். ஞால - தொங்க. கடி - புதிய. பிண்டி - அசோகம். விடுமலர் - கட்டவிழ்ந்த மலர்; விடுபூ என்பர். தொடி - வளை. காரிகையாக - அழகாக. இறை - சந்து.

**விளக்கம் :** அவள் அணிதிருத்தி நின்றாள் என்றது, தன் காதற்பெருக்கைத் தன் கணவனுக்குப் புலப்படச் செய்வதற் கென்று கொள்ளுக.

## சேறுபட்ட கரை

**துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று**
**புனலென மூதூர் மலிந்தன்று அவருரை;**
**உரையின் உயர்ந்தன்று கவின்; 95**
**போரேற் றன்று நவின்று; தகர**
**மார்பழி சாந்தின் மணலளறு பட்டன்று;**
**துகில்பொசி புனலின் கரைகார் ஏற்றன்று;**
**விசும்புகடி விட்டன்று விழவுப் புன லாங்க ;**

துகிலிற் பொருந்திய பூத்தொழில் வேலைப்பாடுகளைப் போல, நீலநிறத்து வையை நீரினும் பூக்கள் நிறைந்திருந்தன. அதன்கண் வெள்ளம் நிறைந்தாற்போல நீராடுவோரின் வையை பற்றிய பேச்சுக்கள் மதுரையெங்கும் நிறைந்தன. அப் பேச்சுக் களினும், அதன்கண் நீராடியோர் பெற்ற புத்தழகு உயர் வுடையாகத் திகழ்ந்தது. அந்தப் புத்தழகு பிற அழகுகளுடன் போட்டியிட்டு நின்றது. மகளிர் மார்பினின்றும் வழிந்த தகரச் சாந்தால் கரையிடத்து மணல் சேறுபட்டது. நீராடிக் கரையேறி நின்றவரின் ஆடைகளிலிருந்து சிந்திய நீரால், கரைப்பகுதி, மழையினைப்பெற்ற இடத்தைப்போல விளங்கியது. இவ்வா றாகிய சிறப்பின் காரணமாகப், புதுப்புனல் விழாவின் உயர்வுக்கு எதிராக, வானகமும் தன் சிறப்பை இழந்ததுபோலத் தோன்றிற்று.

**சொற்பொருள் :** துகில் சேர் மலர் - துகிலிடத்துப் பொருந்திய பூவேலைப் பாடுகள். மணி - நீலமணி. மணிநீர் - நீலமணியின் நிறத்தைப் பெற்று விளங்கும் தெளிந்த நீர். அவர் - நீராடுவோரும், ஆடச்செல்வோரும், ஆடித் திரும்புவோருமாகிய மக்கள். உரை - பேச்சு. நவின்று - மிக்கு. தகரம் - ஒரு வகை மணப்பொருள். அளறு - சேறு. கடி - சிறப்புத் தன்மை. 'ஆங்க': அசை.

### புகழ் பெரிது!

**இன்பமும் கவினும் அழுங்கல் மூதூர்**
**நன்பல நன்பல நன்பல வையை**
**நின்புகழ் கொள்ளாதிம் மலர்தலை உலகே!**

*வையையே! ஆரவாரமும் பழமைச் சிறப்புங் கொண்ட மதுரைப் பேரூர் மக்கட்கு இன்பமும் அழகுமாகிய நன்மைகளைப் பலவாகத் தருகின்றனை. ஆதலால், பரந்த இடத்தையுடையதான இவ்வுலகும் நின் புகழின் பரப்புக்கு அடங்காததாகும்! அத்துணைச் சிறந்தது நின் புகழ் என்பதாம்.*

**சொற்பொருள் :** *அழுங்கல் - ஆரவாரம், இன்பம். புதுநீர் விழவாடிப் பெறும் இன்பமும், விளையுள் பெருகப் புதுவருவாய் பல பெற்றுக் களிக்கும் இன்பமும். கவின் - நீராடிப் பெறும் கவினும்; எங்கணும் பசுமை தோன்றக் காட்சிக்கு இனிமை நல்கும் கவினும். மலர்தலை உலகம் - பரந்த இடத்தை உடைய உலகம்.*

**விளக்கம் :** *வையை மதுரை நகருக்கும் பாண்டியரின் நாட்டுக்கும் வளத்தையும் இன்பத்தையும் தருகின்ற புகழை உடையது என்பதாம். 'இவ்வாறு பலரும் இன்புற்ற காலத்து நீதான் தன்னுடனில்லாத காரணத்தால், தான் எதனையும் பெறாதாளாகத் தலைவி வாடி நலிந்தாள் என்று, தலைவனுக்குத் தோழி அறிவுறுத்துகின்றனள் என்பதும் ஆம்.*

**பதின்மூன்றாம் பாடல்**

## திருமால் (13)

**பாடியவர் :** *நல்லெழுநியார்;* **பண் வகுத்தவர் :** *பெயர் புலப்படவில்லை;* **பண் :** *பண்ணோதிறம்.*

### துறக்கமும் உரித்தே!

**மணிவரை யூர்ந்த மங்குல் ஞாயிற்று**
**அணிவனப் பமைந்த பூந்துகில் புனைமுடி**
**இறுவரை யிழிதரும் பொன்மணி யருவியின்**
**நிறனொடு மாறுந்தார்ப் புள்ளுப்பொறி புனைகொடி**
**விண்ணளி கொண்ட வியன்மதி யணிகொளத்**
**தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்!**
**பருவம் வாய்த்தலின் இருவிசும் பணிந்த**
**இருவேறு மண்டிலத் திலக்கம் போல**
**நேமியும் வளையும் ஏந்திய கையாற்**
**கருவி மின்னவிர் இலங்கும் பொலம்பூண்**

**அருவி உருவின் ஆரமோ டணிந்தநின்**
**திருவரை யகலந் தொழுவோர்க்கு**
**உரிதமர் துறக்கமும் உரிமைநன் குடைத்து;**

*நீலமணியைப் போல விளங்கும் மலைப்பகுதியிடத்தே, படிந்துள்ள மேகங்களுக்கிடையே காணப்படுகின்ற, மாலைக் கதிரவனின் அழகிய செவ்வனப்பினைப் பொருந்திய பூந்துகிலையும், புனையப்பெற்ற திருமுடியினையும் உடையோனே! பெரிதான மலையிடத்திருந்து இழிந்துவரும், பொன்னையும் மணியையும் தன்னோடு கொண்டு விளங்கும் அருவியின் தன்மையோடு மாறுபட்டாற்போல விளங்கும் திருமாலையினை உடையோனே! கருடப்புள்ளின் உருவைப் பொறித்த அழகிய கொடியைக் கொண்டோனே! வானிடத்து விளங்கி, உலகுக்குத் தன் தண்ணொளியால் அருளைச்செய்யும் பெரிய முழுமதியைப் போன்று, அழகு கொள்ளும்படியாக, அன்பர்க்கு அழகிய குளிர்ந்த கருணையைப் பெற்றோனாக விளங்கும், பகைவர்க்கு அச்சந் தருதலையுடைய சக்கரப்படையினைக் கொண்டுள்ள திருமார்லே!*

*கார்ப் பருவமானது வந்து வாய்த்தலினாலே, பெரிதான வானத்தை இருபுறமும் அழகுசெய்த ஞாயிறும் மதியும் போன்று தோன்றும், சக்கரமும் சங்கமும் ஆகிய இரண்டையும் இரு கைகளிலும் ஏந்தியவனாக விளங்குவோனே! தொகுதி கொண்ட மின்னல்களைப்போல விட்டுவிட்டொளிரும் மணிகள் பதித்த பொற்பூண்களை அணிந்தோனே! அருவியின் உருவோடு விளங்கும் முத்துமாலை அணிந்தோனே! நின் திருமலையாகிய பரந்த இடத்தைத் தொழுவோர்க்கு, நீ விரும்பித் தங்கும் திருவைகுண்டமும் சிறந்த உரிமையினை உடையதாகும்.*

**சொற்பொருள் :** *மணிவரை - கரிய மலை; அழகிய மலையுமாம். மங்குல - மேகம். ஞாயிற்று அணிவனப்பு - ஞாயிற்றின் அழகிய வனப்பு; செம்மையொளி. இறுவரை - பெருமலை. புள் - கருடப் புள். அளி கொள்ளல் - கருணை சுரத்தல். பருவம் - கார்ப் பருவம். இரு விசும்பு - கார்வானும் ஆம். கருவி - தொகுதி கொண்ட. இலங்கும் - விளங்கும். பொலம் - பொன். ஆரம் - முத்தாரம். துறக்கம் - திருவைகுண்டம்.*

**விளக்கம் :** *கார்வானம் திருமால் மேனிக்கும், மாலைக் காலத்து இருபக்கத்து அடிவானத்தும் விளங்கும் ஞாயிற்றுக்கும் நிலவுக்கும் இருகையிடத்து விளங்கும் சக்கரமும், சங்கமும், மின்னொளிக்குப் பூண்களும், வரைவீழ் அருவிக்கு மாலை யிடத்து முத்தாரம் உவமைகள் ஆகின்றன. இதனால் மழை வரவால் உலகம் தழைத்தலைப்போல, நின்னைத் தொழுதலாலும் உலகம் சிறப்பெய்தும் என்பதாம்.*

## நீயே எல்லாம்!

**சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு**
**அவையும் நீயே அடுபோர் அண்ணால்!**
**அவையவை கொள்ளும் கருவியும் நீயே!**
**முந்தியாம் கூறிய ஐந்த னுள்ளும்**
**ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே!**
**இரண்டி னுணரும் வளியும் நீயே!**
**மூன்றி னுணரும் தீயும் நீயே!**
**நான்கி னுணரும் நீரும் நீயே!**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே!**
**அதனால், நின்மருங் கின்றுமூவேழ் உலகமும்**
**மூலமும் அறனும் முதன்மையின் இகந்த**
**காலமும் விசும்பும் காற்றோடு கனலும்;**

*போரிடத்துப் பகைவரைக் கொன்றழிக்கும் தலைமை உடையோனே!*

*சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு என்று உரைக்கப்படும் ஐந்தான அவையும் நீயே யாவாய்! அவையவை உணர்ந்து கொள்ளுதற்கு உரிய ஐம்பொறிகளும் நீயே யாவாய்!*

*முற்பட யாம் உரைத்தவரான ஐம்புலன்களுள், இசைமை எனப்படும் முதலதான ஓசையால் அறியப்படும் வானமும் நீயே! ஓசையும் ஊறுமாகிய இரண்டானும் அறியப்படும் காற்றும் நீயே! ஓசை ஊறு ஒளியாகிய மூன்றானும் உணரப்படும் தீயும் நீயே. ஓசை ஊறு ஒளி சுவை என்னும் நான்கானும் உணரப்படும். நீரும் நீயே! ஓசை ஊறு ஒளி சுவை நாற்றமென்னும் ஐந்தானும் முற்ற உணரப்படும் நிலனும் நீயே!*

*ஆதலினாலே, இம் மூவேழான உலகப்பகுதிகளும், அனைத்துக்கும் மூலமாகிய ஆதிப்பொருளும், அறநெறியும், முதன்மையினின்றும் கடந்து விளங்கும் காலமும், வானமும், காற்றும், தீயும் ஆகிய அனைத்தும் நீயேயாவாய்!*

**சொற்பொருள் :** இசை - ஒலி. தோற்றம் - ஒளி. அடு - கொல்லும். கருவி - ஐம்பொறிகள். மூலம் - ஆதி; முதலில் தோன்றியவர்; இதனைச் சுத்தமாயை என்பர். முதன்மையின் இகந்த - ஆதி கடந்த ; அநாதியான.

**விளக்கம் :** ஆதியும், அதனிடத்துத் தோன்றிய மாயையும், அதனின்றும் விளக்கம்பெற்ற ஐம்பெரும் பூதமும், அவற்றை உணரும் புலன்களும், உணரக் கருவியாக விளங்கும் பொறிகளும், அநாதியாகிய காலமும் எல்லாம் திருமாலாகிய நீயே என்பதாம்.

### ஒன்றாய் மூன்றாவாய்!

**தன்னுரு உறழும் பாற்கடல் நாப்பண்**
**மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**
**கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கைத்**
**துளவஞ் சூடிய அறிதுயி லோனும்**
**மறமிகு மலியொலி மாறடு தானையால்**
**திறனிகந்து வருஉம் அவருயிர் அகற்றும்**
**விறன்மிகு வலியொலி பொலிபுகழ் புழுதியின்**
**நிறனுழு வளைவாய் நாஞ்சி, லோனும்,**
**நானிலம் துளக்கற முழுமுதல் நாற்றிய**
**பொலம்புனை இதழணி மணிமடற் பேரணி**
**இலங்கொளி மருப்பின் களிறும் ஆகி,**
**மூவுரு வாகிய தலைபிரி ஒருவனை;**

*தன்னுருவின் வண்ணத்தோடு மாறுபட்டதான பாற்கடலின் நடுவிடத்தே, மின்னொளி பரப்பும் சுடர்மணிகளைக் கொண்ட ஆயிரம் தலைகளை விரித்தபடியிருக்கும், பிளந்த நாக்கையும் அணுகுதற்கரிய தலைகளையும் கொண்டு காட்சிக்கினிதாக விளங்கும், ஆதிசேடனாகிய பாம்பணையின் மேலாகத், திருத்துழாய் மாலையைச் சூடியவனாக, அவன் அறிதுயில் பூண்டிருப்பான். அவனும்,*

*மறத்தின் மிகுதியினாலே, பேரொலியோடு, மாறுபட்டாரைக் கொல்லும் படையினையுடைமையால், வரம்பு கடந்து எதிர்த்துவருபவரின் உயிரைப்போக்கும் ஆற்றலில் மிகுந்த வல்லொலியையும், பொலிவான புகழையுங் கொண்ட, புழுதியின் மார்பை உழுகின்றதான, வளைந்த முகப்பைக் கொண்ட நாஞ்சிற் படையை உடையவன் பலராமன்; அவனும்,*

*குறிஞ்சியும் மருதமும் நெய்தலுமாகிய நானிலத்தின் நடுக்கமும் நீங்குமாறு, முழுமுதலாகிய அவன் குத்தித் தாங்கிக் கொணர்ந்த, பொன்னாற் புனைந்த பூவிதழ்கள் அணிசெய்யும், மணிபதித்த பொற்றகட்டால் ஆகிய கிம்புரி என்னும் அணி விளங்கும் ஒளி செய்யும் கோட்டினையுடையவராகக் களிறு ஆகியோனாகிய அவனும்,*

*என்னுமாறு, ஒருவனாயிருந்தும், மூவேறு உருவங் கொண்டு முதற்கண் பிரிந்து நின்று விளங்கிய பெருமானே!*

**சொற்பொருள் :** *தன்னுரு - தன்னுருவின் வண்ணமாகிய கருநிறம். நாப்பண் - நடுவிடத்தே. 'சுடர்மணி' என்றது நாகமணியை. கவைநா - பிளவுபட்ட நாக்கு. சேக்கை - படுக்கை. அறிதுயில் - துயிலும் போதும் அனைத்தையும் அறியும் நிலையிலே இருக்கின்ற வொருதன்மை. திறனிகந்து - வரம்பு*

கடந்து. வலியொலி - வலிய ஒலி; வலியும் ஒலியும் என்லும் ஆம். நிறம் - மார்பு. புழுதி - புழுதி; பூமி. துளக்கம் - கலக்கம். இதழ் - பூவிதழ். மடல் - தகடு. பேரணி - கிம்புரி. தலை - ஆதிநாளில்.

### உயர்கொடிச் செல்வனே

**படர்சிறைப் பன்னிறப் பாப்புப் பகையைக்**
**கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை**
**ஏவலின் முதுமொழி கூறும்**
**சேவலோங் குயர்கோடிச் செல்வநற் புகழவை;**
**கார்மலர் பூவை கடலை இருள்மணி**
**அவையைந்தும் உறழும் அணிகிளிர் மேனியை ;**
**வலம்புரி வாய்மொழி அதிர்புவான் முழக்குச்செல்**
**அவைநான்கும் உறழும் அருள்செறல் வயின் மொழி;**

படர்ந்த சிறைகளோடுங் கூடியதும், பன்னிறப் பாம்பு கட்கும் பகையாவதுமாகிய கருடனைக் கொடியென ஏற்றுக் கொண்ட, குறையாத செல்வத்தினை உடையோனே! நின் ஆணையாலே, தானும் வேதங்களை உரைக்கின்ற கருடச் சேவ லுடன் உயர்ந்துவிளங்கும் கொடியையுடைய செல்வனே! நல்ல புகழாயினவற்றை எல்லாம் உடையோனே! கார்மேகம், காயாம் பூ, கடல், இருள், நீலமணி என்னுமிவை ஐந்தும் ஒப்பாகுமாறு அழகுவிளங்கும் கார்மேனியை உடையோனே! அருளின் காரணமாகப் பிறக்கும் நின் வாய்ச்சொற்களின் ஒலி வலம்புரிச்சங்கின் ஒலியையும், மறைமொழியின் ஓசையையும் போன்றிருக்கும். சினம் காரணமாக நின்னிடத்திருந்து பிறக்கும் நின் வாய்ச்சொற்களின் ஒலியோ, வானத்து அதிர்வையும், மேகத்து இடிமுழக்கையும் போன்றிருக்கும்.

**சொற்பொருள் :** சிறை - சிறகுகள். பன்னிறம் - பலவகை நிறம். பாப்பு - பாம்பு. கோடாத - குறையாத. முதுமொழி - ஞான மொழிகள்; வேதவாசகங்கள். பூவைமலர் - காயாம்பூ. வாய் மொழி - வேதம். செல் - மேகம். செறல் - சினத்தல்.

### விருப்பும் வெம்மையும்!

**முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவைமூன்றும்**
**கடந்தவை யமைந்த கழலின் நிழலவை;**
**இருமை வினையுமில ஏத்துமவை ;**
**ஒருமை வினைமேவும் உள்ளத்தினை ;**
**அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை**
**அடியும் கையும் கண்ணும் வாயும்**
**தொடியும் உந்தியும் தோளணி வலயமும்**
**தாளும் தோளும எருத்தொரு பெரியை ;**

**மார்பும் அல்குலும் மனத்தொடு பரியை ;**
**கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியை ;**
**வேள்வியும் மறனும் விருப்பொடு வெய்யை ;**

முடிந்ததும், முடியப்போவதும், தோன்றப் போவதுமாகிய காலங்கள் மூன்றும் கடந்தவையான உயிரினமனைத்தும் கழல் பொருந்திய நின் திருவடி நீழலின்கண் உள்ளவையே ஆகும். நின்னைப்போற்றும் உயிர்கட்கு இருமைவினையின் பற்றுதலும் இல்லை. அனைத்தையும் காத்தலாகிய ஒரு செயலையே பொருந்தும் உள்ளத்தினை உடையாய்!

இலைகளுக்கு மேலாக உயர்ந்து மலர்ந்த, வளவிய இதழ் களைக் கொண்ட செந்தாமரை மலரைப் போன்றவை, நின் திருவடிகளும், கைத்தலங்களும், கண்களும், வாயும் ஆகும்: கைவளையும், உந்தித்தடமும், தோளணியாகிய வலயமும், தாளும், தோளும், கழுத்தும் பெரியவாகப் பெற்றவனே! மார்பும், அல்குலும், மனமும் பரந்தவாகப் பெற்றோனே! கேள்வியும், அறிவும், அறப்பண்பும் நுண்மையாகக் கொண்டிருப்போனே! வேள்விக்கண் விருப்பமும், போர்மறத்தின்கண் வெம்மையும் கொண்டு விளங்குவோனே!

**சொற்பொருள் :** காலத்தைக் கடந்து நிற்கும் ஜீவன் முக்தர்கள் அவன் நிழலில் இருப்பவர். எனவே, அவன் காலங்களையும் கடந்து நிற்கும் முதல்வன் என்றனர். இருமை வினை - நவ்வினை, தீவினை. ஒருமைவினை - காத்தல். அடை - இலை. வள்ளிதழ் - வளமான இதழ். தோளணி வலயம் - தோள் வலயம் என்னும் அணி. எருத்து - கழுத்து. அல்குல் - உந்திக்குக் கீழும் முழங்காலிற்கு மேலுமாக உடுக்கைபோல் விளங்கும் உடற்பகுதி. கேள்வி - நூற்கேள்வி; பிறரறிவின் பயனைக் கேட்டறியும் அறிவு இது. அறிவு - இயல்பாக அமைந்த பகுத்தறிவு. அறம் - அறிவொடு பட்ட சீரிய ஒழுக்கம். வெய்யை - வெம்மை உடைய.

### எம் ஆசை!

**அறாஅ மைந்தின் செறாஅச் செங்கண்**
**செருமிகு திகிரிச் செல்வ! வெல்போர்!**
**எரிநகை இடையிடுபு இழைத்த நறுந்தார்ப்**
**புரிமலர்த் துழா அய் மேவல் மார்பினோய்!**
**அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்;**
**பன்மாண் அடுக்க இறைஞ்சினெம்; வாழ்த்தினெம்**
**முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்;**
**இன்னும் இன்னுமெம் காமம் இதுவே.**

*நீங்காத வலிமையினையும், சினவாமலே அமைந்த செங் கண்களையும், வெல்லும் போரினைச் செய்யும் செருக்களத்தே பகையை மேம்பட்டு விளங்கும் சக்கரப் படையினையும் உடையோனே! நெருப்பொத்து மலர்ந்துள்ள வெட்சிப்பூவைத் திருத்துழாயின் இடையிடையே இட்டுத் தொடுத்துக் கட்டிய மாலையினைப் பொருந்திய மார்பினை உடையோனே! 'எம் அன்னையாகவே நினைத்து நின்னடியிணைகளைத் தொழுதேம். பன்முறை அடுத்தடுத்து நின்னடிகளை வணங்கினேம். முன்னும் முன்னும் பல பிறவிகளினும் யாம் செய்த தவத்தின் பயனாக, நின் திருவடிகளை வாழ்த்தினேம். பெருமானே! இனியும் இனியும் வரும் எம் பிறவிகளினும், எம் விருப்பம் நின் திருவடிகளை வணங்கலுறும் இதுவே யாகும்!*

**சொற்பொருள் :** *மைந்து - வலிமை. எரி நகை - எரிபோல் மலர்ந்த வெட்சிப்பூ. காமம் - ஆர்வம். பன்மாண் - பன்முறை.*

**விளக்கம் :** *பெருமானிடம் மீண்டும் மீண்டும் அவனைத் தொழுது போற்றுதலாகிய சிறந்த இன்பத்தையே வேண்டு கின்றனர். எல்லாவகை இன்பங்களிலும் சாலச்சிறந்தது நித்திய தேவதரிசனமே என்பது கருத்து. இதனை உணர்ந்து போற்றல் வேண்டும்.*

**பதினான்காம் பாடல்**

# செவ்வேள் (14)

**பாடியவர் :** *கேசவனார்;* **பண் வகுத்தவர் :** *கேசவனாரே;* **பண் :** *நோதிறம்.*

*கார்காலத்து வரவுக்கு முன்பாகவே மீண்டு வருவதாகச் சொல்லிச் சென்ற தலைவன், குறித்தபடி வாரான் ஆயினான். அதனால், தலைவியின் பிரிவுத்துயரம் பெருகியது. அதனைப் போக்கக் கருதினாள் தோழி. முருகனைப் போற்றுவாள்போலப் பாடி, 'அவன் வருவான்; ஆற்றியிரு' என, இவ்வாறு குறிப்பாகக் கூறுகின்றாள்.*

**சுடர்ப் படையோய்!**

**கார்மலி கதழ்பெயல் தலைஇ ஏற்ற**
**நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே ;**
**தண்நறுங் கடம்பின் கமழ்தாது ஊதும்**
**வண்ணவண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே ;**
**அடியுறை மகளிர் ஆடும் தோளே**
**நெடுவரை அடுக்கத்து வேய்போன் றனவே ;**
**வாகை ஒண்பூப் புரையும் உச்சிய**
**தோகை யார்குரல் மணந்து தணந்தோரை**

**நீடன்மின் வாரும் என்பவர் சொற்போன் றனவே ;**
**நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன ;**
**மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின**
**அழுகை மகளிர்க் குழுவை செப்ப ;**
**நீரயல் கலித்த நெரிமுகைக் காந்தள்**
**வார்குலை அவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்**
**விடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப்**
**பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்**
**கார்மலிந் தன்றுநின் குன்று; போர்மலிந்து**
**சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே!**

*மேகங்கள் பெருமழையினை விரைவோடு பெய்தலைத் தொடங்கின. மழைநீரை ஏற்றதனால் நீரால் மலிந்த சுனைகள் நிறைந்து வழிந்தன; அவற்றிடத்து நீர்ப்பூக்கள் பலவும் இதழ விழ்ந்து மலர்ந்தன. தண்மையும் நறுமணமுங் கொண்ட கடப்ப மலர்களின் மணங்கமழுகின்ற பூந்தாதினை ஊதும் அழகிய வண்டுகளின் ரீங்கார ஒலியானது, பண்ணிசைபோன்று ஒலித்தது. பெருமானின் அடியவராகிய மகளிர் தோளெடுத்து ஆடினர்; அவரது அசைந்தாடிய தோள்கள், நெடுவரைச் சாரலிடத்துள்ள மூங்கிலைப்போல விளங்கின. வாகையது ஒள்ளிய பூவைப்போல விளங்கும் உச்சிக் கொண்டையையுடைய மயில்களின் அகவுதற்குரலானது, மணந்துகொண்ட பின்னர்த் தம் காதலியரைத் தனித்து வாடவிட்டுப் பிரிந்து சென்றவரை நோக்கி, 'நும் பிரிவை நீட்டியர்தீர்கள்; விரைய வாருங்கள்' என்று அறவுரை சொல்வாரின் சொற்களைப் போன்று எழுந்தது. புதுமலர்களைக் கொண்ட கொன்றையின் பூச்சரங்கள், பொன் மாலைகளைப் போன்று கிளைகளில் தொங்கின.*

*அழுகை கொண்ட பெண் குழந்தைகளுக்குத் தாய்மார் காட்டிப் புலியெனச் சொல்லி அச்சுறுத்தும் வண்ணம், மெல்லிணர்களைக் கொண்ட வேங்கையின் பூக்கள் அகன்ற பாறையிடத்தே உதிர்ந்து கிடந்தன. நீர்க்கு அருகாமையிலே கிளைத்த நெரித்த முகைகளைக் கொண்ட காந்தட் பூக்கள், நீண்ட குலைகளிடையே மலர்ந்த வளவிய வரிசையான இதழ்கள் தோறும், அதனருகே கொடிவிட்டுப் படர்ந்த மென்மைகொண்ட தோன்றியின், பவழம்போல விளங்கும் செந்நிறப் பூக்கள் வீழ்ந்திருந்தன. இவ்வாறாக, நினது திருப்பரங் குன்றத்திடத்தே, வேனிற்காலத்தும், கார்காலத்தின் தன்மையே நிறைந்திருந்தது. போரினை மேற்கொண்டு, சூரனை அவன் சுற்றத்தோடும் அழித்த, ஒளிவிளங்கும் வேற்படையினை உடையோனே! இஃது நின் பரங்குன்றின் சிறப்பாகும்.*

**சொற்பொருள் :** *கார் - கார்ப்பருவம். கதழ்வு - விரைவு. பண்ணை போன்றன - பண்ணிசை போன்றன: அடியுறை - அடியவரான. அடுக்கம் - சாரல். தோகை - மயில். ஆர்குரல் - பெருங்குரல். கலித்த - கிளைத்த. தோன்றி - தோன்றிப் பூ. சூர் - சூரன். மருங்கு - சுற்றம்.*

**வள்ளிப் பூ நயந்தோய்!**

**கறையில் கார்மழை பொங்கி யன்ன**
**நறையின் நறும்புகை நனியமர்ந் தோயே!**
**அறுமுகத் தாறிரு தோளால் வென்றி**
**நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே!**
**கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை**
**எழீஇப் பாடும் பாட்டமர்ந் தேயே!**
**பிறந்த ஞான்றே நின்னை உட்கிச்**
**சிறந்தோர் அஞ்சிய சீருடையோயே!**
**இருபிறப் பிருபெயர் ஈர நெஞ்சத்து**
**ஒருபெயர் அந்தணர் அறனமர்ந் தோயே!**
**அன்னை யாகலின் அமர்ந்துயாம் நின்னைத்**
**துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்**
**இன்னு மின்னுமவை ஆகுக**
**தொன்முதிர் மரபின் புகழினும் பலவே!**

*குற்றமில்லாத கார்காலத்து வெண்மேகங்கள் பொங்கி எழுந்தாற்போல, எழுகின்ற நறுமணப் பொருள்களின் நறும் புகையினை மிகவும் விரும்புகின்றோனே! ஆறு திருமுகங்களோடும், பன்னிரு தோள்களோடும் தோன்றி, மணச் செவ்வியாற் பிற நறுமலர்களை வெற்றி கொண்டதாக விளங்கும், வள்ளியம்மையாகிய நறுமலரினை விரும்பியோனே! கணவர் தம்மைத் தழுவியவராகச் சுற்றிக் கொண்டிருக்க, அந்த இன்பம் என்றும் நிலைக்கவிரும்பிய மகளிர், யாழினை மீட்டியவராக நின்னைக் குறித்துப் பாடும் பாட்டினை விரும்புவோனே! நீ பிறந்த அந்நாளிலேயே, நின்னைக் கண்டு நெஞ்சம் நடுக்குற்றுத், தேவர்களெல்லாம் அஞ்சிய சிறப்பினைக் கொண்டோனே!*

*இரு பிறப்பும், இருபெயரும் கொண்டோராகவும், அருள்விளங்கும் நெஞ்சத்தைக் கொண்டோராகவும் விளங்கும், அந்தணர் என்கின்ற ஒப்பற்ற புகழை உடையோரின், அறவாழ் விடத்துப் பொருந்தி யிருப்பவனே!*

*அத்தகைய சிறப்பினை நீயாதலால், யாமும் நின்னை விரும்பியவராக, நின் திருவடிகளை அணைந்தணைந்து வழிபடுகின்றேம். பழமையாக முதிர்ந்த மரபினையுடைய நின் புகழினும் பலவாக, நின்னை வழிபடுவார் பெறுகின்ற பயன், இன்னும் இன்னும் பலவாகப் பல்கிப் பெருகுவதாகுக, பெருமானே!*

**சொற்பொருள் :** *கறை - குற்றம். நறை - மணப்பொருள்கள்; அகில் முதலியன. கேளிர் - கணவர். உட்கி - நெஞ்சம் நடுக்குற்று. சிறந்தோர் - தேவர்; இந்திரன் உள்ளிட்டோர். துன்னி - நெருங்கி; சேர்ந்து.*

**விளக்கம் :** *'இன்னுமின்னுமவை ஆகுக' என்றது. பெருமான் மென்மேலும் அடியார்க்கருள்தலின், அவன் புகழும் மென்மேலும் பெருகிச் சிறக்க என்றதாம்.*

*'முருகனின் புகழ் பெரிது; அவன் அடியவர் அவனைத் தொழலாற் பெறுகின்ற பயனோ அப் புகழினும்பெரிது' என்கின்றனர். 'தொண்டர்தம் பெருமை சொல்லற்கும் அரிதே' என்னும் சான்றோர் வாக்கினையும் இங்கு நினைக்க. இறைமை அனைத்தினும் சீரியது; செவ்வியது; புகழால் மிக்கது. அதனையே சார்ந்து நின்று, அதன் நினைவாகவே தம்மை ஈடுபடுத்துவார் பாலும் அவ்விறைமையின் பண்புகள் மிளிரத் தொடங்கும்; தொடங்கவே, அவர் பெருமை மிக மிகப் பெரிதாயிற்று என்க. எளிதாகக் கிடைக்கும் இதனைப் பெறுதற்கு எல்லாரும் முனைந்து முன்வர வேண்டும் என்பதாம்.*

**பதினைந்தாம் பாடல்**

## திருமால் (15)

**பாடியவர் :** *இளம்பெரு வழுதியார்;* **பண் வகுத்தவர் :** *மருத்துவன் நல்லச்சுதனார்;* **பண் :** *நோதிறம்.*

### துறக்கமும் அரிது!

**புலவரை யறியாப் புகழொடு பொலிந்து
நிலவரைத் தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்லிசை அமையும்
புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே; பலவினும்,
நிலவரை யாற்றி நிறைபயன் ஒருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே;
சிலவினும் சிறந்தன தெய்வம் பெட்புறு
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே; குலவரை சிலவினும்
சிறந்தது; கல்லறை கடலும் கானலும்போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம் வேறுவே றுருவின் ஒருதொழில் இருவர்த்
தாங்கு நீள்நிலை ஓங்கிருங் குன்றம்;
நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்!**

*அறிவின் எல்லையானும் அளந்து அறியப்படாத புகழோடு சிறப்புற்று விளங்குபவை; இந் நிலவுலகைத் தாங்கித் தாம் நிற்கும் நிலையினின்றும் என்றும் பிறழாதவை; அழிவற்ற சக்ரவாளம் முதலாகச் சொல்லப்படுபவை; பழம் பெருமையோடு பொருந்தியவை; புலவர்கள் ஆராய்ந்து உரைத்த அழகுடன் உயர்ந்து நிற்பவை. பலவான பெரு மலைகள் ஆகும். அப் பலவற்றுள்ளும், நிலவுலகிற்கு உதவுவனவாகிய பல பொருட்களைத் தந்து, நிறைவான பயன்கள் ஒருங்கே தம்முடன் நிலையாக அமைந்து விளங்க விளங்கும் மலைகள் சிலவாகும். அச் சிலவான மலைகளுள்ளும், மலர்களால் நிறைந்த சுனைகளையும், மேகங்களாற் சூழப்பெற்ற முடிகளையும் கொண்டு விளங்கும் குலகிரிகள் என்பன மிகமிகச் சிலவே.*

*அத்தகைய குலவரைகள் சிலவற்றினும் சிறந்தது, திருமாலாகிய நினக்குரிய திருமாலிருஞ் சோலைமலைக் குன்றமாகும். கல்லென்னும் ஒலியோடு ஆரவாரிக்கும் கடலும், கடற்கானலும் போன்றும், சொல்லும் அதனிற் பொருந்திய பொருளும், போன்றும், வேறுவேறு உருவினைக் கொண்டு ஒரு தொழிலையே செய்துவரும் திருமாலும் பலராமனுமாகிய இருவரையும் தாங்கி நிற்கும், நெடிய நிலைபேற்றைக் கொண்டதும், மிகவுயர்ந்த திருமாலிருஞ் சோலைமலைக் குன்றம் ஆகும்.*

*அக் குன்றத்து உறைவோனாகிய, மணங்கமழும் பூங்கொத்துக் களோடுங் கூடிய திருத்துழாயினைச் சூடியோனாகிய நீதான் அருள் செய்தால் அல்லாமல், தனிச்சிறப்புப் பெற்றுள்ள துறக்கவுலகை ஏறிச்சென்று சேர்தல், யாவர்க்கும் அரியதாகும்!*

**சொற்பொருள் :** *புலவரை - அறிவின் எல்லை. புகழ் - சிறப்பு. பொலிந்து - அழகு பெற்று. பெயரா - திரியாத. நேமி - சக்கரவாளம். பயன் - பயன்தரு பொருள்கள். பெட்புறும் - விருப்பங் கொள்ளும். 'மலரகன் மார்பு' என்றது, மலர்கள் நிரம்பிய சுனைகளை. மை - கருமை ; கார்மேகத்தைக் குறித்தது. குடுமி - மலை முடி. கல்லறை - கல்லென ஒலிக்கும். ஒரு தொழில் - காக்குந் தொழில். வீறு - தனிச் சிறப்பு. துறக்கம் - போகவுலகம்; வைகுண்டம்.*

**விளக்கம் :** *'குலவரை' என்றது அஷ்ட குல மலைகளை. கடல் நீலநிறம்; கடற்கானல் வெண்மை நிறம்; இது நிறத்தால் கண்ட ஒற்றுமை நயம். இருவரும் கார்மேனி வெண்மேனியராக இருப்பதனை இவ்வாறு கூறினர்.*

## ஏத்துகம் சிலம்ப!

**அரிதிற்பெறு துறக்கம் மாலிருங் குன்றம்**
**எளிதிற்பெற லுரிமை ஏத்துகம் சிலம்ப!**

*பெருமானே! அங்ஙனம் அரிதாக முயன்று பெறுதற்கு உரியது துறக்கம் ஆகும். அதனை எளிதாகப் பெறுதற்கு உதவவல்லது நின் மாலிருங் குன்றம். ஆகவே, எமக்கு நின்பாலுள்ள உரிமையைக் கூறியவராக, எம் குரல் இம் மலைப்புறமெல்லாம் எதிரொலிக்குமாறு, யாமும் நின்னைப் போற்றிப் போற்றிப் பாடுவேமாக!*

## நினைமின்! கேண்மின்!

**அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்**
**மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி**
**அலங்கும் அருவி ஆர்த்திமிழ்பு இழியச்**
**சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவின்**
**சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்**
**தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்**
**நாமத் தன்மை நன்கனம் படியெழ**
**யாமத் தன்மையிவ் வையிருங் குன்றத்து**
**மன்புனல் இளவெயில் வளாவவிருள் வளர்வெனப்**
**பொன்புனை உடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே!**
**நினைமின் மாந்தீர்! கேண்மின் கமழ்சீர்!**

*மென்மையான தலைகளைக் கொண்ட ஆதிசேடனாகிய பாம்பானவன், அத் தலைகளை உயர்த்து அசைந்தாடியபடி நினக்கு நிழல்செய்து கொண்டிருப்பான். நினக்கு மன்னோனாகப் பிறந்தவன் பலராமன்; அவன் மார்பினிடத்து வெண்கடப்ப மலர்மாலை விளங்கும். அம் மாலையைப்போல அழகு விளங்கத் தோன்றியதாக அசைந்து வீழும் அருவியானது, மிக்க ஒலியோடு விழும். அவ்வருவி நீரால் சிலம்பாறு அழகுபெறும். அத்தகைய சிலம்பாறு அழகுசெய்திருக்க, அதனால் சிறப்புப் பொருந்தி யுள்ள திருமாலிருஞ்சோலை மலையாக விளங்குவது, நின் குன்றம்.*

*தாம் விரும்பிய இச்சைகளை நின் திருவடிக்கண்ணே விதைத்து, விளைவாகிய பெரும்பயனைக் கொள்வார் மக்கள். இதனால் திருமாலெனும் பெயரின் புகழ் உலகெங்கும் எழுந்தொலிக்கின்றது. இத்தகைய அழகிய திருமாலிருங் குன்றி னிடத்தே, நிலைபெற்ற குளிர்ச்சிகொண்ட இளவெயிலானது தன்னைச் சூழ்ந்து நிற்க, நள்ளிரவுத் தன்மைகொண்டடி இருளானது வளர்ந்து நிற்பதுபோலப், பொன்வேய்ந்த உடுக்கை யோடுங் கூடிய திருமாலாகிய பெருமான், கோயில்கொண்டு நிலைபெற்றிருக்கின்றான்.*

மாந்தர்களே! அப் பெருமானையே நினையுங்கள்! அவன் உறையும் மணம் பொருந்திய திருமாலிருஞ் சோலை மலையின் சிறப்பினைக் கூறுவோம்; அதனையும் கேட்பீராக!

**சொற்பொருள் :** அணர் - நிமிர்ந்து நிற்கும். கயம் - மென்மை. தம்முன் - பலராமன். மரா - வெண் கடம்பு. தார் - மார்பிடத்து மாலை. அலங்கும் - அசையும். ஆர்த்து - ஒலித்தபடி. திருவின் சோலையொடு தொடர் மொழி மாலிருங் குன்றம் - திருமாலிருஞ் சோலை மலை. நாமத் தன்மை - பெயரின் புகழ் நிலை. யாமம் - சிறுபொழுதுப் பிரிவு; இங்கே நள்ளிரவு; குறிஞ்சிக்குரிய சிறுபொழுது. மன்புனல் - நிலைத்த குளிர்ச்சி. வளாவ - சூழ்ந்திருக்க. வளர்வு - ஓங்கி உயர்ந்து நிற்றல். கமழ்சீர் - மணக்கும் சிறப்பு; குன்றைக் குறித்தது.

**விளக்கம் :** பெருமான் தன் முன்னவனோடுங் கூடியவனாகக் கோயில் கொண்டிருக்கும் அந்தச் சீரிய நிலையினையே நினைமின்; அப் பேறுபெற்ற குன்றின் புகழையே பாடுமின் என்பதாம்.

## நிறம் விளங்கும் குன்றம்!

**சுனையெலாம் நீலம் மலரச், சுனைசூழ்**
**சினையெலாம் செயலை மலரக், காய்கனி**
**உறழ, நனைவேங்கை ஒள்ளிணர் மலர,**
**மாயோன் ஒத்தவின் னிலைத்தே ;**
**சென்று தொழுகல்லீர்! கண்டு பணி மின்மே!**
**இருங்குன் றென்னும் பெயர்பரந்த ததுவே**
**பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது;**
**கண்டுமயர் அறுக்குங் காமக் கடவுள்;**
**மகமுயங்கு மந்தி வரைவரை பாய;**
**முகிழ் முயங்கு முல்லை முறைநிகழ்வு காட்ட;**
**மணிமருள் நன்னீர்ச்சினை மடமயில் அகவக்;**
**குருகிலை உதிரக் குயிலினங் கூவப்;**
**பார்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்**
**நாநவில் பாடல் முழவெதிர்ந்த தன்ன ;**
**சிலம்பிற் சிலம்பிசை ஓவாது; ஒன்னார்க்**
**கடந்தட்டான் கேழிருங் குன்று;**

திருமாலிருஞ்சோலை மலையிடத்துள்ள சுனையெல்லாம் நீலப் பூக்களோடு விளங்கும். அவை பெருமானின் நீல வண்ணத்தை ஒத்திருக்கும். சுனையைச் சூழ்ந்துள்ள சோலைமரக் கிளைகளெல்லாம் செவ்விய பூக்களை உடையவாயிருக்கும்; அவை பெருமானின் பொன்புனை உடுக்கையைப் போன்று விளங்கும். மரக்கிளைகளுள் காய்களும் கனிகளும் பலவகை

நிறங்களுடன் திகழும்; அவை, பெருமானின் அருளைப்போலத் தம்மை அடைந்தார்க்கு உதவி ஆதரிப்பன. மொக்குகளோடுங் கூடிய வேங்கை மரங்கள், ஒளிகொண்ட செந்நிறப் பூக்களைக் கொண்டு விளங்கும்; அவை பகைவர்க்கு அச்சத்தையும் அடியவர்க்கு அருளையும் தரும் பெருமானைப்போல விளங்கும். இவ்வாறு திருமாலிருஞ் சோலை மலையிடத்துள்ள அனைத்துமே மாயோனாகிய அவனோடும் ஒப்புடையவாகவே விளங்குவதைக் காணலாம். இதனால், அனைவருமே குன்றிடத் துச் சென்று அவனைப் போற்றிப் பயன் பெறுவீர்களாக! அங்ஙனம், குன்றிடத்துச் சென்று தொழுதற்கு இயலாத மக்களே! உங்கட்கும் ஒன்று சொல்வோம்! அவனது குன்றத்தின் தோற்றத்தைத் தொலைவிலிருந்தேனும் கண்டு, அவனை நினைந்து, அதனைப் பணிவீர்களாக!

திருமாலிருங் குன்றம் என்னும் புகழ் உலகெங்கும் பரவி யுள்ளது. பெரிதான ஆரவாரத்தைக் கொண்ட கடலாற் சூழப்பெற்ற இவ்வுலகத்து மிகப்பழமையாக வரும் புகழை உடையதும் அதுவாகும். தன் தோற்றத்து அளவாலேயே தன்னைக் கண்டாரது மயக்கமாகிய பிணியைப் போக்கும் வழிபடு கடவுளைப் போன்றதும் அம்மலையாகும்.

குட்டியைத் தழுவிய மந்திகள் மலைக்குமலை பாய்ந்து கொண்டிருக்கும். மொட்டுக்களோடுங் கூடிய முல்லை தன் மலர்ச்சியாகிய நிறைவைக் காட்டியபடி விளங்கும். நன்னீர்ச் சுனைகளின் நீரானது நீலமணியைப்போல நிறங்கொண்டு விளங்கும். அவ்விடத்தே விளங்கம் இளைய மயில்கள் கிளைகள் தோறும் இருந்தபடி அகவிக் கொண்டிருக்கும். குருக்கத்தி, இலை உதிரப்பெற்றதாய் விளங்கும். குயிலினங்கள் கூவிக் கொண்டிருக்கும்.

சொல்லப்படும் குழலும் பாண்டிலும் சேர்ந்து ஒலிக்க, அது பாடுவார் நாவினாற் பாடுகின்ற பாடலும், அதற்குரிய தாளமாக அமைந்த முழவொலியும் சேர்ந்து ஒலிப்பதுபோலத் தோற்றும். பகைவரைப் போரிட்டழித்து வெற்றி கொண்டோனாகிய திரு மாலின் நிறமிக்க குன்றல்லவா! அதனால், அக்குன்றத்தில் எழுகின்ற ஒலிகளும், அவற்றுக்கு எதிராக எழும் இசைபோன்ற எதிரொலி களும் எப்போதும் ஓய்வின்றி எழுந்துகொண்டே யிருக்கும்.

**சொற்பொருள் :** நீலம் - நீலப் பூ. செயலை - அசோகம்; செந்நிறப் பூக்களும் ஆம். உறழ - பல்வேறு நிறத்தவாய் விளங்க. நனை - மொக்கு. பெயர் பரந்தது - பெயர் உலகெங்கும் பரவியது. கலி - ஆரவாரம். தொன்றியல் - பழையாக வரும் தன்மை. மயர் - மயல்; மயக்கம். காமக் கடவுள் - விரும்பும் கடவுள்; வழிபடுகடவுள். முகிழ் - மொக்கு. முறை - முறைமை ; முறைப்பட மலரும் தன்மை.

மடமயில் - இளமயில். குருகு - குருக்கத்தி. பாண்டில் - தாளக் கருவி. சிலம்பிசை - எதிரொலிக்கும் இசை நயம். கேழ் - நிறம். ஒன்னார் - பகைவர்; அவுணர்.

**விளக்கம் :** திருமால் கோயில் கொண்டுள்ள அதனாலேயே மலைப்பகுதிகள் அழகுபெற்று விளங்குகின்றன. அவனை வெண்டிப் பெறாது, தாமாகவே வந்தெய்தப் பெற்றவை அச் சிறப்புக்கள். இங்ஙனமாக, அவனை வேண்டி வழிபாடுவார் பெறுகின்ற பயன் அத்துணைப் பெரிது என்பதாம். காமக் கடவுள் - ஆசைகளை நிறைவு செய்து அருளும் கடவுளும் ஆம்.

**செய்வீராக!**

**தைய லவரொடும் தந்தா ராவரொடும்**
**கைம்மக வோடும் காத லவரொடும்**
**தெய்வம் பேணித் திசைதொழுதினிர் சென்மின்;**
**புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்**
**வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்**
**எவ்வயின் உலகத்தும் தோன்றி, அவ்வயின்**
**மன்பது மறுக்கத் துன்பம் களைவோன்**
**அன்பது மேஎ இருங்குன் றத்தான்;**

மாந்தரே! இல்லத் துணைவியரோடும், தாய் தந்தையரோடும், கைக்குழந்தையோடும், அன்புச் சுற்றத்தாரோடும், திருமாலிருஞ்சோலை மலையினையே தெய்வமாகக் கொண்டு, அது விளங்கும் திசையை நோக்கியே தொழுதவராக, அவனை வழிபடச் செல்வீராக.

தன் திருவுந்திக்கண்ணே ஆதிநாளில் தோன்றிய செந்தாமரை மலரைப் போலத் தோன்றும் செவ்விய கண்களை உடையவன் அவன்; கடல் நீரைக் கவரும் கார்மேகம், இருள், நீலமணி ஆகியவற்றைப் போன்று விளங்கும் திருமேனி வண்ணத்தைக் கொண்டவன் அவன், எவ்வகைப்பட்ட உலகத்தும் தோன்றி, அவ்விடத்து மக்களுக்கு, மயக்கத்தாலே சென்றடையும் துன்பங்களை ஒழிப்பவன் அவன். அவனே இவ்வுலகினரிடத்தும் அன்பு பொருந்தியவனாக, இப் பெருங் குன்றிடத்தேயும் கோயில் கொண்டுள்ளான்!

**சொற்பொருள் :** தையலவர் - மனையாட்டியார். தந்தார் - தாய் தந்தையர். காதலர் - அன்புச் சுற்றததார். புவ்வம் - தொப்புள். மயங்கும் - ஒக்கும். மன்பது - மக்கள் கூட்டம். மறுக்கம் - மயக்கம். அன்பது - அன்பு. மேஎ - விரும்பி.

**விளக்கம் :** 'பெருமானைக் குடும்பத்தோடும் சென்று தொழுது பயன் பெறுங்கள்' என்று மக்களனைவரையும் அழைக்கின்றார் ஆசிரியர்.

## பரவுதும் தொழுதே!

**கள்ளணி பசுந்துளவினவை, கருங்குன் றனையவை ;**
**ஒள்ளொளியவை ; ஒருகுழையவை ;**
**புள்ளணி பொலங் கொடியவை ;**
**வள்ளணி வளைநாஞ்சிலவை ;**
**சலம்புரி தண்டேந்தினவை ;**
**வலம்புரி வய நேமியவை ;**
**வரிசிலை வய அம்பினவை ;**
**புகரிணர்சூழ் வட்டத்தவை ; புகர்வாளவை ;**
**எனவாங்கு,**
**நலம்புரீஇ அஞ்சீர் நாம வாய்மொழி**
**இதுவென உரைத்தலினெம் உள்ளமர்ந்து இசைத்திறை**
**இருங்குன்றத்து அடியுறை இயைகெனப்**
**பெரும்பெயர் இருவரைப் பரவுதுந் தொழுதே!**

*"தேன் பொருந்திய பசுமையான திருத்துளவத்தை அணிந்துள்ளனை; கரிய குன்றொத்த நிறத்தை உடையை; வெண்மை பொருந்திய பேரொளியை உடையை; ஒப்பற்ற குண்டலத்தினை உடையை; கருடப்புள் அழகுசெய்திருக்கும் வெற்றிக் கொடியினைக் கொண்டனை; கூர்மை பொருந்திய வளைந்த கலப்பைப் படையினை உடையை; சினம் பொருந்திய தண்டாகிய படைக்கலத்தை உடையை; வெற்றி விளைக்கும் சக்கரப் படையை உடையை; கட்டமைந்த வில்லோடு வெற்றி பொருந்திய அம்புகளையும் உடையை; புள்ளிகளின் ஒழுங்கு சூழ்ந்திருக்க விளங்கும் பாராவளையினை உடையை; புள்ளி கொண்ட வாட்படையினை உடையை!" எனவெல்லாம், நன்மையை விரும்பியவாறு அழகிய சிறப்பையுடைய, புகழமைந்த வேதம் நின் தன்மை இதுவென உரைத்துள்ளது. அவ்வாறே யாமும் கூறிப் போற்றுவோம், எம் உள்ளத்தும் பொருந்தி நின்று, நின்புகழை இசைத்து, எம்மை வாழ்விக்கும் தலைவனும் நீயே!*

*'திருமாலிருங் குன்றத்தின் அடிக்கண் பொருந்தி வாழ்தல் எமக்கும் பொருந்துக' என்று கருதிப், பெரும் புகழ்பெற்ற இருவராகிய - கண்ணனும் பலதேவரும் ஆகிய - நின்னடிகளைத் தொழுது, யாமும் பரவுவேமாக! எமக்கும் அருள்வாயாக!*

**சொற்பொருள்:** *கள் - மது - தேன். ஒள்ளொளி. வெண்மையாகிய பேரொளி. குழை - காதணி. வள் - கூர்மை. வரி - கட்டு. புகர் - புள்ளி.*

**விளக்கம் :** *திருமாலின் படைகளைக் கூறிப் போற்றியது. அவற்றை ஏந்தியோனாகிய அவனையும் நினைந்து போற்றிற்றுமாகும்.*

பெருமானிடம் அன்புடையார்க்கு, அவன் கோயில் கொண்டிருக்கும் குன்றமும் சிறப்புடையதாக விளங்குகின்றது. அதனையும் போற்றுகின்றனர். இவ்வாறு தம்மால் விரும்பப் படுவாரின் தொடர்பு உடையவற்றையும் போற்றுதல் மக்கள் உள்ளத்தியல்பு ஆகும்.

### பதினாறாம் பாடல்

## வையை (16)

**பாடியவர் :** *ஆசிரியர் நல்லழிசியார்;* **பண் வகுத்தவர் :** *ஆசிரியர் நல்லச்சுதனார்;* **பண் :** *பண்நோதிறம்.*

*தலைவியின் ஊடற்சினத்தைத் தணிவித்து, அவளைத் தன் னோடுஞ் சேர்த்தருளுமாறு வேண்டின் தலைவனுக்கு, அதனை மறுத்து உரைப்பாளான தோழி, வையையைப் பொற்றுவாள் போலத், தலைவனின் போற்றா ஒழுக்கத்தைக் குறிப்பிட்டு இவ்வாறு கூறுகின்றனள்.*

### கரை - துறை - செறு - கா

**கரையே, கைவண் தோனல் ஈகைபோன்மென**
**மைபடு சிலம்பிற் கறியொடுஞ் சாந்தொடும்**
**நெய்குடை தயிரின் நுரையொடும் பிறவொடும்**
**எவ்வயி னானும் மீதுமீ தழியும்;**
**துறையே, முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்**
**பொலம்புனை அவிரிழை கலங்கலம் புனல்மணி**
**வலம்சுழி உந்திய திணைபிரி புதல்வர்**
**கயந்தலை முச்சி முஞ்சமொடு தழீஇத்**
**தத்தம் துணையோடு ஒருங்குடன் ஆடும்**
**தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே ;**
**செறுவே, விடுமலர் சுமந்து பூநீர் நிறைதலின்**
**படுகண் இமிழ்கொளை பயின்றன ராடும்**
**களிநாள் அரங்கின் அணிநலம் புரையும்;**
**காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉம்**
**நரந்த நறுமலர் நன்களிக் கும்மே**
**கரைபொழுகு தீமபுனற்கு எதிர்விருந்து அயர்வபோல்;**
**கானலங் காவும் கயமும் துருத்தியும், தேன்**
**தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்**
**பூத்தன்று வையை வரவு;**

*மலையிற் பெருமழை பெய்தது. அதனால் வையையிற் புது வெள்ளம் பெருக்கெடுத்து வந்தது. அவ்வாறு வந்த புது வெள்ளம் தலைப்பகுதியின் மிளகையும், சந்தனமரத் துண்டு களையும், மற்றும் பலவற்றையும் தன்னுடன் கொணர்ந்து, ஆற்றின் கரைகளில் குவித்தது. இதனாற் கரையின் எல்லா*

விடங்களினும் அப் பொருள்கள் குவிந்து கிடந்தன. நெய்குடையும் தயிரிடத்திருந்து எழுகின்ற நுரையைப்போன்ற நுரையுடன், அலைகள் எழுந்து கரைகளில் மோதின. அதனால், கரைகளின் எல்லாப் பகுதிகளும் மென்மேலும் அழிவு எய்தியபடியும் இருந்தன. கைவண்மை உடைய தலைவனாகிய பாண்டியன், தன்னை அடைந்தார்க்கு அவர் கேட்பதன் முன்னரே பெரும் பரிசிலை வழங்கி அவரை ஆதரிப்பவன். அவனது கொடைத் தன்மையைப்போல இருந்தது. புது வெள்ளம் கரைகளிற் பலவற்றையும் கொண்டு சேர்த்தது.

நேரொத்த முத்துக்களைக் கோத்தமைத்த முத்துமாலை, தலைக்கோலம் என்னும் முத்தினால் அமைக்கப்பெற்ற அணி, பொன்னாற் செய்யப்பெற்ற ஒளிவிளங்கும் அணிகள், கலங்கலான நீரைப்போல விளங்கும் அழகிய செம்மணி பதித்த அணிகள், இவற்றைப் பூண்டுவரும் வலமாகச் சுழித்த உந்தித் தடங்களையுடையவரும், தம் வீட்டைப் பிரிந்து வந்தவருமான புதல்வர்கள்; அவர்களது மென்மையான தலையுச்சியின் மேல் விளங்கும் முஞ்சம் என்னும் அணிகளுடன் திகழ்ந்தனர். இவர்களனைவருடனும், இவர்கள் தத்தம் துணைவருடன் கலந்து ஒன்றுபட்டுத் துறைகளின் ஓரங்களில் நீர்விளையாட்டு ஆடியபடி இருந்தனர். செவ்வரி கருவரி படர்ந்த கண்ணினரான இவர்களது தந்தையின் பரத்தையர்கள், இவர்களைக் கண்டதும், இவர்களை எடுத்தணைப்பதற்கு விரும்பியவராக, இடங்கள் தோறும் வந்து கொண்டிருந்தனர்.

இவ்வாறாக, ஆற்றங்கரையை அடுத்திருந்த மணம் செறிந்த அழகிய பூங்காக்களும், குளங்களும், ஆற்றிடைக் குறைகளும், வண்டினம் தேனுண்டு ரீங்காரப் பண்ணைப் பாடிக் கொண்டிருக்கத், திக்குகள் தோறும் பூக்களினால் அழகு பெற்றுத் திகழுமாறு பொலிவுடன் விளங்கும், வையைப் புதுப்புனலின் வரவு.

மரங்களினின்றும் உதிர்ந்த பூக்களோடு, புனலை வழிபடுவார், புனலிடத்துவிட்ட பூக்களையும் சுமந்தபடி; பூவும் நீருமாக வந்த புதுப்புனல் வயல்களிடத்தே சென்று நிறைந்தது. தட்டி ஒலயெழுப்பப்படும் கண்களையுடைய தாளவாத்தியக் கருவிகளினின்றும் எழும் ஒலியோடு பாட்டின் ஒலியும் சேர்ந்து எழ, ஆடற்கலையிலே நன்றாகப் பயிற்சிபெற்ற ஆடன் மகளிர் ஆடுகின்ற விழாநாள் ஆடலரங்கின் அழகிய சிறப்பை யொத்ததாக, அவ்வயல்கள் விளங்கின. (நடன சாலையிற் பூவும் நீரும் சிதறுவர். மேலும், பூக்களில் திரிந்து கொண்டிருந்த வண்டினங்கள். ஆடும் நடனமாதரைப்போல விளங்கின என்றும் கொள்ளலாம்)

ஆற்றங்கரைச் சோலைகளிலுள்ள மரங்கள். வண்டு மொய்க்கும் பூந்தாதோடு இடத்திற்கு இடம் மிகுந்திருக்கும்

நரந்தத்தின் நறு மலரினை மிகுதியாகப் புதுப்புனலுக்கு அளித்துக் கொண்டிருந்தன. அதுதான் ஒலியோடு செல்லும் இனிய புதுப்புனலுக்கு எதிர்விருந்து செய்து சோலைகள் களிப்பதைப் போலத் தோன்றும்.

**சொற்பொருள் :** மை - கருமை ; கார்மேகம். படுதல் - படிதல். கறி - மிளகு. சாந்து - சந்தனம். காழ் - ஆரம். மத்தக நித்திலம் - தலைக்கோல அணியாகிய முத்துச்சரம். பொலம் - பொன். கலங்கலம் புனல் - கலங்கலாக வரும் அழகிய செம்புனல். திணை - இடம். புதல்வர் - சிறுவர்; இவர் தலைவனின் புதல்வர். முஞ்சம் - ஒருவகைத் தலைக்குரியவணி. கயம் - மென்மை. தத்தரிக் கண்ணார் - செவ்வரி கருவரி பொருந்திய பிறழும் கண்ணினர். துணை - தோழியர். செறு - வயல். விடுமலர் - விடுபூக்கள். படுகண் - தாள வாத்தியங்களில் தட்டுப்பட்டு ஒலியெழுப்ப உதவும் பகுதி. இமிழ் - இசையொலி. கொள்ளை - பாட்டு. களிநாள்- களித்தற்குரிய நாள் - விழாநாள். அரங்கம் - ஆடலரங்கம். நரந்தம் - நரந்தம் புல். கரைபு - ஒலியோடு. கான் - மணம். துருததி - ஆற்றிடைக் குறை.

**விளக்கம் :** தலைவனைப் பிரிந்துறைவோரான பரத்தையர், அவன் புதல்வனைத் துறைக்கண் கண்டதும், அவனை அணைக்கத் துடித்தவராய், இடந்தோறும் வந்து கூடினர் என்பதாம். வையைக் கரையின் வனப்பை இப்படிப் போற்று கின்றனர். தன்னையழிக்கும் அலைக்குக் கரை வழங்கினாற் போலத் தலைவனும் பரைத்தையருக்குப் பொன்னும் பிறவும் வழங்குவான் என்பதாம். மீண்டும் அவன் அவரைக் கைவிடுவான் என்பதனை, அவனாற் கைவிடப்பெற்ற பரத்தையர், அவள் புதல்வனைக் கண்டதும், அவ்ன் நினைவாற் சென்று அப்புதல்வனை எடுத்து மகிழத் துடித்ததனாற் புலனாகும்.

## வையைக்கு இயல்பு

**சுருங்கையின் ஆயத்தார் சுற்றும் எறிந்து**
**குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்**
**பெருந்தகை மீளி வருவானைக் கண்டே**
**இருந்துகில் தானையின் ஒற்றிப் பொருந்தலை**
**பூத்தனள் நீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்**
**தோற்றமோ ரொத்த மலர்கமழ் தணசாந்தின்**
**நாற்றத்தின் போற்றி நகையொடும் போத்தந்து;**
**இருங்கடற்கு ஊங்கிவரும் யாறெனத் தங்கான்**
**மகிழக் களிப்பட்ட தேன்தேறல் மாற்றிக்**
**குருதி துடையாக் குறுகி மருவினியர்**
**பூத்தனள் நங்கை பொலிகென நாணுதல்**
**வாய்த்தன்றால் வையை வரவு;**

**மலையின் இழியருவி மல்கினர்ச் சார்ச்சார்க்**
**கரைமரம் சேர்ந்து கவினி மடவார்**
**நனைசேர் கதுப்பினுள் தண்போதும் மைந்தர்**
**மலர்மார்பின் சோர்ந்த மலரிதழ் தாஅய்**
**மீனாரம் பூத்த வியன் கங்கை நந்திய**
**வானம் பெயர்ந்த மருங்கொத்தல் எஞ்ஞான்றும்**
**தேனிமிர் வையைக்கு இயல்பு;**

இளம் பரத்தை யொருத்தி நீராடியபடி யிருந்தாள். அவள் தோழியர் அவளைச் சுற்றிலும் நீராடியபடி யிருந்தனர். அவர் களுள் சிலர் பீச்சாங்குழலினுள் சிவப்புச் சாய நீரை எடுத்து அப்பரத்தையின்மீது பீச்சி அடித்தனர். அச்சிவப்புச் சாயம் தென்னங் குரும்பையைப்போல விளங்கிய அப் பரத்தையின் மார்பகத்தின்மீது பட்டது. அதனை அவள் முற்றவும் துடையா தவளாகத் தான் உடுததிருந்த பெரிய சேலையின் முன்தானை யாலே ஒற்றிக் கொண்டாள். அதனால் அச்சிவப்புக் கறை அவள் முன்தானையிலும் ஏறிக்கொண்டது. அச்சமயத்தில் பெருந்தகை மையை உடையவனாகிய தலைவன் அவளை அணுகி வந்தான். அவன் வருவதனைத் தோழியர் கண்டனர். 'அவளைத் தழுவாதே! அவள் பூப்பெய்தினாள்; அவளை விட்டு விலகு' என்று பொய்யாகக் கூவினர். அவள் மார்புக் கச்சிலும் சேலையின் முன்பகுதியிலும் பட்டிருந்த கறையின் தோற்றம், தோழியரின் கூற்றுப்படியே பூப்பின் கறையை ஒருதன்மைத்தாக ஒத்திருந்த தனை அவன் கண்டான். ஆயினும் அவளணிந்திருந்த மலரி னாலும் மணங்கமழும் குளிர்ந்த மணச்சாந்தினாலும் எழுந்த மணத்தினாலே, தோழியரின் கூற்றுப்பொய்மையானது கருங் கடலை அடையும் பொருட்டு விரைந்து ஏகும் யாற்று நீரின் வேகத்தைப்போல அவனைத் தூண்டியது. அவன் மேலும் அங்கே தங்காதவனாக, அவளோடும் கூடி மகிழக் கருதியவனாக, அங்கிருந்தும் அவளோடு சேர்ந்து புறப்பட்டுப் போயினான்.

அவள் வீட்டை அவர்கள் அடைந்ததும், அவள் புளிப்பேறிய தேனால் சமைக்கப்பட்ட கள்ளினை அவனுக்குப் பருகுவதற்குத் தந்தாள். அதனை மறுத்து, அவள் மார்பிடத்துச் செந்நிறக் கறையை முதலில் துடைத்து விடுவானைப்போல அவளை நெருங்கினான். அவ்வளவில் அவர்களைத் தொடர்ந்து வந்த அவள் தோழியர், மீண்டும், 'நங்கை பூப்புற்றாள்! அவள் பொலிவுபெறுக!' என வாழ்த்தொலி செய்தனர். அதனைக் கேட்டதும், அவ்விருவரும் நாணினராக நின்றனர். இத்தகைய களிப்பு நிகழ்ச்சிகள் எல்லாம் வையையாற்றின்கண் புதுவெள்ளம் வந்ததனாலேயே வாய்ப்பதாயிற்று.

மலையினின்றும் இழிந்துவரும் அருவி நீரானது, கரையோரத்து மரங்களை மோதி, அவற்றின் பூங்கொத்துக்களை உதிர்த்து நீருடன் சேர்க்க, அம் மலர்களாலே புது நீரும் அழகு பெற்று விளங்கும். மேலும், நீராடும் மகளிரது, தேன் சிந்தும் மலர்கள் பொருந்திய கூந்தலினுள்ளேயிருந்த தண்ணிய பூவிதழ்களும், மைந்தரது அழகிய மார்பித்து மாலைகளின் மலரிதழ்களும் வீழ்ந்து பரதவுதலால், புதுவெள்ளம் பூக்கள் மலிந்ததாக விளங்கும். அது, விண் மீன்களாகிய மாலையோடு அழகுற்று விளங்கும் பெரிய கங்கையாறு பெருக்கெடுத்து வானத்தே செல்லுதலைப்போல, அதற்கு ஒப்புமையுடையதாக விளங்கும். இதனாலே எவ்விடத்தும் வண்டினம் மொய்த்து ஆரவாரித்தபடி விளங்கதல் என்பது வையையாற்றின் தன்மை யாகவும் விளங்கும்.

**சொற்பொருள் :** சுருங்கை -உட்டுளையுள்ள பீச்சாங் குழல்; தரையுள் வழியுமாம்; சுரங்கப்பாதை என்பர். ஆயத்தார் - தோழியர். பூ நீர் - சாய நீர். மீளி - தலைவன். இருந்துகில் - பெரிய சேலை. தானை - முன்தானை. பூத்தனள் - பூப்படைந்தனள். சாந்து - மணச்சாந்து. ஊங்கிவரும் - விரைவாக வரும். களிப்பட்ட - புளிப்பேறிய. தேறல் - மது. குருதி - குருதிநிறத்துச் சாந்து. மருவினியர் - தோழியர். நாணுதல் - நாணங்கொள்ளல்; தலைவனும் பரத்தையுமாகிய இருவருமே நாணினர் என்று கொள்க. இணர் - பூங்கொத்து. கதுப்பு - கூந்தல்.

**விளக்கம் :** இவ்வாறு தோழியர் கூட்டம் நகையாடவும், தான் அப் பரத்தையை விரும்பிக் கூடியவன் தலைவன் என்பதாம்.

## தேன் சொரும் வரை!

**கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்**
**ஒள்ளொளி சேய்தா ஒளிகிளர்உண் கண்கெண்டை**
**பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்**
**செல்நீர் வீவயின் தேன்சோரப் பல்நீர்**
**அடுத்தடுத்து ஆடுவார் புல்லக் குழைந்து**
**வடுப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்**
**எடுத்தவேய் எக்கி நூக்குயர்பு தாக்கத்**
**தொடுத்ததேன் சோரும் வரைபோலும் தோற்றம்**
**கொடித்தேரான் வையைக்கு இயல்பு;**

பரத்தையர் நீராட்டு விழாவினை நுகர்ந்து இன்புறுதலின் பொருட்டாகக் கள்ளினை உண்டிருந்தனர். அத்துடன் நீரை விட்டு நீங்காமல் நெடுநேரம் நீருக்குள்ளேயே திளைத்தாடிய படியும் இருந்தனர். மேலும், தம் தலைவர்மீது சிறுசினமும் கொண்டிருந்தனர். இவற்றால், ஒளிகிளரும் மையுண்ட கயல் மீன்

போன்ற அவர்களின் கண்கள் செந்நிறத்தைப் பெற்று ஒளி செய்த படி விளங்கின. அப் பெண்களின் கூந்தல் மலர்களிற் பலவான வரிகளைக்கொண்ட வண்டினங்கள் இடந்தோறும் சூழ்ந்து மொய்க்கும். அப்படி மொய்க்கும் அழகோடு உதிர்ந்து நீரித்தே வீழும் அப் பூக்களிலிருந்து தேன்துளிகள் நீரில் வீழ்ந்து கலக்கும்.

பல்வேறு தன்மையோடும் அடுத்தடுத்து அங்ஙனம் ஆடுகின்றவரான பரத்தையரை, அவர்தம் தலைவர்கள் தழுவினர். அங்ஙனம் தழுவிய ஒரு தலைவன் குழைந்து தழுவுதலினாலே, அவன் மார்பிடத்தே பூசியிருந்த கத்தூரிச் சாந்ததமானது கரைந்தும் கரையாமலும் வடுப்பட்டாற்போல விளங்கிக் கொண்டிருந்தது. காற்றாலே எடுக்கப்பெற்ற மூங்கிலொன்று மேலாக நிமிர்ந்து சென்று, உயரத்தேயிருந்த தேனடையைத் தாக்க, அதனால் அதிற் சேர்ந்திருந்த தேன் கீழே வழிவதைப் பொருந்திய மலையினைப்போல, அவன் மார்பகம் அப்போது விளங்கிற்று. கொடி பறக்கும் தேரினை உடையானான பாண்டி யனது வையையாற்றின் தன்மை இப்படிப்பட்டதாகும்.

**சொற்பொருள் :** கள் - மது. புலவி - ஊடற்சினம். கெண்டை - கயல். வாரி - கோடு. தட வாய் - இடம். கவின் - அழகு. புல்ல - தழுவ; மான்மதம் - கத்தூரி. பரத்தையை அணைத்துத் தூக்கும் தலைவனும், அதனால் அவன் மார்பிடத்துச் சாந்தம் கலைந்தழியும் நிலையும், மூங்கில் நிமிர்தலால் தேனடையிலுள்ள தேன், பாறைக்கண் வழிவதைப் போன்று விளங்கின என்க.

## வெள்ளம் வற்றாதிருப்பதாக!

**வரையார்க்கும் புயல்கரை**
**திரையார்க்குமித் தீம்புனல்**
**கண்ணியர் தாரர் தமழ்நறுங் கோதையர்**
**பண்ணிய ஈகைப் பயன்கொள்வான் ஆடலால்**
**நாள்நாள் உரையும் நறுஞ்சாந்தும் கோதையும்**
**பூத்த புகையும் அவியும் புலராமை**
**மறாஅற்ப வானம் மலிதந்து நீத்தம்**
**அறாஅற்க வையை நினக்கு.**

மேகங்கள் சையமலையின்மீது படிந்து இடிமுழக்கைச் செய்தபடி ஆராவரிக்கும். இவ்வினிய புனலானது அலைகளாற் கரைகளிற் மோதி ஆரவாரிக்கும். தலைக்கண்ணியராகவும், மார்பிடத்து மாலையினராகவும், மணங்கமழும் நறிய கோதை யினராகவும், தாம் செய்த கொடையின் பயனைக் கொள்வாரைப் போலச் சென்று சென்று, ஆடவரும் மகளிரும் புது வெள்ளத் திலே நீராடுவர். இங்ஙனமாக அவர் ஆடுதலால், நாள்தோறும் அவர் மேனிடத்துப் பொருந்திய நறுஞ் சாந்தமும், கோதையும், எழுந்த புகையும், இடப்படும் பருப் பொருள்களும் வாடாமல்

நிலவுவதாக! வானமானது என்றும் மழையினை மறாதிருப்பதாக! மேகங்கள் மிகுதியான மழையினைத் தந்து, அதனாற் பெருகிவரும் வெள்ளமும், வையையாகிய நினக்கு என்றும் வற்றாது வந்து வாய்ப்பதாக!

**சொற்பொருள் :** வரை - மலை. புயல் - மேகம். திரை - அலை. ஈகைப் பயன் - ஈகையாற் பெற்ற நல்வாழ்வுப் பயன். உறையும் - தங்கும்; பரத்தையர் நாளுக்குநாள் வெவ்வேறு வகை மணச்சாந்தைப் பூசுவர் என்பதாம். அவி - நீர்த் தெய்வத்திற்குரிய பலிப்பொருள்.

**விளக்கம் :** இவ் விளையாட்டுத் தானும் பரத்தையும் மேற்கொண்டது என்பதைத் தலைவனும் உணர்வான் என்க.

**பதினேழாம் பாடல்**

# செவ்வேள் (17)

**பாடியவர் :** நல்லழிசியார்; **பண் வகுத்தவர் :** நல்லச்சுதனார்; **பண் :** நோதிறம்.

## அடியுறை இயைநர்

**தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி**
**ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ**
**விடையரை அசைத்த வேலன் கடிமரம்**
**பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்**
**விரிமலர் மதுவின் மரம்நனை குன்றத்துக்**
**கோலெரி கொளைநறை புகைக்கொடி ஒருங்கெழ**
**மாலை மாலை அடியுறை இயைநர்**
**மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்?**

தேன் துளிகள் ஒழுகிக்கொண்டிருக்க விளங்கும் புத்தம் புது மலர்கள்; மெல்லிய தளிர்கள்; அழகிய மென்மையான ஆடை; வார்த்துச் செய்யப்பெற்ற மணி;உயர்ந்திருக்குமாறு முனையமைக்கப் பெற்ற வேல்; முதலிய பலவான காணிக்கைப் பொருட்களையும் சுமந்துகொண்டு சிலர் நிற்பர். சந்தனச் சேற்றைக் கொண்டு தரையை மெழுகியிருப்பர். பக்கத்திலே, ஒரு மரத்தின் அடிப்பக்கத்தே பலியிடுவதற்குரிய வெள்ளாட்டுக் குட்டியைக் கட்டியிருப்பர். தெய்வம் வீற்றிருக்கும் மரமாகிய கடம்பும் அங்கே விளங்கும். வெறியாடும் வேலனும் மற்றும் பலரும் கூடி, அங்கே நின்னைப் போற்றிப் பாடுவர். அவர்களின் உரையோடு, இனிதாக இசைத்த இசையின் ஒலியையும் எழுப்பியபடியிருப்பர் சிலர். இவ்வாறு பலரும் கூடி நினக்கு வெறியயர்ந்து, நின்னை வேண்டித் தம் வெறியயர் களத்திற்கு எழுந்தருளுமாறு அழைப்பார்கள்.

*இதழ் விரிந்த மலர்களினின்றும் ஒழுகும் மதுவினாலே மரங்கள் நனைந்தவையாகத் தோன்றும், நின்க்குரிய திருப் பரங்குன்றத்திலே, தீப்பந்தம், இசைக் கருவிகளின் ஒலி, மணப் பொருள்களின் மணம், நறும்புகை, உயர்ந்த சேவற்கொடி ஆகியவை எல்லாம் ஒன்றாக எழுந்தபடி, எவ்விடத்தும் விளங்கும், இவ்வாறாக, மாலைக் காலந்தோறும் நின் திருவடிக் கண் தம்மை ஈடுபடுத்தி, நின்னை வழிபட்டு வாழ்பவர் நின் அடியவர். அவர்களுள்ளே நின்னை வழிபட்டுப் பெறுகின்ற அவ்வின்பத்தை யல்லாமல், தேவருலகத்துப் போகவாழ்வையும் விரும்புகின்றவர்தாம் யாவரோ? அவர் எவருமில்லைகாண்!*

**சொற்பொருள் :** தேம் - தேன்; தேம்படுமலர் - தேன் சிந்தும் புதுமலர். குழை - பூங்குழை. வடித்தல் - வார்த்தல். சாந்தம் - சந்தனம். விடை - ஆட்டுக் குட்டி. அரை - அடி மரம். வேலன் - வெறியாடுவோன்; பூசாரி. கடிமரம் - கடம்பு; தெய்வம் வீற்றிருக்கும் மரம். பரவினர் - தொழுது போற்றுவார். பண்ணிய இசை - பண்ணப்பட்ட இசை; கருவிகளை இயக்கி எழுப்பும் இசை. கோல் எரி - தீப்பந்தம்; கோலின் முனையில் அமைந்த எரி. கொளை நறை - இசையும் மணப் பொருட்களும்; இசை எழுப்பும் வண்டினங்களும் ஆம். மேலோர் உறையுள் - தேவருலகம்; போகவுலகம்.

**விளக்கம் :** 'பெருமானே! நின்னைப் பாடிப் பரவிப் போற்றுவாரான அடியவர், மேலோர் உறையுளைக் காட்டினும்; அதனையே பெரிதாக மதித்துப் போற்றுவர் என்பதாம். பிறகாலத்து அப்பரடிகள், 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே' என்று கூறியதையும் நினைக்க.

### எங்கணும் போற்றுவர்!

**ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரல் எழ;**
**ஒருதிறம், யாணர் வண்டின் இமிரிசை எழ;**
**ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபு எழ;**
**ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத;**
**ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ;**
**ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப;**
**ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க;**
**ஒருதிறம், வாடை உளவயின் பூங்கொடி நுடங்க;**
**ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்**
**நீடு கிளர் கிழமை நிறைகுறை தோன்ற;**
**ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை அரிக்குரல் தோன்ற;**
**மாறுமா றுற்றனபோல் மாறெதர் கோடல்**
**மாறட்டான் குன்றம் உடைத்து;**

திருப்பரங்குன்றத்தின் ஒருபக்கத்தே பாணர்கள் மீட்டும் யாழின் இனிதான இசை எழுந்து கொண்டிருக்கும்; அதற்கு இணையாக மற்றொரு பக்கத்தே புதுமலர்களை மொய்க்கின்ற வண்டினங்களின் இமிர்தலாகிய இசை எழுந்த படியிருக்கும். ஒருபக்கத்தே கணுக்கள்மைந்த வேய்ங் குழலினின்றும் எழுகின்ற இலையொலி இனிதாக எழுந்தபடியிருக்கும்; மற்றொரு பக்கத்தே அதற்கிணையாகப் பண்ணின் அமைதியோடு ஒலிக்கும் தும்பிகள் எங்கணும் பரவி இசை ஊதியபடியிருக்கும். ஒரு பக்கத்தே மார்ச்சனை மிகுந்த முழவின் தாள ஒலி எழுந்தபடியிருக்கும்; அதற்கு இணையாக மற்றொரு பக்கத்தே எம்பெருமானாகிய நின்னுடைய உயரமான வரையிடத்தே வீழும் அருவிநீரின் ஒலியும் எழுந்தபடியிருக்கும். ஒரு பக்கத்தே நின்னைக் குறித்த பாடலோடு ஆடுகின்றவரான சிறந்த ஆடன்மகளிர்கள் தம் இடையை அசைத்தசைத்து ஆடியபடியிருப்பர்; அதற்கு இணையாக மற்றொரு பக்கத்தே வாடைக்காற்று அசைத்தலினாலே ஆடுகின்ற பூங்கொடியானது அசைந்து ஆடியபடியிருக்கும். ஒரு பக்கத்தே பாடினி பாடுகின்ற பாலைப்பண்ணாகிய இனிய குரலொலி எழுந்தபடியிருக்கும்; அதன் கூறுபாடுகளாகிய நெடிய கிளர்ச்சியினையுடைய கிழமையும், நிறையும், குறையும் தோன்றுமாறு அவர் பாடுவர்; அதற்கிணையாக மற்றொரு பக்கத்தே ஆடுதலிற் சிறந்த மயில்களின் அரிக்குரலின் ஒலி அவ்வாறே எழுந்தபடியிருக்கும். நினக்கு மாறுபட்டானாகிய சூரனை அவன் மேற்கொண்ட அந்தந்தச் செயலையே தானும் மேற்கொண்டு வென்றவன் முருகப் பெருமானாகிய நீ. அதனால் நின் குன்றமும் மக்கள் எழுப்புகின்ற இசைகட்கெல்லாம் எதிரெதிராக இசையெழுப்பி, அவற்றிற்கு மாறபாடு கொள்ளும் தகைமையினைக் கொண்டிருக்கிறது.

**சொற்பொருள் :** யாணர் - புதுவருவாய்; புது மலர். யாணர் வண்டு - புதிதாக வந்த வண்டுமாம். கண் - கணு. கரைபு - ஒலி. மண் - மார்ச்சனை. ததும்ப - ஒலிசெய்ய. ஒல்குபு - அசைந்து. நுடங்கல் - வளைந்தாடல். பாலையங்குரல் - பாலைப் பண்ணாகிய இனிய இசை. ஆடுசீர் மஞ்ஞை - ஆடுதலிற் சிறந்த மயில்.

## வழி இல்லை!

**பாடல் சான்று பல்புகழ் முற்றிய**
**கூடலோடு பரங்குன்றி னிடைக்**
**கமழ்நறுஞ் சாந்தின் அவரவர் திளைப்ப**
**நணிநணித் தாயினும் சேஎய்ச் சேய்த்து;** 25
**மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியில்**
**சோர்ந்தவிழ் இதழின் இயங்குமா றின்று;**

சான்றோரின் பாடல்களாலே சிறப்புற்றுப் பல்வேறான சிறப்புக்களுடன் முதிர்ந்து விளங்குவது கூடல் மாநகரம். அதற்கும் பரங்குன்றிற்கும் இடைப்பட்ட வழியினது தொலைவும் சிறிதே. எனினும், அவ்வழிச் செல்பவர், அவரவர் விரும்பும் மணங்கமழும் மணச்சாந்துகளை மிகுதியாகப் பூசியவராகச் செல்வார்கள். இம் மணத்தின் கவர்ச்சியினாலே மிக நணித்தான அவ்விடை வழியும் கடத்தற்கு மிகவும் தொலைவிலுள்ளது போல, நெடுநேரத்தைச் செலவிடற்கு உரியதாக விளங்கும்.

மிக்க மகிழ்ச்சியோடு செல்லும் பெண்களின் கூந்தலில் விளங்கும் தேன்சிந்தும் மலர்களும், ஆடவரது குடுமியிலே விளங்கும் மணமாலைகளின் மலர்களும், தம் கட்டினின்றும் சோர்ந்து விழுந்தது பரவ, அவ் விதழ்களின் பெருக்கத்தால், செல்லும் வழியே இல்லையென்று சொல்லும்படியாக, எங்கணும் பூக்காடாகவே விளங்கும்.

**சொற்பொருள் :** புகழ் - சிறப்பு. முற்றிய - நிறைவுற்ற. சாந்து - மணச்சாந்து. மகிழ் - மகிழ்ச்சி; காதலொடு கூடிக் கலந்து செல்லும் களிப்பு. இயங்கும் ஆறு - செல்லும் வழி. இன்று - இல்லை; பூக்கள் மூடிக்கிடத்தலால் வழி மறைக்கப்பட்டுக் கிடந்தது என்பாதாம்.

**கமழும் புகை!**

**வசைநீங்கிய வாய்மையால் வேள்வியால்**
**திசைநாறிய குன்றமர்ந்து ஆண்டாண்டு**
**ஆவி யுண்ணும் அகில்கெழு கமழ்புகை**
**வாய்வாய் மீபோய் உம்பர் இமைபிறப்பத்**
**தேயா மண்டிலம் காணுமா றின்று;**

வசைச் சொற்களினின்றும் நீங்கிய வாய்மைகளாலும், வேள்விகளாலும், எட்டுத் திசைகளிலும் தன் புகழ் பரவ விளங்குவது நின் பரங்குன்றம். பன்னெடுங்காலமாக அதனி டையே கோயில் கொண்டிருந்து, அந்தணர் அளிக்கும் அவிப் பலியையும், பக்தர்கள் புகைக்கும் அகிலோடு கூடிய பிற மணப் பொருள்களையும் புகைப்பதனால் எழும் நறும்புகை யினையும் ஏற்றிருந்து அருள்பவன் பெருமானாகிய நீ. இப்படிப் புகைக்கும் நறும்புகைகள் இடங்கள்தோறுமிருந்து எழுந்து, மேலே சென்று வானத்தையும் முட்டும். அதனால் கண்ணிமையாராகிய வானவரும் இமைப்பவராகி, அவ்விடம் விட்டு அகன்று போவர். ஒளிகுன்றாத கதிர்மண்டிலமும் புகை மூட்டத்தால் காண்பதற்கு இயலாதாய் மறைந்துபோம்.

**சொற்பொருள் :** வசை - பழிச்சொற்கள். வாய்மை - மெய்ப் பொருளாம் தன்மை; இவை பெருமானைக் குறித்து அடியவர்

உரைப்பன. வேள்வி - அந்தணரால் முறையாக வேட்கப் படுவது. ஆவி - அவிப்பலி; முதல் நீண்டது. வாய்வாய் - இடந்தோறும் மீ - மேலாக. இமைபு இறப்ப - இமைப்பராகி அகன்று செல்ல. தேயா மண்டிலம் - கதிர் மண்டிலம்; தேய்ந்தும் வளர்ந்தும் விளங்குவது நிலவு மண்டிலம்.

**வண்டினம் ஊதா!**

**வளைமுன்கை வணங்கிறையார்**
**அணைமென்தோள் அசைபுஒத்தார்**
**தார்மார்பின் தகையியலார்**
**ஈரமாலை இயல்அணியார்**
**மனமகிழ் தூங்குநர் பாய்புடன் ஆடச்**
**சுனைமலர்த் தாதூதும் வண்டூதல் எய்தா**
**அனைய பரங்குன்றின் அணி! -**

முன்னங் கைகளிடத்தே வளைகளை உடையவரும், வளைந்த சந்தினை உடைவருமான பெண்களின், மூங்கிலை யொத்த மென்மையான தோள்களின் அசைவிற்கு ஒத்தபடி ஆடினர். அவரை விரும்பிய அவர் காதலரான இளைஞர்கள். மார்பிடத்துத் தாரினையும், தகையமைந்த இயலினையும் உடையவரான அவர், ஈரமாலையுடனே விளங்கும் அழகிய அணிகளையணிந்த மகளிருடனே கூடி, மனத்தே மகிழ்ச்சி நிறைந்தவராயினர். அதனால், தாமும் அம் மகளிருடன் சுனைகளிற் பாய்ந்து நீராடினர். இவர்கள் பாய்ந்தாடிய ஆரவாரத்திற்கு அஞ்சிச், சுனைகளிலுள்ள மலர்களிடத்தே மொய்த்துத் தேனூதும் வண்டுகளும், தாம் ஊதுதற்கு விரும் பாவாய்ச் சுனைகளை அடையாதிருந்தன. திருப்பரங் குன்றத்தின் அழகு அப்படிப் பட்டதாகும்.

**சொற்பொருள் :** முன்கை - முன்னங்கை. இறை - சந்து. அணை - மூங்கில். தார் - ஆடவர் மார்பில் அணியும் மாலை. மகிழ் - மகிழ்ச்சி. அணி - அழகு.

**தடுமாற்றம் நன்று**

**கீழோர், வயல்பரக்கும் வார்வெள்ளருவி பரந்தானாதரோ**
**மேலோர், இயங்குதலால் வீழ்மணி நீலம் செறுவுழக்குமரோ**
**தெய்வ விழவும் திருந்து விருந்தயர்வும்**
**அவ்வெள் ளருவி அணிபரங் குன்றிற்கும்**
**தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்கும்**
**கொய்யுளை மான்தேர்க் கொடித்தேரான் கூடற்கும்**
**கையூழ் தடுமாற்றம் நன்று;**

நின் குன்றின் அடிவாரத்தேயுள்ள வயற்புறங்களிலே அணி யணியாகப் பரவி நிற்பாரின் தோற்றம், வயலிடத்துப் பரந்துள்ள வெள்ளிய அருவிநீரைப் போலத் தோன்றும். அவ்வயற்புறங் களிலே மேலோர் அக்கூட்டத்திடையே புகுந்து செல்லுதலால், அவர்கள் அணிந்துள்ள ஆபரணங்களிலிருந்து வீழ்ந்த மணிகள், நீலப்பூக்களையுடைய வயற்புறத்தைக் கலக்கிச் சேறுபடச் செய்யும்.

தெய்வங்கள் பலவற்றையும் குறிப்பிட்டு எடுக்கப்படுகின்ற திருவிழாக்களும், திருத்தமான வகையிலே செய்யப்படும் விருந்தயர்தலாகிய சிறப்புக்களும், அழகான வெள்ளருவிகளால் அழகுபெற்று விளங்கும் திருபரங்குன்றத்திற்கும், கெடுதலில்லாத சிறந்த சீர்மையுடைய வளம் நிறைந்த வையை ஆற்றுக்கும், கொய்யப்பட்ட பிடரிமயிரினையுடைய குதிரைகளைப் பூட்டி யிருக்கும் சிற்றரசர்களின் தேர்களுக்கு நடுவே, உயர்ந்து விளங்கும் மீனக்கொடி பறக்கும் தேரினை உடையவனாகிய பாண்டியனுக் குரியதான கூடற் பேரூருக்கும், முறைமையாக நிகழ்கின்ற ஓர் ஒழுங்கினை உடையவாகும். அவற்றுள் தடுமாற்றம் ஏற்படினும், அதுவும் பெருமானாகிய நின்னருளால், முடிவில் நன்மையாகவே முடியும்.

**சொற்பொருள் :** தெய்வ விழவு - பரங்குன்றில் முருகனைக் குறித்தும், வையையில் நீர்த் தெய்வத்தைக் குறித்தும், மதுரையில் பல தெய்வங்களைக் குறித்தும் எடுக்கப்படும் விழாக்கள். தொய்யா - கெடாத. உளை - பிடரிமயிர். வான் தேர் - உயரமான தேர். தடுமாற்றம் நன்று - தடுமாற்றம் மேலும் பல விழாக்களை யும் விருந்துகளையும் நிகழ்வித்து நன்மையாக இறுதியில் முடிவு எய்தும்.

### பாடுதும் பரவுதும்!

**எனவாங்கு,**
**மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்**
**பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!**
**பணிபுஒரீஇ நின்புகழ் ஏத்தி**
**அணிநெடுங் குன்றம் பாடுதும்; தொழுதும்;**
**அவை யாமும் எம் சுற்றமும் பரவுதும்;**
**ஏம வைகல் பெறுகயாம் எனவே.**

பெருமானே! நீலமணியின் நிறத்தையொத்த நிறத்தோடு விளங்கும் மயிலையும், உயரமாக எடுக்கப்பெற்ற சேவற்புள்ளின் உருவம் பொறித்த கொடியினையும் கொண்டோனே! பிணி முகம் என்னும் களிற்றினைச் செலுத்திச் சென்று, சூரனோடு நிகழ்த்திய போரிலே வெற்றிபெற்ற இறைவனே! பிற தெய்வங்

களைத் தொழுதலைக் கைவிட்டேமாய், நின் புகழையே மேற்கண்டவாறெல்லாம் உயர்த்துப் பேசி, நின் அழகிய நெடிய பரங்குன்றினைப் போற்றிப் பாடுவேம்; நின் திருவடிகளைத் தொழுவேம்.

அங்ஙனம் யாம் செய்யும் அவை, யாமும் எம் சுற்றமும் நின் திருவடிக்கண் பாதுகாவலுடன் வீற்றிருக்கும் அந்தப் பேற்றினைப் பெறுக என்று கருதியேயாகும். அதனைக் குறித்தே யாங்கள் நின்னைப் பரவுகின்றோம். பெருமானே! அந்தப் பேற்றினை எமக்குத் தந்தருள்வாயாக.

**சொற்பொருள் :** மணி - நீலமணி. புள் - கோழிச் சேவல். பிணிமுகம் - பெருமானூர்ந்த களிற்றின் பெயர். பணிபு ஒரீஇ - பிற தெய்வங்களைப் பணிதலைக் கைவிட்டு. ஏமம் - காவல். வைகல் - தங்குதல்.

**விளக்கம் :** முருகப் பெருமானைப் போற்றிப் பாடுவதும் பரவுவதும் எல்லாம் அவன் அடியுறை வாழ்வைப் பெறுவது கருதியே என்பதாம்.

**பதினெட்டாம் பாடல்**

# செவ்வேள் (18)

**பாடியவர் :** குன்றம்பூதனார். **பண் வகுத்தவர் :** நல்லச் சுதனார். **பண் :** காந்தாரம்.

## எதிரொலிக்கும் குன்று

**போரெதிர்ந்து ஏற்றார் மதுகை மதம்தபக்**
**காரெதிர்ந்து ஏற்ற கமஞ்சூல் எழிலிபோல்**
**நீர்நிரந் தேற்ற நிலந்தாங்கு அழுவத்துச்**
**சூர் நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்! நின்**
**சீர் நிரந்து ஏந்திய குன்றொடு நேரெதிர்ந்து**
**ஏறுமாறு ஏற்மிக் குன்று;**

பெருமானே! நின்னோடும் போரிடலை மேற்கொண்டு, நீ விடுத்த சமாதானத் தூதினையும் ஏற்றுக்கொள்ளாமல், நின்னுடன் போர்செய்தலையே மேற்கொண்டனர், சூரனும், அவன் சுற்றத்தாருமாகிய அவுணர்கள். அவர்களுடைய செருக்காகிய மதம் கெடும்படியாக, நீ அவர்களைக் கொன்று ஒழித்தனை! கார்காலத்தை மேற்கொண்டு, அதனால் நீரினை ஏற்றுச் சூல்முதிர்ந்து விளங்கும் கரிய மேகத்தைப்போல, நீராலே நிரம்பப்பெற்றுத் தன்னை ஏற்றிருக்கும் நிலத்தினாலே தாங்கப் பெற்று விளங்கும் கருங்கடலின் நடுவிடத்தே சென்று, அச்சத்தை நிரம்பவும் மிகுவித்துக்கொண்டு அசைந்தபடியிருந்த சூரனாகிய மாமரத்தையும் வெட்டி, அவனையும் அழித்த வேற்படையினை

உடையோனே! நின் பிறந்த தன்மையினாலே சிறப்புடையதாகப் புகழ்பெற்று விளங்கும் இமயக் குன்றத்தோடு, எல்லா வகை யானும் ஒப்புமை கொண்டதாக அமைந்து, சில சமயங்களில் அதனோடும் மாறுபட்டுத் தன்னுயர்வை வலியுறுத்தப் போட்டியையும் எதிரேற்கக் கூடியது, நீ கோயில் கொண்டிருக்கும் இத் திருப்பரங்குன்றம் ஆகும்!

**சொற்பொருள் :** எதிர்ந்து - மேற்கொண்டு. மதுகை - ஆற்றல். மதம் - செருக்கு. தப - அழிய. கமஞ்சூல் - நிறைசூல். நேர் எதிர்ந்து - முறைமையை மேற்கொண்டு. அழுவம் - கடல். சூர்- அச்சம். மா - மாமரம். 'நீர் நிரந்தேந்திய குன்றம்' என்றது இமயக் குன்றினை; 'நீர் நிரந்து' ஆது விளங்குதல் சான்றோரை உடைத்தாயிருத்தலால். ஏறுமாறு - மாறுபாடு. 'இக் குன்று' என்றது திருப்பரங் குன்றத்தை.

**விளக்கம் :** முருகப் பெருமானின் தோற்றத்திற்கும், இளமைத் திருவிளையாடல்களுக்கும் உரிய களனாக விளங்கி, அதனாற் புகழ்பெற்றது இமயக்குன்றம். ஆனால், வெற்றி வீரனாகவும், திருமணக் கோலங்கொண்டு தேவியருடன் கோயில் கொண்டிருக்கும் அழகனாகவும் அவன் திருப்பரங்குன்றிலே தான் விளங்குகின்றனன். இதனால், முருகனோடு தொடர்பு கொண்டு அதனாற் பெற்ற புகழிலே, இமயத்தைவிடப் பரங்குன்றமே உயர்வுச் சிறப்பு உடையது என்பதாம்.

### ஊடலும் கூடலும்

**ஒள்ளொளி மணிப்பொறி ஆல்மஞ்ஞை நோக்கித்தன்**
**உள்ளத்து நினைப்பானைக் கண்டனள் திருநுதலும்**
**உள்ளிய துணர்ந்தே னஃது உரையினி நீ எம்மை**
**எள்ளுதல் மறைத்த லோம்பு என்பாளைப் பெயர்த்தவன்,**
**காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ்**
**பேதுற்ற இதனைக்கண்டு யான்நோக்க நீ எம்மை**
**ஏதிலா நோக்குதி என்றாங்கு உணர்ப்பித்தல்**
**ஆய்தேரான் குன்ற இயல்பு;**

காதலனும் காதலியுமாகிய இருவர், திருப்பரங்குன்றத்துச் சோலையில், ஒரு நாள் களிப்புடன் சந்தித்து மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவ்வேளையிலே சிறந்த ஒலியைப் பொருந்திய நீலமணியைப் போன்று விளங்கும் புள்ளிகளைத் தன் தோகையிடத்தே பெற்றுள்ள மயிலொன்று, தோகையை விரித்து ஆடிக் கொண்டிருந்தது. அதனை அக் காதலன் நோக்கினான். தன் உள்ளத்துள்ளே தன் காதலியின் சாயலை மயிலின் சாயலோடு ஒப்பிட்டு, அந்த நினைவிலேயே திளைக்கத் தொடங்கினான். அதனை அக் காதலி கண்டாள். அழகிய நுதலினளான அவள்,

அவன் நினைவு வேறோர் அழகியின்மேற் சென்றதுபோலும் எனவும் ஐயுற்றாள்.

'நீ உள்ளத்துக் கருதியதொரு கருத்து உளதென்பதனை உணர்ந்தேன். அஃது யாதென இப்போதே எனக்குச் சொல் வாயாக' என்றாள். அவன் யாதுங் கூறானாக. அவள் கொண்ட அச் சினத்தால், அவளது அழகு புதிதான பாங்கு பெற்று விளங்குவதைக் கண்டு களிக்கலானான். அவள் சினம் மிகுந்தது. தன்னை அவன் இகழ்வதாகக் கொண்டாள். 'நீ தான் எம்மைப் பிற மாதரோடு ஒப்பிட்டு, நின் உள்ளத்துள்ளேயே இகழ்கின்றனை. அதனை எமக்கு மறைத்தலைக் கைவிடுக' என்று சீறினாள்.

அவன் அவள் சினத்தைக் கண்டான். 'அன்பிற்கு உரியவனே! நின் இயலினைத் தான் களவாடிக்கொண்டு, தானும் நின்னொப்ப விளங்குதலை எண்ணிக் களிப்புற்றதாய் மகிழ்ந்து, அதனாற் பித்துற்றுத் தோகை விரித்து ஆடுகின்ற இம்மயிலின் தன்மையைக் கண்டேன். அதன் அறியாமையை எண்ணினேன். அதன் நிலைக்கு இரக்கமுற்று, அதனை நோக்கினேன். அங்ஙனம் பார்க்கவும், நீதான், 'எம்மை அயலான் ஒருவனைப்போலக் கருதிச் சினத்துடன் நோக்குதல் முறையாமோ?" என்றான் அவன். அதனால், அவள் ஊடல் நீங்கினாள். அழகிய தேருடையான் பாண்டியன். அவனுக்குரிய பரங்குன்றத்தின் இயல்பு இவ்வாறு விளங்குவதாகும்.

**சொற்பொருள் :** மணி - நீலமணி. பொறி - புள்ளி. திரு நுதல் - அழகிய நெற்றியினாள்; காதலியைக் குறித்தது. எள்ளுதல் - இகழ்தல். இயல் - அழகு; சாயல். பேதுறல் - மனமயங்கல்; பித்துக்கொள்ளல். ஏதிலான் - அயலான். உணர்ப்பித்தல் - ஊடலை நீக்கித் தெளிவித்தல்.

**விளக்கம் :** இயற்கையழகுடன் கலந்து, காதலர் இவ்வாறு கூடியும் ஊடியும் இன்புறுதற்குக் களனாக அமைந்து, அவர்தம் இன்பத்தை விளைவிக்கும் செவ்வியது திருப்பரங்குன்றம் என்பதாம்.

### பாணனின் பாட்டு

**ஐவளம் பூத்த அணிதிகழ் குன்றின்மேல்**
**மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்**
**கைவளம் பூத்த வடுவொடு காணாய் நீ**
**மொய்வளம் பூத்த முயக்கம்யாம் கைப்படுத்தோம்**
**மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி**
**நைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம்**
**பூத்தன், பாணா! நின் பாட்டு;**

"ஐவகையான வளங்களாலும் நிறைவுற்றுப் பொலிவுடன் அழகு பெற்று விளங்குவது திருப்பரங்குன்றம். அதன்மேல், மைவளம் சேர்த்தலாலே பொலிவுற்ற, குவளை மலரையொத்த குளிர்ந்த கண்களை உடையாரான பரத்தையரின் தழுவுதலாலே பெற்ற, கையது நகக்குறிகளின் அழகிய வடுவோடு வந்துள்ள தலைவனின் தன்மையை நீயும் காணாயோ?

மிகவும் இறுக்கமுறத் தழுவிக் கிடத்தலாலே ஏற்பட்ட அந்தக் கூட்டத்தின் அடையாளங்களோடு, அவனை யாம் கையும் களவுமாகக் கைப்பற்றிக் கொண்டோம். நின்னுடல் அழகுப் பெலிவுடன் விளங்குமாறு, நீ விரும்பத்தகுந்த பொன்னணிகள் பலவும் பூட்டியவனாக. நட்டபாடை என்னும் பண்ணினை, நின் பண்ணிசையும், அதனோடு பொருந்த நீ பாடும் பாட்டும் பொய்யின் வளமையினாலே பெரிதும் அழகுடன் திகழ்கின்றன. ஆதலின், யாம் நின் தலைவனை ஏற்கமாட்டோம். நின் பொய்யையும் நம்பமாட்டோம். நீதான் அகன்று செல்வாயாக!"

தன் காதலனின் தூதொடு வந்த பாணனிடம், இவ்வாறு கூறி, அவனைப் போக்குகின்றாள் ஒரு கற்புடைய நங்கை. இத்தகைய ஊடல் மகளிர் தம் தகுதியைப் பேணி விளங்குவதும் பரங்குன்றம் ஆகும்.

**சொற்பொருள் :** ஐவளம் - ஐவகை வளமைகள். அணி - அழகு. மை - கண்ணிற்குத் தீட்டும் மை. மலர் - குவளை மலர். மழைக்கண் - குளிர்ச்சியமைந்த கண். கை வளம் - நகக்குறிகளின் மிகுதி. மொய்த்தல் - நெருங்குதல். முயக்கம் - தழுவுதல். பொன்னணி - பொன்னாபரணங்கள்; இவை தலைவனால் தரப்பட்டவை; ஆதலின் இகழ்ச்சி தோன்றக் கூறியதாம். நைவளம் - நட்டபாடை என்னும் பண். சீர் - தாளம்.

## காமவேள் தொழில்

**தண்தளிர் தருப்படுத்து எடுத்துரைஇ**
**மங்குல் மழைமுழங்கிய விறல்வரையான்**
**கண்பொருபு சுடர்ந்துஅடர்ந்துஇடந்து**
**இருள்போமும் கொடிமின்னால் 24**
**வெண்சுடர் வெல்வேள்! விரைமயில்மேல் ஞாயிறு!நின்**
**ஒண்சுடர் ஓடைக் களிறேய்க்கும் நின்குன்றத்து**
**எழுதெழில் அம்பலம் காமவேள் அம்பின்**
**தொழில் வீற்றிருந்த நகர்;**

வெண்மையொளி சுடர்கின்ற வெற்றிவேலினைக் கொண்டோனே! குமரவேளே! விரையச் செல்லும் மயிலின் மேலாக எழுந்தருளி வருகின்ற இளஞாயிறே!

*தண்ணிய தளிர்களை மரங்களிடத்தே தோற்றுவித்த தன் செயலை, உலகுக்கு எடுத்துரைத்தாக, இருண்ட கார்மேகங்கள் முழக்கமிட்டிருக்கும் வெற்றி கொண்டது, நின் மலை அதனிடத்தே, கண்டார் கண்களைப் பொருதி அழிப்பதுபோல ஒளி செய்த வண்ணம், அடர்ந்திருந்த இருளை நெருக்கிப் பிளந்து ஊடறுத்துக் கிழிக்கும் மின்னற்கொடிகள் பலவும் தோன்றுகின்றன!*

*ஒண்மை சுடரும் நெற்றிப்பட்டதைக் கொண்ட நின்பிணி முகக் களிற்றைப் போன்று விளங்குவது நீ கோயில் கொண்டிருக்கும் திருப்பரங்குன்றம். அதனிடத்தே, எழுதப் பெற்ற ஓவியங்களாலே அழகுபெற்று விளங்கும், அம்பலமாகிய பொது மண்டபமானது, காமவேளின் அம்பினது தொழிலானது நிலைபெற்றிருக்கும் இன்ப மாளிகையாகும்! இஃது என்னையோ?*

**சொற்பொருள் :** *மங்குல் மழை - இருண்ட கார்மேகம். முழக்கம் - இடி முழக்கம். விறல் - வெற்றி. சுடர்ந்து - சுடரிட்டு. இடந்து - பிளந்து. அம்பலம் - முருகனின் கோயிலுக்கு முன்பக்கத்தே அனைவரும் வந்து கூடியிருக்க விளங்கும் பொதுவிடம்.*

### மலையின் அழகு!

**ஆர்ததும்பும் அயிலம்பு நிறைநாழி**
**சூர்ததும்பு வரைய ; காவால்**
**கார்ததும்பு நீர் ததும்புவன சுனை;**
**ஏர்ததும்புவன பூவணி செறிவு;**
**போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ, கார்தோற்றும்**
**காந்தள் செறிந்த கவின்;**
**கவின்முகை கட்டவிழ்ப்ப தும்பிகட் டியாழின்**
**புரிநெகிழ்ப்பார் போன்றன கை ;**

*அழகு ததும்புகின்ற கூர்மையான அம்புகள் நிறைந்த அம்புக் கூட்டைப்போலச் சூரர் மகளிரால் நிரம்பியிருந்த மலையுச்சிப் பகுதிகள் விளங்கும். மலையிடத்துள்ள சோலைப் பகுதிகளால் தடுக்கப்பெற்றுக் கார்மேகங்கள் நிரம்பி வழிந்த வண்ணமாயிருக்கும். அவை பெய்த மழையினாலே சுனைகளுள் எல்லாம் நீர் நிரம்பித் ததும்பி வழிந்து கொண்டிருக்கும்.*

*பூக்களால் செறிவுற்று விளங்கும் மலைச்சாரற் சோலைப் பகுதிகளிலே அழகு ததும்பிக் கொண்டிருக்கும்.*

*கார்மேகத்தைக் கண்டவுடன் செறிவாகப் பூத்துக்கிடந்த காந்தட் பூக்களின் அழகானது, பாண்டியனோடு செய் போரிலே தோற்றுக் கட்டப்பட்டு நிற்பவரின் கைகளைப்போல எம் மருங்கும் விளங்கும், அழகிய மொட்டுக்கள் தம் கட்டவிழ்ந்து*

*மலரத், தும்பிகள் அவற்றுள் மொய்த்திருப்பதானது, யாழ் நரம்பின் முறுக்கினைத் தளர்த்துபவரின் கைகளைப்போலத் தோன்றும்.*

**சொற்பொருள் :** *ஆர் - அழகு. அயல் - கூர்மை. நாழி - அம்புப் புட்டில். சூர் - சூரரமகளிர். ஏர் - அழகு. பூவணி - பூக்கள் செறிவாக அணிசெய்தாற்போலத் தோன்றும் தோற்றம்; விழாக்காலத்துப் பூவணிபோலத் தோன்றும் தோற்றம். கவின் - பேரழகு. புரி - முறுக்கு.*

**விளக்கம் :** *'ஆர் ததும்பும் அயிலம்பு' எனக் குறித்தது, காமனின் கணைகளாகிய மலரம்புகளை என்க. சூரர மகளிர் தம்முடைய கவனிமலிந்த தோற்றத்தால், கண்டாரைக் காமுறச் செய்து மயக்கிக் கொல்வர் என்பர்.*

### சுனையின் தோற்றம்!

**அச்சிரக் காலார்த் தணிமழை கோலின்றே**
**வச்சிரத் தான்வான வில்லு!**
**வில்லுச்சொரி பகழியின் மென்மலர் தாயின**
**வல்லுப்போர் வல்லாய்! மலைமேல் மரம்;**
**வட்டுருட்டு வல்லாய்! மலைய நெட்டுருட்டுச்**
**சீர் ததும்பும் அரவ முடன்சிறந்து**
**போர் ததும்பும் அரவம் போலக்**
**கருவி யார்ப்பக் கருவிநின்றன குன்றம்;**
**அருவி யார்ப்ப முத்து அணிந்தன வரை;**
**குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை :**
**எருவை கோப்ப எழிலணி திருவில்**
**வானில் அணிந்த வரியூதும பல்மலரால்**
**கூனி வளைத்த சுனை ;**

*சூதாடு களத்திலே வட்டினை உருட்டிச் செய்யும் வல்லுப் போரிலும் வல்லமையாளனாகத் திகழ்கின்ற பெருமானே! முன்பனிக் காலம் தொடங்கியது. அணியணியாகத் திரண்ட மேகங்கள் ஆரவாரிக்கின்றன. வானகத்தே வச்சிரப்படையுடைய இந்திரனின் வில்லென்று சொல்லப்படுகின்ற வானவில்லும் தோன்றுகின்றது. வில்லினின்று சொரியப்படும் அம்புகளைப் போல, மலைமேல் விளங்கும் மரங்களுளெல்லாம் மென்மலர்கள் பலவும் தோன்றி முகிழ்த்துள்ளன.*

*நின் மலையிடத்தேயுள்ள நின் திருக்கோயிலிடத்திருந்து, நின்னைக் காணவருவாரின் கொடிய உருளைகளைக் கொண்ட தேர்ச்சக்கரங்களின் அழகுததும்பும் தாளஒலியோடு ஒப்புடைய தாகச் சிறப்புற்று, ஒன்றோடொன்று மோதுகின்ற முன்னணிப் படைகளின் போரிடத்தே எழுகின்ற ஒலியினைப்போல, தொகுதி*

கொண்ட மேகக்கூட்டங்கள் தம்முள் மோதிச் சினத்தோடே முழக்கமிட, நின் குன்றமே, அத் தாள ஒலியோடு முழக்க மிட்டிருப்பதுபோல விளங்கும்.

அருவிகள் ஆரவாரத்துடன் வீழ, அவற்றால் நின் மலைப் பகுதிகள் முத்துமாலைகளை அணிந்திருப்பனபோலத் தோன்றும். குருவிகள் ஆரவாரத்துடன் வந்து மொய்க்கத் தினையிடத்துக் கதிர்களும் முற்றிக் குவிந்திருக்கும். சுனைகளின் ஓரங்களிற் கொறுக்கச்சிச் செடிகள் வளர்ந்து, தம் தலையைச் சுனைநீருள் சாய்த்தபடி விளங்கும். வண்டுகள் ஊதியபடி யிருக்கும் பன்னிற மலர்கள் பூத்து, அச்செடிகளை முட்டுவன போல விளங்கும். இக் காட்சியானது வளைந்து அழகு பெற்று விளங்குகின்ற வானவில்லை அச் சுனைகளும் பெற்றிருப்பது போல விளங்கும்.

**சொற்பொருள் :** வல்லு - சூது. வட்டு - கழங்கு; சூதாடும் வட்டு. கோலின்று - வளைத்தது. வச்சிரத்தான் - வச்சிரப் படையுடையான்; இந்திரன். தாயின - சொரிந்து பரவின. 'நெட்டுருட்டுச் சீர்' என்றது, மலைப்பகுதிகளில் வருகின்ற தேருருளுள்கள் எழுப்புகின்ற ஒலியினை. கருவி - தொகுதி கொண்ட மேகங்கள்; இசைக் கருவிகளும் ஆம். சீர் - தாளம். எருவை - கொறுக்கச்சி. கூனி - வளைந்து. வளைத்த - பொருந்திய.

### பிரியாதிருக்க

**புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து**
**சுருதியும் பூவும் சுடரும் கூடி**
**எரயுருகு அகிலொடு ஆரமும் கமழும்**
**செருவேல் தானைச் செல்வ!நின் அடியுறை**
**உரிதினின் உறைபதிச் சேர்ந்தாங்குப்**
**பிரியா திருக்களம் சுற்றமோடு உடனே!**

செருவிளைக்கும் வேற்படையினைக் கொண்டவனாகத், தேவர் படையணிகளையும் உடையவனாக விளங்கும், தேவ சேனாபதியாகிய செல்வனே! முறுக்குண்ட நரம்பினின்று எழுகின்ற இசையும், அதனோடு பொருந்த எழும் பாட்டும் ஒன்றுகலந்து எழும் இன்னிசையொலி விளங்கும். அவற்றுடன் சுருதிகளை ஓதுவார் ஓதும் ஒலியும் சேர்ந்து எழும்.

நின்னைப் போற்றி அருச்சிப்பார் சொரிந்த பூக்களும், ஏற்றிய சுடர்களும் ஒன்றுகலந்து தோன்றும். நெருப்பிலிடப் பட்டு உருகும் அகிலோடு, சந்தனத்தின் மணமும் கமழ்ந்து கொண்டிருக்கும். இவ்வாறு நின்னைப் போற்றி வழிபாடுவார் நின்னடியவர். அவர் எல்லாம் உரிமையோடு நீ கோயில் கொண்டிருக்கும் நகராகிய இவ்விடத்தே ஒருங்கே சார்ந்திருப்பர்.

அவ்வாறே யாமும் எம் சுற்றத்தோடும் கூடியவராக, நின் திரு வடிகளைப் பிரியாதிருக்கின்ற அந்தப் பேற்றினைப் பெறுமாறு, எமக்கும் இப்போதே அருளிச் செய்வாயாக, பெருமானே!

**சொற்பொருள் :** புரி - முறுக்கு. இயல் - பாட்டு. சுருதி - வேதகோஷம். சுடர் - விளக்குச் சுடர்; கருப்பூரச் சுடர் போன்றன. அடியுறை - அடியவர்.

**விளக்கம் :** 'பெருமானே! நின்னைச் சேர்ந்திருக்கும் மலையும், மலையிடத்து மரமும், செடியும், சுனையும் அழகு பெற்று விளங்கக் காண்கின்றேம். நின்னை அடைந்த யாமும் அவ்வாறே இன்புற்றுப் பொலிவு பெறவும், நின்னடி நீழலைப் பிரியாதிருக்கவும் அருள்வாயாக,' என்று வேண்டுகின்றனர்.

**பத்தொன்பதாம் பாடல்**

# செவ்வேள் (19)

**பாடியவர் :** நப்பண்ணனார்; **பண் வகுத்தவர் :** மருத்துவன் நல்லச்சுதனார்; **பண் :** காந்தாரம்.

**மயிற்கொடி வதுவை**

**நிலவரை அழுவத்தான் வானுறை புகல்தந்து**
**புலவரை அறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து**
**அருமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்**
**இருநிலத் தோரும் இயைகென ஈத்தநின்**
**தண்பரங் குன்றத்து இயலணி நின்மருங்கு**
**சாறுகொள் துறக்கத் தவளொடு**
**மாறுகொள் வதுபோலும் மயிற்கொடி வதுவை;**

பெருமானே! கடல்கள் எல்லையாகச் சூழ்ந்திருக்க விளங்குவது இந் நிலவுலகம். வானகத்தே உறைபவனான நீதான், இவ்வுலகிற்குப் புகலிடமாக நின்னைத் தந்தருளினாய். அறிவின் எல்லையாலும் அளந்தறிய வியலாத பெரும் புகழினோடு விளங்கும் கடப்பமரத்தின் கண்ணும் வீற்றிருக்கலானாய். அரிய முனிவர்கள் எனப்படுகின்ற ஏழு பெருமுனிவர்களின் மரபிலே வருபவர்களான சான்றோர்கள் நின்னைப் போற்றி இன்புற்றனர். 'அந்த இன்பத்தின் அநுபவப்பயனை இப் பெரிய நிலவுலகத்தி லுள்ள மக்களும் அடைவாராக' என்னும் கருணையினாலே தான், நீ நின் தோற்றத்தை இவ்வுலகிற்கும் அளித்தனை. அவ்வாறு அளித்த இடங்களுள் சிறந்ததாகிய நின் திருப்பரங் குன்றத்தில், நீ மணக்கோலத்தோடும் அமர்ந்திருப்பவனும் ஆயினை. நின் ஒரு பக்கத்தே உறைபவளான தேவயானைப் பிராட்டியோடும் நீதான் வீற்றிருந்தனை. மணவிழாக் கொண்டு முறையாகப் பெற்ற

அப்பிராட்டியோடுங்கூட, மயிலின் சாயலையும் பூங்கொடியின் மென்மையினையுங் கொண்ட வள்ளிநாயகியையும் நீ மணந்து கொண்டது, அத்திருமணத்திற்கு மாறுபட்ட களவுமணத்தையும் ஏற்றுக்கொள்வதற்காகவே போலும்!

**சொற்பொருள் :** வரை - எல்லை. அழுவம் - கடல். புகல் - புகலிடம்; விருப்பம். புலம் - அறிவு. அருமுனி - சப்த இருடிகள். மரபின் - மரபிலே. ஆன்றவர் - சான்றோர். நுகர்ச்சி - அநுபவம். இயல் அணி - இயலும் அணியும்; இயற்கையழகும் அணியழகும் கொண்ட நிலை. சாறு - விழா; மணவிழா. மாறு - மாறுபாடு.

**விளக்கம் :** 'வேதவிதிப்படி செய்து கொள்ளும் மணமே முறையானது' என்பதற்கு மாறாகக், காதல் மணத்தையும் உலகினர் ஏற்குமாறு செய்யும் பொருட்டாகவே, பெருமான் வள்ளிநாயகியைக் களவுமுறைப்படி காதலித்து மணந்து கொண்டனன் என்பதாம்.

### யாத்திரை செல் யாறு!

**புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடல்**
**கலப்போடு இயைந்த இரவுத்தீர் எல்லை**
**அறம்பெரி தாற்றி அதன்பயன் கொண்மார்,**
**சிறந்தோர் உலகம் படருநர் போல,**
**உரிமாண் புனைகலம் ஒண்துகில் தாங்கிப்**
**புரிமாண் புரவியர் போக்கமை தேரர்**
**தெரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்ப, நின்**
**குன்றொடு கூடல் இடையெல்லாம் ஒன்றுபு**
**நேர்பு நிறைபெய்து இருநிலம் பூட்டிய**
**தார்போலும் மாலைத் தலைநிறையால் - தண்மணல்**
**ஆர்வேலை யாத்திரைசெல் யாறு;**

அறிவாற்றலாற் செய்யப்படும் சொற்போர்களினும், உடலாற்றலாற் செய்யப்படும் மறப் போர்களினும் தோல்வியே அறியாதவர் கூடல்நகரத்தினர். இவையன்றியும், கலவிப்போரொடும் பொருந்தியவராக, இரவுப் பொழுது தீர்கின்ற எல்லைப் பொழுதுதான புலர் காலைப் பொழுதினும், வெற்றியே பெறுபவர் அவர்கள். மேலும், இல்லறவாழ்விலே அறச் செயல்களைப் பெரிதும் முறையாகச் செய்து, அதன் பயனாகிய நற்பேற்றையும் பெறுபவர் அவர்கள். அதனாற் சிறந்தோர் உலகமெனப்படும் துறக்கவுலகையும் அவர்கள் முடிவிற் சென்று சேர்வார்கள். அவர்களைப் போல,

சிறந்த முறையிற் செய்யப்பெற்ற அணிதற்குரியவான அணிகலன்களையும், ஒள்ளிய துகிலையும் தாங்கியவராக, ஆடவரும் பெண்டிரும் பரங்குன்றத்தை நோக்கிச் செல்வார்கள்.

விரும்பத்தகுந்த சிறப்புக்களைப் பெற்றுள்ள குதிரைகளின் மேலோராகச் சிலர் செல்வர். செல்லுதற்கேற்ப அமைக்கப் பெற்ற தேரின் மேலோராகச் சிலர் செல்வர். தெரிந்தெடுத்த மலர்களால் தொடுத்த மாலைகளை அவர்கள் அணிந்திருப்பர். அவற்றின் ஒளியானது தெருவிடத்தேயுள்ள புலர்காலை இருளைப் போக்கு வதாயிருக்கும். இவ்வாறு செல்லும் மக்கள் கூட்டத்தால், நின் திருப்பரங்குன்றத்தோடு மதுரையும் இடைவெளி யெல்லாம் இல்லையாகுமாறு ஒன்றுபட்டாற்போல விளங்கும்.

அவ்வாறாக நின்னைத் தொழுவதற்கு வரும் மக்கள் கூட்டத்தினர் வரிசைவரிசையாக வருவார்கள். நெருங்கித் திரண்டும் வருவார்கள். அவர்கள் தலைகளில் விளங்கும் தலைமாலைகள் நிலமகட்குப் பூட்டிய, பூக்களை நேராகப் பெய்து செறிவாக்க் கட்டிய மாலையைப்போல அழகுறத் தோன்றும்.

தண்ணிய மணற்பாங்கினிடத்தே ஆரவாரித்து மோதும் கடலலையினைப் போல, அவர்கள் செல்லும் வழியெல்லாம் ஒரே ஆரவாரத்துடன் விளங்கும்.

**சொற்பொருள் :** புலம் - அறிவு. இரவுத்தீர் எல்லை. விடியல். கலப்பு - சேர்க்கை. அறம் - இல்லறக் கடமைகள் - அதன் பயன் - அறத்தின் பயன்; துறக்க வாழ்வு. சிறந்தோர் உலகம் - துறக்க உலகம். படருநர் - செல்பவர். உரி மாண்கலம் - அணிதற்குரிய மாட்சி விளங்கும் அணிகலம். ஒண்துகில் - ஒள்ளிய துகில்; ஒண்மை - ஒளிகொண்ட தன்மை. புரி - விருப்பம். போக்கமை - போதற்கெனப் பண்ணப்பட்ட. நேர்பு - வரிசையாக! நிறைபு - மிகுதியாக. ஆர் வேலை - ஆர்க்கும் கடல். யாத்திரை - பயணம்.

**விளக்கம் :** உலக வாழ்வியலிற் சிறந்து விளங்குவோரான மதுரைநகரத்து மக்கள், புலர்காலை வேலையிற் சென்று பரங்குன்றப் பெருமானை வழிபடுகின்ற சிறப்பைக் கூறுகின்றனர்.

**வலம் வரும் வழுதி**

**சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்**
**புடைவரு சூழல் - புலமாண் வழுதி**
**மடமயி லோரும் மனையவ ரோடும்**
**கடனறி காரியக் கண்ணவ ரோடும்நின்**
**சூருறை குன்றின் தடவரை எறிமேல்**
**பாடு வலம்திரி பண்பின் - பழமதிச்**
**சூடி யசையுஞ் சுவல்மிசைத் தானையின்**
**பாடிய நாவிற் பரந்த வுவகையின்**
**நாடும் நகரும் அடைய அடைந்தனைத்தே**
**படுமணி யானை நெடியோய்; நீ மேய**
**கடிநகர் சூழ்நுவலுங் கால்;**

ஒலிமுழங்கும் மணிகளையுடைய 'பிணிமுகம்' என்னும் பெயரைக் கொண்ட களிற்றினை ஊர்ந்துவருகின்ற முருகப் பெருமானே! இருசுடர்களுள் ஒன்றாகிய சந்திரனானவன் தன்னைச் சூழவருகின்ற தாரகைக் கூட்டங்களுடன், மேரு மலையை வலமாகச் சுற்றி வருவான். அவனைப் போலவே, சந்திர குலத்தோன்றலும், அறிவிலே சிறப்புற்றோனுமாகிய பாண்டி யனும் நின் குன்றினை வலம் வந்தான்.

இளைய மயிலைப் போலும் சாயலுடையவரான பணிப் பெண்களுடனும், தன் மனையாட்டியரோடும், கடமைகளை அறிந்து காரியமாற்றவதிற் சிறந்தவரும், நோக்கத்து மாத்திரத் தாலேயே தலைவனின் எண்ணத்தையறிந்து செயலாற்றுவோரு மான அரசப் பணியாளர்களும், அவனைச் சூழவும் வந்து கொண்டிருந்தனர். நினக்குரியதான, சூரர மகளிர் வாழுகின்ற திருப்பரங்குன்றத்தின் அகன்ற மலைப்பகுதியின் உச்சியிலே ஏறி, அந்தப் பாண்டியன், மேலேயுள்ள நின் திருக்கோயிலையும் வலம் வருவான். நின்னை வேண்டிப் பாடுமேற் கொண்டு பாண்டியனும் வலம்வருகின்ற தன்மையைக் கொண்டது நின் பரங்குன்றம் ஆகும்.

பழமையாக வருகின்ற தன் குலச்சின்னமாகிய மதியினைச் சூடியவனாகவும், தோள்மீது கிடந்தசையும் தலைப்பாகையின் முன்தானைப் பகுதியை உடையவனாகவும், நின் புகழைப் பாடிப் போற்றிய நாவினை உடையவனாகவும், நின்னைத் தரிசித்ததனாலே ஏற்பட்ட பெருகிய உவகையினை உடையவனாகவும் பாண்டியன் விளங்குவான். அவனைப் போன்றே, இத் தமிழ்நாட்டு மக்களும், இத் தமிழகத்துநகரங்களிலுள்ள மக்களும், முற்றவும் நின்னைத் தொழுது பணிந்து செல்வார்கள். பெருமானே! நீ கோயில் கொண்டிருக்கும் காவலையுடைய திருக்கோயிலின் சூழ்நிலை யைச் சொல்லுவதானால், அதுதான் அத்துணைச் சிறப்பான தாகும் பெருமானே!

**சொற்பொருள் :** சுடர் - இருசுடருள் ஒன்றான மதியம். தாரகை - விண்மீன். மேரு - மேருமலை. புடை - பக்கம். புலம் - அறிவு. மடமயில் - இளைய மயில். 'மடமயிலோரும் மனையவர்' எனக் கொண்டு, 'இளைய மயிலும் சாயலைக் கற்கும் செவ்வி கொண்ட மனையவர்' எனினும் ஆம். கடன் - கடமை. கண்ணவர் - நோக்கமறிந்து செயலாற்றும் பணியாளர். சூர் - சூரர மகளிர். தடம் - அகற்சி. பாடு - ஒன்றை வேண்டி அது சித்தியாகும்வரை நோன்பு கிடத்தல். பழமதி - தொன்று தொட்டு வரும் பழமைச் சிறப்புடைய மதி. சுவல் - தோள். தானை - முன்தானை; தலைப்பாகையின் முன் பகுதி. படுமணி - ஒலிக்கும் மணி. கடி - காவல்.

### பாசறை போன்றது

**தும்பி தொடர்கதுப்பத் தும்பி தொடராட்டி**
**வம்பணி பூங்கயிற்று வாங்கி மரன்அசைப்பார்:**
**தண்தார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்**
**திண்தேர் வழியிற் செலநிறுப்பார்; கண்டக்**
**கரும்பு கவழம் மடுப்பார்; நிரந்து**
**பிரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே**
**குருகெறி வேலோய்! நின் குன்றக்கீழ் நின்ற**
**இடைநிலம் யாமேத்து மாறு;**

*கிரவுஞ்சப் பறவையின் பெயரை உடையதான குன்றத்தை, நின் வேலினை எறிந்து பிளந்து சிதைத்த வேலோனே! நின்னைக் காண வருபவருள் பலர் யானைகள் மீதாக வருவர்; மற்றும் பலர் பலவகை ஊர்திகளினும் வருவர். வண்டினம் கன்னத்தே ஒழுகுகின்ற மதநீரிலே மொய்த்துக் கொண்டிருக்க வரும், அவ் யானைகளை வரிசைப்படுத்திப், புதிதாக அணிந்துள்ள அழகான கயிற்றைப் பற்றி இழுத்துச் சென்று, அவ்விடத்தேயுள்ள மரங்களிலே கட்டி வைப்பார்கள். தண்ணிய தாரினைக் கொண்ட குதிரைகளை, அவை வழியை விட்டு ஒதுங்கி நிற்குமாறு வரிசை யாக ஒதுக்கிக் கட்டியிருப்பார்கள். உறுதியான தேர்களை வழிக்கு அயலாக ஒருபுறத்தே கொண்டு நிறுத்தி வைத்திருப்பார்கள்.*

*களிறுகளுக்கு உணவாகக் கணுக்களையுடைய கரும்புகளை வெட்டிக் கவழமாக ஊட்டுவார்கள். இவ்வாறு மலையடி வாரம் எங்கணும் நிறைந்திருக்கும் யானைகளும்., தேர்களும், குதிரை களும் சேர்ந்து, அவ்விடமானது, நிமிர்ந்து செல்லும் தானை யினை உடையோனாகிய பாண்டியனின் பாசறையைப் போலத் தோன்றும். நின் குன்றத்தின் அடிவாரத்தே விளங்கும் இடை நிலப் பகுதியை, யாம் போற்றும் வகை, 'அது பாண்டியனின் பாசறைபோலத் திகழும்' என்பதுதான்.*

**சொற்பொருள் :** *தும்பி - வண்டு; யானை. வம்பு - புதுமை. வாங்கி - இழுத்துச் சென்று. அசைப்பர் - கட்டுவர். கண்டம் - கணு. நிமிர் பரிதானை - வெற்றிச் செருக்கினாலே தலைநிமிர்ந்து செல்லும் தானை. குருகு - கிரவுஞ்சம்.*

### வழிபடுவோர்

**குரங்கருந்து பண்ணியம் கொடுப்போரும்**
**கரும்பு கருமுகக் கணக்களிப் போரும்**
**தெய்வப் பிரமம் செய்கு வோரும்**
**கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரும்**
**யாழின் இளிகுரல் சமம்கொள் வோரும்**
**வேள்வியின் அழகியல் விளம்பு வோரும்**

**கூர நாண்குரல் கொம்மென ஒலிப்ப**
**ஊழுற முரசின் ஒலிசெய் வோரும்**

*பரங்குன்றனைப் பராவச் செல்வாருள் சிலர், அக் குன்றத் திடத்தே மற்றும் பலவான இனிய செயல்களினும் ஈடுபட்டுத் திளைப்பார்கள். அங்குள்ள குரங்குகள் அருந்துமாறு பாலகாரங் களைக் கொடுப்பார்கள் சிலர். கருமையான முகத்தைக் கொண்ட முசுக்கணம் என்னும் குரங்குகளுக்குக் கரும்புத் துண்டுகளைச் சிலர் தருவார்கள். தெய்வத்தன்மை வாய்ந்த தென்னும் பிரமவீணையை மீட்டி இசைப்பார்கள் சிலர். துளைகளிலே கைவிரல்களை வைத்து ஒலி எழுப்பும் குழற்கருவிகளை இசைத்து இன்பங் காண்பார்கள் சிலர். யாழின் இளி, குரல், சமம் என்னும் பேதங்களை அறிந்து, அதனை மீட்டி இசையின்பங் கொள்வார் கள் சிலர். பெருமானைக் குறித்துச் சேய்யப்படும் வேள்விகளின் அழகினையும், சிறப்புக்களையும் வாய்குளிரச் சொல்லிக் கொண்டிருப்பார்கள் சிலர். யாழ் நரம்பு களின்றும் எழுகின்ற குரலானது கொம்மென்று ஒலிசெய்ய, அதன் இசைமுறைக்குப் பொருத்தமுற முரசினை அடித்து ஒலி எழுப்புவார்கள் சிலர்.*

**சொற்பொருள் :** *பண்ணியம் - பலகாரம். கருமுகக்கணம் - முசுக்கணம். பிரமம் - பிரமவீணை. இமிர்பு - ஒலிக்கும். இளி, குரல், சமம் என்பன இசைக் கூறுபாடுகள். அழகு இயல் - அழகும் சிறப்பும். கூரம் - யாழ். ஊழுற - முறைக்குப் பொருந்தி அமைய.*

### சித்திரச் செல்வம்!

**என்றூழ் உறவரும் இருசுடர் நேமி**
**ஒன்றிய சுடர்நிலை யுள்புடு வோரும்**
**இரதி காமன் இவளிவன் எனாஅ**
**விரகியர் வினவ வினாவிறுப் போரும்**
**இந்திரன் பூசை இவளக லிகையிவன்**
**சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு**
**ஒன்றிய படியிதென்று உரைசெய் வோரும்**
**இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்**
**துன்னுநர் சுட்டவும் சுட்டறி வுறுத்தவும்**
**நேர்வரை விரியது துணிபரங் குன்றத்து**
**மாஅல் மருகன் மாட மருங்கு;**

*கோடைக்காலம் உண்டாகுமாறு வரும் இருசுடர்களும் வானவட்டத்தே பொருந்தியுள்ள சுடர்நிலைகளை ஆராய்ந்து, அவற்றின் நுட்பங்களைச் சிலர் ஆராய்ந்து கொண்டிருப்பார்கள். 'இரதி இவள்; காமன் இவன்' என்று, திருக்கோயிற் சிற்பங்களுள் இரண்டைக் காட்டிக், காமங் கொண்டோர் அருகிருந்தாரைக் கேட்ப, அவர்கட்கு விடையளித்தபடி யிருந்தனர் சிலர். "இவன்*

இந்திரனாகிய பூனை ; இவள் அகலிகை ; இவன் புலர்காலைப் போதிலே நீராடச் சென்றவனாகிய கவுதமன்; இவன் சினங் கொண்டு சபிக்க, அகலிகை பெற்ற கல்லுருவம் இது; இவை நேர்ந்த கதை இவ்வாறு" என்று, சொல்லியபடி இருந்தனர் சிலர். இத்தகைய பலவான ஓவியங்களைக்கொண்டு விளங்குவது. 'எழுத்துநிலை மண்டபம்' என்னும் திருக்கோயிற் பகுதியாகும். அதனைச் சார்ந்தவர், ஒவ்வொன்றையும் சுட்டிக் காட்டுவோ ராகவும், சுட்டப்பட்டவற்றிற்கு விளக்கம் கூறுவோராகவும் விளங்கினர்.

உயரமான மூங்கில்கள் பரந்து நிழல்செய்தபடி விளங்கும், அகன்ற பாறைப்பகுதியாகிய பரந்த இடத்திலேஅமைந்திருந்த மண்டபம் எழுத்து நிலை மண்டபம் ஆகும். அது, இத்தகைய மங்கல நிலையோடு, பரங்குன்றத்தே விளங்கும் திருமால் மருகனின் திருக்கோயிலின் ஒருபக்கத்தே, மிகத் தெளிவான அமைப்புக்களோடும் காணப்படும்.

**சொற்பொருள் :** என்றூழ் - கோடை. விரகியர் - மோகங் கொண்டோர். பூசை - பூனை. துன்னுநர் - அடைந்தோர். நேர்வரை - நேராக உயர்ந்து வளர்ந்த மூங்கில்கள். சோபன நிலை - மங்கல நிலை; 'சோபன நிலைதுணி பரங்குன்றம்' எனவும் கொள்க; என்றும் மங்கல நிலையினையே கொள்ளச் செய்யும் பரங்குன்றம் என்று, அதன் சிறப்புக் கூறப்பட்டது.

**உவப்பவன்!**

**பிறந்த தமரின் பெயர்ந்தொரு பேதை**
**பிறங்கல் இடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்**
**வந்த நெறியும் மறந்தேன் சிறந்தவர்**
**ஏஎ ஓஒ எனவிளி ஏற்பிக்க**
**ஏஎ ஓஒவென் றேலா அவ்விளி**
**அவ்விசை முழையேற் றழைப்ப அழைத்துழிச்**
**செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை**
**மீட்சியும் கூஉக்கூஉ மேவும் மடமைத்தே**
**வாழ்த்துவப்பான் குன்றின் வகை;**

தன்னைப் பெற்றோரைவிட்டுப் பிரிந்தாளான ஒரு பேதைப் பெண், பாரைக்கற்களுக்கு இடையிடையே புகுந்து, வழிதவறிய வளாக, 'யான் வந்த வழியினையும் மறந்தேன்' என்று மனமயங்கி வாட்டமடைந்தாள். அவ்வேளையில், அவளைக் காணாராகிய அவளைப் பெற்றோர், 'ஏஎ; ஓஒ' என அவளை அழைத்துக் கூவினர். 'ஏஎ, ஓஒ' என்னும் அந்த அழைப்பொலி வந்த இடத்தை அவள் உணரவில்லை. ஆனால், அவ்விளி யொலியினை மலைக் குகைகள் ஏற்று, எதிரொலிகளைச் செய்தன. அப் பேதைப்பெண்

அவ் எதிரொலியை அழைப்பொலியெனக் கருதியவளாகக் குகையிடத்தே செல்வாள்; அங்கே பெற்றோரைக் காணாத வளாக, மீண்டும் கூவுவாள். அவள் கூவ, மீண்டும் பெற்றோர் கூவ, மலைக்குகைகள் எதிரொலிக்க, அப் பேதையாள் சென்றுசென்று வருந்த விளங்கும் அறியாமைத் தன்மையினைக் கொண்டதும், பக்தர்களின் வாழ்த்தொலிக்கு உவந்து அருள்பவனாகிய முருகப்பெருமானுடைய குன்றத்தின் தன்மையாகும்.

**சொற்பொருள் :** பிறந்த தமர் - பெற்றோர். பிறங்கல் - மலையிடைப் பெருங்கல் மலைப் பிளப்புக்களும் ஆம். நெறி - வழி. விளியேலாமை. கூப்பீடு வரும் இடத்தை உணராமை. முழை - குகை.

**விளக்கம் :** 'பெற்றோரின் கூப்பீட்டொலியை மலைக் குகைகளும் எதிரொலிக்கும்' என்றதனால், பிறரின் துயரங் கண்டவிடத்து இரங்கும் நெகிழ்வு அக் குகைகட்கும் உண்டென் றனர். இதனால், அப் பரங்குன்றினையுடைய பெருமானின் அருளுந் தன்மையையும் கூறினர்.

### மகளிரின் மருட்சி

**நனிநுனி நயவரு சாய்ப்பின் நாறிணர்ச்**
**சினைபோழ் பல்லவம் தீஞ்சுனை உதிர்ப்ப**
**உதிர்த்த சுனையின் எடுத்த தலைய**
**அலர்முகிழ்உற அவைகிடப்பத்**
**தெரிமலர் நனையுறுவ**
**ஐந்தலை யவிர்பொறி அரவம், மூத்த**
**மைந்தன்; அருகொன்று மற்றிளம் பார்ப்பென**
**ஆங்கிள மகளிர் மருளப் -**

சுனைகளின் கரையோரங்களிற் பற்பல மரங்கள் விளங்கின. அவற்றின் மிகவும் நுண்மையான நுனிக்கொம்பர்கள் தாமும் சுனைநீராடலை விரும்பியவைபோலச், சுனைநீரின் பரப்பருகே சாய்ந்து கிடந்தன. அச் சுனைநீரிலே நீராடும் மகளிர்கள், அக் கொம்புகளிலே விளங்கிய மணங்கமழும் பூங்கொத்துக்களையும், கிளையைப் பிளந்துகொண்டு துளிர்த்த துளிர்களையும் இனிய சுனை நீரிடத்தே உதிர்த்து உதிர்த்து விளையாடினர்.

அங்ஙனம் அவர் உதிர்த்த சுனைநீரிடத்தே, உயர்த்த தலையையுடைய மலரும் பருவத்துத் தாமரை அரும்புகளிடத்தே பொருந்தி, அவை கிடந்தன. அவை வீழ்தலால் மலர்ந்த மலர்கள் தேன்துளிகளைப் பொருந்தின. அவை, அழகிய தலைமையும் ஒளிகொண்ட புள்ளிகளையுங் கொண்ட நாகப்பாம்பின் படத்தைப் போலத் தோன்றின. அதனருகே சற்றே சிறிதாக விளங்கிய மற்றொரு மலரானது, அப்பாம்பின் மூத்த மகனைப்

போலத் தோன்றியது. அதனையடுத்திருந்த மற்றொரு மிகச் சிறிய மலரானது அதன் இளங்குட்டியைப் போலத் தோன்றியது. அதனைக் கண்ட பெண்கள், பாம்பும் அதன் குட்டிகளும் என்றே கருதியவராக மயங்கி நடுநடுங்கினார்கள்.

**சொற்பொருள் :** நனி நுனி - மிகவும் மெல்லிய கொம்பின் நுனிப்பகுதி. நயவரு - விருப்பம் வரத்தக்க. நாறிணர் - மணமுடைய பூங்கொத்து. சினை போழ் பல்லவம் - கிளையைப் பிளந்து எழுவதுபோலத் துளிர்த்த இளந்துளிர். அலர் முகிழ் - அலரும் பருவத்துஅரும்பு; இது தாமரை முகை. தெரிமலர் - அழகிய சிறந்த மலர், நனை - தேன். ஐந்தலை - அழகிய தலை. அவிர் பொறி - ஒளி செய்யும் புள்ளி. அரவம் - பாம்பு.

## நின் குன்றின் மேல்!

**- பாங்கர்**

**பசும்பிடி இளமுகிழ் நெகிழ்ந்தவாய் ஆம்பல்**
**கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்**
**எருவை நறுந்தோடு எரியிணர் வேங்கை**
**உருவமிகு தோன்றி யூழிணர் நறவம்**
**பருவமில் கோங்கம் பகைமலர் இலவம்**
**நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க**
**மணந்தவை போல வரைமலை எல்லாம்**
**நிறைந்தும் உறழ்ந்தும் நிமிர்ந்தும் தொடர்ந்தும்**
**விடியல் வியல்வானம் போலப் பொலியும்**
**நெடியாய், நின் குன்றின் மிசை!**

நெடியோனே! நின் குன்றத்தின் பக்கமலைச் சாரல்களிலே பச்சிலைச் செடிகள் மென்மையான துளிர்களைத் துளிர்த்திருக்கும். மகளிரின் வாயிதழ்களைப் போன்ற செவ்வியுடனே ஆம்பற்பூக்கள் மலர்த்திருக்கும். மணத்தோடு குலைகுலையாகப் பூத்த செங்காந்தள் மலர்கள் மகளிரின் கைவிரல்களைப்போல விளங்கும். பஞ்சாய்க்கோரைகள் நல்ல இதழ்களுடன் தொகுதி தொகுதியாகக் காணப்படும். எரியையொத்த பூக்களுடன் வேங்கை மரங்கள் விளங்கும். தோன்றிப் பூக்கள் மிக்க அழகுடன் பூத்திருக்கும். முகிழ்த்த பூங்கொத்துகளைக் கொண்டதாக நறவம் விளங்கும். பூக்கும் பருவம் என்றில்லாது, எப்பருவத்தும் பூக்கும் கோங்கமும் பூத்திருக்கும். பகைத்துச் சினந்தாரின் கண்களை யொத்த சிவப்புடன் இலவ மலர்கள் விளங்கும்.

தெற்றிக் கட்டியவையும், கோத்துக் கட்டியவையும், தொடுத்துக் கட்டியவையுமான மலர் மாலைகளைப்போல மலர்கள் விளங்கும். பல வண்ண மலர்கள் தம்முட் கலந்தவாயும் தொங்கல் தொங்கலாக அமைக்கப்பட்டவை போலவும் எப்புறத்தும் விளங்கும். இவ்வாறு மலைச்சாரல்களுள் எவ்விடத்தும்

மலர்களால் நிறைந்தும், பல்வேறு வண்ண மலர்களால் மாறுகொண்டும், மலர்க்காடாகவே தோன்றும். சில மலர்கள் நிமிர்ந்து விளங்கும். சில மலர்கள் தொடர்ந்து பூத்தவாய்த் தோன்றும். விடியற்காலைப் பொழுதிலே, அகன்ற வானத்தே விண்மீன் கூட்டம் தோன்றினாற்போல, அழகுடன், நின் குன்றின் மேற்பரப்பு எல்லாம் மலரணி பெற்று விளங்கும்.

**சொற்பொருள் :** பாங்கர் - பக்கம். பசும்பிடி - பச்சிலைச் செடிகள். முகிழ் - மொட்டு. எருவை - கொருக்கச்சி; பஞ்சாய்க் கோரை. தோடு - இதழ். உருவம் - நிறம். பகைமலர் இலவம் - இலைகட்குப் பகையாய் அவற்றை முற்றவும் உதிர்த்துத் தாம் மட்டுமே தோன்றும் இலவம் பூக்கள். நிணந்தவை - தெற்றிக் கட்டியவை. தூக்க மணந்தவை - தொங்கலாகக் கட்டியவை. வரைமலை - மலைச்சாரல்.

**விளக்கம் :** விடியலில் தோன்றும் பரங்குன்றத்து மலைச் சாரலின் மேற்புறத் தோற்றத்தை ஆசிரியர் இவ்வாறு அழகுறக் கூறுகின்றார்.

### சிறப்புணவு உண்பர்

**நினயானைச் சென்னி நிறங்குங்கு மத்தால்**
**புனையாப்பூ நீருட்டிப் புனைகவரி சார்த்தாப்**
**பொற்பவழப் பூங்காம்பின் பொற்குடை ஏற்றி**
**மலிவுடை உள்ளத்தான் வந்துசெய் வேள்வியுள்**
**பன்மணம் மன்னு பின்னிருங் கூந்தலர்**
**கன்னிமை கனிந்த காலத் தார், நின்**
**கொடியேற்று வாரணம் கொள்கவழ மிச்சில்**
**மறுவற்ற மைந்தர்தோள் எய்தார்; மணந்தார்**
**முறுவல் தலையளி எய்தார்;நின் குன்றம்**
**குறுகிச் சிறப்புணாக் கால்;**

பெருமானே! நினக்குரிய யானையின் நெற்றியை நிறம் வாய்ந்த குங்குமத்தால் அழகு செய்வார்கள். உதிரிப்பூக்களையும் நீரையும் கலந்து தூவுவார்கள். அழகுபடுத்தப் பெற்ற கவரியினை வீசுவார்கள். அழகிய பவழத்தாலே அமைக்கப் பெற்ற அழகிய காம்பினையுடைய பொற்குடையினை உயர்த்துவார்கள். அன்புமலிந்த உள்ளத்தோடு வந்து அடியார்கள் நின்னைக் குறித்த வேள்வியைச் செய்வார்கள். அவ் வேள்விக் களத்திடத்தே பல்வேறு மணமும் செறிந்திருப்பதும், பின்னப் பட்டிருப்பது மான கரிய கூந்தலையுடைய மகளிரும், கன்னிமைப் பருவம் கனிந்த காலச்செவ்வியைக் கொண்ட மகளிரும், நின் விழாக் கொடி ஏற்றப்படும் அந் நாளிலே, நின் யானை கொள்ளும் கவளத்தின் மிச்சிலைச் சிறந்த சிறப்பு உணவாகக் கருதிப் பக்தியோடு உண்பார்கள்.

*நின் குன்றத்தையடைந்து, அச் சிறப்புணவை உண்ணாத விடத்து, அம்மகளிர்கள் குற்றமற்ற தம் காதலர்களின் தோள் நலத்தை அடைய மாட்டார்கள். மணவாழ்வு பெற்றவரும் தம் நாயகரின் முறுவலோடு கூடிய அன்புக் கூட்டத்தைப்பெற மாட்டார்கள்.*

**சொற்பொருள் :** *சென்னி - நெற்றி. புனையாப்பூ - கட்டாத பூ. கவரி சார்த்தல் - கவரி வீசுதல். வாரணம் - யானை. சிறப்புணா - சிறப்புத் தரும் உணவு.*

**விளக்கம் :** *யானையைப் புனைந்து போற்றி வழிபடுகின்ற மரபு இது; அதனை வழிபட்டு அது உண்டு எஞ்சிய எச்சிலைச் சிறப்புணவாகக் கொள்பவர் தம் காதலைப் பிரியாதே வாழ்வார். என்பதும், பிரிந்தவர் மீளப்பெற்று இன்புறுவர் என்பதும், அக்கால மதுரை மகளிர் நம்பிக்கை.*

## தொழுது ஏத்தினேம்!

**குறப்பிணாக் கொடியைக் கூடியோய்! வாழ்த்துச்**
**சிறப்புணாக் கேட்டி செவி;**
**உடையும் ஒலியலும் செய்யை;மற் றாங்கே**
**படையும் பவழக் கொடிநிறம் கொள்ளும்;**
**உருவும் உருவத்தீ ஒத்தி; முகனும்**
**விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி**
**எவ்வத்து ஒவ்வா மாமுதல் தடிந்து**
**தெவ்வுக் குன்றத்துத் திருந்துவேல் அழுத்தி**
**அவ்வரை உடைத்தோய்! நீஇவ்வரை மருங்கில்**
**கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்,**
**உடங்கமர் ஆயமொடு ஏத்தினம், தொழுதே!**

*பூங்கொடி போன்றாளான குறக்குலப் பெண்ணாம் வள்ளி நாயகியைக் கூடி மகிழ்கின்ற பெருமானே! நின்னை வாழ்த்தும் எம் குரலையும் நினக்குரிய சிறப்புணவாகக் கொண்டு விரும்பிக் கேட்டருள்வாயாக!*

*உடையும், அணியும், மாலையும் செந்நிறமாகக் கொண்டவனே! மற்றும், அவ்விடத்தே நீ ஏந்தியுள்ள வேற்படையும் பவழக் கொடியின் செந்நிறத்தைக் கொண்டிருக்கும். நின்னுருவத்து வண்ணத்தானும் நீ அழகிய செந்தீயை ஒத்திருப்பாய். நின் முகமும் கதிர் விரியும் இளஞாயிற்றைப் போன்றிருக்கும். நின்மேற் பகைத்துத் துன்பமுற்றுக் கடலிடையே சென்று உருக்கரந்து நின்ற சூரனாகிய மாவினை வேரோடும் வெட்டியழித்தவனே! பகைத்த கிரவுஞ்சக் குன்றத்திலே நின் செவ்விய வேலினை அழுத்தி, அக்குன்றினை உடைத்தவனே!*

நீதான், இக்குன்றத்து ஒரு பக்கத்தே, கடம்பினிடத்தே அமர்ந்து அழகுற விளங்கும், அந்தச் சிறப்பினைப் போற்றிப் பாடினேம். எம்மோடும் ஒன்றுபட்டுள்ள, நின்னை விரும்பும் எம் சுற்றத்தாரோடும் தொழுது போற்றினோம். பெருமானே! எம்மையும் காத்தருள்வாயாக!

**சொற்பொருள் :** பிணா - பெண். ஒலியல் - தழைமாலை. படை - வேற்படை ; அது பவழக்கொடி நிறங் கொண்டது. செந்நிறப் பொருள்களின் எதிரொளியால். முற்றா விரிசுடர் - இளஞாயிறு. தெவ்வு - பகை. உடங்கமர் ஆயம் - தாமும் விருப்போடு உடன்பட்டு வந்து பணியும் சுற்றத்தார்.

**விளக்கம் :** அடியவர்க்கு இன்ப நல்வாழ்வும், முடிவில் துறக்கப் பெருவாழ்வும் தருகின்றவன் கடம்பமர் வேலனே என்று வலியுறுத்துகின்றது இப்பாட்டு. பரங்குன்றத்தின் சிறப்பையும்; பாண்டியனின் முருக பக்தியையும் இதனாற் காணலாம்.

**இருபதாம் பாடல்**

# வையை (20)

**பாடியவர் :** ஆசிரியர் நல்லந்துவனார்; **பண் வகுத்தவர் :** ஆசிரியர் நல்லச்சுதனார்; **பண் :** காந்தாரம் ஆகும்.

'கார்காலம் தொடங்குவதற்கு முன்னர் மீண்டு வந்து சேர்வேன்' என்று உறுதிகூறிப் பிரிந்து சென்றான் தலைவன் ஒருவன். கார்காலம் தொடங்கும்வரை தலைவி ஒருவாறாக ஆற்றியிருந்தாள். கார்காலம் தொடங்கியதும் அவள் துயரம் மிகுந்தது. அவளது நிலையைக்கண்ட தோழி மிக அஞ்சினாள். பாணனைத் தலைவனிடம் தூது விடுத்தாள்.

தலைவனிடம் சென்று சேர்ந்தான் பாணன். 'நீ பொய்த்தாய்; அதனால் நின் தலைவி வாடி நலிவடைந்தாள்' என்று அவன் கூறவில்லை. வையையின் புதுநீர் வரவையும், அதனாற் களிகொண்ட மதுரை மாந்தர் நிலையையும் உரைக்கின்றான். அதனைக் கேட்ட தலைவன்பால் தலைவியின் நினைவு எழுகின்றது. தான் பொய்த்த வாக்கும், அதனால் அவள் அடையும் துயரப் பெருக்கமும் எழுகின்றது. அவன், உடனே தன்னூராகிய மதுரையை நோக்கிப் புறப்பட்டு விடுகின்றான். பாணனின் சொல் நயத்தைக் காட்டுவதுடன், மதுரை மாந்தரின் களிகொண்ட நிலையையும் காட்டுகின்றது இப் பாடல்.

**மணஞ்சிறந்த பொதுநீர்!**

**கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்து**
**உடலேறு உருமினம் ஆர்ப்ப மலைமாலை**

**முற்றுபு முற்றுபு பெய்துசூல் முதிர்முகில்**
**பொருதிகல் புலிபோழ்ந்த பூநுதல் எழில்யானைக்**
**குருதிகோட் டழிகறை தெளிபெறக் கழீஇயின்று;**
**காலைக் கடல்படிந்து காய்கதிரோன் போயவழி**
**மாலை மலைமணந்து மண்துயின்ற கங்குலான்**
**வானாற்று மழைதலைஇ மரனாற்று மலர்நாற்றம்**
**தேனாற்று மலர்நாற்றம் செறுவெயில் உறுகால**
**கானாற்றுங்கார் நாற்றம் கொம்புதிர்த்த கனிநாற்றம்**
**தானாற்றம் கலந்துடன் தழீஇவந்து தரூஉம் வையை,**

மேகங்கள் கடலிற் படிந்து அதன் வளத்தைத் தாம் எடுத்துக் கொண்டவாய் மேலெழுந்தன. சூல் முதிர்ந்த மேகக் கூட்டங்கள் மலைப் பகுதியை முற்றுகையிட்டன. மலைப் பறைகள் சிதறுமாறு வலிய இடியேறுகள் சினங்கொண்டு முழங்கின. பெருமழையும் பெய்யத் தொடங்கிறது. கடலிற் கைக்கொண்ட நீரையெல்லாம் மேகங்கள் பெருமழையாகப் பொழிந்தன. இடியேறுகளின் கூட்டம் எப்புறத்தும் முழங்கின.

தன்னோடு போரினை மேற்கொண்ட பகையாகிய புலியைத் தன் கோடுகளாற் குத்திப் பிளந்து கொன்றது. பொலிவு விளங்கும் நெற்றியையுடைய களிறு ஒன்று. அதனால், அதன் கோடுகளில் குருதிக்கறை படிந்தது. அந்தக் கறை அகன்று, அவை பண்டே போல வெண்மை நிறத்தைப் பெறும்படியாக, மழைநீர் அவற்றைக் கழுவித் தூய்மை செய்தது.

மேகங்கள் காலையிற் கடலிற் படிந்து, கடல்நீரை முகந்து மேலெழும். காயும் கதிரவன் மலைவாயிடத்தே சென்று மறைகின்றதான மாலைப் பொழுதிலே, தாமும் மலைமுகடு களைச் சென்றமையும். மண்ணகத்தே உயிரினமெல்லாம் துயில் கொள்ளும் இரவுப்போதிலே பெருமழையினைப் பொழியும். இவ்வாறு மழைதான் தொடர்ந்து பெய்தபடி இருக்கும். அதனாலே -

மரங்கள் தருகின்ற மிகுதியான மலர்களது நறுமணமும், அம் மலர்களிடத்துப் படியும் வண்டினங்கள் மொய்த்த விடத்துச் சிதறும் தேன் துளிகளின் இனிய மணமும் எப்புறத்தும் எழுந்தன. முன்னர்ச் சுடுகின்ற வெயிலையும், மோதுகின்ற காற்றையும் கொண்டிருந்தன காட்டுப் பகுதிகள். அவ்விடங்களில் மழை பெய்ததால், அவ்வெப்பம் நீங்கப் புதிய மண்வாடையும் மண்ணின் ஈரமணத்தோடு எழுந்தது. மழையினது தாக்குதலால் மரக்கிளைகளினின்றும் உதிர்ந்து வீழ்ந்த கனிகளின் மணமும் எழுந்தது. இவ்வாறாகக் காட்டுப் பகுதியுள் புதுமழையினது வரவால் எழுந்த பலவகையான மணங்களையும் தன்னுள்ளே

அடக்கிக் கொண்டதாகப் புதுவெள்ளமானது வையையிற் பெருகி வந்து, அந்த இன்பத்தை மதுரை மக்கட்கும் நல்கியது.

**சொற்பொருள் :** குறைபடுத்தல் - தாம் முகந்து கொள்ளலால் நீரைக் குறையச் செய்தல். கல் குறைபட - மலைகளிற் பள்ளங்கள் உண்டாக என்பதும் ஆம்; மலைகள் வெடித்துத் தூள்பட எனலும் பொருந்தும்; வேனலின் வெம்மை யாற் கொதிப்புற்றிருந்த கற்காறைகளின்மேல் மழைநீர் பெய்த வழி அவை சிதறிக் குறைபடும் என்பது இயல்பு. உடலேறு - சினங் கொண்ட இடியேறு. இகல் - பகை. பொருது - போரிட்டு. பூநுதல் - அழகிய நெற்றி; புள்ளிகளைக் கொண்ட நெற்றியும் ஆம். மண் - மண்ணுயிர்கள். அழி - மிக்க. வான் - மேகம். கால - காற்றையுடைய. தேன் - வண்டு.

**விளக்கம் :** வேனில் முடிந்து பெய்யும் முதல் மழையின் சிறப்பைக் கூறுகின்றார். மலை மாலை முற்றுபு - மலைப்பகுதியை மாலைக் காலத்தே முற்றி, மலைப்பகுதிக்கு மாலையிட்டாற் போலச் சூழ்ந்து, 'முற்றுபு முற்றபு பெய்து' என்றது அலை யலையாக மேகத்திரள்கள் முற்றுவதும் பெய்து கழிவதுமாக இருந்த அடைமழையின் தன்மையை. புலியைக் கொன்றதனாலே கறைப்பட்ட களிற்றின் கொம்புகளைக் கழுவி என்றது, அதற்கும் நீரற்றிருந்த வேனலின் தன்மையை நினைவு படுத்துதற்காம். 'காலைக் கடல் படிந்து.....மழை தலைஇ' என்ற தொடர்களின் இனிமையைச் சுவைத்துணர்க. 'வானாற்று மழை தலைஇ' என்றது. மேகங்கள் தாம் ஆற்றும் கருணையாகிய மழையினைத் தருதற்குத் தலைப்பட்டு என்ற தாம். புதுவெள்ளம் புதிய கலவை மணத்துடன் வந்தது என்கின்றனர்..

**கூடல் விழையும் தகைமை**

**தன்னாற்ற மீது தடம்பொழில் தான்யாற்று**
**வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப**
**ஊரூர் பறையொலி கொண்டன்ற உயர்மதிலில்**
**நீரூர் அரவத்தால் துயிலுணர்பு எழீஇத்**
**திண்தேர்ப் புரவி வங்கம் பூட்டவும்**
**வங்கப் பாண்டியில் திண்தேர் ஊரவும்**
**வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும்**
**கயமாப் பேணிக் கலவாது ஊரவும்**
**மகளிர் கோதை மைந்தர் புனையவும்**
**மைந்தர் தண்தார் மகளிர் பெய்யவும்**
**முந்துறல் விருப்பொடு முறைமறந் தணிந்தவர்**
**ஆடுவார் பொய்தல் அணிவண்டு இமிர்மணல்**
**கோடேறு எருத்தத்து இரும்புன லிற்குறுகி**
**மாட மறுகின் மருவி மறுகுறக்**
**கூடல் விழையும் தகைத்துத் தகை வையை;**

வையையாற்றின் கரைகளிலிருந்த அகன்ற பொழில்கள் பலவும், பூத்துக் குலுங்கிய மலர்களினால் உண்டாகிய தம் இயல்பான மணத்தினும் மேலாக, யாற்றுநீர் பரவித் தரையின் வெம்மையை ஆற்றுதலால் எழுந்த மண்வாடையினையும் சேர்த்து எப்புறத்தும் பரப்பத் ஊர்களில் புதுவெள்ளத்தின் வரவை அறிவிக்கும் பறையொலியும் எழுந்தது.

மதுரைநகர்க் கோட்டைச் சுவரின்மீது மோதிச் செல்லும் நீரினது ஒலியினாலே, மதுரைநகரத்து மக்கள் துயிலினின்றும் நீங்கியவராக எழுந்தனர். அவரவரும் வையையை நோக்கிச் செல்வதற்குத் திட்டமிட்டனர். ஆனால் தூக்க மயக்கத்தால், திண்ணிய தேரிற் பூட்டுதற்குரிய குதிரையைக் கொண்டுபோய் வண்டியிற் பூட்டினர்; அவ்வண்டியிற் கட்டுதற்குரிய எருதினைத் தேரிற் பூட்டினர்; குதிரைகளுக்குப் பூட்டுதற்குரிய சேணம் முதலியவற்றைக் களிற்றுக்கு இட்டனர்; சிலர் யானை குதிரை களுக்கு எதனையும் அணிவியாமலே ஏறியமர்ந்து செலுத்து வாராயினர்.

மகளிர் அளிதற்குரய கோதைகளை மைந்தர் அணிந்து கொண்டனர். மைந்தர் அணிதற்குரிய குளிர்ந்த மாலைகளை மகளிர் சூடிக்கொண்டனர். அனைவரும் தாம்தாம் முந்திச் செல்லவேண்டும் என்றே விரும்பினர். அவ்விருப்பத்தாலே அணிகளை அணியும் முறைகளையும் மறந்து, முறை மாற்றி அணிந்தவராக விரைந்து சென்றனர்.

வையையின் இருபுறக் கரைகளின்மேல் இளமகளிர் பொய்தல் இழைத்து விளையாடியிருப்பர். அக் கரைப்பகுதியில் நிற்கும் மரங்களிலிருந்து வீழ்ந்த மலர்களை விரும்பியவாய் அழகிய வண்டுகளும் அங்கே மொய்த்துக் கொண்டிருக்கும். அத்தகைய மணற்கரைகளின் கழுத்தளவிற்குப் புதுவெள்ளம் பெருகிச் சென்றது. முற்பட்டுப் புறப்பட்டுச் சென்றவர் பெரிய புதுப்புனற் பெருக்கினை அடைந்து நீராடிக் களித்தனர். பிற்பட்டுப் புறப்பட்டார் பலரும் மதுரைத் தெருக்களில் நின்று மக்கள் நெருக்கத்தால் மேற்செல்ல இயலாராய்ச் செயலற்று மயங்கி நிற்பாராயினர்.

தகைமை பொருந்திய வையையானது, இவ்வாறு, அனைவரும் சென்று சேர்தலை விரும்பும் அந்தப் புதுமையான தன்மையைப் பெற்றுத் திகழ்ந்தது.

**சொற்பொருள் :** நாற்றம் - மணம். வெம் நாற்று வேசனை நாற்றம் - வெம்மையாலே தோன்றிப் பரவிய நாற்றம். குதுகு துப்ப- அது தீர்ந்து குளிர்ந்த வாடையாக எழ. ஊரூர் - ஊர்கள் தோறும். துயிலுணர்வு - தயில் நீங்கி எழுந்து. வங்கம் - ஒரு வகை வண்டி.

வயமா - வலிய குதிரைகள். மதமா - மதத்தைக் கொண்ட களிறு. கயமா - யானையும் குதிரையும். கோதை - மகளிர் தலைமாலை. தார் - ஆடவர் மார்பிடத்து அணியும் மாலை. பொய்தல் - மகளிர் விளையாட்டு. அணி வண்டு - அழகிய வண்டு. எருத்தம் - கழுத்து.

**விளக்கம் :** மக்கள் புதுநீர் ஆடுதற்குச் சென்ற விரைவை நயமாகக் கூறுகின்றார். 'மாட மறுகின் மருவி மறுகுற' என்பது, மிகவும் நயமாக அவர் நிலையை விளக்குவதாகும். 'தகை வையை கூடல் விழையும் தகைத்து' என்பதனால் 'நின் தலைவி தானும் அத் தகையளே' என்பனையும் உணர வைக்கின்றனன், பாணன்.

## நிலை காண்மின்

**புகைவகை தைஇயினார் பூங்கோதை நல்லார்**
**தகைவகை தைஇயினார் தார்;**
**வகைவகை தையினார் மாலை மிகமிகச்**
**சூட்டும் கண்ணியும் மோட்டு வலையமும்**
**இயலணி அணிநிற்ப ஏறி அமர்பரப்பின்**
**அயலயல் அணிநோக்கி ஆங்காங்கு வருபவர்**
**இடுவளை ஆரமோடு ஈத்தா னுடனாகக்**
**கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு**
**நொந்தவள் மாற்றாள் இவளென நோக்கத்**
**தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்!**
**செருச்செய்த வாளி சீற்றத் தவையன்ன**
**நேரிதழ் உண்கணார் நிறைகா டாக**
**ஓடி ஒளித்தொய்யப் போவாள் நிலைகாண்மின்!**

வையைக் கரையிலே ஆடவரும் மகளிருமாகத் திரண்டு நின்றனர். மகளிர்க்குப் பிறமகளிரது அணிகளைக் காண்பது மகிழ்ச்சிதரும் அல்லவா! அவ்வாறு ஒருவர் ஒருவராகப் பார்த்துக் கொண்டு வந்த பெண்களுள் ஒருத்தி, தன் தலைவியின் அணிகளுட் சிலவற்றை ஒரு பரத்தையின்மேற் கண்டு திடுக்கிட்டாள். 'இவள் நம் தலைவனின் பரத்தையோ?' என ஐயுற்று, அவளையே நோக்கினாள். அதனைக் கண்டு தலைவன் நாணி நின்றான். அப் பரத்தையோ வெட்கியவளாக, மகளிர் கூட்டத்துள் விரைந்து புகுந்து மறைந்தாள். அவள் நிலையைக் கண்டு, மற்றவர் எல்லாரும் சிரித்து நகையாடினர்.

பெண்கள் அணியணியாக வையைக் கரையில் நின்றனர். கூந்தற்கு அவர்கள் வகைவகையான நறும்புகையினை ஊட்டியிருந்தனர். அவ்வாறு நறும்பூகை யூட்டப்பெற்று, நறுமணம் கமழ்ந்து கொண்டிருக்கும் கூந்தலிடத்தே, பூமாலைகளையும் அழகியர் சிலர் அணிந்திருந்தனர். சிறந்த வகைமையோடு திகழுகின்ற மாலைகளையும் அவர்கள் அணிந்திருந்தனர். வகை வகையான பூக்களால் தொடுத்த மாலைகளை வகைவகையாகக்

கட்டியும் தொடுத்தும் அவர்கள் அணிந்திருந்தனர். தலையுச்சி யிலே சூடிக்கொள்ளும் சூட்டெனவும், கூந்தலிற் சூடிக்கொள்ளும் கண்ணியெனவும், பெரிதாக அமைந்த வலயம் என்னும் வட்ட மாலையெனவும் வகைவகையாக அணிந்தவர்களாக, தங்கள் இயல்பான அழகினை அணிவகைகள் மேலும் உயர்த்துக் காட்ட, இளம்பெண்கள் பலரும், அணியணியாக வையைக்கரையிலே சென்று நின்றனர்.

சிலர் தாங்களும் கரையிடத்தே ஏறினர். விரும்பத்தகுந்த அக் கரைப்பரப்பின் கண்ணே, ஆங்காங்கே அடுத்தடுத்து நின்றவர் களின் வகைவகையான அணிநலத்தை நோக்கி இன்புற்றபடியே, அவர்கள் வந்து கொண்டிருந்தனர். அவர்களுள் ஒரு தலைவியின் தோழியரும் சிலர் இருந்தனர். அவர்கள் அவ்விடத்தே தம் தலைவனையும், அவனருகாக நிற்கும் ஓர் இளம்பரத்தையையும் கண்டனர்.

கையில் இடுதற்கான வளையல்களையும், முத்தாரத்தையும் தனக்குத் தந்தானாகிய அத் தலைவனுடன், அப் பெண்ணும் உடனாக நின்று கொண்டிருந்தாள். 'கெட்டது' என்று பேச் செழுந்த தம் தலைவியின் வளைகளைப் பிற அணிகளோடு சேர்த்து அணிந்திருந்தாளான அப் பரத்தையின் மேனியிற் கண்டதும், அவர்கள் பதைத்தனர், 'அக் கற்பு உடையவளின் மாற்றாள் இவள்?' என, அப் பரத்தையையே சினத்துடனும், எள்ளலுடனும் கூர்ந்து நோக்கினர். அவர்கள் நோக்கிய நோக்கையும், தான்செய்த தவற்றினையும் கண்டான் தலைவன். தன் திருட்டை அவர்கள் அறிந்து கொண்டனரென்பதனை அறிய, அக் கள்வனின் முகம் நாணத்தால் ஒளியிழந்தது. அதனைப் பாருங்கள் என்று, அப் பெண்கள் தமக்குள் சுட்டிப் பேசி நகையாடலாயினர்.

தலைவனருகே நின்றாளான பரத்தையும் இவற்றைக் கண்டாள். அவள் உள்ளம் வெட்கத்தாற் குன்றியது. இவர்கள் பார்வையிலிருந்து ஓடி ஒளிந்துகொள்ள வேண்டும் என்று அவள் துடித்தாள். அவள் நிலைகண்ட தோழியர் சீற்றம் கொண்டனர். அதனால் அவர் கண்கள் போரினைச் செய்த அம்பு முனை யினைப்போலச் சிவந்தன. தம்முள் நேரொத்த இமைகளைக் கொண்டனவும், மையுண்டனவுமாகிய கண்களை உடைய அப்பெண்கள் கூட்டம் அனைத்தும் அப்பரத்தை யையே நோக்கின. அவள் தளர்ந்தாள். ஓடி ஒளிந்து தப்பிவிட முயன் றாளாக, அவள் விரைந்து மக்கள் கூட்டத்துட் புகுந்து மறைந்து, நகரை நோக்கிச் செல்லலானாள். அவள் நிலையைக் காண்பீர்! எனத் தோழியரும் அவளைச் சுட்டி அனைவருக்கும் காட்டி நகையாடினர்.

**சொற்பொருள் :** புகைவகை - அகில் முதலியன. தைஇ - அணிந்து. பூங்கோதை - அழகிய தலைமாலை. நல்லார் - மகளிர். தார் - மாலை. சூட்டு - உச்சிச் சூட்டு. வளையம் - வளைவான மாலை. அமர் - விருப்பம். அயலயல் - அடுத்தடுத்து. அணி - அணிகளின் செவ்வி. இடுவளை - இடுதற்குரிய வளை. கெடுவளை - கெட்டுத் தொலைந்து போனதென்னும் வளை. மாற்றாள் - பரத்தை; தலைவிக்கு மாறாகத் தலைவனுக்கு இன்பந்தருதற்கு வாய்த்தவள். சமழ்ப்பு - வெட்கம்; சகரத்தை முதலிற் கொண்ட பழஞ்சொல் இது. செரு - போர்; 'செருச்செய்த வாளி' என்றது, அதன்பாற் படிந்த குருதிக் கறையாற் சிவந்த தன்மை நோக்கி, இதழ் - இமை, நேரிதழ் உண்கணார் நிறைகாடாகப் பரத்தை அதனுட் புகுந்து ஓடி ஒளிந்தாள் என்க.

**விளக்கம் :** சுவையான காட்சி இது. தலைவர்கள் இவ்வாறு தம் மனைவியரின் அணிகளை, அவரறியாமற் பரத்தையருக்குக் கொணர்ந்து தருவர் என்பதும், பின்னர் அவர் அவற்றைத் தேடுங்கால், அவை காணாமற் போயிற்றென்று பொய்கூறி மறைப்பர் என்பதும் இதனாற் காணப்படும். பரத்தையரின் மோகத்தால் இவ்வாறு நிலையழிந்து பொருந்தாச் செயலில் ஆடவர் ஈடுபடுகின்ற மனப்போக்கையும், பின்னர் அதுதான் வெளிப்படுங் காலத்து, அவர் நாணிநிற்கும் நிலையையும் காட்டு கின்றது இப் பகுதி.

## திகைத்தாள் தலைவி!

**என வாங்கு,**
**ஒய்யப்போ வாளை உறழ்ந்தோளிவ் வாணுதல்**
**வையை மடுத்தாற் கடலெனத் தெய்ய**
**நெறிமணல் நேடினர் செல்லச் சொல்லேற்று**
**செறிநிரைப் பெண் வல்லுறழ்பு யாது தொடர்பென்ன**
**மறலினாள் மாற்றாள் மகள்;**
**வாய்வாளா நின்றாள்**
**செறிநகை சித்தம் திகைத்து;**

இவ்வண்ணமாக ஓடி ஒளியச் சென்றாளான அப் பரத்தையை, அவளை அச்சுறுத்திய பெண்கள் அப்படியே விட்டுவிடவில்லை. 'இவள் தலைவிக்கு மாற்றாள்; இவட்கு அறிவு புகட்டல் வேண்டும்' எனக் கருதினர். அவளைத் தாமும் தொடர்ந்து சென்றனர். ஒளியமைந்த நெற்றியினளான அப் பரத்தையும் விரைந்து சென்றுகொண்டேயிருந்தாள். இவர்களும் அவளைத் தேடிச் சென்றனர். வையையாற்றிலே வெள்ளம் கடல்போலப் பெருகி வந்தமையால், கரைகடந்து சென்று, அதனால் அறல் படிந்துள்ள கரையோரத்து மணற்பாங்கிலே

நின்றிருந்த மகளிர் கூட்டத்துள் அப் பரத்தை ஒளிந்தாள். இவர்களும் அவளைத் தேடியவராக அக்கூட்டத் துட் புகுந்து சென்று, அவளையும் அணுகினர்.

இவ்வாறு தொடர்ந்து வருபவரைக் கண்ட அவள், தானும் மேலும் ஓடவியலாத நிலையினை அடைந்ததும், நின்றாள். அற வாழ்வுக்கு மாறுபட்ட பரத்தையின் மகளான அவள், அவர்களை எதிர்த்து வழக்காடவும் துணிந்தாள். மிகவும் மாறு பட்டவளாக, 'ஏன் என்னையே தொடர்கின்றீர்?' எனச் சினத்தோடும் கேட்டாள்.

தோழியர் செல்ல, அவர்பின் தானும் யாதுமறியாளாகச் சென்று கொண்டிருந்த தலைவி, நெருங்கிய பல்வரிசையினை உடையாள். அவள் அப் பரத்தையின் கேள்வியைக் கேட்டதும், சித்தத்தே திகைப்புற்று, யாதும் பேச்செழாதவளாக அப்படியே நின்றுவிட்டாள்.

**சொற்பொருள் :** ஒய்ய - ஒளிந்து கொள்ள. உறழ்ந்தோள் - மாற்றாள். மடுத்தல் - பகுதல். 'தெய்ய' என்பது அசை. நெறிமணல் - நெறிப்பட்ட மணல்மேடு. நேடினர் - தேடினராக. சொல்லேற்று - சொல்லாடலை மேற்கொண்டு. பெண் நிரை - பெண்கள் கூட்டம். வல்லுறழ்வு - மிகவும் மாறுபட்டு. மறலினாள் - மறுத்துப் பேசினாள்.

**விளக்கம் :** முதலில் நாணி ஒளிந்து கொள்ள முயன்றாலும், பின்னர்த் தான் மடக்கப்பட்ட நிலையில் சொல்லேற்று வழக்காடத் துணிந்த நிலையும், ஆனால் அவளுக்கு எதிரே பேச் செழாதவளாக நின்றாளான தலைவியின் பண்புசெறிந்த நிலையும் சிந்தனைக்கு உரியன.

## சொற்போர்

**ஆயத் தொருத்தி அவளை அமர்காம**
**மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை!**
**பெண்மைப் பொதுமைப் பிணையிலி! ஐம்புலத்தைத்**
**துற்றுவ துற்றும் துனையிதழ் வாய்த் தொட்டி!**
**முற்றா நறுநறா மொய்புனல் அட்டிக்**
**காரிகைநீர் ஏர்வயற் காமக் களிநாஞ்சில்**
**மூரி தவிர முடுக்கும் முதுசாடி!**
**மடமதர் உண்கண் கயிறாக வைத்துத்**
**தடமென்தோள் தொட்டுத் தகைத்து மடவிரலால்**
**இட்டார்க்கு யாழார்த்தும் பாணியில் ஏம்மிழையைத்**
**தொட்டார்த்தும் இன்பத் துறைப்பொதுவி! கெட்டதைப்**
**பொய்தல் மகளிர்கண் காண இருத்தந்திவ்**

**வையைத் தொழுவத்துத் தந்து அடித்திடித்து**
**மத்திகை மாலையா மோதி அவையத்துத்**
**தொடர்ந்தேம் எருது தொழில் செய்யா தோட**
**விடுங்கடன் வேளாளர்க் கின்று படர்ந்தியாம்**
**தன்மார்பும் தண்டந் தருமாரத் தாள்மார்பும்**
**நின்மார்பும் ஒரொத்த நீர்மையகொல்? என்னாமுன்.**
**தேடினாள் ஏசச் சிலமகளிர் மற்றதற்கு**
**ஊடினார் வையை அகத்து;**
**சிந்திக்கத் தீரும் பிணியாள் செறேற்க**
**மைந்துற்றாய் வெஞ்சொல் மடமயிற் சாயலை**
**வந்திக்க வாரென மனத்தக்க நோயிது**
**வேற்றாரை வேற்றார் தொழுதல் இளிவரவு**
**போற்றாய்காண் அன்னை புரையோய் புரையின்று**
**மாற்றாளை மாற்றாள் வரவு;**

*தலைவி சித்தம் திகைத்தவளாக நின்றதும், அவளுடன் வந்த ஆயமகளிருள் ஒருத்தி பரத்தையைப் பலபடியாகப் பழித்துப் பேசுகின்றாள். அதைக் கேட்டு அப் பரத்தை தலைவியைப் பழிக்கின்றாள். அதனைக் கேட்ட முதுபெண்டிருட் சிலர், 'கற்புடையாளை இகழாதே ; அவளை வணங்கிப் போற்றுக' என்கின்றனர். அவளோ, 'மாற்றாளை வணங்கல் உயர்வன்று' என்று, உண்மையைக் கூறி, அமைகின்றாள்.*

*தலைவி சித்தம் திகைத்து நின்றதைக் கண்டனர். அவளைப் பழித்த பரத்தையின்மேல் தலைவியினுடன் வந்தாரான ஆயமகளிர்க்குப் பெருத்த சினம் உண்டாகிறது. அவர்களுள் ஒருத்தி அவளை நோக்கி ஏசத் தொடங்குகிறாள்:*

*"விரும்பத்தகுந்த காமவின்பத்தை, மயக்கும் பொய்ம் மொழிகளோடு சேர்த்துக் காட்டி ஆடவரை மயக்கும் விலை மகளே! பெண்மையை ஒருவனுக்கு உரியதாக்கி உயர்வாழ்வு வாழாதே, பலருக்கும் பொதுமையாக்கி விற்றுத் 'துணைவன்' என யாருமே இல்லாதிருப்பவளே! ஐம்புலத்திற்கும் இன்பந் தருவதான காமவின்பத்தை நுகரும் காமுகராகிய பன்றிகள் உண்பதற்குரிய தாய் விளங்கும், இரண்டு இதழ் அமைந்த வாய்த்தொட்டியைக் கொண்டவளே!*

*"முதிராத நல்ல கள்ளினை மிகுதியான நீரினைப் பெய்து கலக்கிக், களிப்புத்தரும் காமக் கலப்பையிலே, எம் தலைவனாகிய எருதைக் கட்டி, அது சற்றும் அயராதபடி முடுக்கியபடியே யிருக்கும் முதுசாடியே!*

*"இளமையும் களிப்பும் மையுண்ட செவ்வியும் பொருந்திய நின் கண்களின் நோக்கினைக் கயிறாக வைத்து, ஆண்களுடைய*

அகன்ற மென்தோள்களைத் தொட்டுக் கட்டி, அவர்களுள் நினக்குப் பொருள்தரும் செல்வாக்கு, நின் இளவிரல்களால் யாழினை இசைத்து அவர்களை இன்புறுத்துபவளே! அவ்வாறு இன்புறுத்தும் காலத்தே எம் தலைவியின் வளையலும் மாலையுமாகிய அணிகளை அணிந்து கொண்டு அவர்க்கு நீயும் இன்பம் ஊட்டுவாய்; இன்பத்தை அளிப்பதில் வையைத் துறையைப்போல ஆடவர் அனைவருக்கும் ஆடுதற்குரிய பொதுவான இன்பத் துறையாக விளங்குபவளே!

"எம் தலைவனாகிய உழவு எருது காணாமற் போயிற்று. பொய்தல் விளையாட்டு விளையாடும் இம் மகளிர் தம் கண்ணாற் காணுமாறு அதனை இழுத்து வருவோம். இவ் வையையாகிய தொழுவத்தே கொண்டு சேர்ப்போம். அதனை அதட்டியும் அடித்தும், எம் மாலையே சாட்டையாக்கொண்டு மோதியும் எம் வசமாக்குவோம், அதனைக் குறித்தே நின்னைப் பின்பற்றி வந்தோம். எருது, தன் தொழிலாகிய உழவைச் செய்யாதே ஓடுமானால், அதனை ஓடிப்போகட்டும் என்று விட்டுவிடும் கடமை வேளாளர்க்குக் கிடையாது. அதனைப் பற்றி வணங்கி மீண்டும் உழவிற் செலுத்துவதே அவர் செயற்குரிய கடனாகும். அதுகுறித்தே யாமும் தொடர்ந்து வந்தேம். தம் மார்பையே தன் கணவனுக்குத் தண்டமாகத் தருகின்ற சீர்மையுடைய முத்தாரத்தாள் எம் தலைவி. அவள் மார்பும், நின் மார்பும் ஒருபடியாக ஒப்புடையனவாகுமோ?"

என்றிவ்வாறு பேசினாள். இதற்கு முன்பாகவே, அவர் களால் தேடிப் பின்தொடரப்பட்டவளாகிய பரத்தை தலை வியை ஏசினாள். அதனைக் கேட்ட மகளிருள் சிலர், அவள் பாற் சினம் கொண்டனர். வையைக் கரையிடத்தே இவை எல்லாம் நிகழ்ந்தன.

"இவள் பெயரை நினைத்தாலே பிறரின் பாவப்பிணிகள் தீரும். அத்தகு கற்புடையாள் இத் தலைவி, இவளைச் சினந்து எதுவும் உரையாதே. இவளைக் குறித்துக் கொடிய சொற்களைக் கூறிய நீதான் அறியாமை உடையவளாயினை. இளமயிலின் சாயலை உடையாளான இவளை வணங்கி, மன்னிப்பு பெறுதற்கு வருக" என்று, அவர் அப்பரத்தைபாற் கூறினர்.

"இதுவோ மனத்தே கொண்டு வெதும்பும் நோய் ஆகும். வேற்றாரை வேற்றார் தொழுதல் என்பது இழிவாகும்" என்றாள் அவள்.

"தாயே! மாற்றாளை மாற்றாள் வணங்குவது என்பதும் உயர்வில்லைதான். உயர்ந்தவளே! இப்பரத்தையின் பேச்சை

ஒருபொருட்டாக நீயும் கருதாதே" என்று தலைவிடம் சொல்லி அவளையும் அமைதிப்படுதினர் அம் மகளிர்.

**சொற்பொருள் :** ஆயம் - தோழியர் கூட்டம். அமர்தல் - விரும்புதல். மாயப் பொய் - வஞ்சனையான பொய்; வஞ்சிக்கக் கருதியே கூறும் பொய். விலைக்கணிக்கை - விலைமகள். பிணை - துணை. துற்றுவ - நுகர். காரிகை - அழகு. மூரி - இள எருது. மடமதர் - இளமையும் களிப்பும். மடவிரல் - இளவிரல்; பரத்தையின் விரல். யாழார்த்தும் பாணியில் - யாழிசைத்து இன்புறுத்தும் அந்தக் காலத்தில். பொய்தல் - மகளிர் விளையாட்டு. வடித்து இடித்து - அதட்டியும் இடித்தும். மத்திகை - சாட்டை. அவையம் - மகளிர் கூட்டம். தண்டம் - வீணாக; காணிக்கையாக. பிணி - பாவப்பிணி. செறேற்க - சினவாதே கொள். மைந்து - அறியாமை. மனத்தக்க - மனத்திற் கொள்ளத்தக்க; நிலைபெறத்தக்க. வேற்றார் - முன்பின் அறியாதார்; புதியர்; பகைவர். இளிவரவு - இழிவு. புரையோய் - உயர்ந்தவளே. புரையின்று - உயர்வில்லை.

**விளக்கம் :** பரத்தை தலைவனால் விரும்பப்பட்டவள் எனினும்கூடப், பெண்கள் கூட்டத்துள், அவளுக்கு உயர்வு இல்லாமற் போவதும், தலைவியே மதிக்கப்படுவதும் காண்க. 'சிந்திக்கத் தீரும் பிணியாள்' என்னும் சிறப்பைத் தலைவிக்குப் பிறமகளிர் தந்த சீர்மையையும் நினைக்க.

### விலை தந்தான்

**அ........சொநல்லவை நாணாமல்**
**தந்து முழவின் வருவாய் நீ வாய்வாளா**
**எந்தை எனக்கீத்த இடுவளை ஆரப்பூண்**
**வந்தவழி நின்பால் மாயக் களவன்றேல்**
**தந்தானைத் தந்தே தருக்கு;**
**மாலையணிய விலைதந்தான்; மாதர்நின்**
**கால சிலம்பும் கழற்றுவான்; சால**
**அதிரலங் கண்ணி நீ அன்பனெற் கன்பன்**
**கதுவாய் அவன் கள்வன்; கள்வி நான் அல்லேன்;**
**என வாங்கு,**

'நினக்கு இவ்வணிகளைத் தந்தானைச் சொல்?' என்று தலைவி அவளிடம் கேட்கின்றாள். 'நின் தலைவன், எனக்கு விலையாகத் தந்தான்; அவனைக் கேட்க?' என்று செருக்குடன் கூறுகின்றாள் அந்தப் பரத்தை.

"நல்லனவாகிய இனிய மெல்லிய சொற்களை நாணாதே எடுத்துச் சொல்லியவளாக, மத்தளத்தின் ஓசையைப்போன்று முழக்கியபடி வருபவளே! நீதான் நின் பேச்சைக் கைவிடுக. என்

தந்தை எனக்குச் செய்தளித்த இடுவளையும் முத்தாரமும் ஆகிய அணிகள் நின் மேனியிடத்தே வந்துசேர்ந்த வகைதான் யாது? நின்னிடத்தே மாயக் களவுசெய்யும் தன்மை இல்லாதிருந்தால், அவற்றை நினக்குத் திருடித் தந்தவனைக் கூறிவிட்டு நீ செருக்கிப்பேசுவாயாக" என்கிறாள் தலைவி.

"மோசிமல்லிகைக் கண்ணியைச் சூடியுள்ளவளே! நினக்கு அன்பனாகிய தலைவன், எனக்கும் அன்புடையான் ஆவன். நினக்குப் பற்றுக்கோடாகிய அவனே கள்வன்; நான் கள்வி அல்லேன். பெண்ணே! என்னை அடைதற் பொருட்டு எனக்குரிய விலையாக அவன் இவற்றைத் தந்தான். நாளை நின் காற்சிலம்பையும் கழற்றித் தருவான்; அவன்பாற் சென்று இதனைப் பற்றிக் கேட்பாயாக" என்கின்றாள் அப்பரத்தை.

**சொற்பொருள் :** அ.........சொனல்லவை - நல்லனவாகிய மெல்லிய இனிய சொற்கள் என்பர் பரிமேலழகர்; பிற்காலத் திடையிற் சில எழுத்துக்கள் மறைந்தன. முழவு - மத்தளம். முழவின் வருவாய் - மத்தளத் தாளத்திற்கேற்ப ஆடி வரும் ஆடன் மகள் எனவும், மத்தள வொலிபோல முழக்கியபடி வருவாய் எனவும் கொள்க. எந்தை - தலைவியின் தந்தை ; அவன் ஈத்த என்றதனால், பெண்கட்குப் பற்பல அணிகளையும் பூட்டி மணஞ் செய்து தருதலும் பண்டை வழக்கம் எனலாம்; அது தன் பிறந்த வீட்டுச் சொத்து; தலைவனுக்கு உரிமையற்றது என்பதுமாம். 'மாலை யணிய'-என்பது பரத்தையை அடைதற்கு என்பதாகும். மாதவியின் மாலையை விலை பகர்தலையும் நினைக்க. பூவிலை மடந்தையர் என்பதும் இதனாற் போலும்.

**விளக்கம் :** தன் அணிகளை அவளுக்குத் தந்தவன் தன் தலைவனே என்பதறிந்ததும், அவனைத் தன் வாயாற் கள்வ னென்று கூறாமல், பரத்தையையே 'கள்வி' எனவும், 'கள்வி இன்றேல், தந்தான் யாவன்?' எனவும் கேட்கும் தலைவியது செம்மையை நினைக்க. 'நின் காற் சிலம்பு கழற்றுவான்' என்று பரத்தை கூறுவது, தலைவன் தன்னிடத்தே விருப்புற்று மயங்கிக் கிடப்பவன்; தனக்காக எதையும் செய்பவன்; அவனைத் தலைவியால் தடுக்கவியலாது என்னுஞ் செருக்கினாலாம்.

### வையைச் சிறப்பு!

**வச்சிய மானே! மறலினை மாற்றுமக்கு**
**நச்சினார் ஈபவை நாடறிய நும்மவே**
**சேக்கை இனியார்பால் செல்வான் மனையாளால்**
**காக்கை கடிந்தொழுகல் கூடுமோ? கூடா;**
**தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்;**

**நிகழ்வ தறியாது நில்லுநீ நல்லாய்!**
**மகளிரை மைந்துற்று அமர்புற்ற மைந்தர்**
**அகலம் கடிகுவேம் என்பவை யார்க்கானும்**
**முடிபொரு ளன்று; முனியல், முனியல்!**
**கடவரை நிற்குமோ காமம், கொடியிழாய்!**
**எனவாங்கு,**
**இன்ன துனியும் புலவியும் ஏற்பிக்கும்**
**தென்னவன் வையைச் சிறப்பு;**

*அங்கு நின்றாரான பெண்கள் பலரும், இருசாரார்க்கும் இடையே நிகழவிருந்த பூசலைத் தடுத்து, இருவரையும் அமைதிப் படுத்துகின்றர்.*

*"காண்பாரை அழகால் வசியப்படுத்தும் மானைப் போன்றவளே! தலைவியோடு மாறுபட்டு நிற்றலைக் கைவிடுக. நும்மை விரும்பிவரும் ஆடவர் நுமக்குத்தந்த பொருள்கள் எல்லாம், இந் நாடறிய நும்முடையவே யாகும்." என்று அப்பரத்தையிடத்தே கூறி, அவள் சினத்தைத் தணிவித்தனர்.*

*"சேர்கைக்கு இனியவரான பரத்தையிடத்தே செல்வானாகிய தன் கேள்வனை, அவன் மனையாளால் அப் பிழையைப் பொறுத்துக் குடும்பநலனைக் காத்தலன்றி, அவனைச் சினந்து ஒதுக்கி வாழ்தல் என்பதும் பொருந்துமோ? பொருந்தாதே."*

*"கற்பென்னும் தகுதியுடையவரான பெண்டிர் சான்றாண்மை உடையோருள் எல்லாம் உயர்ந்தோர் ஆவர். அவர், தம் கேள்வர் தம்மை இகழ்ந்து ஒதுக்கிய காலத்தினும் அவரைப் போற்றி வழிபடுவர். நற்பண்பிற் சிறந்தாளே! இவ்வாறு நீங்கள் பூசலிடுவதன் விளைவை அறியாதே மேற் செல்லாதே. அப்படியே நிற்பாயாக.*

*"பரத்தையார்பால் காமுற்று அவரைக் கூடியொழுகியவரான தம் கேள்வரின் மார்பினை யாம் இனித் தழுவேமாய் ஒதுக்குவேம்" என்ற விலக்குவது எப்பெண்ணுக்கும் முடியக் கூடிய ஒரு செயலும் அன்று; அதனாற் பெரிதும் சினவாதே!*

*"காமம் என்பதுதான் நிற்கக்கூடிய எல்லை இதுவென அறிந்ததாய், அந்த எல்லைக்குள் நிற்கும் தன்மையதோ? பூங்கொடியின் இயலினை உடையவளே!"*

*இவ்வாறு தலைவிக்கும் அவர்கள் சில அறிவுரைகளைக் கூறினர்.*

*பாண்டியனது வையையாறு, இவ்வாறு மக்களுக்குப் பெருஞ்சினமும் ஊடலும் உண்டாக்கும் ஒரு சிறப்பினையும் கொண்டது ஆகும்.*

**சொற்பொருள் :** *வச்சியம் - வசியம்; பிறரைத் தன்பால் கவர்தலாகிய ஆற்றல், அழகு முதலியன. மறல் - மாறுபடல். நச்சினார் - விரும்பி வந்த ஆடவர். சேக்கை - கூட்டம். காக்கை - காத்துப் பேணுதல். சான்றாண்மை - உயர்ந்த ஒழுக்கம். கேள்வர் - கணவர். மைந்து - மயக்கம்; இது ஆராக்காமத்தல் எழுவது. முடிபொருள் - முடிந்த பொருள். கடவரை - நிற்கும் எல்லை. துனி - முற்றிய சினம். புலவி - சிறு சினம்.*

**விளக்கம் :** *கணவனது பொருந்தா ஒழுக்கத்தின் காரண மாகத் தலைவிக்கும் பரத்தைக்கும் இடையே நிகழவிருந்த பூசலை, இவ்வாறு இருவருக்கும் அறவுரைகூறி, முதுபெண்டிர் தடுத்தனர் என்க. 'இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்' எனக் கற்புமகளிரது சீரிய பண்பினையும் உரைத்தனர்.*

### சுருங்கை நீர்!

**கொடியியலார் கைபோற் குவிந்த முகை**
**அரதவுடன் றவைபோல் விரிந்த குலை**
**குடைவிரிந் தவைபோலக் கோலு மலர்**
**சுனை கழிந்து தூங்குவன நீரின் மலர்**
**சினைவிரிந்து உதிர்ந்தவீப் புதல்விரி போதொடும்**
**அருவி சொரிந்த திரையின் துரந்து**
**நெடுமால் சுருங்கை நெடுவழிப் போந்து,**
**கடுமா களிறணத்துக் கைவிடுநீர் போலும்**
**நெடுநீர் மலிபுனல் நீள்மாடக் கூடல்**
**கடிமதில் பெய்யும் பொழுது;**

*பூங்கொடியைப் போல அசைந்தசைந்து நடை பயில் வாரான மகளிரின் கைவிரல்களைப் போலக் குவிந்துள்ள காந்தளின் மொட்டுக்கள்; நாகப் பாம்பு சினந்து படத்தை விரித்துத் தூக்கினாற்போலக் குலை குலையாக மலர்ந்துள்ள காந்தட்பூக்கள்; குடைகளை விரித்து வைத்தாற்போல விளங்கும், அக் காந்தளாற் சூழப்பெற்ற பலவகை மலர்கள்; சுனைகளி னின்றும் கழிந்து கீழே வருனவாகிய நீர்ப்பூக்கள்; மரக்கிளை களில் மலர்ந்து உதிர்ந்த பூக்கள்; புதர்களில் மலர்ந்து உதிர்ந்த பூக்கள் என்னும் இவை எல்லாம், அருவி சொரிந்து நீர்த் திவலைகளைப் போலத் தத்தம் இடத்தைவிட்டு நீங்கி, நெடிதும் பெரிதுமான சுருங்கையின் நடுவழியாக நீருடன் புகுந்து, காவலையுடைய கடந்து ஊருக்குள்ளே பெய்யும் பொழுது, கொடிய சினத்தையுடைய விலங்காகிய களிறானது தன் துதிக்கையின்கண் நீரை முகந்து சொரிவது போலத் தோன்றும்.*

*பேரளவான வையையாற்று நீரால் மிக்க புனலையுடைய தான நீள்மாடக்கூடலின் தன்மை இதுவாகும்.*

**சொற்பொருள் :** கொடி - பூங்கொடி. உடலுதல் - சினத்தல். தூங்குவன - வீழ்வன. சினை - மரக்கிளை. புதல் - புதர். துரந்து - தள்ளிக் கொண்டு சென்று. மால் - பெரிய. 'சுருங்கை - நிலத்துள் அமைந்த நீர் வழி. அணத்து - உயர்த்து. கடி மதில் - காவலையுடைய மதில்.

**விளக்கம் :** பல வகைப் பூக்களையும் புதுநீர் கொணர, சுருங்கைவழிப் பாயும் அந்நீர் அப்பூக்களுடன், 'கடுமா களிறு அணத்துக் கைவிடு நீர்போல' விளங்கிற்று என்று கொள்க.

## வையையின் இயல்பு

**நாமமர் ஊடலும் நட்பும் தணப்பும்**
**காமமும் கள்ளும் கலந்துடன் பாராட்டத்**
**தாமமர் காதலரொ டாடப் புணர்வித்தல்**
**பூமலி வையைக் கியல்பு!**

ஊடுதலும், கூடுதலும், அச்சந்தரும் சிறு பிரிவும் ஆகிய இம்மூன்றுடனும் சேர்ந்த காமத்தையும் கள்ளையும் ஒன்றாகக் கலந்து, அனைவரும் பாராட்டுமாறு அளிப்பது வையைப் புது நீர்வரவு தாம் விரும்பும் அன்புடையாரோடு சென்று புனலாடும் பொருட்டு, அவரைத் தம்முள் சேர்த்து வைத்தலும் பூக்களால் மிகுந்த வையைப் புதுநீர்க்கு இயல்பு ஆகும். "ஆகவே, நின்னைப் பிரிந்து அப்பயனைப் பெறாதே வாடியிருக்கும் நின் தலைவியை இன்புறுத்த நீயும் கருதினையானால், நீயும் இப்போதே புறப்படுவாயாக" என்பதாம்.

**சொற்பொருள் :** நாமம் - அச்சம். ஊடல் - பிணக்கம், ஊடலும் எனவும் பாடம். தணப்பு - பிரிவு. காமமும் கள்ளும் களிப்புத் தருவன ; இரண்டையும் பெறும் மாந்தர் பெருங்களிப் பால் இன்புற்று மகிழ்வர் என்பதாம். அமர்தல் - விரும்புதல்.

**விளக்கம் :** இவ்வாறு புனலாடலினை நயமாகக் கூறியதன் மூலம், தலைனை அந்நினைவுகளிலே செலுத்தினான் பாணன். அவனும், அதனை மேற்கொண்டு தலைவியின் துயரைப் போக்கக் கருதினான். அதனால், அவ்வளவிலே திரும்பிப் புறப்பட ஏற்பாடு செய்யலானான் என்க.

இனித் தலைவன் பரத்தையிற் பிரிந்து வாழ்ந்தவன் என்றும், அவன் உள்ளத்தைத் தலைவிபால் திருப்புதற்கே இவ்வாறு சிறந்த கற்பனை நாடகத்தைப் புனைந்து பாணன் கூறினன் எனவும் கருதலாம். 'சிந்திக்கத் தீரும் பிணியாள்' என்று, பிறமகளிர் போற்றும் தகைமையுடையாளான தலைவியைப் பிரிதல் நினக்குச் சிறப்பாகுமோ என்றானுமாம். 'தலைவியைப் பிரிதல் நினக்குச் சிறப்பாகுமோ என்றானுமாம். 'தகவுடை மங்கையர்' நிலையைக் கூறியது, தலைவி அவனைப் பொறுத்து ஏற்றற்குரிய மனநிலையினள் என்று உணர்த்துதற்காம்.

### இருபத்தொன்றாம் பாடல்

## செவ்வேள் வாழ்த்து (21)

**பாடியவர்** : *நல்லச்சுதனார்;* **பண் வகுத்தவர்** : *கண்ணகனார்;* **பண்** : *காந்தாரம்.*

### பிணிமுகம் ஊர்ந்தோய்

**ஊர்ந்ததை,**
**எரிபுரை ஓடை இடையிமைக்கும் சென்னிப்**
**பொருசமம் கடந்த புகழ்சால் வேழம்;**

*பெருமானே! செவ்வெரியைப் போல ஒளிவீசும் செம் பொன்னாலாகிய நெற்றிப்பட்டமானது, விட்டுவிட்டு ஒளி செய்து கொண்டிருக்க விளங்கும் சென்னியை உடையதும், தான் சென்று மோதும் போரிடத்தெல்லாம் பகையை அழித்து வெற்றியே பெறுவதுமாகிய, புகழால் மிகுந்த 'பிணிமுகம்' என்னும் போர்க்களிற்றினை ஊர்தியாக உடையோனே!*

**சொற்பொருள் :** *எரி - எரியும் நெருப்புக் கொழுந்து. ஓடை - நெற்றிப் பட்டம். இடையிமைத்தல் - விட்டுவிட்டு இடை யிடையே ஒளிசெய்தவண்ணம் விளங்குதல். சென்னி - தலையின் முன்பகுதி; நெற்றி. கடந்த - வென்ற. புகழ்சால் - புகழ் மிகுந்த. 'வேழம்' என்றது, பிணிமுகக் களிற்றை.*

### அடையல் அணிந்தோய்

**தொட்டதை,**
**தைப்பமை சருமத்தின் தாளியை, தாமரை**
**துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய**
**வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த**
**வரிமலி அரவுரி வள்புகண் டன்ன**
**புரிமென் பீலிப் போழ்புனை அடையல்,**

*தைப்பதற்கென அமைந்த தோலின் மேற்புறத்தைத் தாமரை மலரைப் போலும் தகைமைவாய்ந்த துவர்நீர்த் துறையிடத்தே அழுத்திப் பதப்படுத்துவர். முதுகுப்பக்கத் தோலோடும் முற்றவும் மயிர்செறிந்திருக்கும் அதனிடத்தே, கோடுகள் மலிந்த பாம்புத் தோலைப் பிளந்து எடுத்தாற்போல விளங்கும் மயிற்பீலிகளின் அழகிய மென்மையான பிளவு களாலே அழகுபடுத்துவர். இவ்வாறு செய்தமைத்த அடையல் என்னும் காலணியைப் பூண்டு வருவோனே!*

**சொற்பொருள் :** *தொடுதல் - அணிதல். சருமம் - தோல். உடலைச் சார்ந்திருந்து அழகுபடுத்துவதால் சருமம் ஆயிற்று; தாமரை துப்பமை துவர்நீர் - செம்மண் கலங்கலான நீர். தாமரைப்*

பூவின் செந்நிறத்தைக் கொண்ட துவர்நீர். துவர் - துவர்ப்பு. அது கலந்த நீர். வெரிந் - முதுகு. வரி - கோடு. வள்பு - பிளப்பு. பீலி - மயிற்றோகை. புரி - விரும்பத்தக்க.

## வேலினை உடையோய்

**கையதை,**
**கொள்ளாத் தெவ்வர்கொள் மாமுதல் தடிந்து**
**புள்ளொடு பெயரிய பொருப்புப் புடை திறந்தவேல்;**

நின் பெரிதான தலைமைப்பாட்டை அசுரர்கள் ஏற்றுக் கொள்ளாராயினர். அவர்களின் கோமானாகிய சூரபதுமன் நினக்கஞ்சி முடிவிலே மாமரத்தின் வடிவைக் கொண்டு, கடலி டையே ஒளிந்து கொண்டான். அம் மாமரத்தை வேரோடும் வெட்டி வீழ்த்தியது நின் வேல். கிரவுஞ்சம் என்னும் பறவையின் பெயரோடு விளங்கிய கிரவுஞ்சக் குன்றத்தின் செருக்கடங் குமாறு, அதனையுடைத்து வழி திறந்ததும் நின் வேலேயாகும். அத்தகைய வெற்றிவேலினை ஏந்தியவனே!

**'சொற்பொருள் :** கொள்ள - தலைமையை ஏற்றுக் கொள்ளாத. தெவ்வர் - அசுரர். மா - மாமரம். புள் - கிரவுஞ்சப்புள். பொருப்பு - மலை. புடை - பக்கம். திறந்த - உடைத்து வழி யமைத்த.

## கடப்பந் தாரினாய்!

**பூண்டதை**
**சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த**
**உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடு கமழ்தார்;**

சுருள்தலையுடைய வள்ளிப் பூவினை இடையிடையே தொடுத்துக் கட்டப்பெற்ற, உருட்சியுடைய கடப்பம்பூக் கொத்துக் களாலான மாலையினை மார்பிடத்தே அணிந்தவனாக, அவ்விரண்டு பூக்களின் மணமும் ஒருசேரக் கமழ விளங்கும் பெருமானே!

**சொற்பொருள் :** சுருளுடை வள்ளி - சுருண்டு சுருண்டு விளக்குந் தன்மையினையுடைய வள்ளிப்பூ. உருளிணர்க் கடம்பு - உருள் உருளாகவும், கொத்துக் கொத்தாகவும் விளங்கும் கடப்பம்பூ.

## வெற்றிக் கொடியோய்

**அமர்ந்ததை,**
**புரையோர் நாவின் புகழ்நலம் முற்றி**
**நிரையேழ்; அடுக்கிய நீளிலைப் பாலை**

**அரைவரை மேகலை அணிநீர்ச் சூழித்**
**தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம்;**
**குன்றத் தடியுறை இயைகெனப் பரவுதும்**
**வென்றிக் கொடியணி செல்வ! நின் தொழுது;**

*தூயோரான சான்றோர்கள் தம் நாவாரப் போற்றுதலினாலே, புகழின் சிறப்பெல்லாம் பெற்று விளங்குவது திருப்பரங்குன்றம். வரிசையாக ஏழுபகுதிகள் அடுக்கியது போல விளங்கும் நெடிய இலைகளைக் கொண்ட ஏழிலைப் பாலை மரங்கள் எங்கணும் நிறைந்து, குன்றத்தின் இடையிலணிந்துள்ள தழையுடையைப்போல விளங்கும். அரைப் பகுதியிலே இட்டுக் கொள்ளும் மேகலாபரணமாக அழகிய நீர் நிலைகளும் அருவிகளும் எம்மருங்கும் சூழ்ந்திருக்கும். விசும்பிடத்துத் தேவர்களும் தரையிடத்தை விரும்பிவந்து போற்றம் தகுதியோடு, அவ்வாறு இயற்கையெழில் பொருந்த விளங்குவது, தண்மையுடைய திருப்பரங்குன்றம்! அக் குன்றத்து அமர்ந்திருத்தலை விரும்பிவந்து தங்கியிருக்கும் பெருமானே! வெற்றிக்கொடியான கோழிச்சேவற் கொடி அழகுசெய்தபடி விளங்க எழுந்தருளும் செல்வனே! நின்னைத் தொழுது, நின் குன்றத்தே வந்து, நின் அடியவராகும் பேறு எமக்கும் பொருந்துகவென்று, நின்னைத் தொழுது போற்றுவோம்! எமக்கும் அருளிச் செய்வாயாக, பெருமானே!*

**சொற்பொருள் :** *புரையோர் - தூயவரான சான்றோர். அணிநீர் - அழகு செய்யும் நீர்நிலைகள்; இவை அருவிகளும், சிற்றாறுகளும், சுனைகளும் ஆம். தரை விசும்புகந்த - தரைக்கும் வானுக்குமாக உயர்ந்த என்பதும் ஆம். வென்றிக் கொடி - வெற்றிக் கொடி.*

### அழகிய ஓவியங்களோ!

**சுடு பொன் ஞெகிழத்து முத்தரி சென்றார்ப்பத்**
**துடியின் அடிபெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி**
**அடுநறா மகிழ்தட்ப ஆடுவாள் தகைமையின்**
**நுனையிலங்கு எஃகெனச் சிவந்த நோக்கமொடு**
**துணையணை கேள்வனைத் துனிப்பவள் நிலையும்;**
**நிழல்காண் மண்டிலம் நோக்கி**
**அழல்புனை அவிரிழை திருத்துவாள் குறிப்பும்;**
**பொதிர்த்த முறையிடைப் பூசிய சந்தனம்**
**உதிர்த்துப் பின்னுற ஊட்டுவாள் விருப்பும்;**
**பல்லூழ் இவையிவை நினைப்பின், வல்லோன்**
**ஓவத் தெழுதொழில் போலும்! மாதடிந்**
**திட்டோய் நின் குன்றின் மிசை;**

அடப்பெற்ற கள்ளினை உண்பதனால் ஏற்படுகின்ற களி மயக்கம் கண்டார்க்கெல்லாம் உண்டாகுமாறு, அழகமைந்த ஆடன்மகள் ஒருத்தி, நின் சன்னிதியிலே ஆடிக்கொண்டிருந் தாள். சுட்ட பசும்பொன்னாற் செய்யப்பெற்ற அவளது காற் சிலம்புகளின் உள்ளிடு பரல்களாகிய முத்தக்களின் ஆரவார ஒலி எங்கணும் சென்று பரவியது. துடியினின்று எழுந்த தாளத்திற்குப் பொருந்த, அவள் அடிபெயர்த்து வைத்தும், தோள்களை அசைத்துத் தூக்கியும், அபிநயங்களைக் காட்டியபடி ஆடினாள். அவளுடைய ஆடற்கவர்ச்சியிலே ஒருவன் தன் நோக்கைச் செலுத்தினான். தன்னை அணைத்தபடி நின்ற தன் துணைவ னாகிய கணவனின் அந்தப் பார்வையைக் கண்டு, அவனைச் சினந்துகொண்டாள் அவன் காதலி. அவளுடைய அந்தச் சினத்தின் தன்மையும் -

தன் காதலனும் அவனைப்போல மயங்கிவிடக் கூடாதே என்று எண்ணினாள் மற்றொருத்தி. அதனால், தன் நிழலைக் காணுகின்ற கண்ணாடியிலே தன்னைப் பார்த்தவளாகச், செந் நெருப்பைப் போல ஒளிசெய்யுமாறு செம்பொன்னாலே செய்யப் பெற்ற, ஒறிவீசும் தன் அணிகளை அழகுறத் திருத்தி அமைத்துக் கொண்டாள். அவள் மனக்குறிப்பிலே தோன்றிய கலவரமும் -

மற்றொருத்திக்கும் அதே கவலை உண்டாயிற்று. பூரித்த தன் மார்பகங்களிடையே பூசியிருந்த சந்தனச்சாந்து காய்ந்து பொரிப்பொரி யாகியிருந்த நிலைமையைக் கண்டாள். அதனை உதிர்த்துவிட்டுப் புதிய சாந்தினை அவள்தன் மார்பிடத்தே ஊட்டிக் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளத்திலே அவ் வேளையிலே நிலவிய விருப்பமும் -

ஆகிய இக் காட்சி நயங்களையெல்லாம் பன்முறை கண்டு, மற்றும் இவை போல்வனவாய பல காட்சிகளையும் கண்டு, அவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்தால், அவை எல்லாம் ஓவியத்தொழிலிலே வல்லானாகிய ஒருவன், ஓவியங்களாக எழுதியமைத்த அழகினைப்போல விளங்கியிருக்குமே! சூரனாகிய மாமரத்தை வெட்டியழித்த வெற்றிவேலனே! நின் குன்றின் மேலாக இத்தகைய இன்பக்காட்சிகள் பலவாகுமே!

**சொற்பொருள் :** சுடுபொன் ஞெகிழம் - சுடப் பெற்ற பொன்னாலாகிய சிலம்பு. முத்தரி - முத்துப் பரல்கள். அடுநறா - அடப்பெற்ற கள். மகிழ் தட்ப ஆடுவாள் - மகிழ்ச்சி தன்னை மயக்க அதனாற் களிகொண்டு ஆடுவாளும் ஆம். துணயணை கேள்வன் - அணைத்தபடி நிற்கும் துணைவனாகிய கணவன். துனிப்பவள் - சினங் கொள்பவள். நிழல் காண் மண்டிலம் - கண்ணாடி. பொதிர்த்த - பூரித்த. பல்லூழ் - பன்முறை. ஓவம் - ஓவியம்.

**விளக்கம் :** *தத்தம் காதலரது மனம் தமக்குமட்டுமே உரியதென்ற உறுதியுடன், அது நெகிழ்ந்து புறம்போகும்போது, அதனைத் தம்மால் இழுக்கப் பெண்டிர் முந்துவர்; இந்த அரிய கற்புத்திண்மையினை இப்பகுதி மிகவும் நயமாகக் கூறுகின்றது.*

### எல்லாம் ஒலி முழக்கம்

**மிசைபடு சாந்தாற்றி போல எழிலி**
**இசைபடு பக்கம் இருபாலும் கோலி**
**விடுபொறி மஞ்ஞை பெயர்புடன் ஆட**
**விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப**
**முரல்குரல் தும்பி அவிழ்மலர் ஊத**
**யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்**
**பாணி முழவிசை அருவிநீர் ததும்ப**
**ஒருங்கு பரந்தவை எல்லாம் ஒலிக்கும்**
**இரங்கு முரசினான் குன்று;**

*மகளிர்தம் மார்பகத்தே பூசுகின்ற சாந்தினது ஈரம் புலரு வதற்காக ஆற்றுகின்ற சாந்தாற்றி என்னும் ஆலவட்டத்தைப் போல, மேகங்கள், புகழப்படும் திருப்பரங்குன்றத்தின் இருபக்கங் களிலும் திரண்டு இடிமுழக்கைச் செய்து கொண்டிருந்தன. அக் காட்சியைக் கண்டதும், ஒளிசெய்யும் புள்ளிகளைக் கொண்ட வான மயிலினங்கள் கால்பெயர்த்து ஆடத் தொடங்கின. விரலாற் செறித்தும் திறந்தும் துளைகளின் வழியாக இசைக்கும் மூங்கிற்குழலின் இசையைப்போல ஒலிமுரலும் தும்பியினங்கள் பலவும், இதழவிழ்ந்த மலர்களிடத்தே மொய்த்து ஊதியவையாய், ஒலி செய்து கொண்டிருந்தன. புதிதாக வந்த வண்டினங்கள் யாழிசையைப் போன்ற ஒலியோடு ஆரவாரித்துக் கொண்டி ருந்தன. தாளத் தோடுங் கூடிய முழவின் ஒலியைப்போல, அருவி நீரானது முழக்கத்தோடு வீழ்ந்துகொள்டிருந்தது. இவ்வாறு எல்லா ஒலிகளும் ஒழுங்கே எழுந்து, அவை எல்லாம் கலந்து ஒலிக்க விளங்குவது, வெற்றி முரசொலி எழுந்து கொண்டிருக்கும் குமரப்பெருமானாகிய நினக்குரிய திருப்பரங்குன்றம் ஆகும்.*

**சொற்பொருள் :** *மிசை படு - மேலாகப் பூசப்படும்; மேலே தூக்கி விசிறப்படும். சாந்தாற்றி - விசிறி போல்வது; சாந்தை ஈரம் புலர்த்த விசிறப் பயன்படும் விசிறி. இசை - ஒலி. கோலி - பரந்து. பெயர்பு - கால்பெயர்த்து. தூம்பு - துளை. யாணர் வண்டினம் - குன்றுக்குப் புதிதாக வந்த வண்டினம். பரணி - தாளம்.*

**விளக்கம் :** *'இயற்கையே அங்கு ஒரு நாட்டிய நிகழ்ச்சியை நடத்திக் கொண்டிருந்தது' என்பது இது.*

**புனல் தழுவும்!**

**தாழ்நீர் இமிழ்சுனை நாப்பண் குளித்தவண்**
**மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை**
**வேய்நீர் அழுந்துதன் கைதயின் விடுகெனப்**
**பூநீர்பெய் வட்டம் எறியப்; புணைபெறாது**
**அருநிலை நீரின் அவள்துயர் கண்டு**
**கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல்வீழ்ந்து**
**தழுவும் தகைவகைத்துத் தண்பரங் குன்று;**

*கார்காலத் தொடக்கத்தின் சிறப்புக்களை மேலே கண்டோம். இனி மழை பெய்ததும் நிகழும் சில காட்சிகளையும் காண்போம்.*

*கீழ்நோக்கிப் பாய்ந்து வருகின்ற காட்டாற்றின் நீரானது, ஒலியோடு வீழ்ந்து கொண்டிருக்கும், சுனையொன்றின் நடுப்பக் கத்தே ஒருத்தி குளித்துக் கொண்டிருந்தாள். சிறந்த அணிகளைப் பூண்டவளான அவள், நீர்மேலாக எழுந்து, கரை யிலிருந்த தன் கணவனை அழைத்தாள். நீரிடத்தே கை சோர்ந்து அமிழப் போகும் தன் கையின் அருகாக மூங்கிற்புணையினைத் தள்ளிவிடுக என்று வேண்டினாள். அவனோ, சாயநீர் பெய்து நிரப்பப்பெற்ற வட்டத்தை அவள்மீது எறிந்தான். புணை கிடைக்கப்பெறாது, நிலைகொள்ளுதற்கு அரிதான ஆழத்தை யுடைய நீரிடத்தே அவள் மூழ்கித் தவித்துக் கொண்டிருந்தாள். அதனைக் கண்டான் அவன். அவள் கணவாகிய அவன் உள்ளத்திலே, மிகுந்த களிப்பு எழுந்தது. அவன், தானும் நீரிற் குதித்தான். அவளைத் தழுவித் தூக்கிக் கரைசேர்த்தான். அங்ஙனம் தவித்துக் கொண்டிருந்தாளான ஒருத்திக்கு, அந்நிலையே கணவன் தழுவிக் காப்பாற்றும் தன்மையைப் போலத், துயருற்ற அடியவரின் துன்பங்களைப் போக்குவது தண்ணிய பரங்குன்றமே ஆகும்.*

**சொற்பொருள் :** *தாழ் நீர் - கீழ் நோக்கிப் பாயும் காட்டாற்று மழை நீர். நாப்பண் - நடுவிடம். மீநீர் நிவந்த - நீரின் மேலாக எழுந்த. விறல் - வெற்றி. வேய் - மூங்கில்; மூங்கிற் புணை. மகிழ் தூங்கல் - களிப்பு மிக்கெழுதல். கொய்பூம் புனல் - பூக்களைக் கொய்து கொண்டு, அதனால் அழகுற்றிருக்கும் புதுப் புனல்.*

**விளக்கம் :** *நீரில் அழுந்திச் சாவேமோ என்றவளவில் துயருற்றவளுக்குக், கணவன் அணைத்து எடுத்தபோது, உயிர் பிழைத்த இன்பத்தோடு, அந்த அணைப்பின் களிமகிழ்வும் ஒன்று சேர்ந்து பேரின்பத்தைத் தரும். இவ்வாறே முருகனை நாடிப் பரங்குன்றை அடைபவர். தம் துயரினின்றும் விடுபட்டு உய்வதோடு, தாம் நிலையான பேரின்பத்தையும் பெற்றுச் சிறப்பார்கள் என்பதாம்.*

### காற்றின் கடிமணம்!

**வண்டார் பிறங்கல் மைந்தர் நீவிய**
**தண்கமழ் சாந்தம் தைஇய வளியும்,**
**கயல்புரை கண்ணியர் கமழ்துகள் உதிர்த்த**
**புயல்புரை கதுப்பகம் உளரிய வளியும்,**
**உருளிணர்க் கடம்பின் நெடுவேட்கு எடுத்த**
**முருகு கமழ்புகை நுழைந்த வளியும்,**
**அசும்பும் அருவி அருவிடர்ப் பரந்த**
**பசும்பூண் சேஎய், நின் குன்றம்நன் குடைத்து;**

*வண்டினம் ஆரவாரத்துடன் மொய்த்தபடியிருக்கும் மாலைகளை அணிந்தோரான, மலையொத்த தோள்களைக் கொண்ட ஆடவர்கள், தம் மார்பிடத்தே பூசியிருந்த, குளிர்ந்த மணம் கமழும் சந்தனச்சாந்திலே படிந்து வருகின்ற காற்றும் -*

*கயல்மீன்களைப் போலப் பிறழும் கண்களை உடையோரான மகளிர், மேகம்போலுங் கருமையான தம் கூந்தலிடத்தே மணங் கமழும் மணப்பொடிகளை உதிர்த்திருக்க, அக்கூந்தலின் உட்புகுந்து, அப்பொடிகளினூடாக ஊடாடி வந்த காற்றும் -*

*உருளான பூங்கொத்துக்களைக் கொண்ட கடம்பிலே எழுந்தருளுகின்ற நெடுவேளாகிய பெருமானுக்கு எடுத்த வெறியாட்டிடத்தே நின்றும் எழுந்த, மணங்கமழும் நறும் புகையினூடாக நுழைந்து வந்த காற்றும் -*

*பசும்பொன் அணிகளணிந்த சேயோனே! ஒழுகிக் கொண்டிருக்கும் அருவிகளையும், அடைதற்கரிய மலைக்குகை களையும் உடைய நின் குன்றிடத்தே, மிகுதியாக எப்போதும் வீசிக் கொண்டிருக்கும்.*

**சொற்பொருள் :** *பிறங்கல் - மலை ; மலையொத்த தோள்கள். மைந்து - வலிமை ; மைந்தர் - வலிமையாளர்; இளைஞர். நீவிய - தடவிய. கயல் - கெண்டை மீன்; இது பிறழும் தன்மையது. தண்கமழ் சாந்தம் - குளிர்ந்த மணத்தைப் பரப்பும் சந்தனம். கதுப்பு - கூந்தல். உளரிய -நுழைந்து வந்த. நெடுவேள் - முருகப் பிரான். வேள் - விரும்பப்படுகின்றவன். முருகு - நறுமணம்; நறுமணப் பொருள்களான அகில் முதலியன. அசும் புதல் - தொடர்ந்து வீழல். விடர் - மலைக்குகை.*

**விளக்கம் :** *மழைபெய்தலால் பல்வேறான இம் மணங் களுடன் ஊடாடிப் புகுந்து வரும் காற்றானது, இவை யனைத்துங் கலந்த புதிதான ஒரு கலவை நறுமணம் கொண்ட தாக விளங்கிற்று என்க.*

## அம்பும் கண்களும்

**கண்ணொளிர் திகழடர் இடுசுடர் படர்கொடி மின்னுப்போல்**
**ஒண்ணகை தகைவகை நெறிபெற இடையிடை**
**இழைத்தியாத்த**
**செண்ணிகைக் கோதை கதுப்போ டியல**
**மணிமருள் தேன்மகிழ் தட்ப வொல்கிப்**
**பிணிநெகிழ் பைந்துகில் நோக்கம் சிவப்பூரப்**
**பூங்கொடி போல நுடங்குவாள் ஆங்குத்தன்**
**சீர்தரு கேள்வன் உருட்டும் துடிச்சீரால்**
**கோடணிந்த முத்தாரம் ஒல்க ஒசிபவளோர்**
**ஆடை யசைய அணியசையத் தானசையும்**
**வாடை உளர் கொம்பர் போன்ம்;**
**வாளி புரள்பவை போலும் துடிச்சீர்க்குத்**
**தோளூழ் பெயர்ப்பவள் கண்;**

*கண்ணிடத்தே ஒளியோடு விளங்கும், பொற்றகட்டினிடையே இட்டமைத்த, ஒளிபரப்பும் மின்னுக்கொடி போல விளங்கும், ஒள்ளிய நகையின் கூறுபாடுகள் அனைத்தும் முறையோடு விளங்க, இடையிடையே இரத்தினக்கற்களை இட்டுக் கட்டிய அலங்காரத்தைக் கொண்டாளான ஒருத்தி, ஆடிக் கொண்டிருந்தாள்.*

*செம்மணியைப் போல நிறம்பெற்று விளங்கும் மதுவையுண்ட களிப்பினாலே அவள் நடனம் தடைப்பட, அவளிடத்தே தளர்ச்சி தோன்றியது. அவள் உடுத்திருந்த பசுந்துகிலின் பிணிப்பு நெகிழத் தொடங்கிற்று. அவள் கண்கள் செந்நிறத்தைப் பெற்றன. காற்றினாலே அசைக்கப்பெற்று ஆடுகின்ற பூங்கொடியைப் போல அவள் நிலைகெட்டு அசைந்தாடிக் கொண்டிருந்தாள்.*

*அங்குத் தன்னுடைய சிறப்புமிகுந்த கணவன் அடித்துக் கொண்டிருக்கும் துடியின் தாளக்கட்டிற்குப் பொருந்த, மலையுச்சிகளைப்போல விளங்கிய தன் மார்பகங்களின் மேலாக முத்தாரங் கிடந்து அசைந்தாட, அவள் மேலும் மேலும் ஆடிக்கொண்டிருந்தாள். அந்த அழகுதான் என்னே!*

*ஆடை அசையவும், அணிகள் பலவும் அசையவும், தானும் சேர்ந்து அசையும் அவளுடைய அந்த நிலையானது, வாடைக் காற்றின் மோதுதலினாலே அசைந்தாடிக் கொண்டிருக்கின்ற ஒரு பூங்கொம்பினைப் போலத் தோன்றியதே!*

*துடியினின்றும் எழுந்த தாளத்தின் அமைதிக்குப் பொருந்த அவள் முறையாகத் தோள் பெயர்த்து ஆடினாள். அவ் வேளையிலே அவள் கண்கள்அம்பினை முனைப்பகுதி புரள்வது போலத் தோன்றினவே!*

**சொற்பொருள் :** அடர் - பொற்றகடு. மின்னுக்கொடி - மின்னாகிய கொடி. தகை - தகைமை. நெறி - முறைமை; கூந்தலின் நெறிப்பும் ஆகும். கதுப்பு - கூந்தல். மணிமருள் தேன் - செம்மணிபோலத் தோன்றும் மது. மகிழ் தட்ப - மயக்கம் செயலைத் தடை செய்ய. துடி உருட்டல் - துடியை யடித்துத் தாளவொலி.

எழுப்பல்; விரலின் அசைவு உருட்டலைப் போல்வது என்க. கோடு - மலையுச்சி. ஒல்க - அசைய. ஒசிதல் - ஒடிந்து வீழ்தலைப் போல வளைந்தாடுதல்; இடையின் அசைவைக் குறித்தது. உளர்தல் - அசைத்தல். வாளி - அம்பு; இங்கே அதன் இலைப் பகுதியைக் குறித்தது. சீர் - தாளம்.

## இன்றுபோல் இயைக!

**மாறமர் அட்டவை ; மறவேல் பெயர்ப்பவை ;**
**ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை ;**
**நன்றமர் ஆயமொடு ஒருங்குமின் அடியுறை**
**இன்றுபோல் இயைகெனப் பரவுதும்**
**ஒன்றார்த் தேய்த்த செல்வநின் தொழுதே!**

நின்பாற் பொருந்தாதவரான அசுரரை அழித்த செல்வக் குமரனே! மாறு கொண்டோருடன் செய்த போரிலே வெற்றி பெற்ற வீரனே! வெற்றி வேலினைச் செலுத்தும் வேலனே! ஆறிரு தோள்களை உடையவனே! ஆறுமுகங்களும் மலர்ச்சியுடன் அழகுற விளங்கக் காட்சி யளிப்போனே!

நன்மையே விரும்புகின்ற எம் சுற்றத்தாரோடும் கூடி ஒன்றுபட்டு, நின் குன்றிடத்திற்கு வந்து, நின் அடியுறையும் வாழ்வாகிய இந்த இன்ப வாழ்வு இன்றைக்குப் போலவே என்றைக்கும் எமக்குப் பொருந்துவதாக என, அதற்கு நின்னருளை வேண்டியவராக, நின்னடிகளைத் தொழுது போற்றுகின்றோம். பெருமானே! அந்தச் சிறந்த பேற்றினை எமக்குத் தந்தருள்வாயாக!

**சொற்பொருள் :** மாறு - பகை. மறவேல் - வீரவேல். நன்று - நன்மை. அமர்தல் - விரும்புதல். ஒன்றார் - பொருந்தி வழிபடாதார்; பகைத்தார்.

**விளக்கம் :** எழிலார் குன்றத்து உறையும் குமரப் பெருமான். நமக்கு வந்துறும் துயரங்களையும் போக்கி, நம் வாழ்வையும் எழில்பெறச் செய்வான் என்பதாம்.

திருப்பரங்குன்றத்தைச் சென்றடைந்ததும் மக்களின் துன்ப நினைவுகள் மறைகின்றன. இன்ப நினைவுகள் அலையலையாக எழுந்து அவர்களை முற்றவும் ஆட்கொள்ளுகின்றன. அவர்கள்

*அவ்வாறாக எழுகின்ற இன்பத்தின் எக்களிப்பினாலே ஆடியும் பாடியும் அழகுசெய்தும் மிக்க மகிழ்வினை நுகர்கின்றனர். இந்தக் காட்சிகளைக் காட்டுகின்றார் கவிஞர். பரங்குன்றப் பெருமானை அடைந்தார்க்கு இன்பநிலை தானே வந்து எய்துமென்று கூறுவார்போல, மிகச்சுவையான காட்சிகளை ஓவியப்படுத்திக் காட்டுகின்றனர். அவற்றை மனத்தகத்துக் கண்டு, அவற்றோடும் ஒன்றிக் கலந்து நாமும் இன்புறல் வேண்டும்.*

**இருபத்திரண்டாம் பாடல்**

# வையை (22)

*இப் பாடலைப் பாடியவர், இதற்கு இசை வகுத்தவர், அவர் வகுத்த இசை ஆகியன யாதும் புலப்படவில்லை. இதன் பிற்பகுதியும், இடையிடையே சிற்சில சொற்களும் தொடர்களும் சிதைந்துள்ளன.*

## வயல் புகுந்த வையை!

**ஒளிறுவாள் பொருப்பன் உடல்சமத் திறுத்த**
**களிறுநிரைத் தவைபோல் கொண்மூ நெரிதர**
**அரசுபடக் கடந்த ஆனாச்சீற் றத்தவன்**
**முரசதிர் பவைபோல் முழங்கிடி பயிற்றி**
**ஒடுங்கார் உடன்றவன் தானை வில்விசை**
**விடுங்கணை ஒப்பின் கதழுறை சிதறூஉக்**
**கண்ணொளிர் எஃகின் கடிய மின்னியவன்**
**வண்மைபோல் வானம் பொழிந்தநீர் மண்மிசை**
**ஆனாது வந்து தொகுபீண்டி மற்றவன்**
**தானையி னூழி.... தாவூக் கத்தின்**
**போன நிலமெல்லாம் போரார் வயல்புகுத ;**

*ஒளிவீசுகின்ற வெற்றிவாளை உடையவன் பாண்டியன்; அவன் பொதியமலைக்கும் உரிமை உடையவன். அவன் சினங் கொண்டு பகைவர்மெற் படையெடுத்துச் சென்று போரியற்று வான். அவனுக்குத் தோற்ற பகைவர் திறையாகத் தந்த களிறுகள் வரிசை வரிசையாக நிற்கும்; அவற்றைப்போல வானத்தே மேகங்கள் அணியணியாக நெருங்கிப் பரந்திருந்தன.*

*பகையரசு அழிந்தொழிய அவரை வெற்றி கொண்ட பின்னரும், அடங்காச் சினத்தைக் கொண்டோனாகிய பாண்டி யனின் போர் முரசங்கள், எஞ்சிய பகையையும் ஒழிப்போம் என முழக்கமிடுவதைப் போல, அம் மேகங்கள் பெருமழை பெய்த பின்னர், மீளவும் இடிமுழக்கச் செய்தன.*

அடங்காதாரான பகைவரோடு சினந்த பாண்டியனது படையினரின் வில்லினின்று விசையோடு விடப்பெறும் அம்புகளைப் போன்ற மிக்க துளிகளை அம் மேகங்கள் சிதறின.

கண்ணைப் பறிக்குமாறு ஒளிவீசும் அவனது வேற்படையைப்போல அவை மிகுதியாக மின்னலைச் செய்தன. அவன் வண்மைபோல வானம் நீரைப் பொழிந்தது. அங்ஙனம் பொழிந்த நீர் மண்மேல் ஒருசார் நில்லாது ஓரிடத்தேவந்து திரண்டு பெருகிற்று. பின்னர் அது வையையின் வழியாக வருவது மாயிற்று. அப் பாண்டியனின் தானைப்பெருக்கமானது பகைவர் நாட்டிடைச் சென்று எங்கும் பரவி நின்றதைப் போலப், புதுப்புனலும் பாண்டியநாட்டுக் கண்ணுள்ள மிகுதியான நெற்போர் பொருந்திய வயலிடங்களுள் எல்லாம் சென்று பரவித் தங்கி நிற்பதுமாயிற்று.

**சொற்பொருள் :** பொருப்பு - மலை ; இங்கே பொதியம். உடலுதல் - சினத்தல். சமம் - போர். இறுத்த - திறையாகத் தந்த. நெரிதரல் - நெருங்கிப் பரத்தல். ஆனாச் சீற்றம் - அடங்காச் சினம். கதழுறை - மிக்க பெயல். எஃகு - வேல். கடிய - மிகுதியாக. ஊக்கம் - மனச் செருக்கு. போர் - நெற்போர்.

**சிதைந்த அடிகள் :**

**..........நீக்கிப் பு...........**
**கான மலைத்தரை கொன்று மணல் பினறீ**
**ளான மலைத்த...வ................**
**........லைத்தவ மணமுர செறிதரத்**
**தானைத் தலைத்தலை வந்துமைந் துற்றுப்**
**பொறிவி யாற்றுறி.....துவர்புகை சாந்தம்**

**கரைநெளியத் திரண்டனர்**

**எறிவன எக்குவ ஈரணிக் கேற்ற**
**நளவணி பூந்துகில் நன்பல ஏந்திப்**
**பிறதொழின.........ம் பின்பின் தொடரச்**
**செறிவினைப் பொலிந்த செம்பூங் கண்ணியர்**
**ஈரமை வெட்சி இதழ்புனை கோதையர்**
**தாரர் முடியர் தகைகெழு மார்பினர்**
**மாவும் களிறும் மணியணி வேசரி**
**காவு நிறையக் கரைநெரிபு ஈண்ட**

வையையிற் புதுநீர் வந்ததும், மதுரை மக்கள் திரள் திரளாக வையையை நோக்கிச் செல்வாராயினர். துவர்ப் பொருள்கள், புகைப் பொருள்கள், சாந்து வகைகள், நீர்க் கண் எறிவதற்குரிய வழிபாட்டுப் பொருள்கள். நீரை எடுத்துப் பீய்ச்சுவதற்குரிய

கருவிகள், நீர் விளையாடற்குப் பொருத்தமான அணிகள், அழகிய துகில்கள் ஆகிய இவற்றை எல்லாம் நல்லனவாகவும் பலவாகவும் எடுத்துக்கொண்டு, மக்கள் ஆற்றை நோக்கிச் செல்வாராயினர். செல்லும் மக்களுக்குப் பணிபுரியும் பிறபிற தொழிலினரும் அவர் பின்னாகத் தொடர்ந்து சென்றனர்.

செறிந்த செய்தொழில் நலத்தால் அழகுற விளங்கிய சிவந்த பூக்கள் பொருந்திய கண்ணியராக ஆடவர் விளங்கினர். குளிர்ச்சி பொருந்திய வெட்சிப் பூவிதழால் தொடுக்கப்பெற்ற கோதை யினராக மகளிர் விளங்கினர். மாலையணிந் தோராகவும் முடிபுனைந்தோராகவும், தகைபொருந்திய மார்பினராகவும் ஆடவரும் மகளிரும் விளங்கினர். குதிரைகளும், களிறுகளும், மணிகளணிந்த கோவேறு கழுதைகளும் ஆகிய, இவர்கள் ஊர்ந்துவந்தன பலவும், ஆற்றங்கரைச் சோலைப் புறங்களில் நிறைந்தன. மக்களும் ஆற்றின் கரையே நெரியுமாறு மிகுதியாக வந்து கூடித் திரண்டனர்.

**சொற்பொருள் :** துவர் - துவர்ப் பொருள்கள்; இவை நீர்க்கு நிறமும் மணமும் தருவன. புகை - புகைத்தற்குரிய அகில் முதலியன. பூந்துகில் அழகிய மெல்லிய ஆடை. ஈர் அமை - குளிர்ச்சி பொருந்திய. தகை - அழகு. நெரிபு - நெரிய.

### சேர்கின்ற கவின்

**வேலாற்று மொய்ம்பனின் விரைமலர் அம்பினோன்**
**போலாற்று முன்பின் புனைகழல் மைந்தரொடு**
**தாரணி மைந்தர் தவப்பயன் சான்மெனக்;**
**காரணி கூந்தல் கயற்கண் கவிரிதழ்**
**வாரணி கொம்மை வகையமை மேகலை**
**ஏரணி இலங்கெயிற் றின்னகை யவர்**
**சீரணி வையைக்கு அணிகொல்லோ? வையைதன்**
**நீரணி நீத்தம்இவர்க்கணி கொல்லெனாத்**
**தேருநர் தேருங்கால் தேர்தற் கரிதுகாண்;**
**தீரமும் வையையும் சேர்கின்ற கண்கவின்;**

வேலாற் போரிடலையுடைய வலிமை வாய்ந்த முருகனைப் போன்ற போர்செய்யும் வன்மையும், அழகிய வீரக்கழலும் உடைய மைந்தரோடு, மணமலர்களையே அம்புகளாகக் கொண் டோனாகிய மன்மதனைப்போல மாலையணிந்து அழகுற விளங்கும் மைந்தரும் திரண்டு வந்தனர். அவர்களைக் காணலே தம் தவப்பயன் எனக் கண்டோர் கருதினர்.

மேகத்தையொத்த அழகிய கருங்கூந்தலையும், கயலர் மீனைப் போன்ற நெடிய கண்களையும், செம்முருக்கின் இதழை யொத்த இதழ்களையும், கச்சணிந்த அழகிய மார்பகங்களையும்,

வேலைப்பாடமைந்த மேகலையினையும், அழகுற வரிசையாக ஒளியோடு விளங்கும் இனிய புன்சிரிப்பையுடைய பல்வரிசை யினையும் உடையவரான இளமகளிரும் வையைக் கரையில் திரண்டனர்.

சிறந்த அழகுடைய வையைக்கு இவர்கள் நிற்பதனால் அழகு உண்டாகின்றதோ? அல்லது வையையின் நீரணிவிழா வாகிய புதுவெள்ளம் இவர்களுக்கு அழகு தந்ததோ? என ஆராய்வார் ஒரு முடிவுக்கு வருதல் அரிது என்னுமாறு, அம் மகளிர் விளங்கினர்.

இவ்வாறாக வையைக்கரையின்கண் திரண்டிருந்த இளை ஞரும், இளமகளிரும், வையையும் சேர்ந்திருக்கின்ற, கண்ணுக்கு அழகான காட்சியினைக் காண்பார், 'தாம் செய்த தவப்பயன் பெரிது' எனத் தமக்குள் வியப்புடன் பேசுவாராயினர்.

**சொற்பொருள் :** மொய்ம்பன் - வலிமையாளன். விரை - மணம். முன்பு - ஆற்றல். சான்ம் - சாலும். கார் - கார்மேகம். கயல் - கெண்டை. கவிர் - செம்முருக்கின் மலர். வார் - கச்சு. கொம்மை - இளமை கொண்ட மார்பகம். ஏர் - அழகு. வகை - செய்வினை வகை. நகை - இளநகை. நீத்தம் - வெள்ளம். தீரம் - கரைப்பகுதி.

### திருமருத முன்துறை

**மண்கனை முழவின் இன்கண் இமிழ்விற்கு**
**எதிர்வ பொருவி.....மேறுமா றிமிழ்ப்பக்**
**கவர்தொடை நல்யாழ் இமிழக் காவின்**
**புகர்வரி வண்டினம் பூஞ்சினை இமிர**
**ஊதுசீர்த் தீங்குழல் இயம்ப மலர்மிசைத்**
**தாதூது தும்பி தவிர்பல இயம்ப**
**..............துடிச்சீர் நடத்த வளிநடன்**
**மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க**
**ஆங்கவை தத்தம் தொழில்மாறு கொள்ளும்**
**தீம்புனல் வையைத் திருமருத முன்துறையால்;**

மார்ச்சனை பொருந்திய திரட்சியமைந்த முழவினது இனிய கண்ணிடத்திருந்து எழுகின்ற முழக்கத்திற்கு எதிராக ஒலித்தலைப் போல மேகங்கள் ஏறுமாறாக இடிகளை முழக்கின. மனங் கவர்வதும், தொடர்ச்சி கொண்டதுமாகிய நல்ல யாழினின்றும் இன்னிசை எழ, அதற்கு எதிராகப் புள்ளிகளையும் வரிகளையும் கொண்ட வண்டினம் பூக்களைக் கொண்ட மரக்கிளைகளிலி ருந்து இமிர்தலைச் செய்தன. ஊதுதற்குரிய சீரினைக் கொண்ட இனிய குழலினைச் சிலர் ஊதத்தொடங்க, மலர்மிசைத் தாதினை ஊதுகின்ற தும்பியினம் இடைவிடாது இசைத்தன. துடிப்பறை யினைச் சிறப்போடு இயக்கிச் சிலர் தாளக்கட்டோடு முழக்க,

அதற்கேற்பக் காற்றாகிய நட்டுவன், மெல்லிய பூங்கொத்துக் களையுடைய பூங்கொடிகளை அசைந்தாடுமாறு செய்தான். அவ்விடத்தே, இவ்வாறு இசை நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் தத்தமக்குத் தொழிலால் மறுப்புக் கொள்ளும் மற்றொன்றையும் கொண்டு விளங்கின. இனிய புனலையுடைய வையைக் கரையிலுள்ள திருமருத முன்துறையிடத்தே இவ்வாறு எல்லாம் பொருந்திக் காணப்பெற்றன.

**சொற்பொருள் :** கணை - திரட்சி. மண் - மார்ச்சனை. கண் - அடிக்குமிடம். எதிர்வ - மாறுபடுவன போல. தொடை - தொடர்ச்சி. புகர் - புள்ளி. வரி - கோடு. தவிர்பு அல் - ஒழியாவாய். நுடங்க - அசைய. நடன் - நட்டுவன்.

**விளக்கம் :** செயற்கையால் எழுகின்ற இன்னொலி களோடு, இயற்கையாக எழும் இன்னொலிகளும் சேரத், திருமருத முன்துறை, ஒரே இன்னிசைக் கூடமாகவே விளங்கிற்று என்க.

## நித்தில வரிச் சிலம்பு

**கோடுளர் குரற்பொலி ஒலிதுயல் இருங்கூந்தல்**
**............புரைதீர் நெடுமென்**
**தோடார்பு தழைமலர் துவளா வல்லியின்**
**நீடாழ்பு தோக்கை நித்தில வரிச்சிலம்பு -**
**..........................................**

இவ்வடிகள் சிதைந்துள்ளன. பின் தொடர்பும் புலனாக வில்லை.



# பரிபாடற் பகுதிகள்

**-இவை உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டிய மேற்கோட் செய்யுட்கள்; புறத் திரட்டு ஆகியவற்றிற் காணப் பெற்றவை -**

## (1) திருமால்

*அடியார்களுள் இறைவனின் திருவடிப் பேற்றை விரும்பி அவனைத் தொழுது போற்றுபவர்கள் சிறந்தவர்கள். உலக இன்பங்களையேனும், துறக்கத்துப் போகங்களையேனும் விரும்பி வழிபடுவோர்கள் சிறந்தவராகார். அவரை மயக்கத்தின்பாற் பட்டவர் என்றே கருதுவர். இந்த அரிய தத்துவப் பொருளை விளக்குவது இச் செய்யுள்.*

*பரிபாடலுட் பல கால்வெள்ளத்தே மறைந்தன. அவற்றுள், இதனைத் தொல்காப்பிய உரையாசிரியர்களான நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் செய்யுளியற் சூத்திர (120) உரைக்கண் மேற்கோளாகக், காட்டியுள்ளனர். பாடியோர், பண் அமைத்தோர் வரலாறுகள் தெரிந்தில. எடுத்துக் காட்டிய உரையாசியர்கட்கு நாம் மிக கடமைப்பட்டுள்ளோம்.*

### தலையுறப் பரவுதும்

**வானார் எழிலி மழைவளம் நந்தத்**
**தேனார் சிமைய மலையின் இழிதந்து**
**நான்மாடக் கூடல் எதிர் கொள்ள ஆனா**
**மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய**
**இருந்தையூர் அமர்ந்த செல்வ! நின்**
**திருந்தடி தலையுறப் பரவுதும் தொழுது;**

*(இது தரவு)*

வானத்தே மிகுதியாக எழுந்தன மேகத்திரள்கள்; அவை மழை வளத்தினைத் தந்தருளின. அதனாலே தேன்வளம் பெருகியதும், உயரமான உச்சிகளைக் கொண்டதுமான சைய மலையினின்றும், மழை நீராகிய புதுப்புனல் நிலப்பகுதியை நோக்கி இழிந்து வருவதாயிற்று.

அங்ஙனமாக இழிந்துவந்த மழைநீராகிய புதுப்புனலானது வையையாற்றின் கண்ணும் பெருகி வருவதாய், நான்மாடக் கூடலின் மாந்தர் எல்லோரும் எதிர்கொள்ளுமாறு, மதுரையையும் சேர்வதாயிற்று. மிகச் சிறந்ததான அமுதத்தைப் போலும் சிறப்புடைய இனிய நீரானது, வையை ஆற்றின் துறைகளினிடமெல்லாம் பொருந்திச் செல்வதாயிற்று. அங்ஙனம் புதுநீர்

பொருந்திச் செல்லும் துறைகளுள் ஒனன்றிடத்தே அமைந்தது, இருந்தையூர் என்னும் திருப்பதி. அதன்கண் திருக்கோயில் கொண்டிருக்கும் செல்வனே! நின்னுடைய திருத்தமான அடிகளிடத்தே, எம் தலைகளைப் பொருந்துமாறு வைத்து, யாமும் நின்னைப் போற்றிப் பணிவோம்!

**சொற்பொருள் :** எழிலி - மேகம். நந்த - பெருக. தேன் - தேனடைகளும் ஆம். சிமை மலையுச்சி. இழிதந்து - இறங்கி வந்து. நான்மாடக்கூடல் - மதுரை; இங்கே மக்களைக் குறித்தது. ஆனா மருந்து - இன்றியமையாத மருந்து; இஃது அமுதம். இருந்தையூர் - வையைக் கரைத் திருப்பதிகளுள் ஒன்று; மதுரைப் பேரூரின் ஒரு பகுதியாகவும் கொள்ளலாம். திருந்தடி - திருத்தமான அடி; திருத்தம் - எவ்வகைக் குற்றமும் அற்றநிலை; தன்னைச் சேர்ந் தாரைத் திருந்தும் சேவடியுமாம்; சேர்ந்தார் - திருந்துவர்; எனவே சேராதார் திருந்தார் என்பதும் அறியப்படும்.

## அறத்திற் பிரியாப் பதி

**ஒருசார், அணிமலர் வேங்கை, மராஅம், மகிழம்**
**பிணிநெகிழ் பிண்டி, நிவந்து சேர்பு ஓங்கி**
**மணிநிறங் கொண்ட மலை ;**
**ஒருசார், தண்ணறும் தாமரைப் பூவின் இடையிடை**
**வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப,**
**விண் வீற்றிருக்கும் கயமீன் விரிதகையின்**
**கண்வீற் றிருக்கும் கயம்;**
**ஒருசார், சாறுகொள் ஓதத்து இசையொடு மாறுற்று**
**உழவின் ஓதை பயின்றறி விழந்து**
**திரிநரும், ஆர்த்து நடுநரும் ஈண்டித்**
**திருநயத் தக்க வயல்;**
**ஒருசார், அறத்தொடு வேதம் புணர்தம் முற்றி**
**விறற்புகழ் நிற்ப விளங்கிய கேள்வித்**
**திறத்திற் றிரிவில்லா அந்தணர் ஈண்டி**
**அறத்திற் றிரியாப் பதி;**

(இவை நான்கும் கொச்சகம்)

ஒருபக்கத்தே நீலமணியின் நிறத்தைத் தானும் கொண்டதாக மலையானது பொலிவுடன் விளங்கிற்று. அழகிய மலர்களையுடையவான வேங்கையும், கடம்பும், மகிழமும், கட்டவிழ்ந்து விரிந்த இதழ்களைக் கொண்ட மலர்களையுடைய அசோகமும் ஆகிய மரங்கள் பலவும் செறிந்தும், மிகவுயரமாக வளர்ந்தும், அம் மலைக்கண்ணே விளங்கின.

ஒரு பக்கத்தே, பெரிய குளமொன்றும் இருந்தது. அதன் கண், தண்மையும் நறுமணமும் கொண்ட தாமரைப்பூக்கள்

நிரம்பி இருந்தன. அவற்றின் இடையிடையே, அழகாக இதழ் விரிந்திருக்கும் போதுகளிடத்தே வண்டினம் மொய்த்து ஆரவாரித்தபடி விளங்கின. வானத்தே விண்மீன்கள் விளங்குவது போன்று, அக்கயத்திடத்தும் எண்ணற்ற மீன்கள் நிறைந்திருந்தன. வானத்தைப் போன்று அதுவும் விரிந்து பரந்து விளங்கும் தன்மையுடையதாயிருந்தது. கண்டாரின் கண்கள் அவ்வழகிலே மயங்கி, அதனையே நிலையாக நோக்கியபடி வீற்றிருக்கும், அத்தகைய சிறப்புடையதாகவும் அது விளங்கிற்று.

புதுநீரின் வரவால் மக்கள் விழாக்கோலம் கொள்ளத் தொடங்கினார்கள். அதனாற் பலவகையான ஒலிகள் எழுந்தன. அவ்வவொலிகட்கு எதிராக, உழவரின் ஏர்மங்கல ஒலியும் எழுந்துகொண்டிருந்தது. ஆரவாரத்துடன் நட்டுக் கொண்டிருக்கும் உழத்தியரும், அவர்தம் அழகினில் மயங்கி அறிவிழந்து, அவர் பின்னாகவே சுற்றித்திரியும் உழவருமாக, வயற்புறங்களில் உழைப்போர் நிறைந்திருந்தார்கள். இவ்வாறு, திருமகளும் விரும்பிவந்து வீற்றிருக்கத் தகுந்த செவ்வியையுடையதான வயல்கள், நீர்வளத்தோடு ஒரு பக்கத்தே விளங்கின.

அறநெறியினின்றும் பிறழாத ஒழுக்கமும், சிறந்த வேதப் பயிற்சியும், பொருந்திய தவத்தின் முதிர்ச்சியும் கொண்டோராக, இவற்றால் அமைந்த வெற்றிச்சிறப்புத் தம்மிடம் நிலைத்திருக்க, விளங்கிய கேள்வித்திறத்திலே சற்றும் திரிதலற்றவரான அந்தணர்கள், நகரின் ஒருபக்கத்தே திரண்டிருந்தார்கள். இவர்களால், அறத்தினின்றும் திரிதலற்றனரு பதியாகவும் இருந்தையூர் விளங்கிற்று.

**சொற்பொருள் :** அணி மலர் - அழகிய மலர். மராஅம் - வெண்கடப்ப மரம். பிண்டி - அசோக மரம். நிவந்து - உயரமாக ஓங்கி வளர்ந்து. சேர்பு - நெருங்கி. மணி - நீலமணி. வண்ணம் - நிறம். கயம் - குளம். கண் - இடமும் ஆம். சாறு - விழா. உழவின் ஓதை - உழவரின் ஏர் மங்கல ஒலி. திரு - திருமகள்; வளமை; செல்வம். விறற் புகழ் - வெற்றிப் புகழ்; வெற்றியாவது தம் ஒழுக்கத்தால் அனைவரினும் சிறந்தோங்கி விளங்கிய செவ்வி. கேள்வித்திறம் - அறநூல்களைக் கேட்டறிந்த திறம். அறம் - அறநெறி; தீயவற்றை அறுத்து விலக்கி, நல்லனவே பற்றி ஒழுகும் மரபு.

**விளக்கம் :** புதுநீரின் வராவால் அனைவரும் ஊக்கத்துடன் தத்தம் தொழில்களில் ஈடுபடுகின்றனர். இயற்கையும் எழிலுடன் விளங்குவதாயிற்று. வேனலின் கொடுமை மாறியது. எங்கணும் புதுமலர்ச்சி எழுந்தது. அதனை உரைப்பது இது. மலை மணி நிறங் கொண்டது. மழை நீராற் கழுவப் பெற்றதனால்; கயம் கண்வீற்றிருக்கும் சிறப்பைப் பெற்றது. நிரம்பிய புதுப் பூக்களின் செறிவினால்; வயல் திருநயத்தக்க செவ்வி பெற்றது. உழவரின்

*உழைப்புத் திறனால்; பதி அறத்தில் திரியா நிலை பெற்றது அந்தணரின் ஒழுக்கச் செவ்வியால். மழையின்றேல் இவை யெல்லாம் நிகழா என்பதும் இங்கே அறிதல்வேண்டும். அந்தணரின் ஒழுக்கம் மற்றைப் பிறராலும் எடுத்துக்காட்டாகக் கொள்ளப்படுவது. ஆகலின், அவரின் நெறிபிறழா நேர்மையைக் கூறினார்; அதனால் பதி அறத்தில் திரியாதிருந்த சிறப்பையும் கூறினார். அந்தணர் தம் ஒழுக்கில் திரியவே, அவரையே எடுத்துக் காட்டாகக் கொண்டொழுகும் பிறபிற மாந்தரும் தத்தம் ஒழுக்கங்களில் திரிவர். அதனால், உலகே அறம் பிறழ்ந்துபோம் என்பதும் கருதுதற்குரியது, இதனாலேயே, அவர் நிறையோடு ஒழுகுதலால் பதியுள்ளார் அனைவரும் அறத்திற் றிரிவாற்றா ராயினர் என்றனர்.*

### இன்பம் இயல் கொள்ளும்

**ஆங்கொருசார், உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை**
**மண்ணுவ மணிபொன் மலைய கடல**
**பண்ணிய மாசறு பயந்தரு காருகப்**
**புண்ணிய வணிகர் புனைமறுகு ஒருசார்;**
**விளைவதை வினையெவன் மென்புல வன்புலக்**
**களமர் உழவர் கடிமறுகு பிறசார்;**
**ஆய்க, அனையவை நல்ல நனிகூடும் இன்பம்**
**இயல்கொள நண்ணி யவை ;**

*(இது கொண்டு நிலை)*

*'இருந்தையூர்' என்பது அக்காலத்தே மிகவும் செழுமை யான ஓர் ஊராகத் திகழ்ந்தது. அதன் கடைத்தெருக்கள் பற்பல வகையான பொருள்களின் மிகுதியாலும், வளமையோடு திகழ்ந்தன. அதனைக் கூறுகிறது இப்பகுதி.*

*உணவுக்காகும் உணவுப் பொருள்கள், பூசுவதற்குரிய மணப்பொருள்கள், பூண்பதற்குரிய அணிகல வகைகள், உடுப்பதற்கான உடை வகைகள், தூய்மை செய்வதற்கான பொருள்கள், மணிவகைகள், பொன்அணிகள், மலையிலிருந்து கிடைக்கும் மலைபடு பொருள்கள், கடலிலிருந்து கிடைக்கும் கடல்படு பொருள்கள், செய்வினைத்திறனோடு செய்த குற்றமற்ற பயன்தரும் நெசவுத்தொழிற் பொருட்கள் ஆகியவற்றை, புண்ணியங்கருதி விலைப்படுத்தும் வணிகமாக்கள் சிறப்போடு விளங்கும் கடைவிதி, நகரின் ஒரு பக்கத்தே விளங்கியது. (இவற்றைத் தனித்தனியாக விலைப்படுத்தும் தனித்தனிக் கடைத் தெருக்கள் இருந்தன என்பதும் மிகப் பொருந்தவதாகும்.)*

*மென்புலம் என்பது மருதமும் நெய்தலும்மாகிய நிலப்பகுதி; வன்புலம் என்பது முல்லையும் குறிஞ்சியுமாகிய நிலப் பகுதி.*

இவற்றுள், தாமாகவே விளையும் பொருட்களைச் சேகரித்துக் கொணர்ந்து, பிறருக்குப் பயன்பட விற்போர் களமர் ஆவர். இஃதன்றி, உழுது வித்திப் பயன் கொள்வோர் உழவர் ஆவர். இவ்விரு சாராரான உழைப்பாளர்களும் வாழ்கின்ற சிறந்த தெருக்களும் நகரின் பிறிதொரு புறத்தே விளங்கின.

இவ்வாறாக, இத்தகைய வளங்களாலே நன்மை மிகுதியும் பொருந்துதலினாலே, இன்பமானது தன் இயல்போடு திரிதலற்று விளங்க, அனைத்தும் பொருந்திய சிறப்புடன் விளங்கிற்று அவ்வூர்.

**சொற்பொருள் :** உண்ணுவ - கூலமும் பிறவுமான உணவுப் பொருள்கள். பூசுவ - மணப் பொருள்கள்; சாந்தமும் பிறவும். உடுப்பன - துணி வகைகள். மண்ணுவ - தேய்த்துக் குளிப்பதற் குரிய பொருள்கள், காருகர் - ஆடை நெய்வோர். களமர் - தாமாக விளையும் பொருட்களை முயன்று சேகரிப்போர்; இவரும் உழவுத் தொழில் செய்வர்; ஆயின், தாமே உழவராக அன்றித் தாம் தொழிலாளராகவே திகழ்வர்; உழவர் - உழவே தொழிலாக உடையோர். புண்ணியம் - பாவத்திற்கு எதர்மொழி; 'புண்ணிய வணிகர்' என்றதனால் அறம் பிறழாது கொண்டும் விற்றும் வரும் வணிகர் என்பதாம்.

**விளக்கம் :** 'இன்பம் இயல்கொள' - இன்பமானது களி நடம் புரிய என்பதுமாம். பொருள்கள் எல்லாம் குவிந்திருப்ப தாலும், அவற்றை விலைப்படுத்துவோர் புண்ணிய வணிகர் என்பதனாலும், மக்கள் நல்வாழ்வு வாழ்வாராயினர். அதனால், இன்பம் இயல்கொளப் பதியும் சிறப்புற்றது என்க; இவற்றுக்கு மூலமாக அமைவது மழைவளம் என்பதும் கருதுக; மக்களது அறத்தில் திரியா மாண்மையும் நினைக்க.

### துறக்கம் புரையும் நகர்

**வண்டு பொரேரென எழ**
**வண்டு பொரேரென எழும்**
**கடிப்புகு வேரிக் கதவமில் தோட்டிக்**
**கடிப்பிகு காதில் கனங்குழை தொடர**
**மிளிர்முன் வாய்ந்த விளங்கொளி நுதலார்**
**ஊர்களிற் றன்ன செம்ம லோரும்**
**வாயிருள் பனிச்சை வரிசிலைப் புருவத்து**
**ஒளியிழை ஒதுங்கிய ஒண்ணுத லோரும்,**
**புலத்தோ டளவிய புகழணிந் தோரும்**
**நலத்தோ டளவிய நாணணிந் தோரும்**
**விடையோ டிகலிய விறல்நடை யோரும்**
**நடைமட மேவிய நாணணிந் தோரும்**

**கடல்நிரை திரையின் கருநரை யோரும்**
**சுடர்மதிக் கதிரெனத் தூநரை யோரும்**
**மடையர் குடையர் புகையர்பூ ஏந்தி**
**இடையொழி வின்றி அடியுறையார் ஈண்டி**
**விளைந்தார் வினையின் விழுப்பயன் துய்க்கும்**
**துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும்**
**இருகேழ் உத்தி அணிந்த எருத்தின்**
**வரைகெழு செல்வன் நகர்;**

(இதுவும் மேல்வருவதும் கொச்சம்)

இருந்தையூர் மக்கள் துன்பமற்று இன்பத்திலேயே திளைப்பவராக வாழ்ந்தனர். இதனால், அது துறக்கவுலகம் போல விளங்கிற்று. அந்த இன்பச்செறிவை வியந்து கூறுகிறது இப்பகுதி.

மகளிரது கூந்தற் புதுமலர்களில் தேனுண்ணக் க்ருதி வண்டினம் மொய்க்கும்; அவர்கள் தம் கைகளை ஓச்சி அவற்றைத் துரத்துவர்;அவ் வேளையில் எழும் வண்டுகளின் ஆரவார ஒலியோடு அம்மகளி ரின் கைவளையல்களின் ஒலியும் பொரே ரெனச் சேர்ந்து எழும்.

பெண்கள் தம் காதுகளிலுள்ள கடிப்பு என்னும் அணியைக் கழற்றிவிட்டுக், கனவிய குழையினை அணிவர். கதவமாகிய காவலற்ற - இதழ்களாகிய கட்டவிழ்ந்து மலர்ந்திருந்த மலர்களில் - முன்னர் எழுந்த வண்டினம் வந்து மொய்க்கும். அதனை வெருட்ட, அவர் தம் கையினைத் தூக்குவர். அப்போது கைவளைகளின் ஒலியும், வண்டினம் மொய்க்கும் ஆரவார ஒலியும் ஒன்று கலந்து எழும்.

மின்னல் விட்டொளி வீசினாற்போல ஒளிவீசும் நெற்றி யினை உடையவரான மகளிரும், தாம் ஊர்ந்து செல்லுகின்ற களிற்றினைப் போன்ற ஆண்மையினைக் கொண்டவரான ஆடவரும் ஒருசார் வந்து நின்றனர். வாய்த்த இருளையொத்த கருங் கூந்தலைதயும், வரிகளையுடைய வில்லையொத்த வளைந்த புருவத்தையும், ஒளிபொருந்திய நெற்றிச்சுட்டி என்னும் அணியானது கிடந்தசையும் ஒள்ளிய நெற்றியையும் உடைய வரான மகளிர்களும் ஒருசார் நின்றனர். அறிவோடும் ஒன்றுகலந்து விளங்கிய புகழினையன்றித் தமக்கு வேறு அணிகளை விரும்பாதவரான புலவர்களும் அவ்விடத்தே ஒருசார் நின்றனர். கற்பு நலத்தோடு கலந்த நாணத்தையே தமக்குரிய அணியாகக் கொண்ட மகளிரும் ஒருசார் நின்றனர்.

ஆனேற்றோடு மாறுபட்டு, அதனை வெல்வார்போல வீறுடன் நிமிர்ந்து நடக்கும் வெற்றியமைந்த ஆடவர் ஒருசார் நின்றனர். ஒழுக்கமும் மடமும் பொருந்திய நாணத்தினை மேற்கொண்ட மகளிர் ஒருசார் நின்றனர்.

கடலிடத்து வரிசை வரிசையாக எழுகின்ற அலைகளைப் போன்று, கருமையும் நரையும் கலந்த தலைமயிரையுடையோரும், ஒளிரும் நிலவுக்கதிர் என்னுமாறுபோலத் தோன்றும் தூய நரையினைக் கொண்டோரும் ஒருசார் நின்றனர்.

இவர்கள் எல்லாரும் படைப்புக்கு ஆக்கிய பொங்கல் வகைகளுடனும், மங்கலக் குடையுடனும், நறும்புகைப் பொருள் களுடனும், நறும்பூக்களுடனும், அவற்றைத் தத்தம் கைகளில் ஏந்தியவராக வந்து நின்றனர். இடையே ஒழிவென்பது சற்றும் இல்லாதே, அடியவர்கள் பலரும் மேற்கண்டவாறு திரண்டு வந்தனர்.

முற்செய்த வினையானது முதிர்ந்து அதன் பயனை ஊட்டுதற்கு வந்து செயற்பட, அச்சிறந்த பயனைத் துய்க்கும் இடமாக விளங்கும், மாறுபடாத சிறந்த சீர்மைகொண்ட துறக்கத் தைப்போல அக்கோயிலிடம் விளங்கிற்று.

கருநிறப் படப்புள்ளிகள் அழகோடு விளங்கும் கழுத்தை உடையோனாகிய, வரைபோலும் மார்பினைப் பெற்ற செல்வ னாகிய சேடனின் திருக்கோயில், இவ்வாறு மக்கள் நெருக்கத் தால், விழவணியோடு எப்போதும் விளங்கலாயிற்று.

**சொற்பொருள் :** பொரேரென - முன்னது ஒலியையும், பின்னது விரைவையும் குறிப்பன. வண்டு - முன்னது மகளிர் கையிடத்து வளைகளையும், பின்னது வண்டுகளையும் குறிப்பன. கடிப்பு - ஒருவகைக் காதணி; காதோலை என்பர்; கனங்குழை இடுதற்கு அமைந்த காதின் துளை பெரிதாகிச் செம்மையுறுதற்கு இடப்பெறும் சுருளான அணி. கடி - மணம். வேரி - தேன். இகுத்தல் - தாழத் தொங்கல். செம்மல் - தலைமை. வாய் இருள் பனிச்சை - வாய்த்த இருளைப்போன்ற கருங்கூந்தல். வரிசிலை. கட்டமைந்த வில். புலம் - அறிவு. அளவிய - பொருந்திய. நலம் - அழகுச் செவ்வி. விடை - ஆனேறு. இகலுதல் - மாறுபடல். விறல் - வெற்றிப் பெருமிதம். நடை - ஒழுக்கம். மடம்மேவிய நாண் - மடத்தைப் பொருந்திய நாணம்; 'மடம்' கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. நிரைதிரை - வரிசை வரிசையாக எழும் அலைகள். கருநரையோர் - நாற்பதுக்கும் அறுபதுக்கும் இடைப் பட்ட வயதினர்; தூநரையோர் - அறுபதுக்கும் மேற்பட்டோர். மடை - சமையல்; மடையர் - அட்ட நிவேதனப் பொருட்களோடு வந்தவர். விளைந்து ஆர்வினை - விளைந்து முதிர்ந்த வினை ; முதிர்தல் பயனை நுகரச் செய்தற்குரிய பருவத்தால். துளங்கா - மாறுபடாத. இருகேழ் - கருநிறம். உத்தி - புள்ளி. எருத்து - தலை ; கழுத்துப்பகுதி. வரைகெழுசெல்வன் - மலையொத்த மார்பைப் பொருந்திய சிறந்தவன்; ஆதிசேடன். வரைகெழு செல்வன் - சோலை மலையிடத்துப் பொருந்திய செல்வனும் ஆம்; அவன்

திருமால்; அவனுக்குரிய அரவுப் பாயலுக்கும் தனிக் கோயில் இருந்தது என்று கொள்க.

**விளக்கம் :** ஆதிசேடனின் கோயிலில் அவனை வழிபட்டுப் போற்றுவதற்காக வந்து நிற்கும் ஆடவரும் மகளிருமாகிய அடியவர் திருக்கூட்டத்தின் சிறப்பைக் கூறுகின்றனர். இடையொழிவின்றி இவர் அத்துணை நெருக்கமாகப் பெருந்திரளாகவும், இடையீடின்றியும் வந்து தொழுது செல்வாராயினர் என்க. இவரெல்லாம் வந்து திரண்டனர் என்பது அவ்வூரவரின் தெய்வ வழிபாட்டில் திளைத்த சிந்தையைக் கூறுவதாகும்.

**நாகர் நகர்**

**வண்டொடு தும்பியும் வண்தொடை யாழார்ப்ப**
**விண்ட கடகரி மேகமொடு அதிரத்**
**தண்டாஅருவியொடு இருமுழவு ஆர்ப்ப**
**அரியுண்ட கண்ணாரோடு ஆடவர் கூடிப்**
**புரியுண்ட பாடலொடு ஆடலும் தோன்றச்**
**சூடு நறவொடு காமமகிழ் விரியச்**
**சூடா நறவொடு காமம் விரும்ப**
**இனைய பிறவும் இவைபோல் வனவும்**
**அனையவை எல்லாம் இயையும் புனையிழைப்**
**பூமுடி நாகர் நகர்;**

புனைதற்றொழிலிற் சிறந்த அணிகலன்கள் விளங்க, அழகுடன் திகழும் திருமுடியைக் கொண்டவன் ஆதிசேடப் பெருமான். அவன் திருக்கோயிலிடத்தே மேலும் பலவாக விளங்கிய சிறப்புகளைக் கூறுகின்றனர்.

வண்டினத்தோடு தும்பியினமும் கலந்து, வளவிய நரம்பின் தொடர்ச்சியைக் கொண்ட யாழிசையோடும் சேர்ந்து ஒலித்தபடியே இருந்தன. பிளிறுகின்ற மதயானைகளின் முழக்கத்தோடு மேகங்களின் இடிமுழக்கமும் சேர்ந்து முழங்கின. நீங்காத அருவி முழக்கத்தோடு பெரிய முழவுகளின் ஆர்ப்பொலியும் சேர்ந்து ஒலித்தன.

செவ்வரியோடு மையுண்ட கண்களினரான இளமகளிரோடு ஆடவரும் (கூத்தியரும் கூததரும்) சேர்ந்து, விரும்பத் தகுந்த பாடல்களைப் பாடுவதோடு ஆடலையும் நிகழ்த்தியபடி விளங்கினர். இவற்றைப் பலரும் கண்டு களிக்க அவர் நிகழ்த்தினர். சூடுதற்குரிய நறவமான நறவம் பூவோடு, அவற்றைச் சூடியுள்ள மகளிரின் உள்ளத்தே காம இச்சையும் அரும்பி மலரத் தொடங்கியது. சூடா நறவமாகிய கள்ளோடு காவின்பத்தையும் அங்கிருந்தார் விரும்பலாயினர். இவையும், இவைபோற் பிற இன்பமூட்டும் நிகழ்ச்சிகளும், மற்றும் பிறவும் ஆகிய அத்தன்மையவெல்லாம் நாகர் நகரிற் பொருந்தியிருந்தன.

**சொற்பொருள் :** வண்தொடை - வளவிய நரம்பின் தொடர்ச்சி. விண்ட - வாய்திறந்து பிளிறிய. தண்டா - நீங்காத. இருமுழவு - பெரிய முழவு. அரி - செவ்வரி. புரி - விருப்பம். காமம் - இச்சை. பூ - அழகிய.

**விளக்கம் :** இன்னொலியும், பாடலும் ஆடலும் அங்கிருந் தார் மனத்துத் துன்பங்களைப் போக்கி, அவரைக் காம விருப் பினராகச் செய்தன என்க. அத்தகைய களிப்பும் செழிப்பும் அங்கே விளங்கிற்று என்றும் கொள்ளுக.

### குளவாய் அமர்ந்தான்

**மணிமருள் தகைவகை நெடுசெறி யொலிபொலி**
**அவிர்நிமிர் புகழ்கூந்தற்**
**பிணிநெகிழ் துணையிணை தெளியொளி திகழ்ஞெகிழ் தெரியரி**
**மதுமகிழ்பு அரிமலர் மகிழுண்கண் வாணுதலோர்**
**மணிமயில் தொழிலெழில் இகன்மலி திகழ்பிறி**
**திகழ்கடுங் கடாக்களிற்று அண்ண லவரொடு**
**அணிமிக வந்திறைஞ்ச அல்லிகப்பப் பிணிநீங்க**
**நல்லவை எல்லாம் இயைதரும் தொல்சீர்**
**வரைவாய் தழுவிய கல்;சேர் கிடக்கைக்**
**குளவாய் அமர்ந்தான் நகர்;**

(இது முடுகியல்)

நீலமணி போலக் கருமையுடன் விளங்குவதும், சிறப் பினையுடையதும், ஐவகையாக முடிக்கப் பெறுவதும், நெருங்கிய நெறிப்பினைக் கொண்டதும், தழைத்தும் பொலிவு பெற்றும் விளங்குவதும், ஒளிவீசுவதுமான சிறந்த புகழையுடைய கூந்தலை யுடையவர்;

கட்டு நெகிழ்ந்ததும், இணையொத்ததும், தெளிந்த ஒளியோடு திகழ்வதுமான சிலம்புகளை உடையவர்;

அய்ந்தும், வடிகட்டியும் விளங்கும் கள்ளை உண்டு மகிழ் பவர்; செவ்வரிபடர்ந்த தாமரை மலரைப்போலும் களிவெறியாற் சிவந்த மையுண்ட கண்களைக் கொண்டவர்; ஒளிவீசும் நெற்றி யினரான மகளிர். இவர்கள் ஆதிசேடனின் கோயிலுக்கு வந்த படியேயிருந்தனர். நீலமணியனைய தோகையினைக் கொண்ட மயிலினது சாயலோடும், தம் எழிலால் மாறுபட்டு, அவற்றிலும் மிக்க எழிலோடு திகழ்ந்தவராக, அம் மகளிர் அசைந்தசைந்து ஒயிலோடு நடந்து வந்தனர். அவர்கள் அக் கோயிலிடமெங்கணும் பரந்து பரவி நிறைந்து நின்றனர். அவர்களோடு, விளங்கும் மிக்க மதத்தைக் கொண்ட களிற்றைப் போலத் திமும் தலைமைப் பாட்டை உடையவரான, அவரவர்க்குரிய காதலரும் வந்து சேர்ந்து எங்கணும் பரந்திருந்தனர்.

*இவர்கள் அணியணியாக வந்து சேடப் பெருமானைப் பணிந்தனர். இதனால், அவர்களது மனத்துயரம் நீங்கின; உடற்பிணிகளும் விலகின. நல்லவை எல்லாம் அவர்பாற் சென்று பொருந்தின.*

*தொன்மையாக வரும் சிறப்பைக் கொண்டதும், மலைப் பகுதியைச் சார்ந்ததும், கற்கள் பொருந்தியதுமான குளத்து உள்வாயிலமைந்ததுமான ஆதிசேடனின் திருக்கோயிலானது இத்தகு சிறப்போடு விளங்கிற்று.*

**சொற்பொருள் :** *மணி - நீலமணி. தகை - தகுதிப்பாடு; அது மென்மையும் ஒளியும் நெடுமையும் கொண்டசெவ்வி. வகை - சுருள், குழல், பனிச்சை, விலோதம், கொண்டை எனப்படும் ஐவகை. நெறி - நெறிப்பு; அறல்பட்ட மணல்போல விளங்கும் அழகு. ஒலி - தழைத்தல். பொலிதல் - அழகுடன் திகழல். அவிர் - ஒளிசெய்தல். புகழ் - புகழ்தற்குரிய செவ்வி பெற்றிருத்தல். பிணி - கட்டு. தெளியொளி - தெளிவான ஒளி. நெகிழம் - சிலம்பு. தொழில் - அசைந்தாடலாகிய தொழில். அல் - துன்பம். வரை வாய் - மலைப்பகுதி. குளவாய் - குளத்து உள்வாய்; அவ்விடத் தமைந்த திருக்கோயில்.*

**விளக்கம் :** *இவ்வழகு நலன்களை எல்லாம் ஒவ்வொரு பெண்ணுக்கும் தனித்தனியாகவும், அனைவருக்கும் பொதுவாகவும் பொருந்திக் கொள்க. இதனாற் பண்டும் பெண்கள் பூசியும் புனைந்துமே கோயிற்குச் செல்வர் என்பதும் நினைக்க; இஃது அவர்தம் இயல்பாதலையும் உணர்க. அவரைச் சூழ்ந்து அவர்தம் காதலரும் வந்து கூடுவர் என்க.*

## சேடனின் சிறப்பு

**திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்**
**திகழ்பெழ வாங்கித்தம் சீர்ச்சிரத்து ஏற்றி**
**மகர மறிகடல் வைத்து நிறுத்துப்**
**புகழ்சால் சிறப்பின் இருதிறத் தோர்க்கும்**
**அமுது கடைய இரவயின் நாணாகி**
**மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க**
**உகாஅ வலியின் ஒருதோழம் காலம்**
**அறாது அணிந்தாரும் தாம்;**
**மிகாஅ மறலிய மேவலி யெல்லாம்**
**பிகாஅ எதிர் பூண்டாரும் தாம்;**
**மணிபுரை மாமலை ஞாறிய ஞாலம்**
**அணிபோல் பொறுத்தாரும் தாஅம்; பணிவில்சீர்ச்**
**செல்விடைப் பாகன் திரிபுரம் செற்றுழிக்**
**கல்லுயர் சென்னி இமயவில் நாணாகித்**
**தொல்புகழ் தந்தாரும் தாம்;**

*(இவையும் கொச்சகம்)*

ஒளிதிகழும் பாற்கடலினைக் கடைந்த அந்தக் காலத்திலே, மந்தர மலையாகிய மத்தானது கடலுள் ஆழத் தொடங்கிற்று. திருமால் ஆமையுருக்கொண்டு அதனை ஆழவிடாது தடுத்து, மேலே எடுத்துக் கொணர்ந்து, தன் சிறப்புடைய முதுகின் மேல் தாங்கியபடி அதனை நிலைநிற்கச் செய்தான். மகர மீன்கள் உலாவும் கடலிடத்தே அவ்வாறு மலையினை நிலைபெற வைத்து நிறுத்தினான். புகழ் நிரம்பியசிறப்பினையுடைய தேவரும் அசுரருமாகிய இருதிறத்தார்க்கும் அமுதம் கடைவதற்கு உதவினான். அக்காலத்தே, இருபக்கத்தும் நின்று இழுத்துக் கடைவார்க்கு உதவியான கயிறாக அமைந்து அம்மலையினைச் சூழ்ந்து கிடந்தவன் ஆதிசேடன். இருவடத்தையும் இருசாராரும் பற்றிக் கடலைக் கடைந்தனர். அவ்வேளையிற் சக்கரப் படையினனான திருமால் இருபுறத்தும் மிகவும் நீண்டு கிடந்த பெருவ்டமாகத் திகழ்ந்த சேடனாகிய கயிற்றைப் பற்றிக் கடையுமாறு அருள்செய்தான். 'தோழம்' என்னும் பேரெண்ணைக் கொண்ட காலமளவும், அவர்கள் கெடாத வலிமையோடு இழுத்துக் கடையவும், தான் அறுபடாது அழகுறத் திகழ்ந்தவனும் சேடனாகிய பெருமானே யாவன்.

மிக்க வலிமையுடையவனாகிய காற்றுத் தேவனுடைய மேலான வலிமையெல்லாம் செல்லுபடியாகாதபடி, அந்நாளில், அவனுக்கு எதிராக நின்று மேருமலையினைத் தன் ஆயிரம் படங்களையும் விரித்து அணைத்து நின்று காத்தருளியவனும் ஆதிசேடனே யாவான்.

நீலமணியைப் போன்ற பெருமலைகளையுடைய இவ்வுல கத்தைத் தன் முடியிடத்தே விளங்கும் ஓர் அணிகலத்தைப் போலப் பேணித் தாங்கி நிற்போனும் சேடனே யாவான்.

எவர்க்கும் பணிதலற்ற சிறப்பினைக் கொண்டவனும், செல்லும் வாகனமாக ஆனேற்றைக் கொண்டவனுமாகியவன் சிவபெருமான். அவன் திரிபுரத்தோடு சினந்து, அதனையழிக்கச் சென்ற அக்காலத்திலே, மலைகளுள் உயர்ந்த உச்சியினைக் கொண்ட இமயமாகிய வில்லிற்குப் பொருந்திய நாணாகி, தொன்மை வாய்ந்த புகழைத்தந்தவனும் சேடனே யாவான்.

**சொல்பொருள் :** முந்நீர் - கடல். எழ வாங்கி - மேலே எடுத்து. சிரம் - ஈண்டு முதுகை உணர்த்தும். திகழ்பு - திகழ. மகரம் - சுறாமீன். மறி - உலாவும். இரு வடம் - பெரிதான வடக் கயிறு; பெருங்கயிற்றை வடம் என்பது மரபு. ஆழியான் - திருமால். உகாஅ - கெடாத. ஞாறிய - தோன்றிய. ஞாலம் - உலகம். விடை - எருது. செற்றுழி - அழிக்கச் சினந்த விடற்று.

**விளக்கம் :** சேடப் பெருமானின் சிறப்பைக் கூறும் பகுதி இது. அவனைத் தொழுது போற்றுவர் மக்கள் என்று கொள்க. இதில் வரும் பல செய்திகளைப் புராணங்களுட் காண்க.

## நின்னைப் பரவுதும்

**அணங்குடை அருந்தலை ஆயிரம் விரித்த**
**கணங்கொள் சுற்றத்து அண்ணலை வணங்கி**
**நல்லடி ஏத்திநிற் பரவுதும்**
**எல்லேம் பிறியற்கவெஞ் சுற்மொடு ஒருங்கே,**

(இது ஆசிரியச் சுரிதகம்)

அச்சம் தருதலையுடைய அரிய தன் ஆயிரம் தலைகளையும் படமாக விரித்து நினக்கு நிழலைச் செய்திருப்ப வனும், கூட்டமாகப் பொருந்திய சுற்றத்தை உடையோனுமாகிய, பெருமையிற் சிறந்த ஆதிசேடனை யாமும் வணங்கி, நின் நல்ல திருவடிகளை ஏத்தி நின்னைப் போற்றுவோம். யாம் எல்லாரும், எம் சுற்றத் தோடு ஒருங்கே என்றும் நின் திருவடிகளைப் பிரியா திருக்க வேண்டும் என்பதற்காகவே, நின்னைப் போற்றிப் பணிவோம். பெருமானே! இந்தச் சிறப்பை எமக்குத் தந்தருள்வாயாக!

**சொற்பொருள் :** அணங்கு - கண்டாரை அச்சமுறச் செய்யும் தெய்வப் பெண்; அத்தகைய அச்சத்தைக் குறித்தது. கணம் - கூட்டம். அண்ணல் - தலைவன்; சேடப் பெருமான்.

**விளக்கம் :** பெருமானின் நல்லடியிற் பிரியாதிருக்கும் பேற்றை வேண்டுவோர், அவனைத் தாங்கியும், அவனுக்கு நிழல் செய்தபடியும் விளங்கும் ஆதிசேடப் பெருமானையும் போற்றிப் பணிவர் என்று கொள்ளல்வேண்டும். பெருமானை என்றும் பிரியாதிருக்கும் அச் சேடப் பெருமானைப் போலேவே, தாமும் என்றும் பிரியாதிருக்கும் இன்பத்தைப் பெறுதல் வேண்டும் என்பதே, அடியவரது ஆரா விருப்பமாகும்.

## (2) வையை

**தொ**ல்காப்பியப் பொருளதிகாரச் செய்யுளியல் சூத்திர உரைப்பகுதியுள், உரையாசிரியர் இளம்பூரணனார் எடுத்துக் காட்டியுள்ள செய்யுள் இது. இதனைப் பாடியவர், இதற்கப் பண் வகுத்தோர், அவர் வகுதத பண்ணின் வகை முதலியன யாவும் தெரிந்தில.

ஒரு தலைவன் தான் விரும்பிய பரத்தையோடுங் கூடிய வனாகச் சென்று புதுப்புனலாடிக் களித்தான்; அதனையறிந்தாள் தலைவி. அவள் உள்ளம் வெதும்பிற்று. அவள் தலைவன் பாற் சினங்கொண்டு ஊடினாள். அவளை மீண்டும் நாடி வந்தான் தலைவன். அவள் சினத்தைக் கண்டான்; தன் பிழையால்

வந்துற்றதெனக் கருதானாய் வேறு காரணம் யாதோவெனக் கலங்கினான்; தலைவியின் தோழியை நாடிச் சென்றான்; தலைவியைத் தனக்கு இசைவித்து உதவுமாறு வேண்டினான். அதனைக் கேட்ட தோழி அவனது பொருந்தாச் செயலைக் குறிப்பாக அவனுக்கு உணர்த்தியவளாக இப் பாடலைச் சொன்னாள்; சொல்லி அவனுக்குத் தான் உதவுவதும் இல்லையென மறுக்கின்றாள்.

**ஏரணி கொண்டார் இயல்**

**மாநிலம் தோன்றாமை மலிபெயல் தலைஇ**
**ஏமநீர் எழல்வானம் இகுத்தரும் பொழுதினான்**
**நாகநீள் மணிவரை நறுமலர் பலவிரைஇக்**
**காமரு வையை கடுகின்றே கூடல்;**
**'நீரணி கொண்டன்று வையை' என விரும்பித்**
**தாரணி கொண்ட உவகை தலைக்கூடி**
**ஊரணி கோலம் ஒருவர் ஒருவரின்**
**சேரணி கொண்டு நிறமொன்று வெவ்வேறு**
**நீரணி கொண்ட நிறையணி அங்காடி**
**ஏரணி கொண்டார் இயல்;**

இப் பூமியின் நிலப்பகுதியில் தோன்றாதபடியாக, மிகுதியான பெயலைப் பெய்யத் தலைப்பட்டு, உலகினைக் காக்கும் நீராக விளங்கும் சிறப்பினைக் கொண்ட எழில் மிகுந்த மேகங்கள், பெருமழையைப் பெய்தன. சையமலையிடத்தே அவை பொழிந்த மழைநீரானது, நாகமரங்கள் ஓங்கி உயரமாக வளர்ந்திருக்கும் நீலமணிபோல விளங்கும் மலைச்சாரற் பகுதிகளின் வழியாக இழிந்தோடியது. அவ்விடத்து நறுமலர்கள் பலவற்றையும் தன்னோடு சேர்த்துக்கொண்டதாய், அழகு பொருந்திய வையையாற்றின் வழியாக வந்து, கூடல்நகரையும் அடைந்தது.

'புதுப்புனலாலே வையை அழகுற்றது' என்றபடி, மதுரை மக்கள் அனைவரும் அதன்கண் சென்று புதுப்புனலிற் களித்தாடற்குப் புறப்படலாயினர். அணியணியாகச் செல்லும் படையினருள், தூசிப் படையினர் அனைவர்க்கும் முற்படச் செல்லும் விரைவினராக விளங்குவர். அத்தகைய விரைவோடு நீராடுதற்கான உவகை மேலெழப்பெற்றவராக, மதுரையார் பலரும் வையைக் கரையை நோக்கிச் செல்வாராயினர். நீராடுதற்கேற்ற கோலங்களைக் கொண்டவராக ஒருவருக்கொருவர் முற்பட்டுச் செல்ல முயன்றவராக, அவர்கள் சென்றனர். ஒருவரோடு ஒருவராகச் சேர்ந்து சென்றவர்களின் அலங்காரங்கள் அவையவை தனிவண்ணத்தோடும், வெவ்வேறான வண்ணக் கலவையோடும் விளங்கின. பலவகைப் புனைவுகள் காண்பார்க்கு மயக்கினைத் தரும், அழகோடு விளங்கும்

கடைத்தெருக்கள் எல்லாம் நீரணிக்குரியவான பலவகைப் பொருட்களையும் மிகுதியாகக் கொண்டவாக விளங்கின. அத்தெருக்களுள் மக்கள் நிரம்பி வழிந்தனர். தாந்தாம் விரும்பும் பொருட்களை வாங்கிக் கொண்டு, அவர்கள் வையையை நோக்கி விரைந்து செல்வாராயினர்.

**சொற்பொருள் :** மலிபெயல் - மிக்க பெயல். ஏமம் - காவல். இகுத்தரல் - இழிந்தோடல். நாகம் - ஒருவகை மரம். மணிவரை - நீலமணியைப் போலத் தோன்றும் வரை; இது பெயலால் கழுவப்பெற்ற மலையின் தோற்றம். காமரு - விரும்பத் தகுந்த; காமரு வையை - இருசார் கரைப் பகுதிகளிலும் பூங்காக்கள் நிரம்பிய வையையும் ஆம். தார் - தூசிப் படை; மாலையும் ஆம் அப்போது தாரணி கொண்ட உவகைக்குப் போகத்திற்குரிய தாரினை அணிந்துகொண்டதனால் எழுந்த போகவிருப்பாகிய உவகை என்க. நீர் அணி கொண்ட - நீரால் அழகு பெற்றுத் திகழ்ந்த; அழகு நீராலும், அதனோடு வரும் மலர்த் திரளாலும். அங்காடி - கடைத் தெரு.

**விளக்கம் :** முதுவேனில் கழிந்ததும் வரும் புதுப்புனல் வரவாதலால், வேனிற் கொடுமையை அநுபவித்த மக்கள், உவகையோடு புனலாடச் செல்வாராயினர் என்க. பிற நாட்டைப் பற்றச் செல்லும் படையினர் அணியணியாகத் திரண்டு செல் வதைப்போல, ஆடவரும் மக்களும் அணியணியாக, ஒருவருக் கொருவர் முற்படச் செல்லும் விரைவுடனும், நீராடற்கேற்ற புனைவுகளுடனும் சென்றனர் என்க.

## துறையை முற்றினர்

**கைபுனை தாரினர் கண்ணியர்**
**ஐயெனும் ஆவியர் ஆடையர்**
**நெய்யணி கூந்தலர் பித்தையர்**
**மெய்யணி யானை மிசையராய் ஒய்யெனத்**
**தங்காச் சிறப்பின் தளிரியலார் செல்லப்**
**பொங்கு புரவிப்புடைப் போவோரும் பொங்குசீர்**
**வையமும் தேரும் அமைப்போரும் எவ்வாயும்**
**பொய்யாம்போய் என்னாப் புடைகூட்டிப் போவநர்**
**நெய்யாப்பு மெய்யார மூடுவார் வையத்துக்**
**கூடுவார் ஊடல் ஒழிப்பார் உணர்குவார்**
**ஆடுவார் பாடுவார் ஆர்ப்பார் நகுவார் நக்கு**
**ஓடுவார் ஓடித் தளர்வார்போய் உற்றவரைத்**
**தேடுவார் ஊர்க்குத் திரிவார் இலராகிக்**
**கற்றாருங் கல்லா தவரும் கயவரும்**
**பெற்றாரும் பெற்றாற் பிழையாத பெண்டிரும்**

**பொற்றேரான் தானும் பொலம்புரிசைக் கூடலும்**
**முற்றின்று வையைத் துறை;**

மதுரை மாநகரத்து மகளிரும் ஆடவரும், வையைக் கரையைச் சேர்ந்து, நீராடற் பொருட்டாகத் திரண்டிருந்த அழகைக் கூறுகின்றனர்.

கைவினைத் தொழிலோடு புனையப்பெற்ற மாலைகளைச் சூடியவராகவும், முகர்ந்தார் 'ஐ'யென வியக்குமாறு நறும் புகையின் மணங்கமழும் புகையூட்டிய மயிரினராகவும், நறு நெய்யின் பூச்சினைப்பெற்ற கூந்தலினராகவும், உடலெல்லாம் அலங்காரஞ் செய்யப்பெற்ற யானைமீது ஏறியவராகக் குறையாத சிறப்பினைக் கொண்டவரும், அசோகந் தளிரின் இயலினைக் கொண்டவருமான மகளிர், ஒய்யென விரைந்து செல்வாராயினர்.

கைவினைத் தொழிலோடு புனையப்பெற்ற தலைக் கண்ணியை உடையோராயும், கண்டார் 'ஐ'யென வியக்குமாறு விளங்கும் ஆடையினராயும், நறுநெய் பூசிய தலை மயிரினராயும், அப் பெண்களின் தலைவர்கள் அவர்களைச் சூழ்ந்தவராக, பிடரிமயிர் பொங்கி எழுகின்ற குதிரைகளின்மேல் ஏறிச் செல்வாராயினர்.

மிக்க சிறப்புடைய 'வையம்' என்னும் பெயர்கொண்ட வண்டிகளையும், தேர்களையும் புறப்படுவதற்கு ஏற்ற வகையில் அமைத்து அவற்றிலேறிச் சென்றனர் பலர். 'யாம் இக் கூட்டத்துட் சென்று எவ்விடத்தும் காணாமற் போகோம்' என்று கூறிய வராகத், தம் தோழியரையும் கூட்டிக்கொண்டு, தம் வீட்டாரினும் முற்பட்டுச் சென்றனர் இளமகளிர். கூட்டத்து நெரிசலால் தம் மெய்யாப்புக் கலைய, அதனைத் தம் உடலை மறைக்குமாறு இழுத்து மூடிக்கொண்டனர் அவர்கள். வையத்தில் இருந்த படியே சிலர் தம் கணவரோடு ஊடுவார்கள் அக் கணவன்மாரும் அவர் ஊடலைத் தீர்ப்பார்கள். அதனால் அம் மகளிரும் தம் ஊடல் நீங்கியவராகத் தெளிவடைவார்கள்.

களிப்பு மிகுதியினாலே ஆடிச் செல்வார் சிலர்; பாடிச் செல்வார் சிலர்; ஆராவரித்தபடியே செல்வார் சிலர்; நகையாடிப் பேசியபடி செல்வார் சிலர்; நகைசெய்தபடி உரியார் பற்றுதற்கு வர அவர் பிடியிற் சிக்காமல் ஓடுவார் சிலர்; ஓடித் தளர்வுற்று நிற்பார் சிலர்; உற்றாரை விட்டு விலகிப்போய்ப் பின் அவரைத் தேடுவார் சிலர்; இவ்வாறு பலரும் பலவாறான தன்மையினராக வையைக் கரையை நோக்கிச் செல்வாராயினர். அங்ஙனம் செல்பவரன்றி எவரும் ஊர்க்குத் திரும்புவாராக இலராயினர்.

கற்றவரும், கல்லாதவரும், கயவரும், மகப்பெற்றாரும், பெற்ற கணவரைப் பிழையாது ஒழுகும் கற்புடைப் பெண்டிரும், பொற்றேரை உடையானாகிய பாண்டியனும், அழகிய மதிலாற் சூழப்பெற்ற கூடல் நகரத்து மக்களனைவரும், வையையின் துறைகளை நாடிச்சென்று முற்றுகை இட்டனர்.

**சொற்பொருள் :** 'ஐ' வியப்பினை உணர்த்தும் இடைச் சொல். ஆவி - புகை. பித்தை - ஆடவர் தலைமயிர். ஒய்யென - விரைய. தங்கா - குறையாத. வையம் - ஒருவகை மூடுவண்டி. புடை கூட்டி - துணையாகச் சேர்த்துக்கொண்டு. மெய்யாப்பு சட்டை போல்வது. கயவர் - இழிந்தோர். பொலம் - அழகு.

### இகல் பல செல்வம்

**துறையாடும் காதலர் தோள்புணை யாக**
**மறையாடு வாரை அறியார் மயக்கிப்**
**பிறையேர் நுதலியர் எல்லாரும் தம்முன்**
**நிகழும் நிகழ்ச்சி எம்பால் என் றாங்கே**
**இகல்பல செல்வம் விளைத்தவன் கண்டிப்பால்**
**அகல் அல்கும் வையைத் துறை;**

துறையிடத்தே நீராடுகின்ற தம் காதலரின் தோள்களே தமக்குரிய புணையாக் கொண்டு, துறையிடத்தே நிற்கும் அக் காதலர்க்கு உயரியவர் அறியாதபடி, மறைவாகப் பரத்தையர் சிலர் நீராடிக் கொண்டிருந்தனர். அவ்வாறு நீராடும் அவரைக் கரையிலுள்ளார் அறியாதபடி மறைத்து மயங்கச் செய்தது வையைப் புனல். பிறையொத்த அழகிய நெற்றியினரான மகளிர் எல்லோரும், தம் முன்பாகவே நிகழும் நிகழ்ச்சிகள் எம்மிடத்தேயும் நிகழ்தற்குரியன என்ற கூறியபடி, அவ்விடத்தே அருகே நிற்பாரோடு சொற்போர் பலவற்றைச் செய்தபடியிருப்பர். இத்தகைய மாறுபாடுகள் பலவற்றையும் விளைத்தபடி, அவற்றைக் கண்டு, அவ்விடத்து நின்றும் நீங்கி மேற்சென்று கொண்டிருந்தது புதுப்புனல். இத்தகைய துறைகளைக் கொண்டது வையை யாகும்.

**சொற்பொருள் :** மறையாடுதல் - மறைவாக ஆடுதல்; இவர் காதற் பரத்தையர்; கரையிடத்து நிற்கும் இற்பரத்தையர் காணாமற்படிக்கு மறைவாக ஆடினர் என்க. இகல் பல செல்வம் - இகலாகிய பல செல்வம்; 'இகல்' ஆவது நின் காதலன் வாரான் என, வருவான் என்று கூறி இகலுதல். 'கண்டு இப்பால் அகல் அல்கும்' என்று கூட்டுக; ஒரு துரையின் இக் காட்சிகளைக் கண்டபின், அதனின்றும் நீங்கி மெல்ல அடுத்த துறையை நோக்கிச் செல்லும் நீர் என்க.

## பெரிதும் வியப்பு!

**காதலான் மார்பிற் கமழ்தார் புனல் வாங்கி**
**ஏதிலாள் கூந்தல் இடைக்கண்டு மற்றது**
**தாதாஎன் றாளுக்குத் தானே புறன்தந்து**
**வேய்தந்தது என்னை விளைந்தமை மற்றது**
**நோதலே செய்யேன் நுணங்கிழையாய்! இச்செவ்வி**
**போதலுண் டாங்கொல் அறிந்து புனல்புணர்த்தது**
**ஓஓ பெரிதும் வியப்பு;**

*தலைவன் தனக்குக் கீழ்ப்புறமாக நீராடிக் கொண்டிருந்த ஓர் இளம் பரத்தையைக் கண்டான். அவள்பால் அவன் மனம் சென்றது. அவளும், அவனையும் அவன் நோக்கத்தையும் கண்டாள். அவள் தானும் அதே நோக்கோடு அவனைப் பார்த்தாள். அவளிடத்து அன்பு கொண்டானாகிய அவன், தன் மார்பிலே அணிந்திருந்த மணங்கமழும் தன் தாரினைக் கழற்றினான். புனலொடு அதனை அவளை நோக்கிப் போக விட்டான். அப்பரத்தையும் அத் தாரைத் தான் கைப்பற்றிக் கொண்டாள். அதனைத் தன் கூந்தலிற் சூடியும் கொண்டாள். இவர்கள் இருவரின் செயலையும் பார்த்துக் கொண்டிருந்தாள் தானும் நீராடியபடியிருந்த மற்றொருத்தி. அவள் தலைவனின் காதற் பரத்தை. அவள் மனம் வெதும்பியது. 'அந்த மாலையை என்னிடம் தா' என்று கூறியவளாக அப் பரத்தையிடம் சென்று பூசலிடலானாள். அவள் அதனைத்தர மறுத்தாள். 'புனல் தானாகவே என்னிடத்தே இதனைக் கொண்டு தந்தது; என் கூந்தலிலும் சூட்டிற்று; அதனை உனக்குத் தாரேன்' என்றாள் அவள்.*

*'இஃது என்னேயோ! அவன் மாலையை எடுத்துப் புனலோடு விட்டதும், அதனை நீதான்அணிந்ததுமாகிய விளைவைக் குறித்து யான் வருந்தமாட்டேன். ஆனால், நுண்ணிய வேலைப்பாடமைந்த அணிகளை அணிந்துள்ள வளே! இத்தகையவொரு வாய்ப்பு உண்டாதலுங் கூடுமென்று அறிந்து, அதனைப் புனலிடத்து அவன்றான் போகவிடவும், அதுதான் நின் கூந்தலை அழகுசெய்யவும் நிகழ்ந்ததே, அந்தச் செவ்விதான் எனக்குப் பெரிதும் வியப்பாயுள்ளது' என்றாள் காதற் பரத்தை.*

**சொற்பொருள் :** *காதலன் - காதற்குரியான்; தலைவன் புனல் வாங்கி - புனல் இழுத்துச் சென்று. வேய்தல் - சூட்டுதல் நுணங்கிழை - நுண்ணிய வேலைப்பாடமைந்த அணிகள். 'ஓஓ' வியப்பினை உணர்த்தும் இடைச் சொல்.*

## நீயும் துணை

**கயத்தக்க பூப்பெய்த காமக் கிழமை**
**நயத்தகு நல்லாளைக் கூடுமா கூடும்**
**முயக்குக்குச்செவ்வி முலையும் முயக்கத்து**
**நீரும் அவட்குத் துணை! கண்ணி நீர்விட்டோய்!**
**நீயும் அவட்குத் துணை .**

*சேரிப் பரத்தை அதற்குமேல் யாதும் பேச்சு எழாதவளாக நின்றாள். காதற் பரத்தை அவளை விட்டுத் தலைவனிடம் சென்றாள்.*

*"மென்மை பொருந்திய மலர்மாலையை வெள்ளத்தில் இட்டனை. நின் காமத்திற்கு உரியவளாம் சிறப்பினை உடைய, விரும்பத்தகுந்த அந்த அழகியைச் சென்று சேரத்தக்க வகை யறிந்து அதுவும் சென்று சேர்ந்தது. தலைக்கண்ணியை நீரில் விட்டவனே! தழுவுதற்குரிய செவ்வியமைந்த அவள் மார்பகங் களும், அவற்றைத்தழுவிச்செல்லும் இப் புதுப்புனலுமே அவட்குத் துணையாகவுள்ளன. இனி நீயும் அவட்குத் துணையாவாய்" என்றனள்.*

**சொற்பொருள் :** *கயம் - மென்மை. பூ - பூமாலையைக் குறித்தது. காமக் கிழமை - காமத்தால் உண்டாய உறவு; மணவுறவாகாது என்பதாம். செவ்வி - செவ்விதாம் காலம். 'கண்ணி நீர் விட்டோய்' என்றது. முன்னர்த் தன்னை அவன் அடைந்த நிகழ்ச்சியை நினைவுப்படுத்தியதுமாம்.*

## புனலின் குறை

**பணிவில் உயர்சிறப்பின் பஞ்சவன் கூடல்**
**மணியெழில் மாமேனி முத்த முறுவல்**
**அணிபவளச் செவ்வாய் அறங்காவற் பெண்டிர்**
**மணியணிந்த தம்முரிமை மைந்தரோடு ஆடித்**
**தணிவின்று வையைப் புனல்;**

*தலைவன், அதன்பின் அவளைத் தெளிவித்து, அவளுடன் நீராடி இன்புறுகின்றான். இனி, வையைக்குள்ள ஒரு குறையையும் கூறுகின்றனர்.*

*எவர்க்கும் தான் பணிதல் என்பதற்ற உயரிய சிறப்பினை உடையவன் பஞ்சவனாகிய பாண்டியன். அவனுக்கு உரியது கூடல் நகரம், அதனிடத்தே,*

*நீல மணி போன்ற அழகிய கூந்தலையும், மாந்தளிர் போன்ற மேனிவண்ணத்தையும், முத்துக்களைப் பேரன்ற பற் களையும், அழகிய பவளத்தைப் போன்ற சிவந்த வாயிதழ்*

களையும் உடையவரான, அறத்தைக் காத்துப் பேணும் உத்தம மனைவியராகிய கற்புடைப் பெண்டிர் பலரும் இருந்தனர். இருப்பினும்.

அவர், மணியணிந்த தம் உரிமைமாந்தரோடு புனலாடி மகிழ்ந்தனர் அன்று. அவர்தம் இல்லிடத்திலிருந்து வாடி நலிய, அவர் கணவர்மார் தாம் விரும்பிய பரத்தையரோடு புதுப் புனலாடிக் களித்தனர். வையைப் புனல் அவ்வாறு அறமகளிர் ஆடாதேயே போய்க் கழிந்தது. (இதுரு தோழி கூற்று, தலைவனின் செயலைக் குறித்துப் பழிக்கின்றனள்.)

**சொற்பொருள் :** 'பணிவில் உயர்சிறப்பு' - பிறர்க்குப் பணிதல் அற்ற உயரிய சிறப்பு. பஞ்சவன் - பாண்டியன்; ஐந்து பகுதியாக விளங்கிய பாண்டிய நாட்டின் தலைவன். மணி - நீலமணி. உரிமை மைந்தர் - காதற் கணவர். தணிவின்று - கழியவில்லை.

**விளக்கம் :** காதற் பரத்தையும் சேரிப் பரத்தையும் தலைவனின் அன்புகுறித்துத் தமக்குள் பூசலிடத், தலைவன் அவர்களுடைய அந்த உறவிலே இன்புறுகின்றான்; அன்றித் தன் இல்லாளோடு சென்று இன்புற்றான் அல்லன்; அந்தச் செயலின்றியே வையைப் புனலும் போய்க் கழிந்தது என்பதாம்.

### ஊடாளோ?

**புனலோடு போவதோர் பூமாலை கொண்டை**
**எனலூழ் வகை எய்திற்று என்றேற்றுக் கொண்டை**
**புனலூடு நாடறியப் பூமாலை யப்பி**
**நினைவாரை நெஞ்சிடுக்கண் செய்யும் கனல்புடன்**
**கூடாமுன் ஊடல் கொடியதிறம் கூடினால்**
**ஊடாளோ ஊர்த்தலர் வந்தூர்ந்து;**

"புதுப்புனலோடு போவதாகிய ஒரு பூமாலையானது என் கொண்டையிடத்தே ஊழ்வகையினாலே வந்துஅடைந்தது! அதனை அவ்வாறே யானும் சூட்டிக் கொண்டேன்; அதற்கு உரியவனையும் ஏற்றுக் கொண்டேன்" என்று, நீராடியவர் அனைவரும் அறியும்படியாக, அப் பரத்தையானவள், அதனை எடுத்துத் தன் கொண்டையிற் சூடிக் கொண்டாள். அவள் செயல் அத் தலைவனைப் பிரிந்து நினைந்திருப்பாரை எல்லாம் நெஞ்சிடத்தே துன்பஞ் செய்யும் கொடுமையான செய்தி யாயிற்று. அவன் அப் பரத்தையைச் சென்று கூடுவதற்கு முன்பாகவே, அவளது அச்செயல் ஊர்முழுவதும் பரவி அலராயிற்று. இக் கொடிய செய்தியைக் கேட்டால், அவன் தலைவியும் ஊடாளோ? ஊரிடத்தே பரவிய பழிச் சொற்கள் தலைவியின் காதுக்கும் சென்று அடைந்தன. அதனாலே,

அவளும் நெஞ்சம் வெதும்பித் தலைவனோடு ஊடினாள். இதுதான் தவறாகுமோ?

**சொற்பொருள் :** ஊழ் வகை - முறைப்படி : அது ஊழின் செயல் என்பதாகும். அப்பி - அணிந்து. இடுக்கண் - துன்பம். கொடிய திறம் - தலைவன் பலருமறியச் செய்த அச் செயல். ஊடல் ஊடாளோ - ஊடல் கொள்ளாளோ?

## வாய் கழுவார்

**எனவாங்கு,**
**ஈப்பாய் அடுநறாக் கொண்டதிவ் யாறெனப்**
**பார்ப்பார் ஒழிந்தார் படிவு;**
**மைந்தர் மகளிர் மணவிரை தூவிற்றென்று**
**அந்தணர் தோயலர் ஆறு;**
**வையைதே மேவ வழுவழுப்பு உற்றென**
**ஐயர்வாய் பூசுறார் ஆறு;**

நீர் விளையாட்டிற்குக் களிப்போடு வந்த மக்கள் பலரும் மதுவை யுண்டு களித்தனர். எஞ்சிய மதுவை அவர்கள் ஆற்று நீரில் ஊற்றினர். இவ்வாறு மதுக்கலந்து வரும் நீரிலே வண்டினம் மொய்த்தது. அதனால், 'ஈக்கள் மொய்க்கும் அடப்பெற்ற நறவினை இவ்வாறு கொண்டுள்ளது' எனக் கூறியவராக, அதன்பால் நீராட வந்த பார்ப்பார்கள் நீராடாதேயே தம் வீடு சென்றனர்.

மைந்தரும் மகளிரும் நீரில் மூழ்கித் திளைத்து விளையாடி இன்புற்றனர். அவர் உடலிற் பூசியிருந்த மணச்சாந்தும் பொடிவகையும் நீரிற் கலந்து பரவின. அதனைக் கண்ட அந்தணர். அந்நீரில் தாமும் தோயாராய் அகன்று போயினர்.

'தேன் மிகுதியாகக் கலந்து வருதலால் நீர் வழுவழுப்பு அடைந்தது' என்று கூறியவராக, ஐயர்களும் வாய் கழுவாதவ ராக அதனை நீங்கிச் சென்றனர்.

**சொற்பொருள் :** அடு நறா - அடப்பெற்ற கள். படிவு - முழுகுதல். மைந்தர் - ஆடவர்; மைந்து - வலிமை. மணவிரை - மணப்பொடி வகைகள். தேம் - தேன். இதனால், பார்ப்பார். அந்தணர், ஐயர் என்பார் தனித்தனி வகையினராதல் காண்க.

## பாடியும் ஆடியும் களிப்பர்

**விரைபுரை விரைதுறை கரையழி பிழியுர ஊர்தரும் புனல்**
**கரையொடு கடலிடை வரையொடு கடலரிடை நிரைநிரை**
**நீர் தரும் நுரை**
**நுரையுடன் மதகுதொ றிழிதரு புனல் கரை**
**புரளிய செலு மறி கடல்**

**புகுமள வளவியலிசை சிறைதணிவின்று வெள்ளமிகை!**
**வரைபல புரைஉயர் கயிறணி பயில்தொழில்**
**மணியணி! யானைமிசை மைந்தரும் மடவாரும்**
**நிரைநிரை குழீஇயினர் உடன் சென்று**
**குருமணி யானை இயல்தேர்ப் பொருநன்**
**திருமருத முன்துறை முற்றம் குறுகித்**
**தெரிமருதம்ப பாடுப பிணிகொள் யாழ்ப்பாணர்;**

புதுப்புனலானது மிக விரைவாகவும், இரைச்சலோடும், எங்கும் பரவுயபடியும், துறைகளையும் கரைகளையும் அழித்த படியும் பள்ளத்தை நோக்கிச் செல்லும், கரையோரப் பகுதி யினும், கடலிடத்துச் சென்று கலக்குமிடத்தும், தான் பிறந்த சையமலைக்கும் கடலுக்கும் இடைப்பட்ட தான் வருகின்ற வழியிடத்தும், புதுப்புனலானது வரிசை வரிசையாக நுரைகளை எழுப்பிக்கொண்டே செல்லும்.

நுரையோடு மதகுதோறும் இறங்கிச் செல்லும் புன லானது கரைமேலும் புரண்டுசெல்லும். அலை மடங்குகின்ற கடலிடத்தே சென்று சேருமளவும், மிக்க வெள்ளம் மேலும் மேலும் வந்துவந்து சேர்தலால், கரைகளாகிய சிறைக்குள் அடங்காதாய்க் கரைபுரண்டவாறே வெள்ளம் மிகுதியாகப் பெருகிச் செல்லும்.

பல மலைகளைப் போலும் உயர்ந்தனவும், கழுத்தே கயிறு கட்டப்பெற்றனவும், தமக்குப் பயிற்றுவிக்கப் பெற்ற தொழில் களிற் பழகியவுமாகிய, மணியணிந்த யானைகளின் மேலமர்ந்த வராக மைந்தரும், மடவாரும், நிரை நிரையாக நீர்வரத்தை அறிந்தவுடனே, விரைந்து சென்று வையைத் துறைகளிற் கூடினார்கள்.

நிறமமைந்த மணியையுடைய யானையையும், இயலமைந்த தேரினையும் உடையவன் பாண்டியன். அவனும் திருமருத முன்துறை முற்றத்தே அடைந்தான். அவனைக் கண்டதும். நரம்புகள் கட்டப்பெற்ற யாழினையுடையவராகிய பாணர்கள், மருதப்பண்ணினை ஆய்ந்தெடுத்து இசைத்தனர்; வாய்ப் பாட்டாகப் பாடவும் தொடங்கினர்.

**சொற்பொருள் :** இரை - இரைச்சலுடன். விரை விரைபு - மிகவும் விரைவாக. புரளிய - புரண்டுபோமாறு, மறி - மடங்குகின்ற. பயில் தொழில் - பயில்தற்குரிய தொழில். இயல்தேர் - செலற்குரிய தேர். குருமணி - நிறமமைந்த மணி. குழீஇயினர் - திரண்டனர். பிணி - நரம்பின் கட்டு.

## மிச்சில் நீர்

**பாடிப் பாடிப் பாய்புனல்**
**ஆடி யாடி - அருளியவர்;**
**ஊடி ஊடிப் உணர்த்தப் புகன்று**
**கூடிக் கூடி மகிழ்பு மகிழ்பு**
**தேடித் தேடிச் சிதைபு சிதையு**
**சூடிச் சூடித் தொழுது தொழுது**
**இழுதொடு நின்ற மலிபுனல் வையை**
**விழுதகை நல்லாரும் மைந்தரும் ஆடி**
**இமிழ்வது போன்றது இந்நீர் குணக்குச் சான்றீர்!**
**முழுவதும் மிச்சிலா உண்டு;**

*நீராடச் சென்ற மக்களும், தாமும் பாடிப்பாடிப் புனலிற் பாய்ந்து ஆடியாடி இன்புற்றனர். தமக்கு அருள் செய்தாரான தலைவருடன் ஊடுவர் பெண்கள். அவர்களைத் தெளிவித்துக் கூடுவர் தலைவர்; அவர்கள் மீண்டும் ஊண்டும் ஊடுவர்; தலைவர்கள் மீண்டும் தெளிவிப்பர்; பெண்கள் மீண்டும் விருப்புடன் கூடி இன்புறுவர். இவ்வாறு ஊடியும் கூடியும் காதலர் மகிழ்வினை உடையராயிருப்பர்.*

*காணாமற் போனவரைத் தேடிப் பலவிடங்கட்குச் சென்று அலைந்தும் காணாமையால் உடலும் உள்ளமும் சோர்வுற்று விளங்குவர் சிலர். சிலர், சிறந்த மணமலர்களைச் சூடிச்சூடிப் புதுப்புனலைத் தொழுது தொழுது போற்றுவர்.*

*இவ்வாறு ஆடவரும் மகளிரும கூடியாடிக் களித்தலால், மிக்க புனலையுடைய வையையும் சேறுபட்டது. சிறந்த அழகினை யுடையவரான மகளிரும்; அவர்தம் காதலரும் ஆடிக் கழித்தது போன்றுள்ளது. இந்நீராதலைக், குணத்தால் நிரம்பிய சான் றோரே, நீங்களும் காண்பீராக, முழுவதும் உண்டு கழித்த எச்சிலாக நீர்தான் விளங்குதலையும் காண்பீராக!*

**சொற்பொருள் :** *புகன்று - விரும்பி. சிதைபு - வருந்தித் தளர்ந்து. இழுது - சேறு. மலிபுனல் - புனல்மிக்க. விழுதகை -சிறந்த அழகு. குணக்குச் சான்றீர் - குணத்தாற் சிறந்த சான்றீர்; வேற்றுமை மயக்கம். மிச்சில் - எச்சில்.*

**விளக்கம் :** *நீர் கலங்கலாயிற்று என்பதனை நயமாக உரைக்கின்றனர். மக்களின் வளமையும் இன்ப நாட்டமும் கூறினர்.*

## விழுநீர் அன்று

**சாந்தும் கமழ்தாரும் கோதையும் சுண்ணமும்**
**கூந்தலும் பித்தையும் சோர்ந்தன பூவினும் அல்லால்**

**சிறிதானும் நீர்நிறம் தோன்றாதிவ் வையை யாறு;**
**மழைநீர் அறுகுளத்து வாய்பூசி ஆடும்**
**கழுநீர மஞ்சனக் குங்குமக் கலங்கல்**
**வழிநீர விழுநீர அன்று வையை;**

*வையையிற் பலரும் திரளாகச் சென்று நீராடுகின்றனர். அவர்கள் பூசியிருந்த சாந்தமும், மணங்கமழும் மாலைகளும், கோதைகளும், சுண்ணப் பொடிகளும், கழிந்த ஆடவர் பெண்களின் தலைமயிர்களும், அவற்றிற் சூடியிருந்தது வீழ்ந்த பூக்களுமாகக் கலந்து நீர் கலங்கலாகிச் செல்லும் சிறிதளவேனும் நீரின் இயல்பான நிறம் தோன்றாது. மழையற்றமையினாலே நீரற்றுப்போன குளத்திலுள்ள சிறிதளவான நீரில் வாய் கழுவியும், நீராடியும், கழுவிப் போக்கும் தன்மை வாய்ந்த மஞ்சனங் குங்குமமாகிய கலவைகளைக் கழுவி விட்டும், அதனைக் கலக்கிவிட்டால் எவ்வாறு விளங்கும்? அவ்வாறே வையையில் வழிந்துசெல்லும் நீரும் கலங்கல் நீராகச் சென்றதேயன்றித் தூய நீராகக் காணப் பெறவில்லை.*

**சொற்பொருள் :** *சுண்ணம் - வாசனைப் பொடி. மஞ்சனம் - தேய்த்துக் குளிக்கும் மணப்பொடி; மஞ்சளும் பிறவும் கலந்தது; மஞ்சனம் ஆயிற்று. வழிநீர் - வழிந்தோடும் நீர்.*

### இந்திரனும் பாண்டியனும்

**வெருவரு கொல்யானை வீங்குதோள் மாறன்**
**உருகெழு கூட லவரொடு வையை**
**வருபுன லாடிய தன்மை பொருவுங்கால்**
**இருமுந்நீர் வையம் படித்தென்னை யானூர்க்கு**
**ஒரு நிலையும் ஆற்ற இயையா ; வருமரவின்**
**அந்தர வானியாற்று ஆயிரங் கண்ணோன்**
**இந்திரன் ஆடும் தகைத்து.**

*கண்டார் அஞ்சத் தகுந்த கொல்யானைகளையும், பருத்த தோள்களையும் கொண்டவன். பாண்டியன். அவன் அழகு பொருந்திய கூடல் நகரத்துத் தன் உரிமை மகளிரோடுங் கூடிச் சென்று, வையையிலே வந்த புதுப்புனலின் ஆடிக் களித்தான். அந்தச் சிறப்புக்கு இணையாக ஒன்றைக் கூறக் கருதினான்.*

*கடலாற் சூழப்பெற்ற இப் பூவுலகெல்லாம் ஆராய்ந்தாலும் யாதும் பயனின்று, அதுதான் இக் கூட்லுக்கு ஒரு வகையானும் பொருந்துவதின்று. தேவயானையின்மீது வருவோனும் வானத்துத் தேவகங்கையின்மீது வருவோனும், வானத்துத் தேவகங்கையில் அந்தர மகளிரோடு நீரோடுவோனுமாகிய இந்திரன், தேவ மகளிரோடுங் கூடி நீராடியசெவ்வி போன்றதென்று வேண்டு மாயின் சொல்லலாம்.*

**சொற்பொருள் :** வெருவரு - அஞ்சத்தக்க. கொல் யானை - பொருகளத்துப் பகைவரைத் தவறாதே கொல்லும் யானை. வீங்குதல் - பூரித்துப் பருத்தல்; பாண்டியன் தன் வலியும் படைவலியும் கொண்டவன் என்பதாம். உரு - நிறம்; கூடலவர் - கூடல் நகரத்துள்ள அவனது உரிமைச் சுற்றத்தினர்; நகர மாந்தரும் ஆம். பொருவுங்கால் - ஒப்பாகக் கூறுமிடத்து. இரு - பெரிய; கரிய. முந்நீர் - கடல். வையம் - உலகம். மா - யானை; வெள்ளையானை. வானாறு - ஆகாய கங்கை.

**விளக்கம் :** வையையாற்றுப் புதுப்புனலின் சிறப்பைக் கூறினும், இது தலைவன் தலைவியை மறந்தானாகச் சென்று பரத்தையரோடு நீராடிக்களித்த செயலைப் பழித்ததேயாகும். இதனால் தோழி, தான் தலைவனுக்கு உதவ மறுத்தனள் என்க.

**மூன்றாம் பாடல்**

## வையை

**அறவோர் உள்ளார் அருமறை காப்ப**

* * *

**செறுநர் விழையாச் செறிந்தநம் கேண்மை**
**மறுமுறை யானும் இயைக நெறிமாண்ட**
**தண்வரல் வையை எமக்கு.**

அறநெறியினராகிய சான்றோர்கள் தாம் பிழைத்தொழுகுவதற்கு ஒருபோதும் எண்ணமாட்டார்கள். அரியதான மறைகளிலே சொல்லப்பட்டுள்ள நெறிகளைக் காத்து வருவார்கள்.

பகைவரும் ஊறுசெய்வதற்கு விரும்பாத செறிந்த நட்பு நம்மிருவரது நட்பும் ஆகும். இம்முறைதான் அது எமக்குப் பொருந்தாது. போயிற்று. செல்லும் நெறியாலே மாட்சியுடைய குளிர்ந்த வரத்தையுடைய வையையாறே, அதுதான் எமக்கு மறுமுறையேனும் பொருந்துவதாக. அதற்கு நீயும் அருள்வாயாக!

**சொற்பொருள் :** செறுநர் - பகைவர். நெறி - செல்லும் வழி. தண்வரல் - குளிர்ந்த நீர்வரத்து.

**குறிப்பு :** இப்பகுதி தொல்காப்பியச் செய்யுளியல் 121 ஆம் சூத்திரவுரையுள் பேராசிரியராற் காட்டப்பெற்றது.

**நான்காம் பாடல்**

**மண்ணார்ந்து இசைக்கும் முழவொடு கொண்டதோள்**
**கண்ணாது உடன்வீழும் காரிகை கண்டோர்க்குத்**
**தம்மோடு நிற்குமோ நெஞ்சு!**

*மார்ச்சனையமைந்து ஒலிக்கும் மத்தளத்தின் அமைவோடு ஒத்ததும், விரும்பத்தகுந்த அழகினை உடையதுமான தோள்களைக் கண்டவர்க்கு, அவர்களுடைய உள்ளம் அத் தோள்களின் வனப்பையே எண்ணி, அவற்றின் பின்னாகச் செல்லுதலே நிகழும். அஃதன்றி, நெஞ்சந்தான் தமக்கு உரிய தாய் தம்மோடு கூடி இருக்குமோ? இருக்காது காண்!*

**சொற்பொருள் :** *மண் - மார்ச்சனை. இசைக்கும் - ஒலிக்கும். முழவு - மத்தளம். கண்ணாது - கருதாது. காரிகை - பேரழகு.*

**குறிப்பு :** *நம்பியகப் பொருள் உரையில், இவ்வடிகள் மேற் கோளாக வந்துள்ளன.*

## ஐந்தாம் பாடல்

**முன்புற்று அறியா முதற்புணர்ச்சி மொய்குழலை**
**இன்புற்று அணிந்த இயலணியும் வன்பணியும்**
**நாணெனும் தொல்லை அணியென்ன நன்னுதலை!**

*முன்னர்ப் பெற்றறியாத இன்பமாகிய முதற்கூட்டத்தின் இன்பததைப் பெற்றாள். வண்டு மொய்க்கும் பூங்குழலினாளான ஒரு கன்னிப் பெண். அதனால் அவளுடைய பழைய ஒப்பனைகள் கலைந்தன. அவளைக் கூடி இன்புற்று மகிழ்ந்த தலைவன், அவள் முன்னர் அணிந்த சிறந்த அணிகளையும், நகைகளையும் அவ் வாறே அணிந்து விட்டான். அதனைக் கண்டு அவள் நாணினாள். அவன், 'நன்னுதலாய்! நீதான் நாணாதே! பழையபடியே அணிசெய்துள்ளேன்' என்று கூறி, அவளைத் தேற்றுகின்றான்.*

**சொற்பொருள் :** *முன்பு - அதற்கு முன்பு. மொய்குழல் - வண்டு மொய்க்கும் கூந்தல். இயல் அணி - அசையும் அணி வகைகள். வன்பணி - புதிய அணிகலன்கள்.*

**குறிப்பு :** *நம்பியகப்பொருள் உரையிற் கண்டன இவ் அடிகள்.*

## ஆறாம் பாடல்

### மதுரை

**உலகம் ஒருநிறையாத் தானோர் நிறையாகப்**
**புலவர் புலக்கோலால் தூக்க - உலகனைத்தும்**
**தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்**
**நான்மாடக் கூடல் நகர்.**

*உலகனைத்தையும் ஒரு தட்டிலே ஒரு நிறையாகவும், மதுரையை மற்றொரு தட்டிலே ஒரு நிறையாகவும், புலவர்கள் அறிவென்னும் துலாக்கோலிலே இட்டுத் தூக்கிச் சமன் கண்டனர். அக்காலத்தே, உலகனைத்துமுள்ள தட்டுத்தான் வாடி*

மேலேசெல்லத், தான் வாடாதிருக்கும் சிறப்பையுடையது, தென்னவனுக்கு உரிமையுடையதும், நான்மாடக்கூடல் எனப் படுவதுமாகிய மதுரைப் பேரூர் ஆகும்.

**சொற்பொருள் :** புலம் - அறிவு. கோல் - துலாக்கோல். வாடல் - வன்மை குறைதல்.

**குறிப்பு :** புறத்திரட்டிற் கண்டது; சிலர் முத்தொள்ளாயிரச் செய்யுளாகவும் கொள்வர்.

## ஏழாம் பாடல்

**மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவொடு புரையும் சீரூர்; பூவின்**
**இதழகத் தனைய தெருவம்; இதழகத்து**
**அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்;**
**தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்;**
**தாதுண் பறவை யனையர் பரிசில் வாழ்நர்;**
**பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த**
**நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப**
**ஏம இன்துயில் எழுதல் அல்லதை**
**வாழிய வஞ்சியும் கோழியும் போலத்**
**கோழியின் எழாதுஎம் பேரூர் துயிலே.**

மாயோனது கொப்பூழில் மலர்ந்த தாமரைப் பூவோடு ஒக்கும் சிறப்புடையது மதுரைப் பேரூர். அப்பூவின் அக விதழ்களைப் போன்றவை மதுரைத் தெருக்கள். அவ்விதழ்களின் உட்புறமாக விளங்கும் கொட்டையைப் போன்றது. பெருமையிற் சிறந்தனாகிய பாண்டியனின் கோயில். அப் பூவிற் பொருந்தியுள்ள தாதினைப் போன்றவர் தண்டமிழ் மொழியைப் பேசும் மக்கள். அத் தாதை உண்ணுகின்ற வண்டினைப் போன்றவர்கள், மதுரைக் கண் வந்து பரிசில் பெற்று வாழ்கின்றவர்கள். அப்பூவினுள்ளே பிறந்தோனாகிய பிரமதேவனின் நாவினின்றும் பிறந்தவை நான்மறைகள். அவற்றைக் கேட்டறிந்தவர் அவற்றை ஓதும் ஒலி யானது எழும். அவ்வொலியினாலே மக்கள் இனிய துயிலின்றும் விழித்து எழுவர். அவ்வாறு துயிலெழுதல் அல்லது, வஞ்சியும் கோழியுமாகிய (உறையூருமாகிய) நகரத்து மக்களைப் போன்று, கோழியின் குரலால் மதுரைப்பேரூர் துயிலெழுதல் என்பது ஒருபோதுமே கிடையாது.

**சொற்பொருள் :** மாயோன் - திருமால். புரையும் - ஒக்கும். பொகுட்டு - கொட்டை. பறவை - வண்டு. நவில்தல் - ஓதுதல். எடுப்ப - எழுப்ப. ஏமம் - இன்பம்.

**குறிப்பு :** இது புறத்திரட்டிற் கண்டது.

## எட்டாம் பாடல்

**தண்தமிழ் வேலித் தமிழ்நாட் டகமெல்லாம்**
**நின்று நிலைஇப் புகழ்பூத்தல் அல்லது**
**குன்றுதல் உண்டோ மதுரை கொடித்தேரான்**
**குன்றமுண் டாகும் அளவு.**

*தண்மையான தமிழையே காக்கும் வேலியாகக் கொண்ட தமிழ்நாட்டின் இடமெல்லாம், தன் புகழ் நிலைபெறுமாறு நிலைத்து, அப் புகழால் பொலிவுபெற்று விளங்குவதும் அலலாமற், கொடிவிளங்கும் தேரோனாகிய பாண்டியனுக்குரிய திருப்பரங்குன்றம் உள்ள காலத்தளவும், மதுரையின் புகழானது என்றும் குறைப்படுதல் என்பதும் உளதாகுமோ? ஆகாது.*

**சொற்பொருள் :** *வேலி - காவல். நாட்டகம் - நாட்டிலுள்ள இடங்கள். நிலை இ - நிலைத்து. புகழ் பூத்தல் - புகழாற் பொலிவு பெறுதல்.*

**குறிப்பு :** *இது புறத்திரட்டிற் கண்டது.*

## ஒன்பதாம் பாடல்

**செய்யாட்கு இழைத்த திலகம்போல் சீர்க்கொப்ப**
**வையம் விளங்கிப் புகழ்பூத்தல் அல்லது**
**பொய்யாதல் உண்டோ மதுரை புனைதேரான்**
**வையை உண்டாகும் அளவு.**

*புனைதலைக் கொண்ட தேரினை உடையவன் பாண்டியன். அவனுக்கு உரியது வையையாறு. அஃது இருக்கும் வரையில், திருமகட்கிட்ட திலகத்தைப்போலத் தன் சிறப்புக்கு ஏற்றபடியாக உலகத்தில் விளங்கிய புகழோடு பொலிவுறுதல் அல்லாமல், மதுரைநகரமானது, தன் பெருமைகெட்டு அழிதல் என்பதும் உளதாகுமோ? ஆகாது காண்.*

**சொற்பொருள் :** *செய்யாள் - திருமகள். திலகம் - பொட்டு; திருமகளின் நெற்றித் திலகம். தமிழகத்தைத் திருமகளாகவும், மதுரையை அதன் நெற்றிப்பொட்டாகவும் கூறினர்.*

**குறிப்பு :** *இது புறத்திரட்டிற் கண்டது.*

## பத்தாம் பாடல்

**கார்த்திகை காதிற் கனமகர குண்டலம்போல்**
**சீர்த்து விளங்கித் திருப்பூத்தல் அல்லது**
**கோத்தையுண் டாமோ மதுரை கொடித்தேரான்**
**வார்த்தையுண் டாகும் அளவு.**

கொடிபறக்கும் தேரினை உடையவன் பாண்டியன். அவன் ஆட்சிமொழியாக, அரசாணையாக விளங்குவது தமிழ். அத்தமிழ் இருக்கும் வரையில்,

கார்த்திகைப் பெண்களின் காதுகளில் விளங்கும் பொன் னாலான மகர குண்டலங்களைப்போலச் சிறந்த வளத்தால் பொலிவுற்று விளங்குதல் என்றில்லாமல், மதுரை நகரமானது குற்றப்பட்டு அழிதல்யீ என்பதும் உளதாகுமோ? ஆகாது காண்!

**சொற்பொருள் :** கார்த்திகை - கார்த்திகைப் பெண்கள். கனம் - பொன்; கனகம் என்பதன் இடைக்குறை. கோத்தை - குற்றம்.

**குறிப்பு :** இது புறத்திரட்டிற் கண்டது.

## பதினோராம் பாடல்

**ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும்**
**சேய்மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்**
**வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார் மற்றையார்**
**போவாரார் புத்தேள் உலகு.**

இரப்பார்க்குக் கொடுக்கின்ற செல்வரைக் கொண்டாடுவர் மக்கள்; அவரோ தம்பால் ஏற்பார் தம்மிடம் பெற்ற பொருளால் மனநிறைவு பெறுதலைப் பார்த்து மகிழ்வார்கள். இத்தகைய மக்களையுடைய உயர்ந்த மாடங்களைக் கொண்ட மதுரையும், அதனைச் சார்ந்திருக்கும் செவ்வேளாகிய முருகனுக்குரிய திருப்பரங்குன்றமும் ஆகிய இடங்களில் வாழ்பவரே 'வாழ்ப வர்கள்' என்று சொல்லப்படுவார்கள். மற்றையாருள், புத்தேள் உலகுக்குப் போவார்தாம் யாரோ? மதுரையாரும் பரங்குன்றத் தாருமே துறக்கவின்பமும் உலக வின்பமும் ஒருசேரத் துய்ப் பவராவார் என்பதாம்.

**சொற்பொருள் :** ஈவார் - கொடையாளிகள். செவ்வேள் - முருகன்.

**குறிப்பு :** இது புறத்திரட்டிற் க்ண்டது. மதுரைப் பேரூர் மக்கள், வாழ்வியல் வளத்தினும், ஆன்மவியல் ஒழுக்கத்தினும் சற்றும் குறையற்றோராகச் சீருடன் வாழ்ந்தனர் என்பதாம். இதனால், அவர் இருமை இன்பத்தையும் ஒருசேரத் துய்க்கும் ஈடற்ற சிறப்பினராவர் என்பதுமாம். இதனைப்பாடிய புலவரின் நாட்டுப்பற்றோடு, அந்நாளைப் பாண்டிநாட்டின் அளவில் வளமையும் எழிலும் செப்பமுமம் இதனால் விளங்கும்.

☆ ☆ ☆

## பாடிய சான்றோர்கள்

( எண் - பாடல் எண் )

### கீரந்தையார் - 2

இப்பெயருடையவராக, இவரன்றி, மற்றும் இருவரையும் நாம் சங்க நூற்களுள் பயின்றுவரக் காண்கிறோம். ஒருவர். இடைச்சங்கத்துப் புலவராக வீற்றிருந்தவர்; மற்றொருவர், பொற்கைப்பாண்டியன் கைதுணிக்கக் காரணமான பார்ப்பனியின் கணவர். இவர்கள் மூவரும் மூவேறு காலத்தவர்; எனினும், ஒரே குடியச் சேர்ந்தவர்களாக இவர்கள் உரைக்கப்படு கின்றனர். இதனாற் 'கீரந்தை' என்பது பழங்காலத் திருந்தே வழக்காற்றிலிருந்து வந்த ஒரு தமிழ்ப் பழம்பெயர் என்று கருதலாம்.

'சாத்தந்தை' என்பது, சாத்தனின் தந்தை' என்னுமாறு போலக், 'கீரந்தை' என்பது 'கீரனின் தந்தை' எனப் பொருள்படும் என்பார்கள். இது மேற்சொன்ன காரணத்தால் பொருந்தாத முடிபு என்பதும் விளங்கும்.

அந்தில், ஆந்தை, அந்துவன் என வழங்கும் பெயர்களைப் போலவே, 'அந்தை' என்பதும் ஒரு பெயராகக் கொள்ளற்கு உரியது எனலாம், கீரந்தை, சாத்தந்தை, என்பன கீரர் குலத்து அந்தை, சாத்தனாகிய அந்தை எனப் பொருள்தரும் சொற்கள் ஆகும்.

இனி, இப் புலவர் கீரர் குடியினர் என்பது வெளிப்படை. கீரர் குடியினர் இந் நாவலந்தீவின் வடபுலத்திலிருந்து வந்து, பன்னெடுங்காலத்திற்கு முன்னர்த் தமிழகத்திற் குடியேறியவராவர். 'வேளாப் பார்ப்பார் வாளரந் துமித்த' எனவரும் வாக்கு, இவர்கள் பார்ப்பனரெனவும், இவர்க்குரிய வேட்டலாகிய கடமையைக் கைவிட்டவர் எனவும், சங்கறுத்தலும், ஆரியக் கூத்தாடலும் ஆகிய கலைத்தொழில்களை மேற்கொண்டு வாழந்தவர் எனவும் காட்டுகின்றது. இத்தொழில்களால் பெற்று வந்த ஊதியமும் களிப்பும், இவர்களை இத் தொழில்களையே தொடர்ந்து மேற்கொண்டு வாழும்படி செய்தன.

இவர்களே, வடபுலத்திருந்து வந்து குடியேறிய ஆரியச் சாதியினருள் முதற்கண் வந்து குடியேறித், தமிழகத்தையே தம் தாயகமாகக் கொண்ட பழங்குடியினராவர். இவர்களின் பேச்சு முதற்கண் வடமொழியாக இருந்தது; இதனாற்றான் வடமொழிக்குக் 'கீர்வாணம்' என்றொரு பழம்பெயரும், வடபுலத்திற்குக் 'கீர்வாண நாடு' என்ற பழம் பெயரும் தமிழகத்திற் பண்டு முதலே வழங்கலாயிற்று.

தமிழகத்துப் பண்டைய மக்களிடையே வளையணிதல் ஒரு மங்கலவழக்காகத் திகழ்ந்தது. பெண்கள் கைவளைகளை மங்கல அணியாகக் கொண்டு போற்றினர். கணவரை இழந்தோர் அவற்றை உடைத்து எறிந்து கைம்மை பூண்டனர். இதனை மதுரையைவிட்டு வெளியேறிய கண்ணகி தேவி, கொற்றவை வாயிலில் தன் பொற்றொடியைத் தகர்த்துச் சென்றதனால் அறியலாம். இவ்வாறே ஆடவரும் தோள்வளைகள் என்னும் வீரவளைகளை அணிந்து இன்புற்றனர். பொற்றொடி அணிதற் கேற்ற வாய்ப்பற்ற எளியோர்க்குச் சங்கு வளைகளே அழகையும் மகிழ்வையம் தந்துவந்தன. இக்குடியினர் மிகப் பெரும்பான் மையராகத் தமிழகத்து வாழ்ந்தனர். இங்கிருந்து இத்தொழிலைச் செய்துவந்தாரோடு கலந்து நாளடைவில் இக்கலப்பு மாந்தர் ஒரு தனிக்குடியினராகவும் விளங்கினர். இவர்கள் பெயரால் விளங்கும் மதுரை மாவட்டத்துக் கீரனூரும், புதுக்கோட்டை மாவட்டத்து கீரனூரும், தஞ்சை மாவட்டத்துக் கீரமங்கலமும் இதனை வலியுறுத்தும்.

காலப்போக்கில் இவ்வாறு கலந்துவிட்ட இவ்வினத்தார், தமக்கு வாழ்வளித்த தமிழகத்தின்பால் அன்புற்றுத் தமிழ் மக்களாகவே தங்களை முற்றவும் மாற்றிக் கொண்டனர். தமிழ் மொழியைக் கற்றும் பேசியும், தமிழ் வாழ்வோடு தாமும் இரண்டறக் கலந்துவிட்டனர். இதனைக் கடைச்சங்கத்து விளங்கிய நக்கீரர், கணக்காயனார் போன்ற பெரும் புலவர் களையும், பிறரையுங் கொண்டு அறியலாம். மேலும் சங்கப் புலவர்களாக 24 பேர்கள் இக்குடியினராகக் காணப்படுகின்றனர் என்பதும், இவர்கள் தமிழ்மக்களாகவே விளங்கிய வாழ்வியல் நன்மாற்றத்தைக் காட்டும்.

இவர்கள் வாழ்வியலை ஒத்த வாழ்வியலைக் கொண்டிருந் தோரான பாண்குடியினரோடு இவர்கள் கலந்தனராதல் பொருந்தும். இதனாற் பாண்குடியினரின் தமிழ்க்கலைகள் பலவற்றையும் இவர்களும் கற்றுச் சிறந்தனர். சங்கறுக்கும் தொழிலைப் பண்டு செய்துவாழ்ந்த தமிழ்க்குடியினரோடும் இவர்கள் கலந்திருக்கலாம். இக் குடியினரின் வழியினர் சங்கம் பண்டாரங்களாக இன்றும் தென்தமிழ்நாட்டுப் பகுதிகளில் வாழ்ந்து வருகின்றனர். இக் கீரர் குடியினரின் வழியினரும், தமிழகப் பார்ப்பனக் குலத்தவருள் யாதோ ஒரு பிரிவினராக இன்றும் எங்கோ விளங்கி வருகின்றனர் எனலாம். 'கீர் கீர்' எனச் சங்கினை அறுக்கும்போது எழுந்த ஒலியினாலே, இவர்கள் 'கீரர்' எனப் பெற்றனர் என்பார்கள். இஃதுண்மையாயின், இப்பெயர் இவர்க்குத் தமிழகத்தார் இட்டு வழங்கிய தமிழ்ப் பெயர் என்றே கொள்ளல் வேண்டும்.

காலத்தால் இவர்கள் தமிழராகவே மாறிவிட்ட போதிலும், தங்கள் மூதாதையராற் சொல்லறப்பட்டுக் கேட்டறிந்த பழங்கதைகளையும், கொள்கை கோட்பாடுகளை யும் இவர்கள் முற்றவும் மறந்துவிடவில்லை. அவற்றைத் தங்கள் செய்யுட்களின் இடையே பெய்து வைத்தும் இன்புற்றனர் என்பதனை, இப் புலவர் பாடிய பரிபாடற் செய்யுளால் அறிகின்றோம்.

திருமாலைப் பற்றிய இவரது பரிபாடல், உலகத்தின் தோற்ற முறையைப்பற்றிய தத்துவக் கோட்பாடுகளையும், அந்தணர் திருமாலை யாகத்தீயின் சுடரிடைக்கண்டு வழிபடும் மரபினையும் காட்டுகின்றது. 'எம் அறிவு கொடும்பாடு அறியற்க' என வேண்டுகின்றார் இவர். அறிவிலே எழுகின்ற கொடுமையான எண்ணங்களே செயல்களாக உருப்பெற்று மக்களிடையே பூசல்களையும், பொறாமைமையும், பிறபிற வேறு பாடுகளையும் வளர்க்கின்றன. அறவாழ்வினராக வாழ்வதற்கு நினைப்போர் முதற்கண் தம் அறிவைக் கொடும்பாடு அறியாத நல்லறிவாகத் தூய்மை செய்துகொள்ளல் வேண்டும். இந்த அரிய உறுதிப்பாட்டை மிகவும் நயமாகக் கூறியுள்ளார் இப்புலவர் பெருந்தகை. இதனால், இவர் அறவாழ்வு வாழ்ந்து, கற்றோரும் மற்றோரும் போற்றப் புகழாற் சிறந்திருந்த தகுதியினர் எனக் கொள்ளலாம்.

## கடுவன் இளவெயினார் - 3,4,5

இவர் 'கடுவன்' என்னும் இயற் பெயரினர். இதனைக் கடுவன் மள்ளனார் எனவும். கடுவன் இளமள்ளனார் எனவும் வரும் பெயர்களும் காட்டும். இச்சொல் கடுமையும் வன்மையும் கொண்டவர் என்ற பொருளைத் தந்து, ஒருவரின் மறமேம்பாட்டை விளக்கவதும் ஆகும். இதனைப் பூனையினத்துள் ஒன்றைக் 'கடுவன்' என வழங்கும் வழக்காறும், புலியினத்துள் ஒன்றைக் 'கடுவாய்' என வழங்கும் வழக்கும், விரைந்து பரவும் ஒருவகைப் படையினைக் 'கடுவன்' எனக் குறிப்பிடும் வழக்கும் உணர்த்தும். எயினனார் என்பது இவர் வேட்டுவச் சாதியினர் என்பதனையும், 'இள' என்பது எயினனார் என்பாரின் இளவல் என்பதனையும் காட்டுவனவாம்.

எயினர் என்போர் வேட்டுவக் குடியினர் ஆவர்; இவர் மலைவாழ் சாதியினர் ஆதலும், குறிஞ்சி முல்லை ஆகிய பகுதிகளிலே வேட்டையாடி வாழ்ந்தோராதலும் பொருந்தும், இவர்களுடைய வேட்டைத்திறன், காலப்போக்கில், நாகரிகம் வளரவளர, இவர்களைத் தமிழ் மன்னர் படையணிகளுட் சிறந்த காவன் மறவராகத் திகழுமாறு உயர்த்திற்று. 'எயில்' என்னும்

படைக்கலப் பெயரும், காவலரண்களுக்கு வழங்கும் 'எயில்' என்னும் பெயரும், இவர்களின் காவற்றிறனையும் மறமாண் பையும் ஒட்டி அமைந்த பெயர்களே எனலாம். இக்குடியினருள் ஒருவனாகிய எயினன் என்பான் தமிழகக் குறுநில மன்னருள் ஒருவனாகத் திகழ்ந்தான் என்பதும், அவனுக்குரிய வாகைப் பட்டினம் சிறந்த காவலுடையதாகத் திகழ்ந்ததென்பதும் சங்கநூற்களால் அறியப்படும் செய்திகளாகும்.

இவர்களைக் குறவர் குடியினர் எனவும் கூறுவர். இக் குடியினராகக் கடுவன் இளவெயினனார் ஆகிய இவரன்றியும், எயிற்றியனார், எயினந்தையார், இளவெயினனார், கழார்க் கீரன் எயிற்றியனார், குறமகள் குறியெயினியார், புல்லாற்றூர் எயிற்றியனார், பேய்மகள் இளவெயினியார், விற்றூற்று மூதெயின்னார் என்னும் புலவர்கள் பெயர்களையும் சங்க நூற்களுட் காணலாம். இதனாற் குறவர் குடியினர். இக் காலத்தே காணப்படுவதுபோலப் பிற்பட்ட குடியினராக விளங்காமல், அக் காலத்தே செழுமையான நல்வாழ்வும், அறிவாற்றலும், மறமாண்பும் கொண்ட தமிழ்ப் பழங்குடியினருள் ஒருவராகவே திகழ்ந்தனர் எனலாம். தமிழ்ச் சான்றோராகவும் இவர்களுட் பலர் விளங்கிய சிறப்பும், மகளிரும் புலமைச் செல்வியராகத் திகழ்ந்த சால்பும் இக் குடியினரது பண்டைச்சிறப்பை நமக்கு அறிவுறுத்துகின்றன. மேலும், வடமொழிக்கண் இராமகாதை யைச் செய்தவரான வான்மீகியார் என்னும் முனிவரும் இக் குடியினரே என்பதையும், காலத்தை வென்ற பெருஞ்சிறப்புடன் போற்றப்படும் அக்காவியத்தின் சிறப்பையும் எண்ணும்போது, இக் குடியினரின் அறிவுநலச் சிறப்பு மிகவும் நன்றாக விளங்கும்.

இக் குடியினர் குறிஞ்சி முல்லை ஆகிய இருவகை நிலப் பாங்கிலும், ஆதிநாளில் வேட்டையாடி வாழ்ந்துவந்த வாழ்க்கையினர் என்றோம், இதனாற், குறிஞ்சிக்குமரனைத் தம் மருமகனாகக் கொண்டு போற்றிய இவர்கள், முல்லைக்குரிய திருமாலையும் தம்மவருள் ஒருவனாகவே, தம்குடித் தலை வனாகவே கொண்டு போற்றி வாழ்ந்தனர். தென்பாண்டிச் சீமையில் விளங்கும் நம்பிமலையும் நம்பியின் திருக்கோயிலும், அவன் மகளை மணந்து வள்ளியூரில் திருக்கோயில் கொண்டுள்ள முருகப்பிரானின் செய்தியும், இந்த இருமையும் ஒருமையான உறவுப்பாங்கைக் காட்டுவதாகும். இதற்குச் சான்று பகர்வாரைப்போல, இப்புலவர் பெருமானும் திருமாலையும், மால் மருமகனாகிய முருகப் பெருமானையும் பரிபாடல்களாற் போற்றிப் பாடியுள்ளார்.

'ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் அரிய தத்துவப் பொருளை விளக்குவாரைப்போல -

**தீயினுள் தெறல் நீ! பூவினுள் நாற்றம் நீ;**
**கல்லினுள் மணியும் நீ; சொல்லினுள் வாய்மைநீ;**
**அறத்தினுள் அன்பு நீ; மறத்தினுள் மைந்து நீ;**
**வேதத்து மறை நீ; பூதத்து முதலும் நீ;**
**வெஞ்சுடர் ஒளியும் நீ; திங்களுள் அளியும் நீ;**
**அனைத்தும் நீ; அனைத்தின் உட்பொருளும் நீ;**

*(பரி - 3) எனவும்,*

**நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள**
**நின், தண்மையும் சாயலும் திங்களுள**
**நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள**
**நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள**
**நின், நாற்றமும் ஒண்மையும் பூவையுள**
**நின், தோற்றமும் அகலமும் நீரினுள**
**நின், உருவமும் ஒலியும் அகாயத்துள**
**நின், வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள**
**அதனால், இவ்வும்உவ்வும் அவ்வும் பிறவும்**
**ஏம மார்ந்த நிற்பிரிந்து**
**மேவல் சான்றன வெல்லாம்**

*(பரி - 4)*

*எனவும், இவர் ஆழமான தத்துவக் கோட்பாடுகளை நயமாக எடுத்துரைக்கின்றனர்.*

*முருகப்பிரானின் பிறப்பையும், சிறப்பையும் போற்றும் இவரது செய்யுள், புதுமையான பல செய்திகளைக் கொண்டு விளங்கும், சுவை கனிந்த செய்யுள் ஆகும். பன்னிரு கரத்தோனாகிய அவன், தன் கரங்கள் ஒவ்வொன்றினும் ஏந்தியுள்ள பொருட்களையும், அவற்றைத் தத்தம் கூறுகளினின்றும் உரவாக்கித் தந்து பணிந்த தேவர்களின் பணிவையும் இவர் சிறப்பாக எடுத்துரைக்கின்றார்.*

*இனிக் கழார்க்கீரன் எயிற்றியனார் என்னும் புலவரது பெயரைக் காணும்போது, கழார்த் துறையைச் சார்ந்த கீரர் தொழிலினரான எயிற்றியனார் என அமையும். ஆகவே வளையும் மணியும் செய்து விற்கும் தொழிலிலும் இவர்களுட் பலர் ஈடுபட்டிருந்தனர் எனலாம். இந்தத் தொழிலின் சாயலை மட்டும் இன்றும் பாசிமணி விற்கும் குறக்குடியினரிடையே நாம் காணுகின்றோம்.*

## நல்லந்துவனார் - 6,8,11,20

*'அந்துவன்' என்னும் பெயருடையார் இவர்; 'நல்' என்னும் அடைமொழி இவரது அறவாழ்வின் செவ்வியை உணர்த்துதற் பொருட்டு அமைந்ததாகும். அந்துவன் சாத்தன், அந்துவன் கீரன்,*

அந்துவன் செள்ளை, சேரமான் அந்துவன் சேரல் இரும்பொறை என வரும் பெயர்கள் 'அந்துவன்' என்னும் பெயர் வழக்கினைக் காட்டுவனவாகும். 'அம்+துவன்' - அழகிய செந்நிறத்தான் எனப் பொருள் படலின், இஃது இவர்களின் மேனி வண்ணத்தை யொட்டி அமைந்த பெயருமாகலாம். இறுதியாகிய அந்தத்தை அளிக்கும் தெய்வம் என்னும் கருத்தில் சிவபிரானுக்கும் இப்பெயர் பொருந்தும், ஆகவே, சிவன் பெயர் பெற்ற சிறப்பினர் எனவும் கருதலாம்.

இவர் 'ஆசிரியர் நல்லந்துவனார்' எனப் பிற சான்றோ ரானும் போற்றப்பெற்ற சிறப்பினை உடையவராவர். இப் பாடல்கள் அன்றியும், அகநானூற்று 43ஆம் செய்யுளையும், நற்றிணையின் 88ஆம் செய்யுளையும், நெய்தற்கலியின் 33 செய்யுட்களையும் செய்தவர் இவர். மேலும், கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையை ஆய்ந்து தொகுத்தவரும், அத் தொகைநூற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியோரும் இவராவர். இவை எல்லாம் இப் புலவர் பெருமானுடைய ஆழந்தகன்ற தமிழ்ப்புலமையின் செறிவையும் தெளிவையும் காட்டுவன வாகும். மதுரை மருதனிள நாகனார் என்னும் புலவர் பெருமான் பரங்குன்றனைப் பாட நினைக்கின்றார். அவர் கண்முன், பரங்குன்றோடு, அதனை மிகச் சிறப்புடன் பாடிய நல்லந்துவனாரும் தோன்றவே, 'அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை' எனப் பொற்றுவதுடன் அமை கின்றார். இது, நல்லந்துவனாரின் பெரும்புலமை நலத்தை, அக் காலப் பெரும்புலவரும் போற்றிக் கற்று இன்புற்று நுகர்ந்த செவ்வியைக் காட்டும். இதனால், 'தம்மை யொத்த புலவரானும் புகழப்பெற்ற புலமைநலம் கொண்டவர்' இவர் எனலாம்.

இனிக் கலித்தொகையைத் தொகுத்தார் இவரென்பதனால், இவரும் பிற சான்றோரின் செய்யுட்களை நயம்றித்து போற்றும் சால்புடையவர் என்பதும் அறியப்படும். கலித்தொகையின் செழுமை, இவர் ஆய்ந்து தொகுத்த ஆய்வுத் திறனின் செம்மையைக் காட்டுவதுமாகும்.

வையையின் புதுப்புனல் வரவைக் கண்டு களித்த இவருள்ளத்தே, அந்தப் புனல்வரவின் எழிலையும் பெருக்கையும் பற்றிய சிந்தனை ஆழமாக நிறைகின்றது. அதனைப் போற்ற நினைக்கும் இவர், 'தமிழ் வையை' என வாய்குளிரக் கூறுகின்றனர். தமிழின் செழுமைக்கும் இனிமைக்கும் வையைப் புதுப்புனலை ஒப்பிட்டுப் போற்றிய சிறப்பை எவ்வாறு போற்றுவது! இவர் எடுத்துக்காட்டும் கோள்நிலைக் குறிப்புக்கள் இவரது வானசாத்திரப் புலமையையும் காட்டுகின்றன.

*வையைப் புதுநீர் வரவு மதுரை மாந்தரின் வாழ்வில் எத்தகைய கிளர்ச்சியை ஏற்படுத்துகின்றது என்பதனை,*

**நாமமார் ஊடலும் நட்பும் தணப்பும்**
**காமமும் கள்ளும் கலந்துடன் பாராட்டத்**
**தாமமர் காதலரொ டாடப் புணர்வித்தல்**
**பூமலி வையைக்கு இயல்பு** *(பரி - 20)*

*என மிகவும் அருமையாக எடுத்துரைத்துள்ளனர் இவர்.*

**'ஏதில் பொருட்பிணிப் போகித்தம்**
**இன்றுணைப் பிரியும் மடமை யோரே'** *(அகம். 43)*

**'குடைநிழல் ஆண்டாற்கும் ஆளிய வருவாற்கும்**
**இடைநின்ற காலம்போல் இறுத்தந்த மருள்மாலை'** *(கலி. 118)*

**- புறமாறிக்**
**கரப்பவன் நெஞ்சம்போல் மரமெல்லாம் இலைகூம்ப'**
*(கலி. 120)*

**'நல்லறம் நிறீஇ உலகாண்ட அரசன்பின்**
**அல்லது மலைந்திருந்து அறநெறி நிறுக்கல்லா**
**மெல்லியான் பரவம்போல் மயங்கிருள் தலைவர'** *(கலி. 129)*

**'ஆற்றுதல் என்பது, ஒன்று அலந்தவர்க் குதவுதல்;**
**போற்றுதல் என்பது, புணர்ந்தாரைப் பிரியாமை;**
**பண்பெனப் படுவது, பாடறிந்து ஒழுகுதல்;**
**அன்பெனப் படுவது, தன்கிளை செறாஅமை;**
**அறிவெனப் படுவது, பேதையார் சொல்நோன்றல்**
**செறிவெனப் படுவது, கூறியது மறாஅமை;**
**நிலையெனப் படுவது, மறைபிறர் அறியாமை;**
**முறையெனப் படுவது, கண்ணோடாது உயிர்வௌவல்;**
**பொறையெனப் படுவது, போற்றாரைப் பொறுத்தல்'**
*(கலி. 133)*

**'மாயவன் மார்பிற் றிருப்போல் அவள்சேர,**
**ஞாயிற்று முன்னர் இருள்போல் மாய்ந்தது; என்**
**ஆயிழை உற்ற துயர்'** *(கலி. 145)*

**'யானுற்ற எவ்வம் உரைப்பின் பலர்த்துயிற்றும்**
**யாமம் நீ துஞ்சலை மன்;** *(கலி. 146)*

**'கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்**
**தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்'** *(கலி. 149)*

**'கண்ணீர் அருவியாக**
**அழுமே தோழியவர் பழமுதிர் குன்றே'** *(நற். 88)*

*இவைபோன்ற மிக்க செறிவான கருத்துக்களை நயமாகச் சொல்லி, நமக்கும், நம் தமிழ்க்கும் வாழ்வளித்த சான்றோர் இந் நல்லந்துவனார், ஆவர்.*

*வையைப் புனல் பரந்து பெருகிப் பயன் விளைவிக்கும் சிறப்பைக் கூறும் இவர்,*

**'மாசில் பனுவற் புலவர் புகழ் புல**
**நாவிற் புனைந்த நன்கவிதை' மாறாமை**
**மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்**
**தாயிற்றே தண்ணம் புனல்'** *(பரி. 6)*

*என்று கூறுகின்றார். இவ்வுவமை இவரது செய்யுட்களுக்கும் மிகமிகப் பொருந்தும் எனலாம்.*

*பரங்குன்றை இமயக்குன்றோடு ஒப்பிட்டுப் போற்றும் செவ்வியைப் பரிபாடல் 8ஆம் பாடலுட் காணலாம். முருகனடியவரின் பக்திச்செறிவையும். அவர்க்கு வாழ்வளிக்கும் முருகனின் அருட்கனிவையும், தமிழ்நலங் கனியும் இவரது இப் பாடல் தெளிவாகக் காட்டுகின்றது.*

**'தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்'** *(பரி. 20)*

*எனக் கற்பறநெறி நிற்கும் நங்கையரின் செவ்வியைக் காட்டுவார் இவர்.*

*இவ்வாறாக, நயமும் செறிவும், எழிலும் நுட்பமும் ஏற்றமும் பண்பும், சொல்லுக்குச் சொல், தொடருக்குத் தொடர் அமைந்திலங்கத் தமிழமுதை வழங்கிய வள்ளல் பெருமான் இவராவர். இதனாலேயே மருதனிள நாகனார் 'அந்துவன் பாடிய' என்றனர் எனலாம்.*

## மையோடக் கோவனார் - 7

*இப்பரிபாடலுள் வையைக்குரியதான ஏழாவது பாடலைப் பாடியவர் இவர். இவர் பெயரைக் குறித்துச் சிந்திக்கும்போது, வையைக்கண் ஓடஞ்செலுத்தும் தொழிலினர் எனவும், அதனைச் சிறப்புறப் பலரையும் ஏவல்கொண்டு நிகழ்த்தியமையின் 'ஓடக்கோவனார்' எனப்பட்டனர் எனவும் தெரிகின்றது. 'மை' என்பது இவரது வண்ணத்தையோ, இவர் செலுத்திய ஓடத்தின் வண்ணத்தையோ குறித்தாகலாம்.*

*பழங்காலத்தே வெள்ளப்பெருக்கினை ஓடங்களிற் கடந்து செல்லலும், புதுநீர்ப் பெருக்கில் அழகமைந்த ஓடங்களைச் செலுத்திக் களித்து விளையாட்டயர்தலும் வழக்கமாயிருந்தன. இதனால், அத் தொழிற்கண் ஈடுபட்டு மக்கட்கு உதவித் தாமும் அதனால் வாழ்வு நடாத்தியவர் இவரெனலாம்.*

**'வலன் இரங்கு முரசின் தென்னவர் உள்ளிய**
**நிலனுற நிமிர்தானை நெடுநிறை நிவப்பன்ன**
**பெயலாற் பொலிந்து பெரும்புனல் பலநந்த**
**நலனந்த நாடணி நந்தப் புலனந்த**
**வந்தன்று வையைப் புனல்'.**

*என்னுமிவர் சொற்கள், இவரது தமிழறிவைக் காட்டுவதுடன், இவரது நாட்டுப் பற்றையும், இவர் காலத்துப் பாண்டியரின் மறமேம்பாட்டையும் காட்டுகின்றன.*

**'விதியாற்றான் ஆக்கிய மெய்க்கலவை போலப்**
**பொதுநாற்றம் உள்ளுட் கரந்து புதுநாற்றம்**
**செய்கின்றே செம்பூம் புனல்'**

*என்று, அக் காலத்தைய மணச்சாந்து கலக்கும் தொழிலது சிறப்பையும் நமக்கு இவர் உணர்த்துகின்றனர். கட்டுமீறிச் செல்லும் புதுப் புனலை,*

**'ஆடலறியா அரிவை போலவும்**
**ஊடலறியா உவகையள் போலவும்**
**வேண்டுவழி நடந்து தாங்கு தடைபொருது'**

*செல்லும் என்று கூறுவதன்கண், இவரது உலகியல் நுண்ணறிவு புலனாகின்றது.*

*வெள்ளத்து வரவால் பலர் வருந்தினர் எனவும், பலர் களித்தனர் எனவும், இருவேறு தன்மைகளையும் சிறந்த காட்சி களை அமைத்துத் திறனுறக் காட்டியுள்ளனர் இவர். பெண்கள் கழுத்திற் பொன்னாண் பூண்டிருக்கும் வழக்கத்தை இவர் கூறுகின்றார். இசையிலும் இவர் வல்லவராயினமை, 'புரி நரம்பின் கொளைப் புகல்பாலை ஏழும்' என்பது முதலாக வரும் அடிகளால் அறியலாம்.*

## குன்றம் பூதனார் - 9,18

*பூதனார் எனப் பெயரிய பலருள்ளும், திருப்பரங்குன்றத் தைச் சார்ந்தவராதலின் இப்பெயர் பெற்றனர் இவர். இவர் தமிழறிவுடன் தமிழ்பற்றும் கொண்டவர். அந்நாளில் வட மொழிச் சார்பான பல கருத்துக்கள் தமிழகத்து வந்து பரவத் தொடங்கியதனை மறுப்பார்போல, இவர் பாடியுள்ள வள்ளி தேவானைப் பூசல் மிக்க சுவையும், அறிவுநலமும் பயப்பதாகும். சதுக்க பூதங்களின் பெயரை அந்நாளினும் மக்கட்கு இட்டு வழங்கும் மரபு நிலவி வந்தது. இதனைப் 'பூதன்' என்னும் பெயர் வகையினராகக் காணப்பெறும் பதினொரு சங்கப் புலவர்களின் பெயர்களால் அறியலாம்.*

**'கற்பிணை நெறியூடு அற்பிணைக் கிழமை**
**நயத்தகு மரபின் வியத்தகு குமர!'**

என்று, இருவேறு மணவுறவுகளையும் எடுத்துக் காட்டு கின்றனர் இவர். இவர் சிறந்த முருகன் அடியவர் என்பதனையும் இச்செய்யுட்களால் அறியலாம். காந்தள் செறிந்த கவினைக் கூறுவார், 'போர் தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ; கார் தோற்றுக் காந்தள் செறிந்த கவின்' என்று கூறுதலை உணர்க.

சிவபிரான் கங்கையைத் தாங்கிய செய்தியும், அவர் மகனே முருகப் பிரான் என்னும் செய்தியும், இவராற் கூறப்படுகின்றன.

**'எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி**
**விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்**
**தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி**
**மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய் நீ'**

என்கின்றனர் இவர்.

**'தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழாய் வந்திலார்**
**கொள்ளார் இக் குன்று பயன்'**

என்று கூறித் தமிழ்ப்பண்பை வலியுறுத்துவாரும் இவராவர்.

ஐவளம், மைவளம், கைவளம், மொய்வளம், மெய்வளம், நைவளம், பொய்வளம் எனவும்; ஆர்ததும்பும், சூர்ததும்பும், கார்ததும்பும், ஏர்ததும்பும் எனவும் சொற்களை நயத்தோடு அடுக்கடுக்காகக் கையாண்டு இன்புறவைக்கும் சொல்லாட்சித் திறனுடையவரும் இவராவர் என்பதையும் நாம் அறிதல் வேண்டும்.

### கரும்பிள்ளைப் பூதனார் - 10

இவரும் பூதனார் என்னும் பெயருடைய புலவர்களுள் ஒருவராவர். 'கரும் பிள்ளை' என்பது இவருது ஊராகலாம்; அன்றி இவரது உடலின் நிறத்தை ஒட்டியதென்றலும் பொருந்தும். இப் பாடல் வையைக்குறியது. இதன்கண் வையைப்புனலை வரவேற்று இன்புறும் மக்களின் கணிகொண்ட நிலையையும், தென்னவர் நாட்டுச் சிறப்பையும், இளைஞரும் கன்னியரும் கொள்ளும் இன்பநாட்டச் செவ்வியையும் மிகவும் அருமையாகப் பாடியுள்ளனர் இவர். களிறும் பிடியும் காதலித்த காட்சி மிக்க நயமுடையது.

**'இதையும் கயிறும் பிணையும் இரியச்**
**சிதையும் கலத்தைப் பயினால் திருத்தும்**
**திசையறி நீகானும் போன்ம்'**

எனக் கலஞ்செலுத்துவோர் திறனையும்,

**தண்ட மிரண்டும் தலைஇத் தாக்கி நின்றவை**
**ஒன்றியும் உடம்பாடு ஒலியெழுதற் கஞ்சி**
**நின்ற நிகழ்ச்சியும் போன்ம்**

என, மன்னர் வேறுபாட்டால் பொருத எதிர்ப்பட்டு, மனிதாபி மானத்தால் தயங்கி நிற்கும் படைமறவர் நிலையினையும்.

**கள்ளொடு காமங் கலந்து கரைவாங்கும்**
**வெள்ளந் தருமிப் புனல்**

எனப் புனலினால் மக்கள் கொண்ட களிப்பின் மிகுதியையும் கூறுவார் இவர்.

**இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்**
**நல்லது வெஃகி வினை செய்வார்**

ஆகிய மக்களையும் இவர் செய்யுளுட் சந்திக்கின்றோம்.

**இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்**
**பொலஞ்சொரி......**

வழுதியையும் கண்டு வியக்கின்றோம். இவ்வாறு பல செய்திகளையும் சொல்லும் இவரது இப்பாடல் அக்கால மதுரைமா நகரத்து வாழ்வியலின் ஒரு சிறந்த ஓவிய விளக்கம் ஆகும்.

**நல்லழுதியார் - 12**

இவர் வையை பற்றிய இப்பாடலைப் பாடியவர். இவர் பெயரமைதியால், இவரைப் பாண்டியர் குடியினர் என்று கருதலாம். மன்னர் மரபினரேனும், மாண்புற்ற செழுந்தமிழ்ப் புலமையால் சிறப்புற்றும் விளங்கியவர் இவர். இதனை இப் பரிபாடலால் அறியலாம்.

மதுரைநகரைச் சுற்றி மதிலொன்று இருந்த செய்தியையும், வையைப் புனல் அம்மதிலைப் பொருதிச் செல்லும் நிலையையும்,

**வந்து மதுரை மதில்பொரூஉம் வான் மலர்தாய்**
**அந்தண் புனல் வையை யாறு**

எனக்கூறுகின்றனர் இவர். புதுப்புனலாடச் செல்லக் கருதிய மக்களின் செயற்பாடுகளை யெல்லாம் மிகமிக நுட்பமாக இவர் எடுத்துரைக்கின்றனர்.

**உரைதர வந்தன்று வையை நீர்; வையைக்**
**கரைதர வந்தன்று காண்பவர் ஈட்டம்;**
**நிவந்தது நீத்தம் கரைமேலா ; நீத்தங்**
**கவர்ந்தது போலுங் காண்பவர் காதல்**

என வையைப் புனல்வரவைச் சொல்லோவியப்படுத்தி நம் கண்முன்னர்க் காட்டும் திறனைப் பெற்றவர் இவர் ஆவர்.

கூட்டங்களில் அழகியரைக் கண்டதும் பார்த்து மயங்கும் ஆடவர் சிலரை இன்றும் காண்கின்றோம். அத்தகைய ஒருவனைக் காட்டி, 'ஒட்டை மனவன்; உரமிலி' என அவனுக்குப் பெயரும் சூட்டுகின்றார் இவர்.

வையைக் கரைதான் எப்படி மணக்கும்? அதனைக் கூறுகின்றார் இவர்.

**மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்**
**அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல்**
**குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி**
**நல்லிணர் நாகம் நறவஞ் சுரபுன்னை**
**எல்லாம் கமழும் இருசார் கரை.....**

இவ்வாறு வையையை வாழ்த்தியும், வையைக் கரையைப் போற்றியும் விளங்கும் மிகச்சுவையான பாடல் இதுவாகும்.

## நல்லெழுநியார் - 13

அதியமான் பரம்பரையினரை 'எழினி' என்பர். 'எழினி' என்பதே எழுநி எனகத் திரிந்து வந்தது என்று கருதலாம். 'எழுனி'க்குத் திரைச்சீலை என்பதும் பொருள். அதனை ஆக்கும் தொழிலில் வல்லவராகவும் இவர் விளங்கியிருக்கலாம். அன்றிக் கவினுறு எழுனியனை அமைக்கும் கலைத்திறன், உடைய வராகவும் இருக்கலாம்.

இவர் பாடியுள்ள இப்பாடல் திருமாலைப் பற்றியதாகும். இவர் திருமாலின்பால் பேரன்புடையோராகவும் இருந்தனர். 'நின் திருவரை அகலம் தொழுவோர்க்கு உரிதமர் துறக்கமும் உரிமை நன்கு உடைத்து' என்ற இவர் கூறுவது, இவருடைய திருமால் பற்றைக் காட்டும், 'சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு அவையும் நீயே' என்பது, தம் ஐம்புல நுகர்வையும் அவன் செயலாகவே கொண்டு போற்றும் பக்திமையைக் காட்டும்.

**'ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே ;**
**இரண்டின் உணரும் வளியும் நீயே ;**
**மூன்றின் உணரும் தீயும் நீயே ;**
**நான்கின் உணரும் நீரும் நீயே ;**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே ;**
**அதனால், நின்மருங்கின்று மூவேழ் உலகமும்**
**மூலமும் அறனும் முதன்மையில் இகந்த**
**காலமும் விசும்பும் காற்றொடு கனலும்'**

எனப் பெருமானின் ஆதி முதலாகிய சிறந்த நிலையையும் அவர் உரைத்துப் போற்றுகின்றனர். மற்றும் பலவாறாக இறைவனின் சிறப்பைப் போற்றிய பின்னர்,

**அன்னை யெனநினைஇ நின்னடி தொழுதெனம்;**
**பண்மாண் அடுக்க இறைஞ்சினெம்; வாழ்த்தினேம்;**
**முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்;**
**இன்னும் இன்னும் எம் காமம் இதுவே!**

என்று முடிக்கின்றனர். இவருடைய ஒப்பற்ற மனப்பண்பை அறிந்து வியந்து போற்றல் வேண்டும்.

## கேசவனார் - 14

செவ்வேளைப் பற்றிய இப்பாடலைப் பாடியதுடன், இதற்கு இசையும் வகுத்தவர் இவர். இதனால் தமிழ்ப் புலமையோடு இசைப்புலமையும் ஒருங்கே பெற்றவர் இவர் எனலாம். 'சேசவன்' திருமாலின் பெயர்களுள் ஒன்று. எனினும், இவர் செவ்வேளைப் பாடியுள்ளனர். எனவே, திருமாலின் அடியவர்களான குடியினராயிருந்தும், மால்மருகனாகிய செவ் வேளை இவர் பாடியமை; அக்காலத்திருந்த சமயப் பொதுமை நோக்கைக் காட்டுவதாகும்.

பரங்குன்றத்திலே கார்கால வரவால் எங்கணும் பொலிவு பெற்றுத் திகழ்ந்த அழகினை மிகவும் நயமாகப் பாடியுள்ளனர். 'போர் மலிந்து சூர் மருங்கு அறுத்த சுடர்ப்படையோயே! நின் குன்று கார்மலிந்தன்று' என, அதன் சிறப்பையெல்லாம் ஓவியப்படுத்திக் காட்டுகின்றனர்.

**அன்னை யாகலின் அமர்ந்தியாழ் நின்னைத்**
**துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்**
**இன்னும் இன்னுமவை ஆகுக**
**தொன்முதிர் மரபினின் புகழின் பலவே**

என்று பாடுகின்ற இவருடைய பக்திச் செறிவிலே, இறைவனைத் தாயாகவும், தம்மைப் பிள்ளையாகவும் கொண்டு போற்றும் உரிமைச் சிறப்பைக் காண்கிறோம்.

## இளம்பெரு வழுதியார் - 15

இவர் பரிபாடலுள் திருமாலுக்குரிய பதினைந்தாம் பாடலைப் பாடியவர். புறநானூற்று 182ஆம் செய்யுளையும் செய்தவர் இவர். கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதியும் இவரும் ஒருவரே என்றும் கூறுவர்.

'உண்டாலம்ம இவ்வுலகம்... தமக்கென முயலா நோன்தாள், பிறர்க்கென்ன முயலுநர் உண்மையானே' என்னும் உயரிய ஒப்பற்ற கருத்தினை உலகுக்குக் கூறியவர் இவர். இக் கருத்தின் விளக்கமாக வாழ்ந்தவர் எனவும் கூறலாம். பாண்டியர் குடியிற் பிறந்தவர் என்பது இவர் பெயரால் விளங்கும்.

**நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை**
**ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்?**

என்பது இவருடைய தெய்வ நம்பிக்கையின் உறுதியைக் காட்டுவதாகலாம்.

'சுனையெலாம் நீலம் மலர' என்பது தொடங்கித் திருமாலிருங் குன்றத்தின் எழிலை மிகமிகச் சிறப்பாக வருணித்துப் போற்றுகின்றார் இவர். இதனால், இவர் திருமாலிருங் குன்றத்தின்பால் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தவர் என்பது விளங்கும்.

**எவ்வயின் உலகத்தும் தோன்றி, அவ்வயின்**
**மன்பது மறக்கத் துன்பம் களைவோன்**
**அன்பாது மேஎ இருங்குன் றத்தான்**

என மாயோனின் சிறப்பையும், அவன் உலகத்துத் துயரைப் போக்கிக் காக்கும் காவலின் செவ்வியையும், இவர் வாய்குளிரக் கூறுகின்றனர்.

## நப்பண்ணனார் - 19

பண்ணன் என்னும் பெயரினர் இவர். இப் பெயரின் பண்டை வழக்குண்மை, சிறுகுடிகிழான் பண்ணன் எனவரும் வள்ளல் பெயரானும் அறியப்படும். பண் திறம் அறிந்தவர் என்பதனாலோ, அன்றிப் பண்ணையும் உடையவராதலாலோ இப் பெயரினைப் பெற்றவராகலாம். இவர் பாடல் செவ்வேளைக் குறித்தது.

'புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடல்' எனக் கூடலின் மாண்பையும், 'அறம் பெரிதாற்றி அத்ன பயன் கொண்மார், சிறந்தோர் உலகம் படருநர்' என அறத்தின் சால்பையும், இவர் எடுத்துரைப்பர். மால் மருகனின் பரங் குன்றத்து மாடமருங்கிலே திகழும் சோபனநிலையை மிகத் தெளிவாகவும் விரிவாகவும் இவர் காட்டுகின்றனர்.

மேலும் குமரனடிக்கண் தம்மை ஈடுபடுத்தியவராகத் தொழுது போற்றிப் பாடும் இப் பாடலின் ஒவ்வொரு பகுதியும் இனிமை நலத்தோடு செறிவுற்றுள்ள தன்மையை இப் பாடலுள் காணலாம்.

## நல்லழிசியார் - 16,17

வையைக்கு உரியதான பதினாறாம் பாடலையும், செவ்வேட்கு உரியதான பதினேழாம் பாடலையும் பாடியவர் இவர். 'அழிசி' என்பது இவர் பெயராகலாம். இப் பெயர் வழக்கு ஆர்க்காட்டுத் தலைவனாக சேந்தனின் தந்தையது பெயரும் 'அழிசி' எனக் கூறப்படுவதலால் விளங்கும்.

வையையைப் பற்றிய இவரது மிகச் சிறந்த இலக்கியச் சுவையோடு, சிறந்த காதற் காட்சிகளையும் அருமையாகக் கொண்டதாக அமைந்துள்ளது.

'ஒரு திறம், பாணர் யாழின் தீங்குரல் எழ' எனத் தொடங்கிப் பரங்குன்றின் செவ்வியை இவர் அழகுடன் எடுத்துரைக்கின்றனர்.

**நல்லச்சுதனார் - 21**

இவர் பரிபாடலன் 21ஆம் பாடலைப் பாடியவர் ஆவர். அச்சுதன் என்னும் திருமால் பெயரைக் கொண்டவர்; ஆனால் செவ்வேளைப் போற்றியவர். இப் பாடலுக்கு இசை வகுத்தவர் கண்ணகனார். ஆதலால், 16, 17, 18, 20ஆம் பாட்டல்களுக்குப் பண்ணமைத்த நல்லச்சுதனார் என்பாரும், 6, 8, 9, 19ஆம் பாடல்களுக்கு இசைவகுத்த மருததுவன் நல்லச்சுதனாரும், இவரும் வேறானவர் எனத் தெரிகின்றது.

**சீர் தரு கேள்வன் உருட்டும் துடிச்சீரால்**
**கோடணிந்த முத்தாரம் ஒல்க ஒசிபவள்ஏர்**
**ஆடை யசைய அணியசையத் தானசையும்**
**வாடை உளர் கொம்பர் போன்ம்;**
**வாளி புரள்பவை போலும் துடிச்சீர்க்குத்**
**தோளுள் பெயர்ப்பவள் கண்;**

என, நாடகச் சுவையோடு பாடும் திறனுடையவர் இவர். இவருடைய பாடல், பாடிப்பாடிச் சுவைத்துச் சுவைத்துக் களிக்கவேண்டிய பழந்தமிழ்த் தேனமுதம் ஆகும்.

## பரிபாடல்களுக்குப்

# பண் வகுத்தோர்

**(எண்கள் - பாடல் எண்கள்)**

முத்தும் முத்தமிழும் சிறப்புற்று விளங்கிய திருநாடு பாண்டியவளநாடு. முத்தமிழின் ஒரு கூறு இசைத்தமிழ். இதன் வளர்ச்சி பண்டை நாளிலே மிகச் செப்பமும் செழுமையும் பெற்றிருந்தது. இதனைச் சிலப்பதிகாரத்து அரங்கேற்று காதை, கானல் வரி என்பவற்றுக்கு எழுதிய உரைகளுள் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் எடுத்துரைக்கின்றனர்.

எண்ணற்ற இசைக் கருவிகள் அக்காலத்தே வழக்காற்றில் இருந்து வந்தன. எனினும் அவற்றுக்கெல்லாம் நாயகமாகத் திகழ்ந்தது 'யாழ்' என்பதாகும். யாழின் இந்தச் சீரினைத் **தஞ்சை ஆபிரகாம் பண்டித**ரவர்கள் மிக விரிவாக ஆராய்ந்தெழுதிய கருணாமிருத சாகரத்தாலும், **விபுலாநந்த அடிகளார்** நுண்மையாக ஆய்ந்தெழுதிய யாழ்நூலாலும், தஞ்சை **வரகுண பாண்டியனாரின்,** 'பாணர் கை வழி' என்னும் நூலாலும் தெளிவாக அறியலாம்.

"பாலை பிறக்குமிடத்துக் - குரலும் துத்தமும் இளியும் நான்கு மாத்திரை பெறும். கைக்கிளையும் விளரியும் மூன்று மாத்திரை பெறும், உழையும் தாரமும் இரண்டு மாத்திரை பெறும்." என்று பாலையாழின் பிறப்பைப்பற்றி உரைப்பார்கள்,

பேரியாழ் (நரம்புகள், 12) மகர யாழ் (19 நரம்புகள்), சகோடயாழ் (14 நரம்புகள்), செங்கோட்டியாழ் (7 நரம்புகள்) என யாழின் அமைப்பு நான்கு வகைப்படும். இவை பண்டைநாளில் வழக்காற்றிலிருந்தன. ஆய்ச்சியர் குரவையுள்வரும் ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப் பாலை, வட்டப் பாலை என்பன, மற்றொருவகை இசைமரபை உணர்த்துகின்றன.

'பாண்வாய் வண்டு நோதிறம் பாட' என்னும் வாக்கு நோதிறத்தின் சாயலைக் காட்டும். 'காந்தாரப் பண்' என்பது எடுப்பான நடையுடையதாகும். வரையறுத்துள்ள 103 பண்களுள் மூன்று பண்களே இந்நூலிற் பயின்று வந்துள்ளன.

இனி, இவ்விசை நுட்பங்களை அறிந்து, இப் பாடல் களுக்குப் பண்வகுத்த சான்றோர்களைப் பற்றிச் சிறிது காணலாம்.

**நன்னாகனார்** - 2

புறத்திணை நன்னாகனார் என்னும் சான்றோரும் இவரும் வேறானவர். ஆவர். இவர் நாகர் மரபினர். இசைத்துறையில்

*வல்லவர். இவர் பாடலுக்கு வகுத்துள்ள பண், பண்ணுப் பாலையாழ் ஆகும்.*

**பெட்டகனார் - 3, 4**

*இவர் 3, 4 பரிபாடல்கட்குப் பண் வகுத்தவர். இவர் வகுத்த பண் பாலையாழ் ஆகும். 'பெட்டகம் போன்று அனைத்தையும் அறிந்து அடக்கத்தோடு விளங்கியவரெனக் கருதலாம்.*

**மருத்துவன் நல்லச்சுதனார் - 6, 8, 9, 10, 19**

*மருத்துவன் என்பது இவரது தொழிற்சிறப்பைக் காட்டும். அச்சுதன் இவர் பெயர்; திருமாலின் பெயர்களுள் இதுவும் ஒன்றாகும்.*

**நல்லச்சுதனார் - 16, 17, 18, 20**

*இவரும் அச்சுதன் என்னும் பெயரினர். 21ஆம் பாடலைப் பாடியவரும் இவரே. இதனால் இருவகைப் புலமையும் கொண்டவர் இவரென்று கருதலாம்.*

**கண்ணகனார் - 5, 21**

*இவரைப் பிசிராந்தையர் காலத்துப் புலவர் என்பர். புறப்பாட்டு 218ஐப் பாடியவர் இவர். நற்றிணையின் 78ஆம் செய்யுளைச் செய்தவரும் இவரே. இவர் இசைவல்லாராகவும் இருந்ததனால் இப்பரிபாடற் செய்யுட்களுக்குப் பண் அமைத்து உதவியிருக்கின்றனர் எனலாம்.*

**பித்தாமத்தர் - 7**

*பித்திகை மாலையினை அணிபவர் என்பது சொல்லின் பொருளாகும்.*

**கேசவனார் - 14**

*இப்பாடலை இயற்றி இசையும் வகுத்தவர் இவர்.*



# பாடல் முதற்குறிப்பு

## பரிபாடல்



## பரிபாடற் பகுதிகள்

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# பரிபாடல்

( அகமும் புறமும் ) மூலமும் உரையும்

உரை :

**புலியூர்க் கேசிகன்**



GO 874




நூல் கிடைக்குமிடம் :



நூலங்காடி...
www.thebookstore.in
e-mail : gowra_09@yahoo.in

கௌரா ஏஜென்ஸீஸ்
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.


ரூ.80